ஸ்ரீ

ராமஜெயம்.

# இரணிய விலாசம்.

இவை

சங்கீதசாயித்திய பரதநாட்டியத்திற் சிறந்தவராகிய

சென்ன சமுத்திரம் கலவை மாநகரம்

ம-ா-ா-ஸ்ரீ

வீரசைவர்

## குமாரசாமி உபாத்தியாயர்

அவர்களாலியற்றிதை

புதுவை

நாராயண தாச ரவர்களால்

பரிசோதிக்கப்பட்டு.

---

கோளப்பஞ்சேரி

## கனகராய முதலியார்

அவர்களால்

---

சென்னை - சூளை.

ஸ்ரீலக்ஷ்மிநாராயணவிலாச

அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1899.





உ

## ரிஜிஸ்தர் காபிரயிட்

# அறிவிப்பு.

இதனால் சகலமான கனவான்களுக்கும் அச்சுக்கூடத் ததிபருக்கும் அறிவிப்பது யாதெனில் சென்ன சமுத்திரம் கலவை மாநகரம் வீரசைவம-ா-ா-ஸ்ரீகுமாரசாமிஉபாத்தியாயர் அவர்களால் இயற்றிய இரணியவிலாசமாகிய இப்புத்தகத்தை ம-ா-ா-ஸ்ரீ கோளப்பஞ்சேரி கனகராயமுதலியார் அவர்கள் சகல சுதந்திரத்துடன்தாமேபெற்றுக் கொண்டு வேறொருவர்அச்சிடாதபடிக்கு சென்னையிலும்-புதுவையிலும்காரைக்காலிலும்-ரிஜிஸ்ட்டர் காப்பிரைட் செய்யப்பட்டது.

மேற்படி யாரனுமதியின்றி இயாவரேனும் பேர்மாற்றியாவது முன்பின் சங்கதிகளைப் புரட்டியாவது-சங்கதிகளைத் திருத்தியாவது அச்சிடுவாராயின்-1867-ம் வருஷத்திய 25-வது ஆக்ட்டின் 20-வது பிரிவின் 6-வது விதியின்படி நஷ்டத்திற்கு உத்தரவாதிகளாகியும் பினல்கோர்ட்டாரவர்கள் சட்டத்திற்கு விரோதஸ்தர்களுமாவார்களென்றறிக,

இப்புத்தகம் வேண்டியவர்கள் சென்னப்பட்டணம் பெத்துநாய்க்கன்பேட்டை வடமலைமேஸ்திரிவீதி 25-வது-நெம்பர் வீட்டில் அடியிற்கையொப்பமிட்டிருக்கிற என்னிடத்திலும் ருஜிலியில்புத்தகவியாபாரம்செய்யும் ஒ. சிங்காரவேலுமுதலியாரிடத்திலும் பெற்றுக்கொள்ளலாம்.

இதன்விலை அணா-12.

வி. பி, போஸ்ட் சார்ஜ் அணா-3.

இப்படிக்கு,

☞ கோ. கனகராயமுதலியார்.



ஸ்ரீ

ராமஜெயம்,

[illegible]

# சாற்றுகவிகள்.

---

பன்ப்பாக்கம்

அகத்திலிங்ககவிராயர் அவர்களாலியற்றிய

ஆசிரியவிருத்தம்.

நிலவுதமிழ்ச்சோலைசெறிசென்னசமுத்திரந்தனில்கெடுகோள்வாழுங்
குலமணியாம்வீரசைவலக்ஷ்மணப்ரபலநருள்குமாரசாமி
புலவன்பகர்ப்ரகலாதன்சரித்திரத்தைமுக்கனிபோல்புகட்டிமேலாங்
கலவைநகர்வரதன்மேல்தமிழ்சொல்பெரியோர்கள்களிப்பர்தாமே,

---

தொண்டமாநத்தம்

நரசிம்மசெட்டியார் அவர்களாலியற்றிய

விருத்தம்,

அளிமலரின்தேரல்குடித்தெழும்பிடையாற்றியழகுசேர்நற்
கிளிமொழிகளகத்தில்புகுந்திரைந்துபதம்பாடுங்கெழுமைசேர்முன்
வளமிகுஞ்சீர்கலவைகரிவரதநருள்பெரும்விஜயவரப்ரதானன்
தெளிவுளஞ்சீர்யெழில்குமாரசாமிதமிழ்முரதமினிதிகட்டாதென்றே,

---

சிவப்ரகாசசாமிகள்இயற்றிய

ஆசிரியவிருத்தம்,

செழித்திடும்பனைவயல்சூழெழில் சென்னசமுத்திரநகரில்மேவி
யசீர், தழைத்திடும்வீரசைவனுங்குமார சாமிபாவலன்தனித்தோர்முப்

பழத்தொடுசெற்கரைபாற்சுவை தேன்போல்ப்ரகலாதன்சரித்திரத்தை இழைத்திடுந்தங்கமெனவிசைத்தனன் யினியசொற்செவிக்கித்தெள்ளமுதே,

பல்லாவரம்

தணிகாஜலமுதலியார் அவர்களாலியற்றிய

வெண்பா.

என்னசமர்த்தையா யிரணியவிலாசம்
சொன்னசமர்த்தை யென்சொல்வேன்-சென்னசமுத்
திரமதனில்மேவுஞ் சிவகுமரசாமி
திறமுடனேயொழுகவிதிற்றேன்.

இதுவும்-வெண்பா,

மாகூழிப்பெருங்கலவை மானகருக்கிந்திரபால்
தாகூழியிலாச்சென்னசமுத்திரமே-ஆகூழிபெரு
திருகுமரசாமி செந்தமிழூக்கிரணியனே
தருகுமரசாமியருள்தான்.

திருக்கச்சித்திருநகர். ஸ்ரீதேவராஜவரதன் ஸ்ரீபாதந்தாங்குவார்

S. T. தேவராஜமுதலியார்.

செங்நெல் வயற்கலவை சென்ன சமுத்திரம்வாழ்
கன்னல் பயிலுரைதேர் கம்பீர-மன்னர்
மதிக்குந் திறலுடைய மால்குமார சாமி
துதிக்கு மிணையுண்டோ சொல்.



உ

ஸ்ரீராமஜெயம்.

# முகவுரை.

## கதையின்வரலாறு.

---

ஸ்ரீமகாலட்சுமியை தனதுமார்பில்தரித்த ஸ்ரீமந்நாராயணர் தன்னுடையநாபிக்கமலத்தில் பிர்ம்மதேவனைப்பெற்றார்அப்பிர்ம்மதேவன் பரமசிவனைப்பெற்றார் அந்தப்பரமசிவன் காசிபரைப்பெற்றார் அக்காசிபர் ஞானமார்க்கத்திற்சிறந்து மௌனமார்க்கத்தை யடைந்து தருமதேவதைக்கொப்பான தவத்தில்மிகுந்த உத்தமராயிவர் பிர்ம்மபுத்திரிகளாகிய திதி தனு அதிதி சரமை வினை இரட்டைதாம்பிறகாட்டை சுரபி குரோதவசை முனி சுரசை திமி என்னும் பெயரினையுடைய பெண்கள் பதின்மூன்றுபேர்களையும் மணம்புரிந்தபின்பு ஒருநாள்இப்பூமண்டலத்தில் சராசரங்களென்னும் ஜீவவஸ்துக்களைச் சிருஷ்டிக்கவேணுமென்று நினைத்து மூவாசையும் அன்புலன்களையும்மாற்றித்தவஞ்செய்யவேணுமென்று யெண்ணிபத்தினிகள் பதின்மூவரையும் தன்னுடைய ஆசிரமத்தில்விட்டுவிட்டு மேன்மையான கதியைப்பெறுவதற்காக வனத்தைநோக்கி வெளிப்பட்டுநடந்து ஓர்வனத்தை நண்ணியதில் சிஷியர்கள்சூழ ஏகமனதாய்த் தவஞ்செய்துக்கொண்டிருந்தார். அப்போதுமூத்த மனைவியாகிய திதியென்பவள் காமவிகாரமேலிட்டு நெஞ்சந்தளர்ந்து நெறியைக்கடந்து சகிக்கமுடியாமல் நாயகனைத்தேடிக்கொண்டுவந்து வனஞ்சேர்ந்து மகாரிஷியைக்கண்டு வணங்கி தனக்குற்ற விரகாக்கினியை வெளியிட்டாள். அதைக்கேட்டுக் காசிபமகாரிஷியானவர் அவ்வனிதையைநோக்கி அடிமானே காலமல்லாத அந்திகாலத்தில் உன்னைமருவிச்சேர்ந்தால் தோஷமுண்டாவ தன்னியிலுந் தருமத்திற்கும்விரோதமாகும் ஆதலால்இன்னுஞ் சற்றுநேரம்

பொறுத்திருப்பையேயாகில் பொழுதுஅஸ்தமித்து இரவுவந்திடும்அப்
பொழுதுநான் உன்னைக்கூடியுனக்குண்டாகிய விரகதாபத்தைத் தீர்க்கு
றேன் சற்றுநேரம்பொறுத்திருமென்று வெகுவாகச்சொல்லியுங் கே
ளாமல் திதிமாது நிர்ப்பந்திக்கக் காசியபர்மனம்வெறுப்புடன் விருப்பம
ற்று அந்திவேளையில் அவளைக்கூடிக்கலந்து அவள்விருப்பத்தைநீக்கி
ச்சொல்லுகிறார்கேளும் பெண்ணே நாமிருவரும் அந்தி வேளையில்
மருவிக்கூடிய குற்றதோஷத்தால் உன்வயிற்றிலிரண்டுபாலர்கள் உதி
ப்பார்கள் அவர்களில்இளையவன் வராகத்தினாலும் பெரியவன் நரசிங்
கத்தினாலும் இறந்துபோவார்கள் அதில்மூத்தோனுடையபிள்ளை ஒரு
வனை இந்தப்பூமியையெல்லாம் அரசுபுரிவானென்றுசொல்ல அதைக்
கேட்டு காசிபரைநோக்கி திதி சொல்லுகிறாள் கேளும் பிராணநாத
ரே நான்சிறுகுழந்தைகளாக இவ்விருவர்களைப்பெற்றாலன்றோ அந்த
ஸ்ரீமந்நாராயணர்கொல்லுவார் அப்படிநான்பெறமாட்டேன் தேவரு
டம்நூறாண்டுவரையிலும் இவர்களையென்வயிற்றிலேதானே வைத்து
வளர்த்து வருவனென்றுசொல்லி விடைபெற்றுச்சென்று ஆசீர்பஞ்
சேர்ந்து தன்வயிற்றிலேதானே தேவருடம்நூறாண்டுஅவர்களைவை
த்துக்கொண்டு வளர்த்துவருகிறகாலத்தில் அண்டங்கள்யாவுமெண்
டிசைகளுமதிர வானவர்கள் கேட்டுநடுங்கத் தருமதேவதை வெருவ
திதிமங்கைவயிற்றைவிட்டு உதித்தார்கள் அவர்களுக்கு இரணியனெ
ன்றும் இரணியாக்கதனென்றும் நாமமிட, அவ்விருவர்களும் குபேர
னையடித்து வெறட்டித் திக்குவிஜயஞ்செய்து இந்திரனை ஜெயித்து
அவனது வெள்ளையானைமீதேறித் தங்களிடஞ்சேர்ந்து இரணியன்
லீலாவதியையும் இரணியாக்கன் சில்லிகையையும் மணம்புரிந்து சுகத்து
டனிருக்கிறபோது ஓர்நாள் இரணியன்கொலுவிலிருக்க தம்பியாகிய
இரணியாக்கதனை நோக்கி அடாதம்பி இப்பூமண்டலத்தையெல்லாம்
நமக்கொரு எதிரியில்லாமல் யாவரும் நம்மைவணங்கும்படி நாம்தனி
ச்செங்கோல்செய்யவேணும் அதற்குநீயென்னயோசனை சொல்லுகு
றாய் அதைநானறியும்படி வெளிப்படச்சொல்லுவா யென்னக்கேட்ட
இரணியனைநோக்கி இரணியாக்கதன்சொல்லுகிறான் கேளும் அண்ணா
வே இந்த அண்டரண்டபுவனங்கள்யாவையும் யெடுத்துஇரண்டுகைக
ளால்செண்டாடுவேன் ஏழுகடல்நீரையும் நாவினால் நக்கிவிடுவேன்
ஷடாறு அக்கினிகளையும் கையினால்பிசைவேன் தசவாயுக்களையும்பிடி

ப்பேன் இதன்றித்தாங்கள் இன்னமேதுசெய்யச்சொல்லிய போதிலு
ம் ஒருநிமிஷத்தில்செய்வேனென்றான், இதைக்கேட்டுஇரணியன்உட
ல்பூரித்து மயிர்க்கூச்சிட்டு அடங்கா மகிழ்ச்சிகொண்டுச் சொல்லுகி
றான் அடா தம்பி இந்தப்படியாக நீ செய்வையேயானால் யெனக்கெ
திரியினியாருமில்லை இப்போதுசெய்யவேண்டிய காரியம் ஒன்றுண்டு
அதென்னவெனில் பிர்மதேவன் சிருஷ்டிமாரும்படி இந்தப்பூமியைப்
பாயைப்போல சுருட்டிக்கொண்டுவாருந் தம்பியென்று சொல்லியவு
டனே இரணியாக்கதன் தமயனிடத்தில்விடைபெற்றுக்கொண்டுசகல
ஆயுதங்களையும் யெடுத்து சேகரமாகச்சேர்த்து வெளிப்பட்டுப் போ
கிற சங்கதியை இவனுடையமனைவியாகிய சில்லிங்கை கேட்டு மனம்வா
டி வேகமாகயோடிவந்து தன்கணவனைவணங்கி நின்றபோது இரணி
யாக்கதன் தன்னைவணங்கியசில்லிங்கையையெடுத்தாசீர்வதித்து அடிபெ
ண்ணே தாமரைமலரையொத்து மிருதுவாகியவின்பாதங்கள் வருந்த
யிவடத்திற்கு என்னகாரியமாக வந்தாயென்ன சில்லிங்கை சொல்லுகி
றாள் எனதுயிருக்குயிராகிய பிரியநாயகரே அடியாளிடத்தில் சொல்
லாமல் இப்போது இவ்விடம்விட்டு மகா உக்கிரமாக விரைவுடனெவ்
விடத்திற்குப் போகுநீர் அதைச்சொல்லுமென்ற மனைவியைநோக்கி
அடிபெண்ணே என்தமையன் ஆக்கினையின்படி பிர்மா விஷ்ணு சிவ
ன் முதலாகியதேவர்களும் எங்கள்பேரைச் சொன்னமாத்திரத்தில்பய
ந்து நடுநடுங்கும்படியான ஒருகாரியத்தை யுத்தேசித்துப்போகிறேன்
நீ அரமனைக்குப்போயிருமென்று சொன்ன கணவன்மொழியைக் கே
ட்ட சில்லிங்கை விசனமுற்று பிராணநாயகரே, அடியாள் நேற்றிரவி
லோர் சொற்பனங்கண்டேன் அதைச் சொல்லுவதற்கே யென் வாய்
கூசுகிறது அது சொல்லபடாதகினவு யதைச்சொல்லச்சொன்னால்
சொல்லுகிறேன் அதென்னவெனில் அடியாள்கழுத்திலுள்ளதாலிநழு
விவிட கண்ணுந்தோளும் வலதுபக்கந்துடித்திட பன்றியானதுதேன்
நீர்மேல்பாய்ந்துவர நமதுவாசலில் ரத்தஞ்சிதறிட இன்னுமனேகங்
கொடியதுஷ்ட சொற்பனங்கள்கண்டேன் ஆகையால் இதில்யேதோ
கெடுதி சம்பவிக்கும்போலத் தோற்றுகின்றது. அன்னியிலும்நீர்யோச
னைசெய்துக்கொண்டுபோகிற காரியமோ பழியும் பாவமும் யிழிவும்
நேரிடும்படியானதாக விருக்கிறது ஆனதால் தாங்களிவ்விடம் விட்டு
யெவ்வளவும் போகக்கூடாதென்று தடுத்தாள் அம்மொழிகளைக்கேக்

ட்ட இரணியாக்கதன் சினமிகுந்து பற்களை நறநறவென்று கடித்து மீசைதுடிக்கக் கண்களில் நெருப்புப்பொரிபறக்க ஆர்ப்பரித்துக் கைகொட்டி சிரித்து அடிபெண்ணே அன்னியர் யாரேனும் யிந்தப்படி சொல்லுவாரேயாகில் அவர்களை யிப்போதே இரண்டுதுண்டாகும்படி யென்கைவாளினால் வெட்டியெறிவேன் நீகொண்டபெண்டானதால் நீ சொல்லியவார்த்தைகளைப் பொருத்தேன் கனவிற்கண்டபொருள் சிலவுக்குதவுமோ உதவாததுபோல நீ கண்டசொற்பனம்பலிக்குமோ பலிக்கமாட்டாது வீணாகயேன் யென்னைத் தடுக்குறாய் தடுக்கவேண்டாம் இதோஒருநொடியில்சென்று பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு விரைவில்வருகிறேன் பாரென்று சொல்லி அவ்விடத்தைவிட்டு வெளிப்பட்டுச்சென்று முப்பத்து முக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகணங்களும் அஷ்டதிக்குப் பாலகரும்அஷ்டகுலவரையும் எட்டுதிசையானைகளும் சூரியசந்திராதிநக்ஷத்திரகணங்களும் பூமாதும் ஆதிசேஷன் முதலாகிய தாரகைகளும் நடுங்கி யொடுங்கும்படியாக எட்டுத்திக்கும் அதிரப்பற்களைக்கடித்து அண்டம்வெடித்திட நகைத்துப் புவிதனைசுருட்டிச் செண்டுபோலெடுத்துப் பார்க்கடலுக்குள் கொண்டுபோய்ஒளித்து வைத்துவிட்டு அங்குநின்றுந்திரும்பி சபையையடைந்து இரணியனுக்குத்தெண்டனிட்டு அண்ணாதாங்கள்சொல்லியபடி பூமியைக்கொண்டுபோய் சுருட்டிக்கடலிலொளித்து வைத்துவிட்டு இன்னமென்ன கட்டளையாகிறதோ யதுகளைமுடிக்க யென்றெதிர்பார்க்கிறேனென்றான் அவ்வசனத்தைக்கேட்டு இனியில்லாத ஆனந்தமடைந்து தம்பி யிப்போதுநீ நம்முடைய சேனைகளை யெல்லாங் கூட்டிக் கொண்டுபோய் இந்திரன் அக்கினி எமன் நிருதி வருணன் வாய்வு குபேரன் ஈசானியன் அந்தரமத்தியபாதாளம் இதுகளெல்லாம் திக்குவிஜயஞ்செய்து வரக்கடவாயென உடனே இரணியாக்கதன் விடைபெற்று சகலசேனைகளையும் புடைசூழ நகரத்தைவிட்டுவெளிப்பட்டு இந்திரன் முதலானவர்களுடன் யுத்தஞ்செய்து ஜெயம்பெற்று வருகிறபோது பிரம்மதேவன் சராசரவஸ்துக்களைச் சிருஷ்டிக்க வெண்ணங்கொண்டு சத்தியலோகத்தைவிட்டு அன்னவாகனமீதேறிக்கொண்டுவந்து பார்த்துப் பூமியையெங்குங்காணாமல் தமதுஅறிவினால் யூகைசெய்து இரணியாக்கதன் பூமியைப் பாயாகச்சுருட்டிக்கொண்டுபோய் சமுத்திரத்திலொளித்து

வைத்திருக்கிறானென்றுணர்ந்து ஆதிமத்தியாந்தரகிதனுயும் சர்வவி
யாபியுமாகிய ஸ்ரீமந்நாராயணனைப் பலவாறுதோத்திரஞ்செய்கிறபோ
துவிஷ்ணுவானவர் தன்னுடையமனையாளாகிய பூமிதேவியை ராக்க
தன் யெடுத்துக்கொண்டுபோய் பாற்கடலில் ஒளித்து வைத்திருப்ப
தையறிந்துக் கண்களில் நெருப்புப்பொறிகள்சிந்த மூன்றாம்பிறையை
ப்போலொத்ததந்தமும் மேகங்கள் நடுங்கும்படியான கெர்ஜனையுமாகி
வெள்ளைப்பன்றியுருவாய் பிரம்மதேவன் நாசியிலிருந்து உதித்துமிகு
ந்த உக்கிரத்துடன்கிளம்பி சமுத்திரத்தில் விழுந்துபிரண்டு யெழுந்
திருக்கிறபோது சப்தசமுத்திரஜலம்யாவும் தன்னுடைய ஓர்மயிர் நுனி
யில் பனித்துளியைப்போலத்தோன்றும்படிவிளங்கி அதிக ஆழமுடை
ய தடாகத்திலிருக்கும் தாமரையை மதம்பொருந்திய யானையானது
யெப்படிபறித்துக்கொண்டு வருமோ அந்தப்படிசமுத்திரத்தில் கவிழ்
ந்துகிடக்கிற பூமியைத் தன்கோட்டினால் அசையாமலெடுத்துவந்து
பிரம்மதேவன் கண்டுகளிக்கும்படி முன்போல் பூமியைப் பொருந்த
வைத்தும் தன்சினம் அடங்காமலிருந்தார். அப்போது திரிலோகசஞ்
சாரியாகிய நாரதர் திக்குவிஜயஞ்செய்துக்கொண்டுவருகிற இரணியா
க்கதனைக்கண்டு ஆசீர்வதித்தார் அதைக்கண்டு இரணியாக்கதன் நார
தரைநோக்கி ஐயாமுனிநாதரே உலகத்தில் யேதேனும் விசேஷஆச்
சரியம் உண்டோயென்றான் அவனைப்பார்த்து ஐயா தாங்கள் பாயாகச்
சுருட்டி பூமியைக் கடலிலொளித்து வைத்தீரோ அதை யிப்போது
ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் வராகஅவதாரங்கொண்டு திருடிக்கொண்டு
போகிறார் அதைநான் கண்ணினால் பார்த்துவந்தேன் இந்த அதிசய
மொன்றுதவிர வேறொன்றும் யான் காணவில்லை யெனச்சொல்லிய
மொழிகளானதுநாராசத்தைப்போல காதிலேறினமாத்திரத்தில் இர
ணியாக்கதன் தேகம்பதறிமீசைகள் துடித்துகண்களில்நின்றும்நெருப்
புப்பொறிகள் சிதறப்பற்களைநறநறெனக்கடித்துஓடோடியும்வந்துபன்
றியுருவமாகிய பகவானை யெதிர்த்துநின்றுப் பலவாறுதூஷித்துத் தர்
கமிட்டு முடிவில் சூலாயுதம் பிண்டி பாலம் பதிட்டி யெரியீட்டிமுத
லாகிய ஆயுதங்களைப் பிரயோகித்தான் அதைக்கண்டு வராகமூர்த்தி
வெகுண்டு கோபமிகுந்து தன்தேகத்தைச் சிலிர்த்து அரக்கன்விட்ட
ஆயுதங்களெல்லாம் பிடித்துகடித்துத் துண்டுதுண்டுகளாகச்செய்து

உலகமெங்கும்படிக்கிளம்பி அரக்கன்மேல்ப் பாய்ந்துத் தன்கொம்பினால் அவனுடலை யிருபிளவாகப்பிளந்து அவனுயிரைவாங்கி பூமியைப் பழையபடி ஆதிசேஷன்சிரத்தில் பொருந்தவைத்து பூமாதின் துயரத்தைப்போக்கி ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் தன்னிருப்பிடமாகிய வைகுந்தமா னகரத்தையடைந்தார் பின்பு வராகமூர்த்தியினால் யிரணியாக்கதன் மடிந்தானென்று சங்கதியைக்கேட்டு திதி சில்லிகை லீலாவதி மூவரும்புலம்பியழுது ஆராத்துயரத்துட னிருக்கிறபோது இரணியனும் தம்பிக்காக அழுது புலம்பி ஒருவாராகத்தேறி அங்கு இராத்துக்கத்துடன் அழுதவாடுகிற மூவரையுந்தேற்றித் தம்பியிரணியாக்கதனுக்குச் செய்யவேண்டியக் கடனைசெய்துமுடித்து கொலுவீற்றிருந்து மந்திராலோசனைசெய்து லீலாவதியை வரவழைத்துப் பெண்ணே யென்தம்பியைக்கொன்ற மாயவனைக் கொல்லுவதற்காகத் தவஞ்செய்து வரத்தைப்பெற்று வருகிறேனென்று சொல்லி விடைபெற்றுத் தவவேடம்புனைந்து இரணியன் வனத்திற்குப் போனபின்பு இரணியாக்கதன் மனைவியாகிய சில்லிகைத் தன்கணவனைக் கொன்ற வராகமூர்த்தியின் திருவடியைத்துதித்து யானும் பெரும் பதவியை யடைகுறேனென்று திடஞ்செய்துக்கொண்டு தவஞ்செய்துக் கடைத்தேரும்பொருட்டு வனத்திற்குச்சென்று தவஞ்செய்து மகாவிஷ்ணுவை தெரிசித்து வைகுந்தபதவியையடைந்தாள் பின்புஇரணியன்பஞ்சாக்கினி மத்தியிலிருந்து அகோரமான தவஞ்செய்துக்கொண்டிருக்தான் இங்கே லீலாவதி கெர்ப்பமாயிருப்பதை யறிந்த தேவேந்திரன் பயந்து லீலாவதியைச் சிறைபிடித்துக்கொண்டுபோகிறபோது நாரதர்தடுத்து லீலாவதியைத் தமது ஆசிரமத்திற்கழைத்துக்கொண்டுபோய் கியானோபதேசஞ்செய்ய அப்போதவள் நித்திரை யடைந்திருக்க அவள்கெற்பத்திலிருந்த சிசு அந்த சுக்கியானத்தைக் கேட்டுத் தெரியந்து அங்கே இரணியன் செய்யுந்தவத்திற்கு மெச்சி பிரம்மதேவர் எழுந்தருளி ஐயா இரணியமகாமுனியே உன்னைப்போலத் தவத்தில்

மிகுத்த திடசித்தமுடையவரை நானெங்குங் கண்டதில்லை உனக்கென்ன வரம்வேண்டும் கேளுந் தருகிறேனென்ன இரணியன் பிரம்மதேவனைவெகுவாகப் போற்றி யேற்றி சுவாமி தேவர்களாலும் பகைவராலும் பெண்கூட்டங்களினாலும் மண்ணிலும் விண்ணிலும் உள்ளிலும்புறம்பிலும் யின்னுமுள்ள சகலஜீவராசிகளினாலும்யெனக்குமரணம்நேரிடாமலிருக்கும்படிவரந்தந்தருளவேணுமென்னபிரம்மதேவர் அந்தப்படியேவரமீந்துச் சென்றார் இரணியன் பிரம்மதேவனிடத்தில்வரம்பெற்றுக்கொண்டு தன்னகரஞ்சேர்ந்து லீலாவதியை யிந்திரன் கொண்டுபோனதையறிந்து மிகுந்தகோபங் கொண்டிருக்கிறபோது நாரதர் லீலாவதியைக் கொண்டுவந்து இரணியனிடத்திலொப்பிவித்துச்சென்றார். பின்புலீலாவதி பத்துமாதமும் பூரணமாகி. உத்தமமாகிய லக்ஷணங்கள் வாய்ந்த ஆண்குழந்தையைப்பெற்றாள் அக்குழந்தைக்கு பிரகலாதனென்று நாமகரணஞ்செய்து போஷித்துவந்தார்கள்;

இந்தஇரணியன் யிரணியாக்ஷதன் இவ்விருவரும் முன்ஜென்மத்தில் யாரென்றால் பகவான்தங்கும் வைகுந்தமான கரவாசலைக்காக்கும் துவாரபாலகர்கள் இவர்களுக்கு சனகசனந்தனர்களாலே சாபம் நேரிட்டு பகவானை வேண்டுகிறபோது பகவான் துவாரபாலர்களை நோக்கி யெனக்கு யெதிரிகளாக மூன்றுஜென்மமெடுத்து யென்னுடன்யுத்தஞ்செய்து யென்னால்மடிந்து பழையபடி துவாரபாலகர்களாக வருவீர்களென்று வைகுந்தவாசன் சொல்லியபடி அவர்கள் காசிபருக்கும் திதிக்கும் புத்திரர்களாக முதல்ஜென்மத்தில் இரணியன் இரணியாக்ஷதனாக உதித்தார்கள்.

முகவுரை - முற்றிற்று:





ஸ்ரீ
ராமஜெயம்,

# மொத்ததோத்திரம்.

தரு-ஆதி-இ-ம்-சங்கராபரணம்,

பாதாரவிந்தம்-வந்தனமே (பாதார)
வேதாகமங்களுக் காதாரமாம்பர
தாதாவெனுங்கெண நாதாவுனது (பாதார)

தடம்வயல்வாவி செந்தாமரைசூழ்திருத்
தணிகையில்வளர்சிவ சண்முகனார்
மடமையிலெனுங்குர மாதுவள்ளிதெய்வானை
மணிச்சிலம்பசைய பொற்பணியணிந்திடும்(பாதார)

செழிக்கும்பாதிநதியுஞ் செண்பகமுங்கொன்றையுஞ்
செஞ்சடையிலணி கட்செவிபரனு
தழைக்குந்திருக்காரீசர் தனதிடபாகமதில்
தங்குந்தர்மசம் வர்த்தனிதாயாரிரு(பாதார

பாற்கடலில்பன்னகப் படுக்கையிற்றுயிலும்
பக்தவற்சலனெனும் பரந்தாமன்
ஏற்கும்மணிமார்பினி லின்பமுடன்வளரும்
யிந்திரையிருதிரு சுந்திரமாமலர்(பாதார)

சீரதாகயீரேழ்ஜெக முழுதும்படைத்த
திசைநான்முகன்நாவில் தினம்வளரும்
சாரதாகமசர்வேத கீதபுராணி
சரஸ்வதியெனதுதாயார் கனவனச(பாதார)

சுந்தரியாமளையெண்டோளி வீரிவராஹி
சூலிமாலினிமகிடா சூரமர்த்தனி
அந்தரிகௌரியேகாம் பரியேபைரவி
யாளிவாகினியே பொற்றுளிமாகாளியுன்(பாதார)

கற்பகத்தருக்கள்சூழ் ககனர்விபுதர்தப
சியானிகள்முனிவர் கின்னரர்கெருடர்
அற்புதமாய்கலவை யணியருமரையவர்
அக்ஷயமெங்கள்குரு பக்ஷகந்தசுவாமி(பாதார)



ஸ்ரீ

ராமஜெயம்,

# பழனிபராசஞயகியம்மன்பேரில்கீர்த்தனை;



இ-ம்-கல்லியாணி-ஆதி-சாபுதாளம்,

பராமுகமேனம்மா-இன்னமுஞ்சும்மா (பராமுக)

நேராய்முனிவ்ரிமையோ ராதியர்பரவுஞ்
சீராலுயர்பழனியூராள் பராசஞயகி
தெருளுருபலகலை தேர்ந்ததொண்டர்தன்
னிருள்செரிபழவினை தீர்ந்திடும்படி
தெரிவருமுபய பாதாம்புயம்புனை
பரிபுரநவமணிசூழ்ந்த கிண்கிணி
தருகுகுதகணக தரிகிட்டதகஜெணு
திமிதகவெனவொலிஜெயமுனமழகிய
சிற்சபைநடுவினி லர்புதநடனமிடு
சிற்பரனெனுமொரு கற்பகமரிவிய
தேனே-அன்புசிரந்தமானே-சிந்தை துணிந்து
நானே-புந்தனைநம்பினேனே-சந்ததமிந்த, (பரா)

வாணிமலரழகியவேணி மதுராசவேணி
நிர்விஷயபுராணிபணியுரகபூணி மௌனநவகோணி
கதியுதவுகாணியத்வித ருத்ராணிநித்தியகல்லியாணி
ககனாருமழை மதகான்றகுஞ்சர
முககெணபதியையும் நேர்ந்துபொங்கிய
கயவுடையசுரர் குழாங்கலங்கிட
அயல்விடுகணையும்யீன்றசம்ப்ரம
அந்தரிகௌரியேகாம்பரிசுந்தரி
கந்தரிகங்கணிபைரவியம்பிகை
காரணிதிரிபுராகாரணிசுகபரிபூரணி
மதினுதலாரணி-புமைசிவகாமி-குரவனிதைமாயி
சரதவபிராமி-அடிமைகொளநேமி-சமயமிது, (பரா)

வீரியுச்சிகௌமாரி குயின்மொழிவிஸ்தாரி
பிரணவவோங்காரி மகிடாசுரசம்மாரி
சக்கராதரமுராரி சோதரியின்பவாரி
பஞ்சாக்ஷரவகோரி செயகெம்பீரி
மரகதநிறையொளிவாய்ந்தபங்கிளி நிரள்குடமதன்றிட
கோங்கங்ரகொடுவடத்தகிரிசிமிழ் பூங்கரும்பையும்

மினையலவெனவிருமாந்துதண்பரி
மளமிகுகுங்குமகளபமிளங்கிளிவடமுமணிந்தலை
கடல்முதந்தனைவைத்துளபொற்கலசத்தைநிகற்றது
மதற்றிடர்வட்டவிசித்திரகனத்தெழின்

மாதே-தொழுமெளியேன்மிதே-வருமைவினையாதே
வினைவதுதகாதே-சொன்னேனிப்போதே. (பரா)

சீலிகிரணதிரி சூலிகரதலகபாலி
விளைதரும்வேலி கனகசுகுர்தநீலி
சரதவனுகூலி யதிகபாக்கியசாலி
நயசிலாக்கியலோலி திவ்வியகுணுளி
தவமதிவளருளவாந்திரியம்பகி சுவைபெரிகியகவி
மாம்பழம்பகர்தருதமிழினின் மகிழ்கூர்ந்தசுந்தரி

பொருந்திருலடலரியூர்ந்தவந்தரி
சாமளைகுண்டலிகோமளைசண்டிகைதாமதுரந்தரி
நேமசுமங்கிலிசங்கரிவிங்கிததுங்கமதங்கி
சடைங்கியிணங்குலகெங்குமிலங்கிய

தாயே-துணைவருகுவாயே-கிருபையென்மேல்
செய்வாயே-சிந்தைமகிழ்ந்துநீயே-புவிமீதினில். (பரா)

—∘∘❖∘∘—





ஸ்ரீ



ஸ்ரீராம ஜெயம்.

# இரணிய விலாசம்.

காப்பு - வெண்பா.

சீர்பெருகும்பிரகலாதனன் செழும்புகழைமேதினியிற்
பேர்பெருகுஞ்செந்தமிழாய்ப் பேசவே—கார்பெருகும்
குழலுமையாளீன்றவருட் குஞ்சரமாமுகவனிரு
கழலதையேபோற்றிமுதல் காப்பு.

இதுவும் விநாயகர்-துதிவிருத்தம்.

சீரினிலுயர்ந்த செந்திருவணிமார்பன்
 செழுமலர்ப்பதம் நிதம்போற்றி
பேரினிலுயர்ந்த நற்பிரகலாதனன்கதை
 புவியில்விலாசமதா யான்புகல
பாரினிலுயர்பருவத ராஜர்புத்திரி
 பரமர்தன்னிட பாகமேவும்
காரினிலுயர்குழ லுமையருள்சேயன்
 கணபதியிணையடி காப்பு.

இதுவும் விநாயகர்-துதி.

வெண்பா.

செந்திருமாலுக்கன்பன் சீர்பிரகலாதன்சரிதை
பைந்தமிழிறைற்புகழ்ந்து பாடவே - வந்துதவுங்
கைபாரோடாருடையான் காங்கயர்க்குமுன்புதித்தைதங்
கையானைநெஞ்சே கருது.

கலி விருத்தம்.

அலைகடல்சூழருமறையோர்தொழு மம்பிகையருள் தும்பிமுகவன்
செம்மலரடியையமனதிலிருத்தியேமைந்தன்யானும்பகரத்துணிந்தனன்
சிலைநுதல்விழிவல்லபைநேசனைத் தேடுமன்பருளத்தில்வாசனை
கலவைமாநகர்கற்பகவிநாயகர் கரத்தில்வந்துகருணைபுரிந்திடீர்.

பாலசுப்பிரமண்ணியர் துதி.

வெண்பா.

சீலமிகுவேல்வாங்கிச் சூரர்குலம்வேரறுத்த
பாலசுப்பிரமண்ணியர்தன் பாதமதை-ஞாலமதில்
போற்றித்தொழுதேன்முழுதும் பிரகலாதனன்சரிதை
சாற்றிடவாக் கெந்தனுக்குத் தா.

கலிவிருத்தம்.

நாகலோகமன்னவன்புதல்வியோ நாடினேனுன்னடியிணையேதருங்
கேகயவாகனகருணாகரா கெங்கையணிகாரீசர்சுதாகரா
யோகவன்பருளமகிழ்வேல்கரா உம்பர்போற்றுங்கெம்பீரகிருபாகரா
ஆகமமாசூழ்கலவாபுரியய்யனே வருள்செய்முருகனே.

பரமசிவன் தோத்திரம்.

விருத்தம்.

அரிவிணுக்கரிவாயாதியாய்நின்ற வம்பலத்தாடியவரசே
திரிபுரமெரித்தசிவபெருமானே திகழ்மறைதேடியுங்காணு
பரிபுரத்தொளியேயெங்கணும் நிறைந்தபராபரமாகியபரனே
கரியுரித்தவனேகைலைமேவியசீர் கடவுளேயுனைதினந்தொழுவேன்.

கலிவிருத்தம்.

முப்புரத்தையெரித்தச்சுடரொளிமுனைந்துமாலயன்காணுப்பெரு வெளிப், பொற்பதத்தைக்கருத்திலிருத்தியேபோற்றினேன்தமிழ்சாற் றினேனின்பாய், அப்பர்சுந்திரருக்கிரங்கும் சிவனிதியேஜெகஜோதி சொரூபமே,கற்பகத்தருமன்னவன்பணிந்திடுங்கலவைகர்க்காரீசரைப் போற்றுவாம்.

சரஸ்வதி-தோத்திரம்.

வெண்பா.

விக்கிரமத்திலேமிகுந்த வீரனிரணியன் வயற்றில்
தக்கரமெனவந்துதித்தத் தனையனும்-சக்கர
பாணியடியைமறவா பிரகலாதனன்சீர்க்கு
கலைவாணியே வாக்களிக்க வா.

கரிவரத பெருமாள்பேரில்

கலிவிருத்தம்.

சங்குசக்கரகட்கசோதண்டபாணியின் தாளிணையையென்னளு ந்துதிசெய்து, மங்களகவிவாணர்புகழ்ந்திடும்மாதவன்திருமாலடிபோ ற்றி,இங்கிதமோடெழிற்பிரகலாதனன்சீரிப்புவியிலிசைப்பதர்க்கருள், பொங்கமோடளிக்கும்கரிவரதர்பொன்னடியைப் புகழ்ந்துதுதிசெய் வாம்.

தர்மசம்வர்த்தனியம்மன்பேரில்

கலிவிருத்தம்.

அத்திமுகனைப்பெற்ற மனோன்மணி யாதரித்திருமால்மகிழ்சோ தரி, சித்தம்வைத்தெனையாட்கொள் தயாபரிசெந்தமிழ்க்கிரங்கிகரு ணாகரி, எத்தலம்புகழுங்கலவைக்காரீசரிடப்பாகமேமேவியசத்தி,தர் மசவர்த்தனி வந்துதாழ்விலாதுவாழ்வுதரவேணும்.

இலக்குமியம்மன்பேரில்-கலிவிருத்தம்.

செந்திருவில்பிறந்த ஜெயலக்ஷ்மி தேவியேயுன்றிருவடியைநம்பி னேன்,மைந்தனெந்தன்வறுமையகற்றியென்மாளிகையிலுன்தாளிணை யைத்தருஞ், சுந்திரமொடுசெழும்பிரகலாதனன்சீர்ச் செப்புதற்குஜெ யம்ஜெயமென்று, முன்வந்தருள்தந்திடுஞ் செந்தமிழ்க்குப்பொன்வன சபாதமதைத் துதிசெய்குவோம்.

கிராமதேவிபேரில் விருத்தம்.

மாங்குயில்மொழியாளிநதிரைமகிழ்ந்திடும்மாகுணன்பாதம்
பாங்குடன்துதிசெய்கின்ற பிரகலாதனன்றமிழைக்கூற
தேங்குமாங்கதலிச்சோலைச் செழித்திடுங்கலவைதன்னில்
வோங்கியேவளர்காவாத்தா ளுத்தமிபாதம்போற்றி.

---

மாகாளியம்மன்பேரில்-தரு-இ-ம்-தெள்ளிபந்து-ஏகதாளம்.

பல்லவி.

வந்துவரந்தந்தாள் மந்தவெளிமாகாளியே-அம்மா (வந்து)

அநுபல்லவி.

வாக்களிப்பாய் மனங்களிப்பாய்
வற்புதவிற்பனதர்ப்பரி கற்பகமேனி (வந்து)

சரணங்கள்.

கந்தர்ப்பன்தந்தைக்கிளைய கனமரலிருவி அம்மா
கார்குழலி கனலழலி
காரணி-யாரணி-பூரணி-நாரணியினி (வந்து)

சூரியலங்காரிமகிடாசூரசம்மாரி அம்மா சூரி
சுந்தரியே அந்தரியே
சோமுக-வைரியே-நேமகமோடுனைத்தொழ (வந்து)

திங்கள்தவிழ்ச்சென்னை சமுத்திரநகர்மேவும்-திங்கள்
தெள்ளமுதே பிள்ளைமீதே
சிந்தைகளிகூர்ந்துமே-சந்ததமிந்தவேளையில் (வந்து)

தஞ்சமென்றுனதடிதனை தினந்தொழும்-தஞ்ச
சாகினியே மோகினியே
சாம்ளி-குமார சாமியின் றமிழ்க்கினி (வந்து)

குருவணக்கம்-விருத்தம்.

மச்சமதாயலைகடலி லுருவங்கொண்டு மதசோமுகனை
வதைத்துமறை வேதன்கை
தக்ஷணம்வந் தளித்த திருமால் பாதத்தை
தஞ்சமெனும் பிரகலாதனன்சரித்திரத்தை
அக்ஷயமென் றருமறையோ ராசிகூற
அவனிமிசை நாடகமா யடியேன்பாட
பக்ஷமெந்த சுவாமியெங்கள் குருபாதத்தை
பரிந்துமிக பக்தியொடு பணிகுவோமே.

அவையடக்கம்-விருத்தம்.

ஜெகமதில்வாழ் புலவோர்கள் தங்கள்முன்னே
சிறியேன்செப்பியவசன மெதுபோலென்றால்
ககனமதிலுலவுகின்ற கெருடாழ்வாரைக்
கண்டுசிறுசெல்ல துவும் துள்ளுமாப்போல்
சுகம்டியர்களுக்களிக்கும் மாயன்பாதம்
சிரங்கொண்டுபிரகலாதனன்றன் சரிதைதன்னை
அகமகிழ்ந்துபிழைபொருத்து வடியேன்றன்னை
யாதரிக்கவேண்டும்ருட் கவிவல்லோரே.

பொது-விருத்தம்.

தந்திமுகனடியிணையை முந்திமனதிற்றொழுது
சண்முகனைப் போற்றிமூன்றும்
இந்துவணிசடையனடி யிருதயந்திற்கருதி
யெழிற்செங்கண் மாலைபோற்றி
கந்தமலர்க்குழலுமையின் கழலதைவணங்கிதிரு
கமலபதமதைத் துதிசெய்தே
செந்தமிழ்புராணி திருவடிகளைப்போற்றியே
செப்புவேன் விலாசமதையே.

தோடையம்-இ-ம்-நாட்டை-சாப்புதாளம்.

ஜெயஜெயா ஜெயஜெயா ஜெயஜெயா ஜெயஜெயா
ஜெயஜெயா ஜெயஜெய ஜெயஜெயாரே (ஜெய)

வயல்சூழுங்கலவைநகர் வாழுமனாதொழுமாயன்
செயலோங்கும்பிரகலாதனன் சீர்கதையைப்பாடரே (ஜெய)

கயலோங்கும்விழியுடையாள் கன்னிவல்லபைமோகன்
கற்பகவிநாயகர்தன் கமலபதம்போற்றிரே (ஜெய)

மயின்மீதிலேறிஜெகம் வலமாகவரும்சுப்ர
மணியரெனும்வடிவேலர் மலரடிகள்போற்றிரே (ஜெய

வாரிசூழுலகோர்கள் வந்துபணியுந்திரு
காரீசநாதர்திரு கனகபதம்போற்றிரே (ஜெய)

சீரிலுயரடியார்கள் சிந்தையில்குடிகொள்ளும்
கார்முகில்வண்ணனிரு கழலடிகள்போற்றிரே (ஜெய)

நிலைபெற்றுவிற்றமிழ் நீடூழியாய்ப்பெருக
மலைமகளையலைமகளைக் கலைமகளைப்போற்றிரே (ஜெய)

சிங்கவாகனமேறிச் செழித்தோங்கும்கலவைநகர்
மங்கைகாவாத்தாள்தன் மலரடிகள்போற்றிரே (ஜெய)

பொங்கமிகுகவிவாணர் புலவர்கள்தனைப்பணிந்
திங்கிதமொடுவிலாச மியம்பலுற்றனனேரே. (ஜெய)

மங்களம்-தரு-இ-ம்-சுருட்டி-அடதாளம்

பல்லவி.

மங்களமங்களம் மதுசூதனும்லர்வசனு (மங்களம்)

அநுபல்லவி.

திங்களுலவுந்திரு கலவைமாநகர்மேவும்
பொங்கமுடன்வல்லபை புணருங்கெணநாதருக்கும்(மங்)

சரணங்கள்.

கோலமயின்மீதேரி ஞாலம்வலமாய்வரும்
சீலன்செங்கதிர்வடி வேலனுக்கும்
சோலைக்குயில்போல் கொஞ்சும்நீலவிழியார்கள்
சீலமிகும்வள்ளி தெய்வானையர்க்கும் (மங்)

அரவமதைமார்பினில் திரமாயணியுஞ்சதுர்
கரமுடையகாரீச துரையவர்க்கும்
பருவதராஜபுத்திரி பரவைபாவலர்க்குநல்
வரமளிக்குந்தர்ம்மசம் வர்த்தனிக்கும் (மங்)

கொண்டல்மணிவண்ணனென் றண்டர்முனிவர்கள்கை
கொண்டுபணியுங் கோதண்டனுக்கும்
புண்டரீகவதனும்புஜ மெனுமிந்திரை
பூமகள்ஜானகி பூவையர்க்கும் (மங்)

இந்திரனிந்திராணிக்கும் இமையவர்முனிவர்க்கும்
யக்ஷகின்னரர் கிம்புருடருக்கும்
சந்திரசூரியருக்கும் சகலாகமங்களுக்கும்
தரணியோர்புகழ் பிரகலாதனருக்கும் (மங்)

பூவுலகினில்மறையோர்கள் பூசுரருக்கும்
புகழும்க்ஷத்திரியகுல பூபருக்கும்
மேவும்வைசியசூத்திர வர்ன்னநான்கின்முதல்
வேதியர்க்கும்பல ஜாதியர்க்கும்(மங்)

கற்றறிவையுணர்ந்த கவிவாணர்கள்தமக்கும்
கியானவான்கள் கருணாகரர்க்கும்
குற்றமில்லாமல் குமாரசாமிதமிழ்க்
குதவுங்கலவை கரிவரதருக்கும் (மங்)



விநாயகர் சபைக்குவருகிற

பொது - விருத்தம்.

சீர்கொண்டபசுந்துளபமாலைமார்பன்
 சேவடியைத்தொழும்பிரகலா தனன்சரித்திரம்
நீர்கொண்டகடலுலகில் விலாசமாக
 நிகழ்த்திடவந்தெனக்கருள்தந் தளித்துக்கார்க்கும்
கார்கொண்டயானைமுகன் களிக்கச்செம்பொன்
 கழற்சிலம்புகலகலெனத் துலங்கத்தும்பி
வார்கொண்ட கற்பகவிநாயகர்சபைக்கு
 வருகின்றார்தரிசனமுந் தருகின்றாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால், ஸ்ரீஅகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகராகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய பொற்பாத கமலங்களை இடைவிடாது பூசித்துப் போற்றியேற்றிய பிரகலாதனார் சரித்திரத்திற்கு அருள்வாக்களித்து ஆதரிக்கும் அற்புத கற்பகவிநாயகர் வருகிறவிதங் காண்க.

தரு-இ-ம்-தன்னியாசி-சாப்பு தாளம்.

தாம்தணுததிமி தரிகிடகிடதரிதாம் தத்திமிதக
ஜேம்ஜெணுததக ஜெம்தரிகிடதகதெய் தாம்தணு
தாம்தணுததிமிதரிகிடதாதா ஜேம்ஜெணுததிமிஜெம்தரி
தெய்தெய் தகணகஜெம்தரி ததிமிதகிடதக
தளங்குதகதிமி தகததிங்கணதோம்

கற்பகவிநாயகர் வந்தார் கனமிகுசபைதனி
லனைவருமனமகிழ்ந்திட வற்புததரிசனந் தந்தார்
தற்பரனெனுங் காரீசரளிக்கு மைந்தன்
வெற்பினிலுபரடியார்கள் விரும்புஞ்சொந்தன்
விண்டலத்தோர்கள் கைகொண்டுபணிந்திடு
மண்டலமீதினில்தொண்டர்மகிழ்ந்திடும் (கற்பக)

ஆகுவாகன யோகன் அனமெனும்நடையினி
லழகியகனசுந்திர வாகுவல்லபை மோகன்
சாகரஞ்சூழ்புவிதனில் விளங்கும்பிரணவன்
தணிகையில்வாழுஞ் சுப்ரமணியரிடதுணைவன்
தந்திமுகத்தொளி இந்துவைபோல
செந்தமிழுக்கருள் தந்தனுகூல (கற்பக)

பொங்குமங்குச பாசன் பொன்புரிநூலுரமதில்
திரமாயணிந்துலகெங்கும் தங்குங்கணேசன்
திங்கள்வேணியை வலம் சங்கையில்லாமல்வரும்
இங்கிதமோடுலகிலெங்கு ரிவர்பெரும்
சிரமதில்மகுடஞ் செங்கதிரொனமின்ன
கரமதில்வேத பாராயணம்பன்ன (கற்பக)

புலவர்க்கருள் செய்நேசன்பொரியருள்பெருகிய
கருமலர்சூழ்ந்திடுந் திருக்கலவைநகரில் வாசன்
பலயாகமங்களிலே நிலையாய்நிற்குமுதல்வன்
மலையோன்மகள் தர்மசம்வர்த்தனியாள்புதல்வன்
மங்களமாமறையோர் தொழும்நவமணி
தங்குமெழில்குமார சாமிதினமும்பணி (கற்பக)



கற்பகவிநாயகர்கோவில் குருக்கள்வருகிற

பொது-விருத்தம்.

கொங்கும்ந்தாரைவில்வம் கொன்றையுமருகுதும்பை
தெங்குமாங்கனியும்கன்னல் செழுங்கதலிப்பிலாவும்
பாங்குடனெடுத்துக்கொண்டு பரிவுடன்பூசைசெய்ய
ஓங்கியேநடைநடந்து உநததமக்குருக்கள்வந்தார்.

தரு-இ-ம-மோகனம்- ஆதிதாளம்.

பல்லவி.

கோயில்பூசைசெய்திடும் உத்தமகுருக்கள்வந்தனரே-கை
கூப்பிபணிந்திடும்பேர்களுக் காசிர்வாதமுநதந்தனரே (கோ)

அநுபல்லவி.

நாவிலரகராவென்றுமேகூரி யாவலுடனே
கணநாதரைக் கோரி (கோ)

சரணங்கள்.

தீர்த்தமுமாடியே சிரக்கத்திருவெண்ணீறைச்
செங்கரமதில் குழைத்து
இந்திரன்திசைமுக மாகநின்றுசிவ
சங்கராவென்று சிரனுதலினிவிழுத்து-பார்த்து
நல்லருத்தராக்ஷாபரண மதைதரித்து
பட்டஞ்சிகீர்காவிவேஷ்டி சட்டமாயலங்கரித்து (கோ)

தேங்குமாங்கதலி முந்திரியும்பலா
செழித்திடுமெழில் நார்த்தை திவ்விய
செங்கரும்பொடுதேன் சற்கரைநெய்பால்
சேகரமுடன் சேர்த்தே அன்பாய்
பாங்குடனிட்டவிப் பயர் உடைகளுங்கொண்டு
பரிமளமிகுந்த புஷ்பக்குடலைகொண்டு (கோ)

எள்ளெண்ணைமஞ்சளும் இளநீர்பெல்லமும்
மிதநெல்லியின் பருப்பு
எலிமிச்சனும்பச்சிலை கிச்சிலிசீக்காய்
உச்சிதமா யரப்பும் புகழ்
வள்ளல்கணேசருக்கு வாகாயபிஷேகங்கள்
உள்ளமகிழ்ந்துசெய்ய வெள்ளைக்கொம்பனைநாடி (கோ)

குருக்கள்சொல்-வெண்பா.

சுந்திரஞ்சேர்ப்பிரகலாதனன் சீர்கதைக்குவந்துதவி
தந்தருளுந்தொந்தி வயித்தானுக்கு - முந்தி
அன்பாயபிஷேக மாராதனைமுதலும்
இன்பமுறச் செய்வே னினி.

அபிஷேகம் செய்கின்ற

தரு-இ-ம்-தோடி-ஏகதாளம்

பல்லவி.

நாயகர்க்கபிஷேகமிப்போநான் செய்குவே
னதின்பாகம் (நாய)

அநுபல்லவி.

எழில்மாயன்சேயன்கன்னல் மாரனையெரித்த
வற்புததற்பரனீன்றிடுஞ் சொற்பொருள்கற்பக இ(நாய)

சரணங்கள்.

தடத்திற்சென்றுமுன்குளித்து வந்து
தழைத்திடவலங்கரித்துச் செப்பு
குடத்தில்ஜலத்தைக் கொண்டுவந்துதூபங் கொடுத்து
யெண்ணைகாப்பெடுத்து கையினில்



குளிரும்படியொளிர்திரேகமும்
களிரும்படிகளின கண (நாயகர்)

பச்சிலைகிச்சிலியரப்புச் சீக்காய்
பரிவுடன்முள்ளி பருப்பு புகழ்
உச்சிதமாயெலிமிச்சனு மிளகீர்
பச்சரிசிபயர்கஸ்தூரி மஞ்சளும்
பரிவாயனைவருமேதினந்
தருவார்கொளும் மனோம்ரமுதல் (நாயகர்)

அருகுதும்பை வில்வம் நந்தியா
வட்டமலர்கள் சாமந்திச் செல்வம்
பெருகும்பஞ்சாக்ஷரங் கெந்தமுந்தரித்து
திருமலர்ச்செழிக்க வலங்கரித்து
சிலைவேல்விழி திருவாமெழில்
கலையைநகர்கற்பகவி (நாயகர்)

தீபாராதனைசெய்கின்ற சுலோகம்.

வேதாகம விரஞ்சிஞாஞ்சன பன்னகாபரணு
தருநீர்பயோதர கண்டனப் பிரியமர
கூவிளமாலிகா தரம்ணிதிரு நயனு
பிரபஞ்சனபூசித சசிசுரநதி ஜடாபரதரி
விருஷபவாகனு பரமிடபாரியனுங்
கௌரிதநயா கஜமுககுணகெணபதி
பாதநமஸ்த்தே நமஸ்த்து.

தரு-இ-ம்-கமாஸ்-ஆதிதாளம்.

பல்லவி.

வாரணமுகமதிநிகர் கதிர்கிரணு
வந்தருள்புரிகிஜமத (வாரண)

அநுபல்லவி.

ஆரணப்பொருட்குமுன் னதிபதியாகிய நீ
தாரணிதனிலுந்தன் தாளினையேகெதி (வா)

சரணங்கள்.

சரணமென்பவர்க்குநல் கருணைபுரியுங்கெணநாதாபிரக்கியாதா
தையலெனும்வல்லபை தனக்குள்மனமகிழ்சமேதா
தருணமிதுசமயம் தந்திமுகன்பதம் நீ
தந்தைதனக்குமுன்பு மாங்கனிக்குவலமாய்வந்த (வார)

பாகுகதலிபலாபழமோடெச்சி யாராத்தியா நைவேத்தியா
பாருலகினில்பல பக்தர்கொண்டாடுமகாசத்தியா
ஆகுவாகனனேவந் தாதரியெந்தனை நீ
யாதியந்தஜெக ஜோதிப் பிரணவமய (வார)

அண்டர்முனிவர்தொழு மம்பிகையீன்றருள்பாலா-குணசீலா
அகமகிழ்ந்துதவிசெய் யடியேன்தமிழ்க்கனுகூலா
கண்டுமகிழ்ந்திரு காரிசரணித்திடும்
கலவைநகரில்மேவுங் கற்பகவிநாயகா (வார)

வெண்பா.

ஆனைமுகத்தானைதுதித் தாறுமுகத்தானைபணிந்
தேனையினிப்பிரகலாதனன் சீர்புகழை - மானிலத்தில்
விலாசமதாயுரைக்க வேண்டினேன்பெரியோர்க
ளுலாசமிகுபதம்பணிந்தே நுகந்து.

கட்டியக்காரன் வருகிற-பொதுவிருத்தம்.

அட்டியில்லாமலிந்த வண்டபிரம்மாண்டத்திற்கும்
மட்டிலாவரம்பெற்றோங்கி மணியணிமகுடந்தாங்கி
நெட்டியேயரசாள்கின்ற நிருதனுமிரணியன்வாசற்
கட்டியக்காரனிந்தக் கனசபைவருகின்றானே.

வசனம்.

அகோதெப்படியென்றால், சொர்க்க மத்திய பாதாள மென்னும் திரிலோகங்களை யெல்லாம் ஒருதவளச்சக்கரக்குடை நிழலில் அரசு செலுத்தும் அதிபதியாகிய இரண்ணியேஸ்வரரானவர் ஐந்துலக்ஷங் கோடி மந்திரிபிரதானிகள் புடைசூழத்தக்கதாகவும், சகலமேளவாத் தியங்கள் தாம்தாமென்று முழங்க நவரத்தினங்களிழைத்த மகுடந் தரித்துக்கொண்டு மகுடமண்டலீகர் தாள்களைத்தாழவும், அதிகஆட ம்பரத்துடன் வருகிறபடியால், முன் கொலுவலங்கரிக்கும் வீர சூர கட்டியன் அதிக உல்லாசத்துடன் வருகிறவிதங் காண்க.



கட்டியக்காரன் வருகிற

தரு-இ-ம்-அடாணு-திரிபுடை தாளம்.

தத்திமிதிமிதக தணுஜேம் தரிகிடதக (தத்தி)

தாகஜேம்தரி -தகுந்த குகந்தரி

தக்கிடகிட தரிகிட ஜேம்தரி தரிதகிடதக தரிகிட கிடதக

ஜேகிடஜெம்தரி தாகிட ஜேம்தரி

ஜேம்தரி கிடதகி தில்லாணுஜேம்தரி தோவெண (தத்தி)

பல்லவி.

தீரனிரணியாசுரன்கொலுவினில் கட்டியக்காரன்வந்தானே

சட்டமுடன்திட்டமோடு கட்டியக்காரன்வந்தானே

அநுபல்லவி.

ஆரவாரமோடமரர்முனிவருந் தீரமொடுகரஞ்சிரமேல்கூப்பிட

பாரிலிணையொருவருமிலையென வீராகூகோரதவபல

அண்டமும்பிண்டமுமெண்டிசைகளும்கண்டுபயங்கொண்டுநடுங்கிட

அசுரர்குலதுரைசேகரபரன் நிசுரர்பலபிரமாகியதரன். (தீர)

சரணங்கள்.

தங்கப்பாகைகள்பொங்கமுடன்சிரசதனில்தரித்து வெண்

சங்குதொனியுலகெங்கும்வீரிட தனித்துவார்பரித்து ஜெய

சிங்கமுன்வாரணங்களொதுங்குவதுபோல

தேவர்களைக்குரித்து ரத்தினத்

துங்கமுடிபுனைந்தெங்கும்புகழ்பெருந்

துரையென்றெச்சரித்து பெருங்

கங்குல்போல்குமரிகதித்தெழும்பிகண்கள்
காந்திகளும்வீச கையில்
கருதும்வெள்ளித்தடி-விருதும்புள்ளிக்கொடி
கனமுடனுல்லாச மெங்கும்
சங்கையில்லாமல் சுரர்முனிவர்களும்
தியங்கிமனங்கூச இந்தத்
தரணிதனில்புக ழிரணியன்பெருமையை
தைத்திரியர்களும்பேச எழில்
சாகரஞ்சூழ்புவி யோர்களேகிருபாகரனார்வருகின்றாரிதோ
சேகரமாகியே யெல்லோர்களும் சிகரமாகவேவந்திடவெண
தெரிக்குமொழிப்பெருக்கப்பேசியே யுருக்கமுடன்முறுக்கிமீசையை
செவியிற்குண்டலங்களுந்துலங்க-புவியிற் - கண்டவர்களும்விலங்க
தட்டியையிடைநெட்டியேகட்டியே - முட்டியசிங்ககுட்டியைப்போ
லவே-சல்லரிமுரசு டமாரகங்களும் - மல்லரிபேரிகை டவுலவாத்திய
மும்-சராசரமுழங்கப்-பராபர-துராதுரையசுரர்குலாகர (இர)

கட்டியங்கூறல்-விருத்தம்.

அண்டபகிரண்ட பிரம்மாண்டமீரேழையு
மாட்கொள்ளு மிரணியேசன்
ஆர்ப்பரித்தரக்கருடன் கொலுவின்முன்வருகிரா
ரனைவரு மெச்சரிக்கை
கொண்டல்மணிமாயவனை யெண்டிசையிலில்லாமல்
குரைகடல் தனிலொளித்துக்
கொள்ளும்படிச்சதுர் முகவனைநோக்கியே
கோதிலாத்தவங்கள் செய்து
விண்டவருங்கணடலரி தெண்டனிட்டிடதாழ
வெகுவ்ரம் பெற்றசீலன்
விருதுகொடிமுரசுவெண் சாமரைகளுந்திக்கு
விஜயம்வேந்தர்கள் கூரவும்
தண்டையணிபாதமது யெண்டிசையில் கலகலென
தைத்ரியகுல சக்ரேஸ்வரன்
தரணிதனிலிரணியர் கருணையுடன்வருகிரார்
சகலரு மெதிர்க்காண்கவே.

வசனம்

கேளுங்கள் கனம்பொருந்திய சபையோர்களே, இரணியேஸ்வ
ரானவர் வேதனைநோக்கி தீதிலாத் தவஞ்செய்து பூதலமுழுமையும்

காதலோடரசளிக்கும் காசிபசுத கனகேசன் வருகிறபடியால், யான் முன்னுதாகவந்து யாவருக்குந் தெரியப்படுத்தினேன் ஆதலால் யாவ ரும் எச்சரிக்கையா யிருங்கள் சபையோர்களே.

இரணியேஸ்வரன் வருகிற-பொதுவிருத்தம்.

அண்டமெண்டிசை யண்டஜலோகமும்
அதிர்ந்தகிலமுங்கலங்க
அரியரன்ருத்திரன் மூவருமொடுங்கியே
யபயமெனவே நடுங்க
விண்டலமளாவிடும்படி முடி சிரமதில்
வேதன்வெண் குடைகவிப்ப
விருதுகளொடுகொடி நிருதர்கள்பிடித்திட
விஜயனெனத் தன்மனமகிழ
தெண்டனிட்டமரருந் திகிலடைந்திட
திக்குப்பாலகர்வந்தேற்ற
திரமிகுமுநிவர்கள் தவசிசந்நியாசிகள்
தேவனென்றுலவலாய்ப் போற்ற
கொண்டல்போலிடித்துக் குமுறியார்பரித்துக்
கொடுமைசெய் மாயனைக்குறித்து
கொற்றவனிரணியன் குவலயம்நடுங்கிடக்
கொலுவினில் வநதனன்பாரீர்.

வசனம்.

அகோதெப்படியென்றால், சொர்க்க மத்திய பாதாள மென்கிற திரிலோகத்திற்கும் அதிபதியாகியஇரணியேஸ்வரன்ஐந்துலக்ஷங்கோடிமந்திரிமார்கள் புடைசூழும்படிகொலுவிற்குவருகிறவிதங்காண்க.



இரணியன் வருகிற- தரு-இ-ம்-கலியாணி- சாப்புதாளம்.

பல்லவி.

தைத்தியர்குலசக்ரேஸ்வரன் வக்தானிதோ (தை)

அநுபல்லவி.

கைதொழுதனைவருங்கடவுளென்றருளைப் போற்ற
கதிரவன்றனைப்பழித்திடும்படிமுடி தோற்ற
கருணைவிலாசன் ஈரேழ்புவி
கைக்கொள்ளுநேசன் உயர்
ககனதேவர் முநிவோர்களுமொடுங்க
கரியமாலும்யனுஞ்சிவனடுங்க
காதலாகயிப்பூதலமீதினில் களிக்குங்
காசிபரளிக்குஞ் சுதனென (தை)

சரணங்கள்.

கனககுண்டலமிலங்க மார்பினி லாரங்
கண்டுதீபங்கள்விலங்க இருபுறமும்
தினகரனொளியைப்போல் தோளில்புஜந்துலங்க
திருக்கையில்வாள்கெதைகொண்டு திரிலோகமுங்கடுங்க
தவபலசீலன் தனித்
தாளுஞ்செங்கோலன் இந்தத்
தரணியிலிணையொருவருமிலையென்ன
தங்கச்சரிகை தளதளவெனமின்ன
தனைதனைசும்க்குமுரகமாயிரம்சிரமதை
வணங்கித்திகைத்துப்பிரமிக்க (தைத்தி)
முரசுயெக்காளம்பேரி சின்னங்கிளார்னெட்டு
முகவீணையொடுபூரி நாகசுரங்கள்
வரிசையுடன்கென்செட்டு வாத்தியஞ்சங்குமல்லரி
வகையாய்திக்குப்பாலகர் வந்துபல்லாண்டுகூற
வஞ்சியராட சங்கீத
வர்ண்ணமும்பாட யெழில்
வாகுபெருஞ்சுதி மத்தளதாளமும்
வல்லவர்தும்புரு நாரதர்மேளமும்
வந்துமிகுந்த பதங்களைப்பாடவும்
வைத்திடும்நித்தியகர்த்தரா னென்ன (தைத்தி)

அண்டர்வந்தடிதாழ ஐந்நூறாயிரங்கோடி
அமைச்சர்கள்புடைசூழ மண்டலமெங்கும்
கொண்டரசாளுகிசெய் தென்குலந்தழைத்தோங்கிவாழக்
குறைகடலினில்மரியன் குலைகடுங்கிப்போய்விழ
சோதரச்செய்தேன் தவ யோகிகள்
நீதியைவைதேன் எந்தன்
குலகுருவெள்ளியின் உள்ளமுங்களிக்க,
நிலையுடன்வருணன் பன்னீரதுதெளிக்க
கொலுவினில்பலசில கொடிகளும்பிடிக்க
கலைவையில்வாழ்கரி வரதனைப்பிடிக்க (தைத்தி)

இரணியன் போற்றி-விருத்தம்.

சராசரபுவனத்திற்கும் சாஸ்திரம்ஞானூலோர்க்கும்
சுராசுரரசுரருக்கும் துய்யமாதவத்தோருக்கும்
நிராகிரைபொருளாயெங்கும் நெடியசெங்கோல்செலுத்தும்
பாராபரவஸ்துவாமென் பாதமேபோற்றிபோற்றி.

இதுவுமது.

சூராரங்குலத்தில்யானே துரைபோலேவந்துதித்து
ஆரவாரங்கள்செய்து வண்டமெல்லாங்கைக்கொண்டேன்
பார்முழுதீரேழுக்கும் பகவானேநானுமானேன்
சீர்பெருமென்செங்கோற் கென்றிருவடிபோற்றிபோற்றி.

முதல்மந்திரி போற்றி விருத்தம்.

வெற்றியில்மிகுந்தவீர விஜையசங்காரசூரம்
பெற்றுமேன்மையில்மிகுந்த பிரபலனேபுவியீரேழும்
முற்றிலும்புகழும்வேத முதல்வனுய்நின்றவெங்கள்
கர்த்தீபமாய்விளங்கும் கனகனேபோற்றிபோற்றி.

இரண்டாவது மந்திரி போற்றி-விருத்தம்.

ஆவலாய்தவங்கள்செய்து அளவிலாவரங்கள்பெற்று
மூவுலகுங்கைக்கொண்டு மும்மூர்த்திகளையடக்கி
தேவர்கள்முனிவரஷ்ட திக்குப்பாலரைமொடுக்கி
யேவல்கள்செய்யப்பெற்ற இரணியேஸ்வரனேபோற்றி.

தூக்கஞ்சுகி போற்றி-விருத்தம்.

தரணியோர்புகழுமெங்கள் தைத்தியமணியேபோற்றி
கருணைவாருதியாய்நின்ற காசிபர்சுதனேபோற்றி
சரணமென்றடைந்தபேரை தற்கார்க்குந்துரையேபோற்றி
இரணியேஸ்வரனேயுன்ற னிணையடிபோற்றிபோற்றி.

படைத்தலைவர்கள் போற்றி விருத்தம்.

ஐயமில்லாமலிந்த அகிலமீரேழுந்தங்கள்
கையினிலடங்கதேவ காவலனேவல்முன்னே
செய்யவும்வலுமைபெற்று செழிக்கநற்செங்கோலேந்துங்
கையனேசனவிரண்யக் கடவுளேபோற்றிபோற்றி.

இரணியன் சொல்-விருத்தம்.

சம்பிரமாய்கொலுவில்மேவுஞ் சற்குணமந்திரிமாரே
உம்பர்காமறையோர்கோன முயர்தவமுநிவர்சித்தர்
நம்பெருமையைக்கொண்டாடும் நலமிகுகொலுவின்முன்னே
ரம்பைமாதலாயிப்போது நடனஞ்செய்திடச்செய்வீரோ

வசனம்.

கேளுங்கள் ஓய் மந்திரிமார்களே, நமதுஅலங்காரக்கொலுவின் முன் ரம்பை மாதர்களை யழைத்து நடனஞ் செய்யச்சொல்லுங்கள் மந்திரிகளே.

ரம்பைமாதர் வருகிற பொது-விருத்தம்.

ரத்தினமிழைத்ததங்க நகைகளுமலங்கரித்து
சித்திரப்பதுமைபோல ஜெயவிரணியன்முன்னே
சுத்திமத்தளதாளங்கள் சுரதறியொடுபிட்டிலும்
பத்தியேயெடுத்தரம்பை பாவையர்வருகின்றாரே.

வசனம்.

இவ்விதமாக ரம்பைமாதர்கள் இரணியேஸ்வரர்சபா அலங்காரக் கொலுவின் முன்பாக அதிக சங்கீத சாஹித்திய பதங்கள்பாடிக்கொண்டு நயகுண அபிநயங்களோடு வருகிறவிதங்காண்க,



ரம்பைமாதர்கள் வருகிற

தரு-இ-ம்-பந்துவராளி-ஆதி-சாபுதாளம்

பல்லவி

ஒளியில்மிகுந்தசரப்பளிகளணிந்துரம்பை-
யூர்வசியெனுமாதர் வந்தாரிதோ
பார்மிசையில் விநோதர் (ஒளி)

அநுபல்லவி.

குளிருஞ்சாந்துங் களபங் குங்குமம் மஞ்சள் கஸ்தூரி
குமுகுமென்றெங்கும் - வீச செழித்திடு
மாந்தளிர்மெய்யில் மேவியே சரசசல்லாபமொடு
சாதிசுரங்களும் - பேச மல்லிகைமுல்லை
முளரிமலர்செண்பகம் முடிக்குங்கூந்தல்கள்நீர்
முகிலினங்களை - யேச பசங்கீதங்
களிரும்படியுரைக்கும் கண்டதொனியோசையைக்
கண்டுகோகிலங் - கூச முகவிலாசங்
காணுமன்னர்களைக் கண்டுமேசோர
பூணுமாபரணமும் பணியார (ஒளியில்)

சரணங்கள்.

முத்தம்த்திடுங்கொப்பும் முகமுன்கர்ன்னப்பூயாளி
முருகும்செவியிற்றுலங்க ரத்தினங்களை.
வைத்திழைத்தக்கம்மல் ஜிமிக்கிஜாலர்சரமும்
வங்கிதோடாவுமிலங்க நாசியிலிடும்

நத்துபுலாக்குபொன் மூக்குத்திசிட்டியுந் தொங்கல்நகை
மேனியெங்குங்குலுங்க பச்சைமாந்தாளி
ஒத்தஜடப்பில்லே சாமந்தி திருவுங்கொண்டை
ஒக்கும்படியே யலங்கரித்துப்புவியில்
ஒயிலன்னநடைகளைப்போல் நடக்குமயிலினங்க
ளெனவேமனமகிழ்ந்து (ஒளியில்)

தடம்லேகளைப்பழித்திடு மிருஸ்தனங்களிற்
சரிகைரவிக்கைமாட்டி சிங்கத்தைவெல்லும்
இடைகளில்பட்டு பீதாம்பரச்சேலேமேல்
எழிலொட்டியாணம்பூட்டி மதன்விட்டப்பணி
படம்தைவெல்லுமிருதுடைக ளிளவாழைத்
தண்டினங்களை நகைகாட்டி வெகுவினோத
திடமுடையதம்பூர்வீணை சித்தார் பிட்மல்
திரமாய்சுதிகள்கூட்டி துரைதன்பேட்டி
தினமுங்கண்டுதிரு நடனம்புரிய மனமகிழ்ந்து
மடமாதருக்குரிய (ஒளியில்)

ரம்பையர் போற்றி-விருத்தம்.

சகலபுவனமுமெங்கும்போற்றியேதொழுதிடும்
தைத்தியகுல துரைசேகரா
புகலுமறைவேதமதிலோதும்கீர்த்தியே
பொங்குமிங்கிதசோதியே
இகல்பெருகுமுமது கொலுவினில்நடனமேபுரிய
யிணையடிகள் போற்றினோம்
அகமகிழ்வதாகவெங் களையாதரித்திடு
மையனின் னடிகள்போற்றி.

வசனம்.

சுவாமி மகாப்பிரபுவே அதிக வந்தனமையா.

இரணியன் சொல் விருத்தம்.

நாகமங்கையரேயிந்த நலமிகுகொலுவின்முன்னே
பாகமாய்க்கீதம்பாடி பரதநாட்டியமுமுன்னே
ஆகமப்படியாலாத்தி யண்டர்மெச்சிடவுங்கொண்டுத்
தோகைரம்பையரேலாவிச் சுபமங்களங்கள்சொல்வீர்.

வசனம்.

ஓ தேவரம்பையர்களென்னும் பாவையர்களே, நீங்கள் பரதநாட்டியங்களில் மகாவல்லமைசாலிகளென்றெனக்கு நன்ருய்த் தெரியவருமல்லவா ஆதலால் உங்கள் கல்வியின் முயர்ச்சிகளை நன்ருய்யாவருக்குந் தெரியும்படி நடனஞ்செய்யுங்கள் பெண்களே.

ரம்பையர் நடனஞ்செய்

தரு-இ-ம்-மாஞ்சி-ஆதிதாளம்.

பல்லவி.

சுந்தரசோபிததேவா- ஓ சுருதிமுதலினில்
பரிதியொளிபோல்வாழ் (சுந்த)

அநுபல்லவி.

மந்திரபுயனே மருவலர்ஜெயனே
சிந்தைகூர்ந்துயெங்கள்மேல்-சித்தம்வைத்தாள்சுகுண (சுந்)

சரணங்கள்.

அரிவையர்களிக்க வனங்களுமொளிக்க
திருவுருவங்கொண்ட தேகாமோகப்பிரசண்ட (சுந்த)

துதிபெருஞ்செங்கோலா துலங்கியசீர்லீலா
வதிமகிழும்லோலா வளர்கனகசீலா (சுந்த)

ஜெகம்புகழும்நாதா செழுங்கமலபாதா
சுகமொழிவிநோதா சோதிப்ரகாசதாதா (சுந்த)

நடனமாதர்கள்-சொல்-வெண்பா.

சிந்தங்களிக்கத் திருநடனமும்புரிந்தோம்
வெற்றிபெருமிரணியற்கு விருப்பமுற-பத்தி
மாலைத்தழைக்குமணி மகாதேவனுக்கினி
ஆலாத்தியுமெடுப்போம் யாம்.

ஆலாத்தி-தரு-இ-ம்-எதுகுலகாம்போதி-அடதாளம்.

பல்லவி.

அண்டரண்டபிரமாண்டகோளமெட் டகிலமுந்துதிக்கும்
அருள்பதிக்கும்-அதிபதிக்கும்-மேலான
ஐயனேசெங்கோல்-கையனேயெங்கும்
மெய்யனே-மெ-மெ-மெ.

தெண்டனிட்டமரர் தினந்தொழுந்திரு தீரனேசூரா
அதிகாரா-மதிதீரா-குபேரா
தேவனேமஹானு பாவனே மறை
பூவனே-பூ-பூ-பூ.

காசிபருயர்தவத்தினால்வந்த கண்மணிதுரையே
வேதமறையே-எங்கும்நிறையேயுறையே
கர்த்தனே கண்பார்ப்பீர் சித்தனே யெங்கள்
சுத்தனே-சு-சு-சு.

மாசிலாமணிமகுடமணிந்த மன்னவர்மன்னா
மகிழ்சொர்ன்னா-தானகர்ன்னா-சம்பன்னா
மாரனேமகிழ்-தீரனே விரணிய
சூரனே-சூ-சூ-சூ.

எதிரில்லாமலீரேழு லோகமுமாளும் பிரதாபா
கனதீபா-மகிழ்பூபா-பரலோபா
ஏகனேதவ-யோகனேஜெப
யோகனே-யோ-யோ-யோ.

மதிமுகங்கொளியெனும்லீலாவதி-மகிழ்லோலா
மதலீலா-பரிபாலா-முன்னூலா
மண்டலர்புகழ்-கொண்டுலாவிய
குண்டலா-கு-கு-கு.

பலகலைக்குமுன் நிலையதாகிய-பங்கயவதனா
திதிசுதனா-யெழில்-மதனா-நிதனா
பாக்கியனே செங்கோ லோக்கியனே
சிலாக்கியனே-சி-சி-சி.

கலைவல்லமாகர் மேவுநற்கரி வரதனார்-பகைவா
மனந்தேகவா-யெங்க-ளகவா-மகிழ்வா
காணுமே-மனந்-தோணுமே-யன்பு
பூணுமே-பூ-பூ-பூ.

பெண்கள் சொல்-கொச்சகம்.

தண்டாமரைமலர்போல் தழைத்திடுஞ்சீர்வாணியரோ
அண்டர்மகிழ்ச்சிகொள்ள வாலாத்தியுமெடுத்தோம்
செண்டார்முலைகுலுங்க தீரனிரணியன்களிக்க
கொண்டாடிநடித்திடுவோம் கோதைமாரானுமிப்போ.

வசனம்.

குளிர்ந்த செந்தாமரை மலர்போல முதுகினையுடைய பெண்களே, நாம் ஆலாத்தியெடுத்தோம் அவர் மனம் சந்தோஷிக்கும்படி கொண்டாடிப்போம் வாருங்களடி என் தங்கைமரே.

கொண்டாடிக்கின்ற

தரு - இ - ம் - தோடி - ஏகதாளம்.

பல்லவி.

கொண்டாடிக்கின்றார் பெண்கள்
கொண்டைகுலுங்கக்கால் தண்டைகலங்கக்கியால் (கொ)

அநுபல்லவி.

அண்டாண்டங்களுமெண்டிசைகொண்டாளுமிரணியதேவனை •
வண்டார்குழலியர்போற்றியே-தண்டாமரைச்-செண்டாமெனை
(கொண்டாடிக்கிறார்)

தங்கச்சரிகையின்சேலைகளெங்குந் தகதகவென்மின்னச்
சிங்கத்திடையுடைநடையினர்-கொங்கைகுலுங்கிடநங்கையர் (கொ)

தும்புருநாரதரிருபுறம்தம்பூரு வீணைகள்மீட்டிட
சம்பிரமோட்ச-தனிதமங்கள-உம்பர்கள்பயங்கராவென்றிதோ (கொ)

சுரதாளமும்சுதிமத்தளம்உரை தாதத்திமிதிமியென
நிதானிலை-கலவைக்கரி-வரதாவர-வருளெனவிதோ (கொ)

மங்களம்

இ - ம் - சுருட்டி - அடதாளம்

பல்லவி.

மரகதமணிமுடிசூடுமிரணியர்க்கும்-மங்களம்சுப-மங்களம்
பரவுந்திரைகடல்சூழ் பாராளுமிரணியற்கும்-மங்களம் (மர)

மதிமுகங்கரொளிநிதி லீலாவதிபதி-மங்களம்-சுபமங்களம்
சதிர்பெருமுலகினில் திதிசுதருக்குஞ்செய-மங்களம் (மர)

ஜெகமதில்புகழ்கொண்டகமகிழ்வீரர்க்குமங்களம்-சுப-மங்களம்
ககனதேவர்கள்பணிமகரகுண்டலருக்கும்-மங்களம் (மர)

உலகினையொருகுடைநிழலிலாள்பவருக்கும்-மங்களம்-சுபமங்கு
கலவைநகர்வாழ்கரிவரதன்பகைவருக்கும்மங்களம் (மர)

இரணியன் சொல்-விருத்தம்.

கருதுமெந்தன்கொலுவினில்வாழமைச்சமாரே
காதலுடன்நடனமிடுங் கன்னியர்க்குப்
பரிதியைப்போலொளிமிகுந்த பூஷணங்கள்
பட்டுபீதாம்பரச்சேலை பரிவாய்த்தியாகம் -

திரும்திபடும்படியவர்க்கு ரத்னமாலை
திறமுடனேதாம்பூலம் சிறப்பாயீந்து
அரிவையணாயனுப்பிவைப்பீர் பிரியமாக
அகிலமுழுதினுங்களிக்க யன்பாய்த்தானே.

வசனம்.

ஆ என்னருமை மந்திரிமாரே இந்த நடனமாதர்களுக்கு வேண்டிய பூஷணங்களும் தாம்பூலமுங் கொடுத்தனுப்பிவையுங்கள் மந்திரிமார்களே.

மந்திரிகள் வசனம்.

அப்படியே தங்களிஷடப்பிரகாரங் கொடுத்தனுப்பிவைக்கிறோம் பிரபுவே.

அகோ வாருங்கள் நடனமாதரே, எங்கள் பிரபு உத்திரவின்படியுங்களுக்கு வேண்டிய பூஷணங்களைக்கொடுத்தோம் வாங்கிக்கொள்ளுங்கள் மாதரே.

ஓ பிரபு நாங்கள் போய்வருகின்றோம்.

இரணியன் சொல்-வசனம்.

ஓய் தந்திரவிந்திர மயேந்திரஜாலத்தில்மிகுந்தமந்திரிமார்களே.

முதல் மந்திரி சொல்-வசனம்.

சொல்லும் எங்கள் ஆக்கிர வியாக்கிரம சூர பராக்கிரமங் கொண்ட விக்ரமத் துரையே.

தேச விசாரணை.

இ-ன்-தடமகுடமுடியரசர் கிடுகிடெனவே யெனது
தாள்களைப் பணிகுரார்களா மந்திரி
மு-மக்-சட்டமுடனட்டதிசையெட்டி லுளமன்னருந்
தாள்களைப்பணிகுரார்கள் அய்யனே
இ-ன்-தரணிதனிலிரணியனர் கருணைபதங்கெதியெனச்
சகலமுந் துதிசெய்குதா மந்திரி
உ-மக்-தஞ்சமென்னெஞ்சதனி லுஞ்சலெனவெஜெக
சமஸ்தமுந் துதிக்குதையா கடவுளே
இ-ன்-திடமுடையநமதுகுல குருவெள்ளிதனைவியாழன்
சுமந்து பூசிக்கிராரே மந்திரி
மு-மக்-தேவனோநாவலர்கள்குருநமது சுக்கிரனை
சுமந்துக்கொண்டே திரிகிரான் • ஐயனே

இ-ன்-திரிலோகமதிலெனை விடதெய்வமுண்டென்றொருவன்
செப்புமொழி கேட்டதுண்டா மந்திரி
உ-மந்-திரனேஜெயவிஜய சூரனேயிம்மொழி
செவிதனில் கேட்டதில்லை ஐயனே
இ-ன்-விடைகெருடன்மீதேருமூவர்கள்தம்முடைய
வேதமெங்காகிலுண்டா மந்திரி
மூ-மந்-விண்மத்தியபாதாளலோகமதிலுனைவிட
வேருவேதங்களேது ஐயனே
இ-ன்-விசும்புலகுமாதராக்ஷதப்பெண்களுக்கேவல்
விருப்பமாய்ச்செய்கிறார்களா மந்திரி
உ-மந்-விண்ணப்பமிட்டுகை கட்டிகொண்டேபணி
விடைசெய்து வருகிறார்கள் ஐயனே
இ-ன்-அடஞ்செய்துயெந்தனிட தம்பியைக்கொன்றிடும்
ஹரிதனை கண்டீர்களா மந்திரி
மூ-மந்-ஐயனேஹரிதனைக் கண்டதேயுண்டானால்
அவனுடலை விடுவதேது ஐயனே
இ-ன்-அவனுடையயுதிரமதில் என்துதம்பிக்கினன்
அற்புதஞ்செய்யவேண்டு மந்திரி
உ-மந்-அண்ணலேயுன்னுடைய யெண்ணப்படிமுடிவதற்
கட்டியேதாகிலுண்டோ ஐயனே

இரணியன்-சொல்-விருத்தம்.

அருகினிலிருக்கு மமைச்சரோகேளீர்
ஹரிதனைப் பிடித்துவந்தடித்து
பெருகியவாளினிற்கேபெலிகொடுத்துப்
பிடரியினுதிரமுங் குடித்துத்
திருகலில்லாமலென் தம்பிக்கிதற்பணஞ்
செய்வதற்கே மனமிசைந்து
கருதினேனிதைமனந் தேரியேநீங்கள்
கருதுவீர் யெனதுமுன்சொலுவில்

வசனம்.

ஆ என்னருகில் இடைவிடாமல் சகல வாலோசனைகளை யெடுத்துரைக்கானின்ற அருமை மந்திரிமார்களே, என் மனதிலிருக்கின்ற

வியாகூலமென்னவெனில், என் தம்பியாகிய விரணியாக்ஷனை அந்த ஹரியானவன் பொறாமையால் வராகரூபமாகிக் கொன்ற முராரியென் னும் மூடமாயனை இன்றே பிடித்து பின்கட்டு மடலாகக் கட்டியடி த்து, அவன் மண்டையை யுடைத்து வெட்கத்தைக்கெடுத்து ஊட்டி யைக்கடித்து உதிரத்தைக்குடித்து என் பகையை முடித்து, என்னற் புதமாகிய தம்பிக்குத் தற்பணஞ்செய்யவேண்டுமென்றுயோசித்திருக் கின்றேன், ஆகையா லிதைநீங்கள் நன்றாயாராய்ந்து இதற்குத்தக்க யோசனை சொல்லுங்கள் மதிமந்திரிமார்களே.

முதல்மந்திரி-சொல்-விருத்தம்.

கொஞ்சமும்புத்தியில்லாக் கொடுமைமாயவன்றான்செய்த
வஞ்சனைக்கஞ்சிவிட்டால் வானவரேசுவார்கள்
நெஞ்சினையிறிக்கிக்கட்டி னிணக்குடலெடுத்துவாளால்
பஞ்செனக்கொந்தினுல்நம் பகையெலாம்முடியுமன்னு.

வசனம்.

கேளுமெங்கள் புவன கர்த்தீபமே நல்லவாலோசனை யெடுத்துச் சொன்னீர் பளாபளா மிகவும் நன்றாயிருக்கின்றது, அந்த மாயனுக்கு கொஞ்சமாகிலும் விவேகமில்லாமல் பன்றிரூபமெடுத்து உமது தம்பி யைக் கொன்ற வம்பனை நாம் சும்மா விட்டுவிடுவோமாயின் நமக்கடங் கிய தேவர் முதல் யாவரும் நம்மைமதியார்கள். அதுயேனென்றாலோ தங்கள் தம்பியைக் கொன்று கம்பி காட்டிய வம்பனை வாதிக்கவில்லை யென்று கேலிசெய்வார்கள் ஆதலால் அந்த மாயனே மகா சதுர்வித உபாயந் தெரிந்தவன் அப்பேர்க்கொற்றவனை நாம் லேசாக விடலாகா து, அவனுக்கு விரல்நுழையயிடங்கொடுத்தால் அதில் பெரிய யுரலை ப்போட்டு அடைப்போமென்கிற கருத்தினையுடையவன், அவன் எவ் வளவென்று அலக்ஷியஞ் செய்திருப்போமாகில் அவ்வளவும் நமக்குக் கெடுதியென்று யோசியும் இப்போ நிகத்தினுல் கிள்ளியெறிவதுபோய் பின் கண்ட கோடாலியைக் கொண்டு கண்டிக்க நேரிடும். ஆதலால் அவனை இதேதேதியில் பிடித்து அடித்து அவன் வெழ்க்கத்தைக் கெ டுத்து சின்னபின்னஞ்செய்து திவ்வியஆயுதங்களினுல் சிலுக்கக்குத்தி சதைகளை அறுத்து பஞ்சுபோல் கொத்தி பரவைகளுக்கு இரையாகக் கொடுத்துவிடுவோமேயாமாகில் நமது பகை அடியோடே முடியும் கேடிமன்னவனே.

உ-வது மந்திரி சொல்-விருத்தம்.

முடிப்பதற்கச்சமென்ன மூவுலகாசேகேளும்
அடிப்படைகனமேயாகி லச்சமோசுமைகளேற்ற
பிடிப்படாதுமதுவீரம் புவியெங்கும்நிறைந்திருக்க
விடுப்படாமாயன்சுண்டு விரலுக்குயீடாவானோ.

வசனம்.

கேளுமெங்கள் கனகதுரையே, அந்த வெரிகொண்ட ஹரியென் பவன் பகை நம்மை யென்னசெய்யும், அவன் எவ்வளவு அவன் பகை யை முடிப்பதர்க்கு மகா பெரிதாக யோசிக்கின்றீர்களே, இதென்ன ஆச்சரியம், தாங்கள் தவஞ்செய்துபெற்ற வரமென்ன லேசா, உமக்கு திரிபுவனங்களும் நிகரல்லவேயென்று அந்தமாயனுக்கென்ன தெரிய மாட்டாதோ, மேலும் அடியில் போடப்பட்ட கடக்கால்எழுகாயிரு ந்தால் அதின்மேல் பாரங்களை யேற்றபயப்படுவார்களா ஒருபோதும் பயப்படமாட்டார்கள் அதுபோல் தானவர் குலத்தினில் திவ்விய மங் கள மாணிக்கம்போலெழுந்தருளிய உமக்கு பயந்து அகப்படாமல் எங்கேயோ திருடனைப்போலே ஒளித்திருக்கும் மாயன் நமது சுண்டு விரலுக்கு யீடாவானோ துரையே.

இரணியன் சொல்-விருத்தம்.

வானுலகமன்னவனைப் பிடித்தடித்து
வாயுளரும்படியலரச் சிறையில்வைத்தேன்
தேனுலவுமலரினில்வா ழயன்பூச்சக்ரஞ்
செழிக்கும்மெழில் குடைபிடிக்கத் தென்றிசைக்கிக்
கோனுலவிதடிகொண்டு ஏவல்செய்யக்
குபேரன்முதல்யாவர்களும் நடுங்கச்சந்திரன்
பானுலவுமீரேழு பதினுன்குலகுக்கும்
பங்கயம்போலெங்கும்நிறை தெய்வம்நானே.

வசனம்.

ஓய் மந்திரிமார்களே, இப்போது விவேகமந்திரிசொன்ன ஞாயம் சரிதான் ஒப்புக்கொண்டேன், அப்பேர்ப்பட்ட தவமகிமை என்னிட மிருக்கின்றபடியினுல்லவோ இந்திரன்முதல் தேவர் மூவர் யாவரும் நடுங்கிடவும், பிரம்மன குடைபிடிக்கவும், எமன் தலையாரியாக பிழக் கடைவாயல் காக்கவும், ஈரேழுபதினுலுலோகத்திற்கும் யானேதெய் வமாகினேன், ஓய் மந்திரிமார்களே.

இரணியன் பெருமை கூரிய

தரு-இ-ம-பியாகடை-ஏகதாளம்.

பல்லவி.

எங்கும்நிறைதெய்வம்நானே-எனக்
கிணையாருமில்லைதானே (எங்கு)

அநுபல்லவி.

சங்கையில்லாமலித் தாரணியீரேழும்
பொங்கமுடன்கைகொண்டிங்கிதமாகவே
போஜன்-சருவேசன்-பிரகாசன்-ஜெகதீசன்-எழில்
புத்திக்கிணையார்வலுவினில்-தத்தித்தோமென உலகினில் (எங்)

சரணங்கள்.

வேதன்வெண்குடைமேல்பிடிக்க மறை
விரித்தெச்சரிக்கை படிக்க இப
பூதலமீதிற்றபோதனர்யாவரும்
போற்றியெனைப்பணிந் தேற்றிப்புகழ்ந்திடும்
புஜமேபலவிஜயன் திரு-திசைநான்குமென்-வசமாக்கிய
தீரன்தெளிவினிலுயர்ந்திடும்-பலவான்களிப்பினில்சிரந்திடும்-எங்

தேவரைச்சிறையிலடைத்தேன் திக்கு
திசையெங்கும் புகழ்படைத்தேன் வெட்கி
மூவருமெந்தனுக்கேவல்செய்யும்படி
முடித்தேன் செங்கோலைப்பிடித்தேனிப்புவி
முழுதும்மெனை-தொழுதேயெப்-பொழுதுந்தொழும்-பழுதொன்
றிலா-முடியில்மகுடமுஞ்சூட்டிய-படியில்விகடமும்காட்டிய-எங்

யாவர்க்கும்யானின்மேலே யெனை
யாரெதிர்ப்பாரொருக்காலே செழுஞ்
சேவற்கொடியோன்தந்தை மாலயனுமென்
காவற்கடங்கி கடுகியேயென்று
கதியென்றெனை துதிசெய்திட-விதிதக்தனன்மதிசூழ்திரு
கலைவக்கரிவரதன்னிடத்-துலவத்தினமரியுந்திட (எங்கு)

முதல்மந்திரிசொல்-விருத்தம்.

தழைத்திடத்தாங்கள்செய்த தவவலுமைகளுக்கஞ்சி
உழைத்தினமாகமூவர் ஓடிப்போயொளிக்கலாச்சு
செழித்திடுமுமதுவீர செங்கோலின்பெருமைதன்னை
பழித்துவந்தெதிர்த்துப்பேசும் பலவானுமுலகிலுண்டோ.

வசனம்.

கேளுமெங்களையாளும் கனகதுரையே, தாங்கள்செய்த தபோபலமகிமை எப்பேர்ப்பட்டதோ எங்களுக்குத் தெரியமாட்டாது. அதினுட்பொருந்திய நித்தியானந்தசூட்சுமஸ்தானங்களின்இடங்களைக்கண்டுபிடித்துக்கொண்ட உமது பெருமையை யாவராலும் சொல்வதற்கு அளவிடா அத்துவிதப்பொருளாக இருக்கின்றதே என்றல்லோ மும்மூர்த்திகளும் உழைத்தினமாகப் போனதுமன்றி தலைக்காட்டதைரியமில்லாமல் மலைக்காட்டில் மறைந்தார்கள். ஆஹா சபாசு வீரமென்றால் உம்முடைய வீரமே வீரம், மற்றவர்கள் வீரத்திலென்ன சாரம், அவர்கள் இருப்பதும் வீண்பூமிக்குபாரம் தங்களைவிடவேறொருவருக்கில்லை இந்தஅதிகாரம், இனிநமது செங்கோலின் பெருமையை பழித்து முன்வந்து ஜெயித்து கொள்வதற்கு இந்த திரிலோகத்திலும் அவ்வளவு பலமுடையவன் இல்லவேயில்லை துரையே.

இரணியன்சொல்-விருத்தம்.

நிருதர்கள்குலமதிலெனைவிடயினியொருவனுமெனக்கிணைஎதிரார்
பெருதவமதிற்சதுர்முகநிடமதிர்சேண்புவியெவைகளுமெனையே
இருதயமதித்தொழுதிடும்படிநன்றாய் எழிலுருவரம்பெற்றேன்
கருதியமறைதனிலெனைவிட சாகாதவனொருவனுமிலையே.

வசனம்.

ஆஆ-வாருங்கள் மந்திரிமார்களே, இந்த தானவர்கள்குலத்தில் யான் கியானவந்தனாக வந்துபிறந்து வானவர்களையெல்லாம் வாட்டி நான்முகன்மால் சிவனென்னும் மூவரையும் எங்குமில்லாமல் ஓட்டி ஜெகமுழுதிற்கும் யானேதெய்வமாக நிலைநாட்டி செய்யும்படியாகிய வலுமையின்தாட்டியேன் உண்டாச்சுதென்றால்யான்செய்ததவப்பல வலுமையின் நிலையைப்பார்த்தீர்களா, என்னைப்போல்இப்படிப்பட்ட தவஞ்செய்தவன் எவ்வுலகத்திலுமில்லை, நீங்கள்சொல்லுகின்றவார்த்தைக்கு யான்ரொம்பவும் ஆனந்தபரவசங் கொண்டேன் இனியென்ன

ஜெயிக்க சொர்க்கமத்திய பாதாளமென்கிற திரிலோகத்தில் எவருமி ல்லை நான் தவஞ்செய்தனுாயங்களை உங்களுக்குநன்றாய்தெரியும்படி சொல்லுகிறேன்மந்திரிகளே கேளுங்கள்.

இரணியன்-சொல்-தரு-இ-ம்-காம்போதி-ரூபகதாளம்.

பல்லவி.

என்னைப்போலிப்படிக்கொற்றப்பெருந்தவம்
எவர்செய்தனர் புவியோர்களில் (என்ன)

அநுபல்லவி.

கனமாகிய மனமாய்கையை-கருதாமலேபெரிதாகிய
சுரர்தானவரினம்யாவரில் (என்னைப்)

சரணங்கள்.

தேவாவனஞ்சத மாண்டிலுந்
திவ்யநாவாலொன்றும் நவிலாமலே
காவாவெனக்கடினஞ்செய்ய-கஞ்சனுங்கலங்கஞ்சியேயவன்
கெஞ்சியுமொடிங்கெஞ்சிட கன (என்னைப்)

திரவில்லாமலே மாயவன்கு
கரமாயெனக்கிளையோன்றனை
தரமில்லாமலேகொன்றிடுந்-தாட்டியையினிநாட்டினிலதை
காட்டிடகன-மேட்டியாய்பல (என்னைப்)

நிலையென்றெனைநினையாமலே
எழில்-கலவைக்கரி வரதன்செய்த
பலமதைப்பார்த்திடுவோமெனப்-பரவாசியபுரமந்திர
வளைசார்பினில்-திரமாகவே (என்னைப்)

மந்திரி-சொல்-விருத்தம்.

இருளின்முன்சுடரைப்போலே ஈரேழுலோகத்திற்கும்
அருள்தரவுருவாய்வந்த வையனேதங்கள்முன்னே
மருள்பெருந்தேவர்மூவர் மறைகளும்நடுங்கச்சரகாப்
பொருளெனச்சொல்வதற்குப் பிசகொன்றுமில்லையையா

வசனம்.

கேளுமெங்கள் அறிவினிலுயர்ந்ததுரையே, இருள்மூடியவுலகவு திற்கு சூரியன்உதயமானால் எவ்வளவு பிரகாசப்படுமோ அவ்வளத்

பிரகாசம்ரகவநதுதித்த கர்த்தீபமே, தாங்கள் சாகாதவரம்பெற்றசே தியைக்கேட்டல்லோ மும்மூர்த்திகளும் அடங்கியொடுங்கி நடுங்கி பயந்து ஒளித்துப்போயினர்கள். இனியும்மை ஜெயிக்கின்றவனுமிரு க்கின்ருனே சுவாமி.

இரணியன்-சொல்-விருத்தம்.

நேர்த்தியதாயென்னைப்போலே வரங்கள்பெற்று
  நீணிலத்திலிருப்பவர்க ளெவருமில்லை
ஆத்திமலரணிகின்ற சிவன்மாலிந்திரன்
  அண்டர்முனிவர்களயனு மகிலத்தில்வாழ்
சாத்திரமும்மறைநூலும் கலைமாய்ந்தாலும்
  சாகாமலிருக்கின்ற தெய்வம்நானே
பாத்திரமாமெந்த னிருபதமீரேழு
  பதினாலுலோகமெங்கும் பணிகின்ருரா.

வசனம்.

கேளுங்கள் ஓய்மந்திரிமார்களே, பிரம்மா- விஷ்ணு- ருத்திரன்- தேவர்முனிவர் முதலானபேர்களும் வேதசாஸ்திரமறைகள் முதலிய தெல்லாம்இரந்துபோய்விடுமல்லவா நான்சாகாதபொருளென்று எல் லாருக்குந்தெரியுமல்லவா ஆதலால் இந்தயீரேழு பதினாலுலோகத் தில் வாழும் சகலஜீவ ஆத்மகோடிகளும் எனைமுதற்கர்த்தீபமென்று திரிபுவனங்களுந் தொழுதுவருகின்றதா மந்திரிகளே.

இரணியன்தன் பெருமைகூரிய
தரு-இ-ம்-கமாசு-திருபுடைதாளம்.

பல்லவி.

திரிபுவனாதிபதியெனுந்-தேவமகானுபாவனானே
திடமுடையத்தடம்குட முடியரசர்கிடுகிடெனத் (திரி)

அநுபல்லவி.

கடல்புடைசூழ்ப்படியுலகில் மடமுனிவர்விடவிடெனத்
தானதிரவானுலகம் மானிலமும்பாதாளத் (திரி)

சரணங்கள்.

பெருமைசேர்தவபலப்-பிரபலாதிபதியெனக்
கனகிதியெதிகளும் பிரியமொடுபெரியவனென்
ஜெருமையுடன் அருமறையும்-கருதிடுமிப்பெருபுவியில்
திருத்தம்தாயுருதியெனக்-காணுமே
கனனுண்மனாயோர்-சேனுவர்நாணிடவந்த (திரி)

தேவர்கள்முனிவர்கள் கின்னரர்சித்தவித்தியாதரருந்
தினமுமெனைக்கண்மென்றேருதிவர
ஜெகமுழுதும்-மகிழ்பெரவே-புகழ்வரெனையகமதினுள்
திகழொளிசேர் தககசிபன்-மகனெனவந்திகலினுயர்
தீரனெனப்பேருலகில்-யாருமெனைக்கூறிவருந (திரி)

ஹரியயன்ருத்திரன் மூவருமெனக் கடங்கிட
தடங்கலில்லாமல்செய்தேன்
அண்டபகிரண்டமும்பிரம்-மாண்டமுமெண்டிசையுள்ளோர்
கண்டுபயங்கொண்டுயெனை-தெண்டனிடமண்டலமும்
கருதிடவுங்கலவைக்கரி-வரதனைவென்றிடவந்த (திரி)

திரிபுவனாதிபதி-முதல்மந்திரி-சொல்

விருத்தம்.

பனியெதிர்கதிர்போலிந்தப் பாரினில்வந்தபோதே
முனிவரும்நடுங்கிதேவர் மூவருமொடுங்கிப்போனார்
இனியுமைவிடவேறில்லை என்றுமேகருதிக்கொண்டு
கனிவுடன்தொழாமற்போனால் கதிபெரயிடங்களேது.

வசனம்.

கேளுங்கள் கருணைக்கடல்போல் எழுந்தருளிய கர்த்தீபமே, மூடியபனியெதிர் சூரியன் உதயமானால் அப்பனி எப்படி விலங்குமோ, அப்படி தாங்கள் எழுந்தருளினபோதே சகலமானபேர்களும் கிடுகாடிப்பட்டுத் தடுமாறிப்போயினார்களே, இனியும்மை தொழாமல் போனால் கெதியடைவதற்கு வேறிடங்களேதையனே.

இரணியன்-சொல்-விருத்தம்.

கண்டகமாயனென்னைக் கண்டுமெய்கலங்கிவாடி
அண்டியென்யெதிர்நில்லாம லாழியிலொளித்துக்கொண்டான்
விண்டலம்புவிபாதாளம் விளங்குமித்திரிலோகத்தில்
உண்டெனயெவரானாலும் உரைக்கின்றசேதியுண்டோ.

வசனம்.

ஓய்மந்திரிமார்களே இதைநன்றாகக்கேளுங்கள், யான் இமையவரையின்சாரினில் அகோரமானதவஞ்செய்து வேதனிடத்தில்அளவிலாவரங்களைப் பெற்றுக்கொண்டு ஆனந்தபரவசனாக யான் வருகின

றபோது, அந்த ஹரியானவன் என்னெதிரில் வந்துவிட்டான் அவ னைக்கண்டவுடன் அடா துர்மார்க்க லவண்டிமகனே, கொஞ்சமாகி லும் பயமில்லாமல் என்னெதிர் வந்தாயல்லவா நல்லதாகட்டும், என் தம்பியைக்கொன்றபழி இன்று கொடுக்க வந்தையோவென்று கெதை யையெடுத்துகரகரவென்றுசுழட்டிமோதுவதற்குநோக்கினேன்,தடீர் வென்றுசமுத்திரத்தில் குதித்தான், அதுமுதல்இதுவரையிலும் அவ் ன்சங்கதியொன்றுந் தெரியவரவில்லை இந்தத்திரிலோகத்தில் எவர்க ளாகிலும் அவனுடையயிருப்பிடம் இன்னயிடமென்றாவது, அல்லது இறந்தானென்றாவது, அல்லது உயிருடனே யிருக்கிறானென்றாவது சொல்லக்கேழ்வியுண்டா மந்திரிமார்களே.

மந்திரிசொல்-விருத்தம்.

உள்ளமுங்கலங்கிவாடி ஓடிப்போயொளிக்குமந்த
கள்ளவஞ்சனைசெய்கின்ற கபடகமாயன்சேதி
எள்ளளவறிந்தோமானால் எவ்விதத்தாலுங்கண்டு
துள்ளவேயிருக்கிக்கட்டித் தூக்கிவந்துன்முன்சேர்ப்போம்.

வசனம்.

கேளும் துரையே, உம்மைக்கண்டு பயங்கொண்டு கருங்கட லில் ஒளித்தகள்ளனுடையசேதி எள்ளளவுந் தெரிந்ததேயானால் நீங் கள்சொல்வதற்குமுன்னே கொண்டுவருவோம் துரையே.

இரணியன் சொல்-விருத்தம்.

மடத்தனமாய்வராக மாகியென் தம்பிதன்னைத்
திடத்துடன்கொன்றோமென்ற தீரமென்பதுவோஞாயம்
துடைதனைத்தட்டிவாள்வேல் தொடும்வலிமுகத்தில்மீசை
படைத்தவனானால்வந்து பலத்தைக்காண்பிக்கொணாதோ.

வசனம்.

ஓய்மந்திரிமார்களே, அந்த மாயன் நல்ல யோக்கியவானாயிருந் தால் பன்றியவதாரஞ்செய்வானா, அல்லது அப்படிதான்செய்து என் தம்பியை கபடமாகக்கொன்றுவிட்டு இப்போ எனக்குபயந்து எங்கை யோபோய் தலைமறைந்துகொண்டிருப்பது ஒரு ஆண்பிள்ளைத்தனமா அதற்குமுகத்தில் மீசையேன்? அல்லது வல்லவனானால் இப்போஎன் னெதிரில்வந்து கெட்டித் துடைதட்டித் தன்து கெட்டித்தனத்தைக்





காட்டினாலல்லவோ சரி நல்ல கெட்டிக்காரனென்று சொல்லலாம். அதையெல்லாம் விட்டுப்போட்டுத் தட்டுத்தடுமாறிக்கெட்டுக் கடலிலே ஒளித்தவனுக்கு இந்த வீணாசையேன் ஓய்மந்திரிமார்களே.

முதல்மந்திரி-சொல்-விருத்தம்.

முன்னாலரியெதிர் நில்லாமலோடியே
முழுகினானாழ்திரைக்கடலில்
இன்னாளினிலவ னமதெதிரினில்வந்து
யெதிர்த்திடவும் வீரமுண்டா
மன்னாவைந்நூ றாயிரங்கோடி
மந்திரிமார்களை விடுத்துப்
பொன்னாட்புவி பாதாளமுந்தேடிப்
பிடித்துவந்திட விடைதருவீர்.

கேளுமெங்கள் திரிபுவனத்தரசே, தாங்கள் தவஞ்செய்து அளவில்லா வரங்களைப் பெற்றுக்கொண்டு வருகிறபோது, அந்தஹரியானவன் உமைக்கண்டு பயங்கொண்டு சமுத்திரதீவாந்திரத்தில் விழுந்தவன் இறந்தானென்றும், அல்லது உயிருடனே இருக்கின்றானென்றும் எவர்களுக்கும் இன்னவிதமானதென்று தெரியவரவில்லை, அல்லது ஒருக்கால் அவன் பிராணனை வைத்துக்கொண்டிருந்தபோதிலும், உமதுயெதிரினில்வந்து ஏன் என்னையிப்படிக்கெல்லாம் வைகுறீரென்றுகேழ்க்க அவனுக்குவீரமுண்டா தீரமுண்டாவென்றுமில்லை; அப்பேர்க்கொற்றசபலனை நாம் ஒரு பிடாகமினைத்துப்பேசுவது என்மனதுக்கென்னமோ ரொம்பவுஞ் சஞ்சலமாகயிருக்கிறது, இதைத்தாங்களே யோசிக்கவேண்டும் ஏதோதங்கள் அருளால் எனக்கு ஒருயோசனை பிறந்தது அதென்னவென்றால், அப்படியந்த அரியென்பவனை பிடிக்க வேண்டுமென்கிற கருத்து உமக்குப் பூரணமாகயிருந்தால் நமதுஐந்நூராயிரங்கோடி மந்திரிப்பிரதானிகளுக்குந் தளபதிமந்திரிகளாகிய சம்பாசூரன் நிகம்பாசூரன் சுரோணிதக்கண்ணன் அக்கினிகண்ணன் ஏகநிர்த்தணடன் மேககெர்ச்சனன்முதல் அஞ்சுகோடி அருபதுலக்ஷத்தி அருபத்தாராயிரஞ் சேனைகளுடனே, அவர்களைவரவழைத்து அந்த ஹரியெங்கேயிருந்தபோதிலும் அவனைக் கண்டு பிடித்துக்கொண்டு வாருங்களென்று, தாங்கள் விடைகொடுத் தனுப்பிவைத்தீர்களேயாகில், அவர்கள்சொற்கமத்தியபாதாளம்-மலை-அலை-கடல்-மடல்-உடல்-தடம்-வடம்-குடம்-இடம்-நடம்-அரல்-திரல்-உரல்-வனஞ்-சுனை-புனந்-தினை-வனம்-குகை-புகை-ஆதியந்தமுந்தேடி, எப்படியாகிலும் அவ

னைக்கண்டு பிடித்து, உம்து முன் கைப்பிடியாகக் கொண்டுவாருங்கள் அப்போது தங்கள் கருத்தின்படி முடிப்பதற்கு யாதொருதடையுமில்லை ஆதலால் இந்த யோசனை தங்கள் மனதுக் கெப்படியிருக்கின்றது, சுவாமி.

இரணியன்-சொல்-விருத்தம்.

சரியிதுநல்ல சாமர்த்தியக்கருத்தைப்
பரிவுடனுரைத்த பதமதைப்பார்த்தால்
உருகிவாருதியில் ஓடிப்போயொளித்த
ஹரியகப்படுதற் கனுப்பிசகிலையே.

வசனம்.

ஓய்மந்திரிமார்களுக்கெல்லாம் மேன்மையாகியவிவேகமுடைய நயகுண மந்திரீ, என்னருகில் வாருங்கள் சபாசு நல்ல ஆலோசனை சொன்னீர்கள், பேஷ் ஆஹா - இப்படி யல்லவோ யிருக்கவேண்டும் தகும் தகும் இந்த யீரேழு பதினாலுலோகாலோகங்களுக்கும் நான்தெய்வமென்பதும்,எனக்குத்தகுமதிகளையெடுத்துரைக்கின்றமந்திரிமார்கள் நீங்களமைந்தது என்பெருமையை என்னவென்று சொல்லலாம், இதுகளெல்லாமென்னுடைய திருவிளையாட்டென்று தான் சொல்லவேண்டும், வேறொன்னயிருக்கின்றது ஒன்றுமில்லை, ஓய்மந்திரிகளே இப்போதுநீங்கள்சொன்ன சாமர்த்தியக்கருத்தின் பதத்தைப் பார்த்தால் இப்போதேயென்கையில் அகப்பட்டவனைப்போலவேயிருக்கின்றது, அதற்கணுவளவும் பிசகில்லை அந்த ஹரிக்கு இத்தோடு முடிலோ, சரி-சரி-நல்லயோசனை மந்திரிகளே.

இரணியன்-சொல்-தரு-இ-ம்-தர்பார்-அடதாளம்

பல்லவி.

தகுமிதுயோசனை யகமகிழ்ந்தேனே (தகு)

அநுபல்லவி.

தந்திரமிகுந்திடும் மந்திரிகளே ஓ
சரிசரிமுராஹரியைப்பிடித்திட ஆ (தகு)

சரணங்கள்.

லகுவுடன்பார்த்து வெகுபேரைச்சேர்த்து
நவிலுமென்பகையாளி யவனெங்கத்
தீயிலிருந்தாலும் தேடிக்கொண்டுவா ஆ (தகு)

அண்டமும்பிண்டமும் கண்டுமேதேடினால்
அகப்படுவானதர்க்கொருபிசகுமில்லை
யுவப்புடனெடுத் துரைக்கும்வார்த்தைகள் ஆ (தகு)

இந்திரர்முனிவர்கள் மந்திரக்கியானிகள்
இருதயமுங்கலங்கிட கலவைக்கரி
வரதன்கபடவஞ்சமே யிதுசரி ஆ (தகு)

உ-வது-மந்திரி-சொல்-விருத்தம்.

இன்பமோடெங்களையாட்கொளுமரசே
யினிச்சும்மா விருக்கலாகாது
தென்புடனமதுமுன் வாழ்படைத்தலைவரைச்
சீக்கிரமாகவிங் கழைத்து
அன்புசேர்சம்பா வசுரர்சேனைகளை
யரைநொடி தனிற்சென்றோடி
முன்புவந்திடவிடைதருகுவீரவர்க்கே
முடியுமுன்னெண்ணமுமப்படியே.

வசனம்.

கேளுந்துரையே, இனிநாம் சும்மாவிருக்கலாகாது நம்து படைத்தலைவீரர்களை வரவழைத்து, சம்பாசூரனுடைய சேனைகளை அதிசீக்கிரத்தில் வரவழையுங்கள், உமது எண்ணப்படியே முடியும் ஆதலால் அதிசீக்கிரமவர்களை வரவழையும் தேவா,

இரணியன் சொல்-விருத்தம்.

தகுமிதுயோசனைசரிமுனமகிழ்ந்தேன் தளபதிமந்திரிமார்களேபோய்
மகிழுடநீங்களனைவருமொன்றாய் வாய்வேகமாகசென்றோடி
மிகுபடைசம்பாசூரரோடனைவரை விருதுடால்முரசுடக்கயமும்
வெகுதடிவாள்கெதையுடநமதசுரரைவிரைவினில்வருகமுன்செய்வீர்

வசனம். உ௫௨

ஓ படைத்தலைவீரர்களே, நீங்கள் வாய்வேகமாகவோடி நமது சம்பாசூரனுடைய சேனைகளையும், அவன் படைத்தலைவீரர்களையும் அதிக விரைவாக எங்கள் புவனகர்த்தீபராகிய இரணியேஸ்வரர்வரவழைக்கச் சொன்னாரென்று அழைத்துவாருங்கள் வீரர்களே.

படைத்தலைவீரர்-சொல்-விருத்தம்.

ஐயனேநங்க ளருள்வாக்கின்படி
பையவேயோடி பராக்ரவீரர்களை
வையகமதிர வானவர்கதற
மெய்யனேயழைத்து வேகமாய்வாரோம்

வசனம்.

சுவாமி தாங்களிட்ட கட்டளைப்படி இதோ அரைநொடிக்குள் சென்று நமதுசம்பாசூரனுடைய சேனைமுதலானவர்களை யெல்லாம் விடாமல அழைத்துக்கொண்டு அண்ட ரண்டங்களெல்லாம் கிடுகிடென நடுங்கவும், தேவர்களெல்லாம் வாய்வரண்டோடவும், அதிக விரைவிலழைத்துக்கொண்டு வருகிரோம் துரையே பாரும் எங்கள் பரப்பிரம்மசொரூபியே.

சம்பாசூரனை யழைக்கின்ற-கவி.

மலைநிகர்புயமும் மார்புமெய்த்தோளும்
பலம்தையுடைய பராக்கிரமவீரர்களே
நிலையுடநம திரணியமகாதேவன்
கொலுவினிலழைத்தார் கொப்பெனவருவீர்.

வசனம்.

கேளுங்கள் அதிக பலங்களையுடைய வீரனென்னும் ஓய் சம்பாசூரரே, உம்மை நமது இரணியேஸ்வரர் சேனைத்தலைவர்களுடனே அதிசீக்கிரத்தி லழைத்துவரச்சொன்னார் ஆதலால் நாங்கள் ஓட்டம் பெருநடையாயோடிவந்தோம், நீங்கள் தாமதஞ்செய்யாமல் வாருங்கள் வீரரே-சம்பாசூரரே.

சம்பாசூரன் தன்படைகளுடன் வரும்

பொது-விருத்தம்.

குகைதனிலிருக்குஞ்சிங்கங் குஞ்சரங்களைக்கண்டாப்போ
லகம்கிழ்ந்தெழுந்திருந்து வண்டாண்டமுங்குலங்க

ஜெகம்புகழிரணியேசர் தீரமாயழைத்தசேதி
சுகம்கமக்கென்றுசம்பா சூரவீரரும்வந்தாரே.

வசனம்.

அகோதெப்படியென்றால், குகையிலடங்கியசிங்கமானது யானைக்கூட்டங்களைக் கண்டாலெப்படி கெர்ஜ்ஜித்தெழும்புமோ அப்படி போல சம்பாசூரனானவனும், தன்சேனைகளும், கதும்பி யெழுந்து கோடையிடிபோலிடித்துக் கொக்கரித்து, அண்டரண்ட புவன சராசரங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கும்படி அமரர் முநிவர் கலங்க ஆயுதவகைகளுந் துலங்க ஆர்ப்பரித்து வருகின்றவிதங் காண்க.



சம்பர்சூரன் வருகிற

தரு-௩-ம்-தங்கியாசி-ஏகதாளம்.

தாம்தாம்தக ஜெம்தரிகிட தீம்தாம்தக நாதரிதில்லானு
தானுதந்தரி நாதரிஜெகுதந் திமிதக்குகுதக
தத்திமிதக திமிதகஜெணுத தகததிங்கணதோமென (தாம்)

பல்லவி.

வீரசேனுஞ்சம்பா சூரர்வந்தார்பாரீர்
விசும்புலகுமன்னர்களினைத்துக்களைத்து தளர்ந்திடச்சீறி

அநுபல்லவி.

பார்முழுதுக்கும் பகவானிரணியன்
பரமென்றுஸ்வர்க்கேதருங் கெண்ணியன்
சீர்பெருமெங்கள்குலத்துக்குப் புண்ணியன்
சித்தம்வைத்தழைத்தச் சேதியையெண்ணிமுன்
திரமொடு-பலவுடை-வாள்கெதை
கரவேல்தரி-கிரைதெண்டொடு
கெடியக்கடல்-வடியும்படி-நொடியிற்செய-ச்டியோமென (வீர)

சரணங்கள்.

மட்டுப்படாதமலைகளைப்போலுரமும்
மதயானைகளைப்போலே
மண்டலமண்டியநீண்டகரபுயமும் புவி
அட்டதிக்குமசைந்தாடியே யதிர
ஆதிசேடனுயிரநாவுங் கதற
திட்டமொடுகண்களிற் றீப்பொறி சிதற
தேவாதிதேவன் திருக்கொலுக் கெதிரே
திட்டப்படி-நெட்டித்தடை-தட்டிப்புய-முட்டப்பட
திரிலோகமு-மொருநாள் கொள்ளைத்
தருவாரோவென்றறிவோமென (வீர)

கொக்கரித்துச்சிங்கக் குட்டிகள்போல்கிளம்பி
கொற்றவர்நம்மையின்று
கோரியதேமஹாபாக்கியமென்றுவிளம்பி நன்றாய்
சக்கரம்வேல்சமஸ்தவாயுதந் துலங்க
தடமலைகிடுகிடென்று குலுங்க
திக்கிலுள்ளோர்திகைத்தோடியே விலங்க
தேவர்கள்யாவர்தன் சிந்தையுங் கலங்க
தெண்டுக்கரங்கொண்டுபிர-சண்டநிரதண்டமொடு
திரமாபலைவருமேபல-உரமோகனசரமாயிதோ (வீர)

புற்றினிலீசல்புறப்படும்வேடிக்கைபோல்
பொங்கமொடு கும்புகும்பலாய்
பூரித்தவரவர் பூணுமணித்தடிக்கோல் கல்வி
கற்றுணர்ந்தகவிவாணரை நாடுவோம்

யெனவான்களைக் கருத்திற்கொண் டாடுவோம்
சுற்றமில்லாதுட்டத் தீயனை ஜாடுவோம்
சூதர்தன்நெஞ்சை துண்டாய்வெட்டிப்போடுவோம்
சுருதிமுதல்-கருதுங்கலனையில்வாழ்-கரிவாதன்றனை
முடியாமலேபடிமேல்பெலி-யிடுவோமேன-திடமாயிதோ (வீர)



சூரர்கள்-போற்றி-விருத்தம்.

சகலலோகங்கள்தங்கள் தாள்களைத்துதிகள்செய்து
புகலவும்வனுமைபெற்றப் பிரசண்டவுத்தண்டாபோற்றி
இகல்பெரும்கொலுவின்முன்னே யெங்களையழைத்தசேதி
பகருவீரானுலந்தப் படிநடந்திடுவோமையா

வசனம்.

சர்வலோகதயாபரனுகிய யெங்கள்துரையே, தங்கள்பொற்பாத கமலங்களுக்கு அடியேன்கள் மிகவும் வந்தனம், எங்களை வரவழைத்தவிவரங்களைச் சொல்வீரேயாமாகில், அணாநொடிக்குள் தங்களிஷ்டப்படி முடித்துவிடுகிறோம் சொல்லும் வல்லமையில் மிகுந்த கல் விக்கரசே.

இரணியன் சொல்-விருத்தம்.

சூகரமாகியென்றுணைவனைக்கொன்றதுஷ்டதுரோகியெனுமாயவனை
சீகரமாகசென்றேடியேநீங்கள் திரிபுவனமுந்திசைநான்கும்

சாகரங்கிரிகுகைதடம்லேவனமுந்தளபதிமந்திரிமாரனைவோர்
சேகரமாகியேபிடித்துவந்தென்முன்செப்புவீரிப்பெருங்கொலுமுன்

வசனம்.

சிரஞ்சீவியாக வாழக்கடவீர் எழுந்திருங்கள் வீரர்களே.

உங்களை ஏன் அழைத்தேனென்றால், என்தம்பியாகிய இரணியாக்கதனை மாயவன் பன்றியாக அவதாரஞ்செய்து கொன்றுவிட்டு யெங்கையோ தலைகாட்டாமல் ஒளித்துக்கொண்டுதிரிகிறான், அவனை விடப்போகாதென்று நமது மந்திரிமார்களும் சொல்லுகிறார்கள், என் மனதுக்கும் பரிபூரணமாகவேயிருக்கின்றது ஆதலால்நீங்கள்திரிபுவனங்களிலும் தேடிப்பிடித்துவாருங்கள், அதின்பிறகு நடக்கின்ற ஞாயங்களைப் பாருங்கள் வீரரே.

சம்பா சூரன் சொல்-விருத்தம்.

பெருமைசேர்தங்கள் பாதகடாக்ஷம்
 பெருகியே எங்களுக்கிருக்க
அருமையோவந்த ஹரிதனைப்பிடிக்க
 அஜத்(?)ன்முன் புலிகளைவித்தால்
இருமனதாகவெண்ணிப் பின்னிடையுமோ
 இனவஞ்சகனெனு மம்மாயன்
ஒருமையாய்வாழு மிடங்களையுரைத்தால்
 ஒருநொடிதனிற்கொண்டுவருவோமே.

வசனம்.

கேளுமெங்கள் தயாளகுணசம்பன்னரே,நீங்களென்ன அந்தவெறிகொண்ட மாயனைப்பிடிப்பது மகாப்ரம்மாண்டமாகச் சொல்லுகிறீர் அவன்யெவ்வளவுஅல்ப்பன், தங்கள்பாதகடாக்ஷம் எங்களுக்குபூரணமாகயிருக்கச்சே யவனைத்தேடிப்பிடிப்பது ஒருபெரிதல்ல ஆட்டுக்கிடாக்களின்முன்புலிகளைவிட்டால் அதுயெங்கையாவது பின்னிடையுமோநிடையமாட்டாதே அதுபோல் எங்களுக்கு அவன்யிருக்கின்ற இடமாத்திரஞ் சொன்னீரானால் தக்ஷணம்போய் [illegible]ண்டு வருகிறோமையனே.

இரணியன்-சொல்-விருத்தம்.

வலுவினில்மிகுத்தமந்திரிமார்களே வலம்புரிச்சங்கன்றங்குமிடங்கள்
கொலுவின்முன்கேட்டீர்கூருவேன்கேட்பீர்குரைகடல்சூழ்புவியில்
சிலுகினிலுயர்ந்தமறையோர்தவசிகள் தேவர்சந்நியாசிமுதலோர்
இலகவேயாகவோமங்கள்செய்திடு மிடங்களிற்றங்கியேயிருப்பான்.

வசனம்.

வலுமையில் மிகுத்த வீரசூரரே, அந்த ஹரியென்பவன் இருக்கின்ற விடங்களைச்சொல்லுகிறேன் கேளுங்கள், சமுத்திரம் வேதப்பிராம்மணக் கூட்டம் சந்நியாசிகள்-தபசிகள்-முநிவர்கள்-இருடிகள்-அவதூதர்கள்-ஆகமபுராணிகள்-யாகயெக்கியவோமகுண்டங்கள் செய்கின்றவிடங்களில் அவசியமிருப்பான், அதுகளை நாடித்தேடிக்கொண்டோடிவாருங்கள் ஓய் மந்திரிமார்களே.

சூரர் சொல்-விருத்தம்.

அடஞ்செய்யும்மாயவ னதிர்ந்துமேயோடி
யணுத்திரளினில் புகுந்தாலுங்
குடைந்துமேயவனிடக் குடிமியைப்பிடித்துக்
கொண்டுவந்துன்முன்னேவிடுவோம்
மடங்களில்வாழ்முநிவர் தவசிகள்நூன்
மறையவர்யாகங்கள்செய்யும்
இடங்களிற்சென்று வவர்களுக்காக்கினை
இயம்புவீ ரெங்கள்கோனே.

வசனம்.

கேளுமெங்கள் கனகதுரையே, உமது தம்பியை வம்புசெய்து கொன்றுகம்பிகாட்டின மாயன்சங்கதி நன்றாகத்தெரியவந்தது, இனி அவன் நமது கையில் அகப்பட்டதாகவே யோசித்துக்கொள்ளும் நாங்கள்போகிற உதட்டியைக்கண்டு அணுத்திரள்களில்போய் ஒளித்தபோதிலும், அதைக்குடைந்து குடுமியை பிடித்திழுத்துவருகிறோம் அதற்கென்னமோ சந்தேகமுல்லை, முநிவர்கள் தபசிகள் இன்னமற்றுமுண்டானபேர்களைக் கண்டால் அவர்களுக்கு என்ன, ஆக்கினை விதிக்கலாம் சொல்லும் எங்கள் துரையே.

இரணியன்-சொல்-விருத்தம்.

பிரியமுடன்மறையோதும் பிராம்மணரை
  பெருந்தவத்தோர் சடைதரித்தரிஷிகள்யாகக்
குரியரிந்துவவர்களிட தவங்கலைத்துக்
  கூசாமலெவ்வொருவராய்த் தூக்கிமேலே
யெரியவிட்டுக்கெதைவாளுக் கிரையாயீந்து
  இக்ஷணத்தில்ஹரியிரந்தா னென்றுசேதி
பரிவுடனேவந்துரைப்பீ ராஞலிந்தப்
  பாருலகினுங்களைப்போல் பலவானில்லை.

வசனம்.

ஆஆ-நன்றாய்க்கேட்டீர்களாஓய்மந்திரிமார்களே, இதோசொல்லுகிறேன் கேளுங்கள் ஹரியைப் பிரியமுடன் ஓதுகின்ற வேதமறையவர்களையும், பலவித முநிவர்களையும், இன்னம் மற்றுமுண்டானவைர்களையும், கனத்த யாகம்செய்கின்ற யிடங்களையும் நன்றாயாராய்ந்துப்பார்த்து, அவர்களைப்பிடித்து யென்னுடையநாமத்தியானம் பஜனைசெய்துக்கொண்டு வரச்சொல்லுங்கள். அதை அவர்கள் பயபக்தியுடனே செய்தால் விட்டுவிடுங்கள், இல்லாவிட்டால் அவர்களை ஆகாயத்தில் விட்டெறிந்து உங்கள் கூர்மைபொருந்திய வாளுக்கிரைகொடுங்கள். மேலும் அந்த ஹரியானவன் அகப்பட்டால் கைப்பிடியாகக் கொண்டுவாருங்கள். அல்லது அவன் ஒடத்தலைப்படுவானேயாமாகில் அவனை வெட்டிப்போட்டு அவன் இரந்தானென்றுவது வந்து சொல்வீர்களேயாமாகில், உங்களைப்போல் பலவான் யாருமில்லையென்று சொல்லுவேன் வீரர்களே.

வீரர்கள் சொல்-விருத்தம்.

இருநிலந்தன்னிலுந்தன் யெழில்பெருங்கீர்த்திதன்னை
பெருமையாய்யாவருக்கும் போதித்துப்பிரபலமாக
ஒருமையாய்மாயன்வாழும் உலகெலாந்தேடிப்பார்த்து
திருகலில்லாமல்வாரோம் தேவனேவிடைகொடுப்பீர்.

வசனம்.

கேளும் சுவாமி, தாங்களிட்ட கட்டளைப்படியே திரிலோகங்களையும், திக்குவிஜயம்பண்ணி உம்முடைய திருநாமமே யாவரையும் துதிக்குப்படிச்செய்து, அந்தமாயனிருக்கும் இடங்களையுந்தேடி அவனைகைப்பிடியாகக்கொண்டுவருகிறோம், எங்களுக்கு விடைகொடும் கடவுளே.

இரணியன்-சொல்-விருத்தம்.

விடைதருவேன்படைத்தலைவ வீரர்களாய்
விண்ணுலகம் மண்ணுலகம் விருள்பாதாளம்
கடைவாயில்சென்றுமெனைத்திடம்தாக
கர்த்தனென்றுதுதித்திடநீ கட்டளைகள்செய்து
குடல்குழம்பிப்பதிங்கிடு மாயனைப்பிடித்துக்
குவலயமுங்கிடுகிடெனக் கொக்கரித்து
அடைவுடனே வாருங்களுங்களுக்கு
அதிகவெகுமதிதருவே னமைச்சமாரே.

வசனம்.

கேளுங்கள் ஓய் வீரசூரரே, நீங்களனைவரும் ஒன்றுகிலும் இடைவிடாமல் திரிலோகங்களையும், திக்குவிஜயங்கூறி என்னுடைய பிரதாபத்தை யாவருக்கும் நன்றாய்த்தெரியும்படியோதி அந்தந்த நாட்டு மன்னர்களைப்பிடித்து கண்டனைதண்டனைசெய்து, வைகுண்டம் கைலாயம், பிரம்மபட்டணம், எமபுரம் இதுகளையெல்லாம்நாடி ஹரியென்பவனைத்தேடிப் பிடித்துக்கொண்டோடி வாருங்கள், உங்களுக்கு மிதமில்லாத வெகுமதிகளைத்தருகிறேன், நீங்கள் ஜாலஞ்செய்யாமல் போய்வாருங்கள் வீரசூரரே.

வீரசூரர்-சொல்-கவி.

விடையதுபெற்றுக்கொண்டு வீரசூரருமெழுந்து
மடைதிரந்திடும்வெள்ளம்போல் மாசேனைவீரர்சீறி
துடைகளைத்தட்டிக்கண்கள் சிவந்திடவார்பரித்து
படைத்தலைவீரரெல்லாம் பாரின்மேல்பரவினரே.

வசனம்.

அகோதெப்படியென்றால், வீரசூரரானவர் இரணியேஸ்வரரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, மடைதிரந்த வெள்ளம்போல் ஆர்பரித்துக் கொக்கரித்து, திம்மை-இருளாஸ்திரம்-கண்டகோடாலி-வேல்-சூலம்-கெதை-வாள்-தடி-சக்கரம் முதலான ஆயுதங்களை எடுத்துக்கொண்டு மும்மதங்கள் பொங்கும் யானைகளைப்போலே ஆர்ப்பரித்து, கண்கள்சிவந்து கனகோபங்கொண்டுசீறிமீறி பாரின்மேல் பரவுகின்ற விதங்காண்க.



வீரசூரர்-ஹரியை-பிடிக்க-பாரில் தூரும்
தரு-இ-ம்-நாட்டை-அடதாளம்.

பல்லவி.

இடையில்ஜல்லடங்கச்சைகட்டினார் புவி
யெங்குங்கடுங்கத் துடைதட்டினார் பெரும்
படைவீரருங்கெக்கலிகொட்டினார் மது
பானங்குடித்துபுஜமுட்டினார் அரல்
பரவுந்திரைகடல்-சூழுலகெங்கும்
பயங்கொண்டனைவருங்கடுநடுங்கிட
துரையிரணியனுரை-சொற்படியேசம்பா
சூரரனைவரும்-தீரமாகவே (இடையில்)
மண்ணுலகமுழுதுந் தூரினார் மா
மறைமுனிவர்மீதினிற் சீறினார் ஜெயம்
பண்ணுந்தவசிகள்வாய் கீறினார் பரா
பரணிரணியனென்றுகூறினார் சாற்றும்
பலகலைகளாகமங்கள்-சாஸ்த்திரம்
பகருமெதியிருடிகள்-சந்நியாசிகள்
அலரிஅபயமென்றுளர-சடைபிடித்தாட்டி
கீர்த்தியைநாட்டி-மேன்மையாய் (இடை

சம்பாசூரன்-சொல்-கவி.

வெற்றிசேர்வீரரேகேள் வெள்ளையுஞ்சிகப்புமாக
நெற்றியிலிட்டுக்கொண்டு நிற்கின்றகூட்டந்தன்னை
பற்றியேசூளசித்தாடை பற்களும்முதிரக்கையால்
மொத்தியேயிழுத்துயெந்தன் முன்கொண்டுவருகுவீரே.

வசனம்.

ஆ-ஆ- வாருங்கள் வீரரே, அதோபாருங்கள் கோடிகோடியாய் கூட்டங்கூடிக்கொண்டு நெற்றியிலே தாரும்மாராக வெள்ளைக்கோடும் சிகப்புக்கோடும், இழுத்துக்கொண்டு விகாரத்துடன் இருக்கின்றவர்களை சிலவீரர்கள்போய் அவர்களைபிடித்துத் தாடைபல்லுதிர அடித்து, என்முன்கொண்டு வாருங்கள் வீரரே.

உக்கிரன்-துண்டு-கவி.

அட்டியில்லாமல் அரைநொடிதன்னில்
கட்டியேயிழுத்துக் கடிகைமுன்வருவோம்.

ரணமுகசூரன்-சொல்-கவி.

பயமச்சமொன்றில்லாமல் பட்டைநாமங்கள்போட்டு
கெழங்கிட்டுகளுமாயிற்கும் கள்ளரேநீங்களார்சொல்
முழமட்டும்ஏய்ந்தாலுங்கள் மூஞ்சியையுடைப்போமெங்கள்
ஜெயம்பெற்றவசுரர்முன்னே சீக்கிரமாய்வருகுவீரோ,

வசனம்.

அங்கே இருக்கின்றவர்கள் யாரடா, கொஞ்சமாகிலும் பயமில்லாமல் கட்டைசுவற்றை முட்டுகிற மொட்டைக்கிடாக்களைப்போல நிற்கின்றமட்டிகளே, நீங்கள்யார் உங்கள்நெற்றியிலென்ன பத்துபோட்டுக்கொண்டிருக்கின்ற காரணமென்ன, சீக்கிரஞ் சொல்லுங்கள் வீணாக முழமளக்கவேண்டாம் முகங்கள் ஓரணையில் உடைந்துபோய் விடும் சொல்லுங்கள்.



பிராமணாள்-சொல்-தரு-ஏகதாளம்-இ-ம்-உசேனி

ஹரிஹரிகேசவா ஆனந்தப்பிரகாசவா
வாரிதிபன்னகசயனதேவனே மஹானுபாவனே (ஹரி)

கரிமுறையிடகராவைகண்டிக்க சக்கரமதை
பரிவுடனேவிடுத்துக்காத்த பாக்கியனேசிலாக்கியனேமுர (ஹரி)
இக்குவேரிலேயுனையல்லாமல் திருமகள்மனோஹரா
தயைசெய்தெங்களையாட்கொளுஞ்ஜெயஸ்ரீதரா தாமோதராதிரு
அக்கினிக்கண்பொறிபரக்க வரக்கரிதோசீறியே
ஆரவாரஞ்செய்கிறார் ஸ்ரீநாரணாபரிபூரணாஜெய (ஹரி)
விபுதாமுதங்கடையகிரியை கூர்ம்மாகயேந்திய
விமலாசாரங்கபாணி கமலகளநேத்ராஸ்ரீ (ஹரி)
சுபஜெயமங்களகுணதாமகுடபீதாம்பரா
தேவாகடைக்கண்திறந்து காவாய்கதிவேறொன்றில்லை (ஹரி)
சிலைதண்டுவாள்கரமேந்தி சூரிவாராரர்பாரீர்
தங்குமிடமெங்களுக்கு ஜாகையெங்குமிலேயேயிலேயே (ஹரி)
நிலைதிசூழ்கலவைநகர் நிற்குங்கரிவரதா
நின்னடியேகெதியல்லாமல் பின்னொருவருமிலேயே. (ஹரி)

தாதாசாரி சொல்-தேவாரம்.

திருவணிமார்பாபோற்றி தேவர்கள்தேவாபோற்றி
கரிமுகில்வண்ணாபோற்றி கௌஸ்துவாபரணாபோற்றி
தூரிதமாயசுரவீரர் சூரியெங்கள்மேல்வாரார்
ஹரிஹரிகாருமையா வபயமுன்னடிக்கிப்போதே.

பயிராகிகள்-சொல்-வெண்பா.

திருவணியுமணிமார்பா தேவாவுன்திருவடியை
பெருமையுடனேதினமும் போற்றக் - கருமுகில்போல்
வீராதிவீரர் வெகுண்டெங்கள்மேற்சீறி
வாராரொன்செய்வோம் வகை.

பயிராகிகள் சொல்.

தரு-இ-ம்-நீதிகௌளம்-திரிபுடை-

சுரம்.

தாதாதா சநிதப சநிதநிதப பதமப-சரிரிகாரிச-கமபத
சநிதபமாம கரிகமமா

மாயாசேயா செவ்வாயா திருமகள்நேயா
ஆயாவடியவர்குறைநீக்குஞ்சகாயாசாமளமுகில்வண்ணா (தாதா)

வேதா நாதா பிரக்யாதா யெனினிவாதா
ஆதாரம்வேறில்லை யுன்னிருபா தாரமேகெதிதந்தருள் (தாதா)
வாராய் நேராய் கண்பாரா யெங்குறையினி தீராய்
நாராயணாயநமவென்னும் பாராயணமேயருள்முராஹரி (தாதா)
லீலா பாலா கோபாலா ருக்மணிமகிழ் லோலா
சிலாசிரி யேன்றமிழுக் கனுகூலா கலவைக்கரிவரதனே (தாதா)

முனிவர்கள் சொல்-தேவாரம்.

ஐயனேயமரர்க்கன்று வமுதமுங்கடைந்தளித்த
மெய்யனேகடலிற்பாந்தள் மேல்துயில்பவனேசக்ரக்
கையனேமலர்ந்திடுஞ்செங் கமலப்பொற்பதமேபோற்றி
வையகமதிரவீரர் வருகிறாரினியென்செய்வோம்.

சந்நியாசிகள்-சொல்-கொச்சகம்.

நான்முகனையீன்றளித்தநாதா யீதென்னகொள்ளை
வான்புவிகளும்மதிர வாரார்ராக்கதரிதோ
தேன்மருவுமபர்தமதை தேடித்திகைத்துநின்றோம்
மான்வளரும்மணிமார்பா மாதவனேகண்பாராய்.

கியாகிகள்-சொல்-தரு

கியாகிகள் சொல்-தரு-இ-ம்-ஜுஜாவந்தி-ஆதிதாளம்

பக்தர்கள்நேசம் பணியும்ப்ரகாசம்-பண்புடையோருள்வாசம்
யுக்தமாதவம்ஹரிகோவிந்தம் உண்மையிதுவேபந்தம் (பக்)
ஆதியும்நீயேயந்தமுநீயே யானந்தமுநீயே-செழுஞ்
ஜோதியுநீயே சூக்ஷமுநீயே சுடர்மதியொளிநீயே (பக்)
அரக்காரவாரங்கள்செய்திதோ வதட்டுவதேனறியோம்-விழி
தெறிக்கமீசையைமுறிக்கியெங்களைசீறுவதையுங்குறியோம் ()
திக்குவேறில்லையுன்திருவடியேகெதிசெந்தாமரைக்கண்ணு-எங்
கள்-பக்கம்வந்துநீர்பாதுகார்த்தருளும்பரவுஞ்சாமளவர்ணு(பக்)
மாமணாமுடியினிலாடியபாதா மாதவர்மேல்வாதா-இனி
தாமதஞ்செய்தால்சகிக்கவொண்ணாதேதற்காத்தருள்செய்தாதா
அலைகடல்கோஷடம்போலிதோசீறி வதலகுதலஞ்செய்து
மலைகளைப்போலவேவருகிறார்கலவை மாணகர்கரிவரதா (பக்)

பொதுவிருத்தம்.

புவியில்வாழ்மறையோர் வேதபூசுரார்களையுஞானத்
தவமுனிகள்சன்னியாசி சமஸ்தபேர்களைப்பிடித்துக்
கவனமோடிரண்ணியதேவக் கடவுளைத்துதிக்கச்செலுத
எவர்களுநடுங்கப் பொன்னுடேகினர்சூரர்தானே,

வசனம்.

இவ்விதமாக சம்பாரசூரரானவர், பூலோகமுழுதுஞ்சுற்றி மறையவர்கள் வேதமுநிவர்கள் தவசிகள் சன்னியாசிகள் முதல் யாவரையும்பிடித்து, அடித்து கண்டனை தெண்டனைசெய்து இரண்ணியநாம மந்திரத்தை துதிக்கப்பண்ணி பொன்னுடென்னும் தெய்வலோகம் தூருகிற விதங்காண்க.



தேடும்-தரு.

விண்ணுட்டுலகங் கொள்ளையடித்தார் வேழ
வாகனனைக்கண்டு பிடித்தார் அவனை
என்னுளுஞ்சிறையினி லடைத்தார் தேவனா
ஏவல்செய்யும்படி விடுத்தார் பின்பு

இளமைவாகன னெமகிருதிதனை இடித்து வருணனை அடித்து வாய்வையும் அளகைநகர்க்கரசனு மீசானியனும் ஆவலுடன்பணிந் தேவல்செய்திட இடையில் சல்லடங்கச்சை,

பொது-வெண்பா.

வானவர்லோகம்புகுந்து வாசவனைசிறையில்வைத்து
தானவர்கோனிரணியர் தன்தாள்தனையேகியானமொடு
போற்றிப்பணிந்தடிமை தொழில்புரிந்திடச்சென்றார்
சாற்றிமலரோன் புரமேதான்.

தேடும்-தரு.

எகினவாகனன் புரமோடினார் அங்
கிருக்கும்யெக்கிய சாலையைஜாடினார் வேதன்
திகிலடைந்திடும்படி கூடினார் ஜெக
தீசனிரணியனைக் கொண்டாடினார் செட்டி
திரமதாயசுரர்களனைவர்களும்-தேடிக்கைலையை-நாடிவருகையில்
பரமனவர்பயங்கொண்டெங்கையோ- பதுங்கினாருடல் வாங்கிவா
டிட (எகி)

பொது-வெண்பா.

ஒதிநகருள்புகுந்து உத்தமர்செய்வேழ்விகளைத்
தாதுகலங்கிடத் தான்செய்து - பாதி
பிறையணிந்தோன்தன்நகர்போய்ப் பார்க்கிலவன்பயந்து
வரையிலொளித்தானென வந்தார்.

தேடும்-தரு.

வைகுண்டபுரமதை நோக்கினார் வாய்வு
வரவொட்டாமலே சூழ்ந்துமூக்கினார் வீரர்
கைகொண்டபடி கெட்டித்தாக்கினார் மாயன்
காணாமலெங்கையோ தேக்கினார் அரியை
கண்டுதேடிபிடித்துநமதிட-கர்த்தனாமிரணியேசர்முன்னிலே
கொண்டுபோய்விடுத்தோமேயாகில் - குலமுந்தழைத்திட- நல
முந்தருமென (வைகுண்ட)

பொது-விருத்தம்.

அசுரர்களுள்நுழைந்து வாராய்ந்துபார்க்கும்போது
னிசியணிந்திடிந்திருக்கு நாயகனானமாயன்
விசும்புமின்போல்மறைந்தான் வீரசூரரும்வெழ்க்கிப்
பசியினாலிளைத்தார்போலே படைத்தலைவனுக்குரைப்பார்.



வசனம்.

இவ்விதமாக வீரசூராசுரதாரானவர், அந்த மாயன்வாழும் அரமனையில் நுழைந்து பார்க்கும்போது, ஸ்ரீமஹாலட்சுமி லோலனாகிய விஷ்ணுவானவர், எப்படி மறைந்தாரென்றால் ஆகாயத்திலே மின்னலானது, எப்படி காட்டிமறையுமோ அப்படி மறைந்தார் அதை வீரசூரானவர் கண்டுவெழ்க்கி அன்னமில்லாதவன் தன்னைத்தான்மறந்த பாலனைபோல் இளைத்து, தங்கள் படைத்தலைவனாகிய சம்பாசூரனிடத்திலந்தசேதியைச் சொல்லுகின்ற விதங்காண்க.

வீரர்சொல்-கவி.

மடக்கிமுன்னுள் நுழைந்து மாயனைப்பிடிக்கப்போனோம்
வெடிக்குமுன்ரவைபாய்ந்தாப்போல் வேகமாயொளித்துக்கொண்டா
அடிக்கிப்பின்றுடர்ந்துபார்த்தோம் அகப்படவில்லைபொல்லா (ன்
இடக்கனையினிமேல்தேடி எப்படிப்பிடிப்போமையா.

வசனம்.

கேளும்படைத்தலைவராகிய எங்களரசே, நாங்கள் உள்நுழைகிறபோதிருந்தவன் கிட்டே நெருங்கிப்போய் கெட்டியாய் ஒட்டிப்பிடிக்கப்போனோம், வெடிக்குமுன்னே ரவைபாய்ந்த பாலனைபோல் மாயனானவன் மறைந்துவிட்டான் அந்த அடிக்கே பின்றுடர்ந்துபோனோம் அவன்அகப்படவில்லை, அந்தபொல்லாத இடக்கனை இனிமேலெப்படி தேடிப்பிடிக்கலாம், அதற்கு தாங்கள்தான்யோசித்துச்சொல்லவேண்டும் எங்கள்கோவே.

படைத்தலைவனாகிய-சம்பாரசூரன்-சொல்-வெண்பா.

ஆஹாயிதுநல்லவாச்சரிய மவனுடைய
பேஹாதன்மின்மும் பிரியுமோ - சாஹாப்
பொருளிரணியன்பதத்தைப் போற்றிபுகழ்ந்துச்சரித்து
இருள்வனமுந் தேடுவீரெங்கும்.

வசனம்.

ஆ-ஆ- இதுநல்ல ஆச்சரியமாகயிருக்கின்றதே, இதென்ன காலக்கேடென்று சொல்லலாம், உள்நுழைகிறபோதிருந்தவன் தடாலென்றுஇத்தனைபேர்களுக்கும் டிமிக்கிகொடுத்துவிட்டுமறைந்துவிட்டானல்லவா, அவனைஎவ்வளவு சாமர்த்தியனென்று சொல்லலாம், பலேஇப்பேர்ப்பட்ட மோசம் அவனிடத்தி லில்லாமல்தானா அவனுக்குக்

கபடநாடகசூத்திராவதாரியென்றுபெயர்கொடுத்திருக்கிறார்கள், சரி சரி இது அவனுக்குத் தகுதியானபேர்தான் ஒய்வீரசூரர்களே, அவனுடையகபடமும் பேகாதனமும் நம்மிடத்தில் காண்பித்தாலதற்கு நாம் பின்னிட்டவர்களல்லவே, அவன் ஞாயம் சூதுவாதுஇனிசெல்லுமோ செல்லமாட்டாது, நீங்கள் நம்முடைய இரணியேஸ்வரருடைய திருநாமங்களை யுச்சரித்து, கிரி-குகை-வனஞ்-சுனை-கடல்-மடல்-புனல்-அனல்-காடு-மேடு-தடம்-மடம்-இடம்-குடம்-நடம்-வடம்-தோணி-சேணி-பாணி-கேணி- இதுகளை யெல்லாம் ஊணித்தேடிபார்ப்பீர்களேயாமாகில் அகப்பட்டுப்போவான், அப்போதவன் கபடநாடகத்தனத்தை நான்காண்பிக்கின்றேன், நீங்கள் சல்தியில் தேடிப்பிடியுங்கள் வீரர்களே.

தேடும்-தரு.

கிரிகுகைவனஞ்சுனை சோலையும் இன்னம்
களரிப்பார்போங் திருமாலையும் நன்றாய்
துரிதமுடன்சென்றேடி வேலையும் பாதாளங்
துளைத்துவனுத்திரள்கள் மேலையும் பார்க்கில்

துலங்கும்மலர்வனஞ்சூழ் கலைவநகர்துறை கரிவரதனெனுமாயன்
கலங்கிதலைமறைந்தோடினனெ கருதிமனதினில்சிருதானைவருங்
(கிரிகுகை)

வீரர்கள்-படைத்தலைவனுக்குச்-சொல்-வெண்பா.

வெற்றிபெருப்படைத்தலைவ வீரரேகேளீர்யாம்
எத்திசையுங்கிரிகுகையு மிருள்வனமுஞ் சுத்தி
கடல்தடமும்நதிகிணறுங் சலக்கிட்டோமவனுடைய
உடலரியோ மென்செய்குவோம்.

வசனம்.

கேளும் எங்கள்படைத்தலைவீரரே,தாங்கள்சொற்படி சகலமுந் தேடிப் பார்த்தோம் அவனு- டின்னவிதமென்று காண்பதற்கேங்காபிரையாசையாகி யிருக்கின்றது நாங்களென்ன செய்வோம்மகாபிறபுவாகிய ஐயனே.

சம்பாசூரன்-சொல்-வெண்பா,

இத்தோடேயவனைச்சும்மா யினிவிடவும்போகாது
மெத்தசமர்த்தர்களே மெலியாமல் - புத்தி
அரிவீனனென்னு மரிசாருமிடங்களிலே
பரிவுடனே பாருங்கள் தேடி.

வசனம்.

ஓய் வீரர்களே, புத்தி அறிவில்லாத அரியென்பவனை நாம் இத்துடனே விடலாகாது அவன் சேருகின்றயிடம் எதுவோ, அதுகளைக் கண்டு தேடிப்பாருங்கள் எப்படியும் அகப்படுவான் அதற்குத்தடையில்லை. நீங்கள் தைரியம் விடாமல் இன்னந் தேடுங்கள் வீரர்களே.

அசுரர்-சொல்-தரு-இ-ம்-சாமா-ஆதிதாளம்.

பல்லவி.

எங்கெங்கும்போய்த்தேடினோமே அந்த
யீனமானமாயவனுமேனோன் காணமே (எங்)

அநுபல்லவி.

தங்கியவைகுண்டந்-தனையெங்குமாராய்ந்தும்
சதிசெய்தோடினானே மதிநிதியில்லானே (எங்)

சரணங்கள்.

கிரிகுகைவனங்கள் கேணிசுனைபுனங்கள்
விரிகடல்குளங்கள் வெகுகோடிதளங்கள் (எங்)

பாதாளமுந்துளைத்துப் பலமதாய்வளைத்து
வேதாளித்தோம்களைத்து விட்டார்படையிளைத்து (எங்)

புகையொடுமொட்டியே பொந்துசந்துங்கிட்டியே
யகப்படாதெட்டியே தான்மறைந்தமட்டியே (எங்)

காடாந்தகாரத்தில்வாளை காட்டினவன்போல்தோளை
யேடாமூடாதகூளை யெதிர்நில்லாமுட்டாளை (எங்)

இன்னமகப்படானே யெதிர்த்தொன்றைத்தொடானே
மன்னவன்முன்னோடானே மானமில்லாமூடனே (எங்)

அரிதுயினிமேலே அவனிதனில்நூலே
கரிதியறிவாலே கலவைதிருமாலே (எங்)

சம்பாசுரன் சொல்-கவி.

பதுங்கியமாயனிந்தப் பாரைவிட்டெங்கேபோவான்
மதங்கொள்வீரர்களேயின்னம் மனத்திடங்களைவிடாமல்
சதமெனவுடலைநம்பித் தான்மறைந்திட்டமாயன்
விதங்களையறிவோமென்றாய் விரைவினில்தேடுவீரே.

வசனம்.

ஓய் வீரர்களே, அவனை எங்குந் தேடிப்பார்த்தோம் அகப்படவில்லையென்று சொல்லுகிறீர்களே உங்களுக்குவெட்கமில்லையா இவ்வளவுதானு உங்கள் தீரம், இந்தத் திரிபுவனத்தைவிட்டுப்போக வேறிடமுண்டா இல்லையே, அந்த ஹரியென்பவன் தன் உடலை தனக்குச் சதமென்று நம்பியிருக்கிறானோ நல்லதாகட்டும். நீங்கள் இன்னந்தேடிப்பாருங்கள் அகப்படுவான் வீரர்களே.

சூரர் சொல்-தரு-இ-ம்-சுருட்டி-அடதாளம்.

பல்லவி.

இனித்தேடயிடமெங்குமில்லையே-யிரணியன்முன்
போகவும்மனம்வல்லையே (இனி)

அநுபல்லவி.

கனிவாய்நம்மையழைத்துக் கமலமுகஞ்செழித்து
இனிமாயனையிழுத்து யெதிர்வாவெனத்தழைத்து
இன்பமுடன்வெகு-தென்புகூறியே
அன்போடனுப்பினு-ரரிமுராரியை (இனி)

சரணங்கள்.

அண்டரண்டபிரம்மாண்டகோளமும் பூ
வகிலம்சகலசக்கரநீளமும் மெய்
விண்டுதவர்கள்செய்யும் வேதமுனிக்கூட்டமும்
விரிவாய்தடந்தருக்கள் வயல்சோலைதோட்டமும்
மண்டமர்போர்செய்யும் மதகெஜநீட்டமும்
மணல்சிலைசெடியோடை மரம்புரம்வாட்டமும்
மதித்துதேடவும் மறைந்தபேயனை
யெதிர்த்துத்தாஞ்சொல்லா யீனமாயனை (இனி)

சரத்துமிகவுங்கூறிவந்தோமே ஹரியைத்
தருவோமென்றுவாக்கையுந் தந்தோமே அது
சிரித்தவர்க்குத்தாம்பூலந் தந்ததுபோலாச்சே
தெளிவில்லாதேவர்க்குந் தெரிந்தால்கேலியாச்சே
பெருத்தபுகழிரண்ணிய பூபர்க்கிப்பேச்சே
போயுரைப்போமப்புரம் புரைவிடாமலேமூச்சே
பெருகிவளர்நமதசுரானைவருந்
துரிதமுடன்படைத்துணைவரானவரும் (இனி)

இது அவனுக்குப்பெரும்ஆணியே இனிமேல்
எங்கேதப்பினுஞ்சக்கரபாணியே கொஞ்சம்
பதவுதெரிந்ததினுல் பலவந்தனுவானே
பரிந்துயினியுலகில் பதுங்குவதுமெய்தானே
சதமென்றவனையின்னஞ் சட்டைப்பண்ணுவதேனே
சாமியிரணியனே சாதிக்கின்றவன்தானே
சலுதியிற்சாற்றுவோர் தையித்தன்முன்னையே
கலவைநகர்க்கரிவரதன் தன்னையே (இனி)

சம்பாசூரன் சொல்-கவி.

வல்லமைமிகுந்தவீர வசுரரேசொல்வேன்கேளீர்
கல்மலைகடல்பூவானங் கடிவனந்தேடிப்பார்த்தும்
அல்லல்செய்மாயனின்ன மகப்படப்போரதில்லை
வல்லவரிரணியருக்கு வசனிப்போம்வருகுவீரே.

வசனம்.

கேளுங்கள் வீரரே, இனி அந்த ஹரி யகப்படான் நாம் போய் இரணியபூபாலகருக்குச் சொல்லிவிடுவோம் வாருங்கள் வீரர்களே.



சூரர்கள் இரணியனுக்குச் சொல்-விருத்தம்.

ஐயனேபோற்றிதங்க ளாக்கினைப்படியேசென்று
வையகமுழுதுஞ்சுற்றி வானுலகமுங்கொண்டாடி

ஐயயவேஹரியைத்தேடிப் பார்க்கையில்பயந்துவோடி
மெய்யனேயொளித்துக்கொண்டான்மேதினிலெங்குங்காணோம்

வசனம்.

சரணஞ்சரணம் சுவாமீ எங்களைக் கருணையுடன்காத்துரக்ஷிக்கும் இரணியேஸ்வரரே, தங்களுத்திரவின்படிநாங்களனைவரும்இடைவிடாமல் சொற்க மத்திய பாதாள மென்கிற திரிலோகமுஞ் சுத்தித் தங்கள் கீர்த்தியை யாவருக்கும்போதித்து, வைகுந்தம்போய் நமது பகையாளியாகிய ஹரி என்பவனை நாங்கள் பிடிக்கப்போனோம், அப்போதவன் எங்கள் வீரசூர பல பராக்கிரமங்களைக்கண்டு கிடுகிடுகிடுவென்று நடுநடுங்கி பயங்கி தேங்கி எங்கேயோ மறைந்து விட்டான் மறுபடியும்எங்கேதேடிப்பார்த்தபோதிலும் அவனைக்காணோம் அதையுமக்கு சொல்ல வந்தோமையனே.

இரணியன்சொல்-விருத்தம்.

கடுந்திரள்கூடி நீங்கள் சென்றிடும்வேகந்தன்னைக்
 கண்டுமெய் கலங்கிமாயன்
நடுங்கியேதிருடனைப் போலொளித்தாலும்
 நான்கருதியபடிமுடிக்காமல்
விடுவேனோயவனையென் வீரவாளுக்கிரை
 விருப்பாய்கொடுத்துபின்றென் றைத்
தொரிவேனேயல்லாலசுரரேயென்றன்
 சூரத்துவமதைக்காண்பீர்.

வசனம்.

ஆஆ ஆஆ-ஓய்வீரசூரர்களே, நான் சொன்ன பிரகாரம் கடூரமாகிய கோபத்துடனே வைகுண்டம் போனீர்களா நீங்கள் போன உதட்டிலைக்கண்டு பயங்கொண்டு ஓடிவிட்டானல்லவா நல்லதாகட்டும், அவன் படந்து இனி எந்தத்தீவினில் ஒளித்திருந்தபோதிலும் அவனை என் வீரவாளினால் துண்டு துண்டாய்ச்செய்து, வெட்டி கசக்கி நசுக்கிப் பிழிந்து அதில வருகிற உதிரத்தை யெடுத்து, என்னெண்ணப்படி முடிக்காமலினிவிடேன், அதுவரையிலும் வேறொரு வேலையைத்தொடேன் பாருங்களென் வீரத்தை சூரர்களே.

இரணியன்-சொல்-தரு-இ-ம-மத்தியமாவதி-ஆதிதாளம்

பல்லவி.

இனிவிடுவேனோஹரியை-எனக்கினிவந்
தெவர்கள்சொன்னாலுஞ்சரியே (இனி)

அநுபல்லவி.

ஈரேழுபதினாலுலகெங்கு நடுங்கிடு
மிங்கிதவாளினால் சங்கரியாமலே (இனி)

சரணங்கள்.

தனியேவந்தேனமரயென் தம்பியைக்கொன்றிடுஞ்
சாமர்த்தியமெங்கேபோச்சோ என்பேர்சொல்லத்
தத்தளித்தொளித்திடலாச்சோ மேலுமவனுக்
கனித்தியகாலம்வந் தணுகினபடியாலே
அரக்கர்மீதினிற்பகை பெருக்கமாக்கியேகொண்டான்
ஆதலினாலவனுவமதையிப்
பூதலமீதினிலேதெரியாமல் (இனி)

அண்டரண்டபிரம் மாண்டகோளமெட்
டகிலமெனதுக்ஷேத்திரம் ஆதலாலந்த
ஹரியென்பவனெம்மாத்திரம் வீரவாளினால்
துண்டமிரண்டாய்ச்செய்து சொரியுமுதிரத்தாலென்
துணைவனுக்கேற்றதற்பண முதல்செய்யாவிடில்
சூரனென்றுதிரிலோகமும்போற்றிய
வீரமென்ன விருதாவிதோகாண்பீர் (இனி)

பரவுந்திரைகடல்சூழ் பாரிலெனைப்போல்வீரம்
படைத்தவீரனுமுண்டோ யென்மேல்துஜம்
தொடுக்கத்தீரமுண்டோ தேவர்யாவரும்
இரவும்பகலுமெனக் கேவல்செய்திடவுமீ
ரேழுலகம்நடுங்க தாழ்விலாவரம்பெற்றேன்
இலகியகலவைமாநகர்கரிவரதனைபல
விதத்தில்பிடிப்பேன்பாருமென்பிரிதிக்னை (இனி)

முதல்மந்திரிசொல்-விருத்தம்.

பொருத்திடுங்கோபம்வேண்டாம் புவனசக்ரேஸ்வராநீர்
உரைத்திடும்வார்த்தைக்கிப்போ ஒருமனுசொல்வேன்கேளும்
பெருத்திடுமுமதுவீரப் பிரபலங்கண்டுமாயன்
கரித்திடுங்கடலுக்குள்ளே கள்ளனைப்போலொளித்தான்.

வசனம்.

கேளும் புவனசக்ரேஸ்வரரே, தாங்களே இப்படி கோபித்துக் கொண்டால் தங்களுக்கெதிரில் நின்றெவர்கள் வந்து ஞாயம் சொல்

லப்போரார்கள், பொருங்கள் கடலுடைந்து மடைபிடுங்கிக்கொண்டால் அதின் எதிரில் எதுமுன்னிற்கும், அதுபோல்தங்கள் கோபத்திற்கெவர்களும் நெருங்கார்களே, சுவாமீ ! எங்கள்பேரில் தயவுசெய்து கோபத்தைத் தணியும், அடியேன் பயந்து ஒரு மநு கேட்கிறேன் அதென்னவென்றால் உம்முடைய வீரசூரப்பிரதாபங்களைக் கண்டுதான் அந்த வெரிகொண்ட அரியானவன் கருங்கடலில் ஒளித்துக்கொண்டான், அதுதங்களுக்கு நன்றாய்த்தெரியும். அவனெவ்வளவு உமக்கொரு வரவுசிலவா, சிறியகொசுவின்பேரில் பெரியமலையை பிடுங்கி எறிவதுபோல் அந்த வற்பனைஜெயிக்க, ஒருபிரிதிக்கனை தாங்கள் செய்யவேண்டுமோ பிரபுவே.

உ-வது மந்திரிசொல்-விருத்தம்.

தானவர்குலத்தில்வந்து தாழ்விலாதரசளிக்கும்
தீனரக்ஷகனேமாயன் ஜென்மமோடிருப்பானென்று
ஞானமுந்தோற்றவில்லை நலமுடனிருந்திட்டாலும்
சேனைநாளானாலுந்தான்சிக்காமற்போவதில்லை.

வசனம்.

கேளுமெங்கள் ஆண்டவனே, தாங்களெப்போது உற்பத்தியானீரோ, அப்போதே மும்மூர்த்திகளும் அடங்கினார்கள் அதற்குமேல் தங்கக்குடைக்கிரத்தின குச்சிகட்டினதுபோல் பெரிதாகிய தவஞ்செய்து சாஸ்வித கற்பாந்தகாலத்திற்கும் சாகாவரம்பெற்றுக்கொண்டீர் இந்தசேதி மாயனுக்கு தெரிந்துதான் கருங்கடலில்விழுந்து இறந்தவன்போல் தோணுது, அவன் உயிருடனே இருப்பானென்று என்மனதிற்கு தட்டுபடவில்லை, அல்லது பிராணனோடு இருந்தபோதிலும் உமதுகண்ணில் அகப்படத்தான் போகிறான், அப்பவே உமதுஎண்ணப்படி முடியத்தான்போகுது, நாங்கள்தான் பார்க்கப்போகிறோம்அதற்கென்ன இவ்வளவு பிரமாதம் பிரபுவே.

இரணியன் சொல்-விருத்தம்.

தீரமாயிந்தவார்த்தை செப்புகிறேன்கேளுங்கள்
சோரமாயொளித்தவந்த சூதன்தன்னுதிரத்தாலே
சாரமாயென்தம்பிக்குத் தற்பணஞ்செய்யாவிட்டால்
வீரமாயான்பிடித்த வெழிற்செங்கோல்விருதாகண்டீர்.

வசனம்.

கேளுங்கள் மந்திரிமார்களே, நீங்களென்ன சொன்னபோதிலும் அந்தமாயனைப்பிடித்தடித்து அவன் உதிரத்தில் என்தம்பிக்குதற்பணஞ்செய்கிறபோது, அடாதம்பி உன்னைக்கொன்ற ஹரியினுடையஉதிரம் இதை நீகைகொள்ளென்றுசொல்லி என்சபதத்தை முடிக்காமற்போனால் நான்பிடித்த செங்கோல் விருதாவென்று யோசியுங்கள் மந்திரிகளே.

முதல்மந்திரி சொல்-விருத்தம்.

வல்லவரேஹரியையொரு பொருட்டென்றெண்ணி
வற்புதமாய்சபதமதை வசனிக்கின்றீர்
சொல்லரியபெருங்கடலை தாண்டினோர்கள்
சிறுகால்வாய்க்கஞ்சி மனந்தியங்குவாரோ
மல்லல்பொருந்திடுமும்துசெங்கோலாண்மை
மண்டலங்களெங்குங் கிடுகிடுகிடென்னப்
பல்லுயிரெல்லாமறியும் படிக்கிவீரபாகுவனை
யழைத்துப் பறையறைச்செய்வீர்.

வசனம்.

கேளுமெங்கள் வல்லஉமயில்மிகுந்த தொல்லுலகரசே, நீங்கள் ஏன் இப்படிக்கெல்லாம் அந்த பஞ்சையாகிய ஹரியென்பவனை ஒரு பொருட்டாக எண்ணி பெரிதாகிய சபதமெல்லாஞ் செய்துக்கொள்ளுகிறீர், சொல்லுதற்கரிதாகியநீண்டசமுத்திரத்தைதாண்டினவர்கள் சிரியகால்வாயைத்தாண்டுவது அருமையா, அதுபோல் கடல்சூழ்ந்த உலகமெல்லாம் தங்களுக்கு அடங்கினபடியால்அவன் எவ்வளவு விரலத்தனைமனிதன்பேரில் பெரியஉரலை யெடுத்து எரிவதுபோல் இருக்கின்றதே, தாங்கள்செய்யப்பட்ட சபதம். அப்படியொன்றும் வேண்டுவதில்லை, எப்படியும் அவன் உமதுமுன் வரத்தான்போகிறான் நீர்தான் பார்க்கப்போகிறீர், அப்போதுமது திருவுளத்தின்படியே முடித்துவிடும், அதற்காகயேன் இத்தனை பிரமாதம் இனி நடத்தவேண்டிய ஞாயம் என்னவென்றால் நம்முடையபிரதாபம் இன்னம்நன்றாய்த்திரிலோகாதிபதிகளுக்குந் தெரியும்படி விரபாகுவனைவரவழைத்து பறையறைவிக்கும்படி தங்களை பிராத்திக்கிறேன் பிரபுவே.

இரணியன்-சொல்-விருத்தம்.

ஆமிதுமெய்தா னமைச்சரோகேளீர்
அகிலமீரேழுமெங்கரிய

தாமிஷமில்லாமற் பறையறைய
தாட்டியாய்வீரபாகுவனை
நாமினியழைத்தோ மென்விசைந்தோடி
நவிலுமென் வார்த்தையைக்கூறி
பூமியெங்கிலுமெனைப் போற்றிடுங்கொலுமுன்
புகழ்ந்திட வந்துசேருவீரே

வசனம்.

கேளுங்கள் மந்திரிமார்களே, சரி இதுவும்நல்லகாரியந்தான் ஆம் என்பகையாளியாகிய, மாயனை எவ்விதத்திலும் யான்வெல்லுவேனென்று எல்லவருக்கும் நன்றாய்த்தெரியுமல்லவா, நல்லது இருக்கட்டும் நமதுமந்திரிகள் சொற்படி திரிலோகமும் நன்றாய் இன்னந்தெரிந்தவர்கள் தெரியாதவர்களுக்கும், என்பிரதாபங்களை அறிவிக்கவேண்டியதுதான் ஆதலால், நமதுவீரபாகுவனை அரைநொடியில் வரவழையுங்கள் மந்திரிமார்களே.

உ-வது மந்திரி சேருவைக்குசொல்-கவி.

வாகுடன்வாசல்கார்க்கும் வலியசேருவையேகேளாய்
ஏகவானுகவெங்கும் எழில்பெறவரசளிக்கும்
போகவான்நமதிரணிய பூபர்சொற்படிக்கி
வீரபாகுவையழைத்துக்கொண்டு பரிவுடன்வருகுவீரே.

வசனம்.

கேளுங்கள் சேர்வைக்காரர்களே, நமது இரணியபூபாலகர் உங்களை யனுப்பிவைத்து நம்முடைய வீரபாகுவனை வரவழைக்கச்சொன்னார், ஆதலால் நீங்கள் அதிசீக்கிரத்தில் வரவழைத்துக்கொண்டு வாருங்கள் சேர்வைக்காரர்களே.

சேர்வைக்காரர் சொல்-துண்டுகவி.

படியுலகம்புகழ் வடிவுளவரசே
கடிகிசென்றிதோவா நொடிதனில்வருவோம்.

வீரபாகுவனை கூப்பிடும்சேர்வைக்காரர்கள் சொல்-கவி.

வீரபாகுவனேவேகமாயுனையே
தீரமாயிரணிய தேவனுரழைத்தார்
நேரஞ்செய்யாமல் நீயெழுந்திருந்து
சாரமாய்வருவாய் ஜாலமில்லாமல்,

வீரபாகு வருகிற-பொதுவிருத்தம்.

எட்டுதிக்கெங்கும்போற்று மிரணியதேவன்செப்புங்
கட்டளைப்படியேயேவற் காரர்வந்துரைக்கக்கேட்டு
சட்டமாய்த்தடியுங்கையில் சாடிகம்பிளியுங்கொண்டு
வெட்டியானென்னுந்தோட்டி வேகமாய்வருகின்றானே.

வசனம்.

அகோதெப்படியென்றால், வேதமுதலுக்கு ஆதியாகிய நாதனெ ன்பவன் இட்ட கட்டளைப்படி வேவுகாரர் சொல்லுவரையைக்கேட்ட வுடனே வீரபாகுவன் வருகின்றவிதங் காண்க.

வீரபாகு வருகிற

தில்லானா-சிந்து-இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்

தில்லானா-தில்லானா-திரிதில்லானா-மணிதில்லானா
தில்லானா-தில்லானா-ஜெயதில்லானா-திரிதில்லானா (தில்)
வல்லாண்மைகளுடைய-இந்த- வாருதிசூழ்பெரும் பார்புவியில்
செல்லாவழியரிந்த-வீரசாம்புவனென்பவனாண்டே (தில்)
இக்குவேளைதானெரித்த-அந்த யீசனுக்கும்பரமேஸ்வரிக்கும்
ஒரு-மக்கமாலைசூட்டையிலே-பறைமேலாயடித்தவனாண்டே
மாலும்மலர்மகளுந்-சுப-மங்களகோலமும்வருகையிலே
திருஞாலம்புகழ்ந்திடவே-பறை-நாடியடித்தவனாண்டே. ()
வேதன்கலைமகளே-வந்து-வேடிக்கையாய்மாலைசூடையிலே
விநோதபறையறையும்-ஞானவெட்டியானென்பவனாண்டே,
ஐயன்வசிஷ்டருமே-யருந்ததியையமாமணஞ்செய்யயிலே
மெய்யாய்ப்பறையறைந்து-எங்கு-மேலானஜாதிகுலமாண்டே.()
வேதம்பிரந்ததெங்கே-வேத-வேதியர்வந்துவிளைந்ததெங்கே
ஐந்து-பூதம்பிரந்ததெங்கே-யதை- பொருந்திநேரொன்றும்புரி
யாரோ (தில்)

வீரபாகு சாதிவளம் சொல்லும்-நொண்டிச்சிந்து.

தத்தனந்தனதனனா-தனனந்-தனனதனனதன
தனதனனா. (தத்த)
சுத்தமிகுயித்தலத்தினில் - சுருதியை- சோதித்திடும்வேதியரோ
நீதியரேகேள், நித்தியகால்க்கடன்கழித்து- பூசை-நினவில்கினவில்மர

வரதவரே, முந்திமுதலென்குலத்தின் -விபரம்-முதலிருந்துசெப்பவெ ன்றுலத்தமிக்குமே, சந்திரருஞ்சூரியருஞ்- சூழுஞ்- சாகரமும்நானறி வேன் பாகமுடனே, நாலுகுலஜாதியர்க்கு- மென்குலம்-நாகரீகமென் றுதிரிலோகமறியும், மாலுமயனறியாத -யீசன் - மண்ணிற்பிறந்ததுவும் நாங்களறிவோம், இதைதெரிந்தறியாமல்-என்னை-யிகழ்ந்துப றையனெ ன்று மகிழ்ந்துகொண்டு. செப்புகுறேற்புதமாய்-இப்பிரவி-தெரிந்திடச் சொல்லுகிறேன் வல்லவர்களே, எப்பிரவியெடுத்தாலும்-முன்செய்த இடரதுவிடாமலே தொடருமது, பறையனென்பவனுரு-பேச்சுகள்-பதரிவிடுபவனே பெரும்பறையன், துரையென்பவனுரு-ஞாயம்தொகு த்துவரிபவனே துரைசாமி, சாதியில்நால்வகையாய்-வகுத்த- தன்மை யையறிந்திடுவீர் வண்மையுடனே, மேதினியிற்பஞ்சமரென்று-சொல் வது-மிலங்கும்வேதமுடிவில் துலங்கிடும்பார், காட்டிலுள்ளமாட்டிற் பிறந்த-கோரோஜனம்-நற்பால்தயிர்வெண்ணை நெய்முதலும், நீங்கள் தாட்டியுடனுண்ணவில்லையோ-பின்பு- சதையஸ்திகளைநான்திண்ணுகி றேன், தன்குலத்தைபெரிதென்று-சொல்லுவது -சட்டமென்னவித்த லத்தில் திட்டமுடனே, என்குலத்துவிபரமதை - நன்றாய்- எடுத்துச் சொல்லுகிறேன்கேள்படித்தவரே, கம்பிளித்தடி யெடுப்பேன் -பேய்க ளைக் காற்றிலிலவம்பஞ்சாய் தூற்றியடிப்பென், அம்புவியில்பறைசா ற்றி-யானும்-அரைநொடியில்வருவேன்திரமுடனே, கலவையுஞ்சாந் தணியும்-திருவளர்-காதலர்தன்பாதமதையோதியேயின்னால், புலவர் கள்கிருபையினால்-செப்பினேன்- பொருந்தெனைக்காத்திடுங்கள் பெ ருத்தவரே-தந்தனந்தனதனனம்.

வீரபாகு போற்றி-கவி.

தெண்டமென்நாண்டே திருவடிக்கிப்போ
தெண்டமென்சாமி தைத்தியகுலேசா
தெண்டமுன்பாதத் தண்டையில்வந்தேன்
தெண்டமென்தனை யழைத்திடும்வகைசொல்வீர்.

வசனம்.

தெண்டந்தெண்டஞ் சுவாமீ, உமதண்டையில் நான் காத்துக்கொண்டிருக்கின்றேனே, தாங்கள் ஏழையான என்னை யொரு பொருட்டாக நினைத்து வரச்சொன்னதாக தங்கள் சேர்வைக்காரர் கள் ஓடிவந்துசொன்னார்கள், அதைக் கேட்டவுடனே வந்துவிட்டே ன் என்னாலாகவேண்டியதென்ன சொல்லும் அரைநொடியில் முடிக் கிறேன் சுவாமீ.

இரணியன் சொல்-விருத்தம்.

வீரபாகுவனேயிந்த ஈரேழுலோகத்திற்கும்
தீரமாயரசளிக்கும் தெய்வமும்நானுமானேன்
சீரதாயாவருக்குந்தெரிவிக்க இதைநீநன்றாய்
சாரமாய்பறையறைந்து சடுதியில்வருகுவாயே.

வசனம்.

கேளடா வீரபாகுவனே, இந்ததிரிலோகமும் நீசென்று நான் யாவருக்கும் மேன்மையாகிய தெய்வமென்பதை நன்றாக தெரிவித்து சகல ஜீவாத்துமாக்களையும், என்திருவடியே கெதியென்று தொழுது பூசிக்குப்படிசெய்து வாரும் வீரபாகுவே.

வீரபாகு-சொல்-கவி.

ஆண்டவா தங்கள்வார்த்தைக் கட்டியில்லாமலிப்போ
ஆண்டவா க்ஷணத்திற்குள்ளே யகிலமீரேழுஞ்சுற்றி
ஆண்டவா பறையறைந்து யரைநொடிதனிலேவாறேன்
ஆண்டவா விடைகொடுப்பீர் ஆக்கினைப்படியேசெய்வேன்

வசனம்.

சுவாமி இதோ அரைநொடியிற் சென்று திரிலோகாதிபதிகளாகிய சுரர்தேவர்களும், அசுரர்-இராக்ஷதர்களும், மானிடர்களும் இன்னம் மற்றுமுண்டான பேர்களும் தங்களையே தெய்வமென்று துதிக்கும்படி மிகுபயங்களைக்காட்டி பறைபறைந்து வருகிறேன் விடைகொடும் கடவுளே.

இரணியன்-சொல்-துண்டு கவி.

வேகமாய்நீதிரிலோகமுஞ்சென்று
பாகமாய்ப்பறைகளை யேகமாய்யறையாய்.

வீரபாகு-பறையறை-விருத்தம்.

இமைக்குமால்வரைக்கும்மேலா யெழில்பெரவிளங்குஞ்சேடன்
சுமக்குமிவ்வுலகுக்கெல்லாம் தெய்வமாமிரண்ணியபூபர்
அமக்களமாகயெங்கு மரிந்தவராரியாதார்க்குந்
தமுக்கடிக்கின்றேன்கேட்டு தணிந்திடீர்பணிந்திடீரே.

வசனம்.

கேளுங்கள் திரிலோகாதிபதிகளே, ஆதிசேடன் சுமக்கும்படியாகிய அண்டரண்ட சராசரத்துக்கும் தெய்வமாய் நின்றபரம்பொரு

ளாசென்றால் இரண்ணியேஸ்வரரொருவரேயன்றி வேறொருவருமில்லை, ஆதலால் இதைத்தெரிந்தவர்களுக்குந் தெரியாதவர்களுக்கும் இதோ சொல்லி பறையறைகிறேன் நன்றாய்க்கேளுங்கள் நெருப்பின் பேரில் எள்ளளவு சாம்பிராணி போட்டபோதிலும், இரண்ணியநமா வென்று போடுங்கள். சொற்க மத்திய பாதாளமென்கிற மூன்றுலோகத்திற்கும் இன்னம் விபரமாக சொல்லுகிறேன் கேளுங்கள் திரிலோகத்தார்களே.

பறையறையுந்-தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்.

சாற்றுகிறேன்பறை-நாற்றிசையிலும்நிறைசகலஜெனங்களறிய
சட்டமுடன்ட்டதிசை-யெட்டுதிக்குமொட்டுக்குநான் (சாற்று)
ஆற்றிமலர்சூடுஞ்சிவன் அரியயனுமொடுங்கி
அகிலமிரணியனார் வசமாச்சி இப்போ
நேற்றியதாயிப்புவியில் வாழும்பரிஜெனங்களே
நிருதாரசேயினிமேலாச்சி யென்றும்
பாத்திரமாகியதெய்வமவ ல்லாமலேவேறு
பாரிலெங்குங்கிடையாது பலமாச்சி இந்த
சூற்றிரமறிந்திரணிய னிணையடிகெதியென்றுத்
தோத்திரஞ்செய்துவாருங்கள் சொன்னேனென்மேல்பழியில்லை (சாற்று)
தேவர்முனிவர்கின்னரர் கெருடகாந்தர்வரே
செப்புகிறேனிப்பறையைத்திடமாக நீங்கள்
நாவினில்துதித்துக்கொண்டு நாதனிரண்ணியேஸ்வரனை
நாடிக்கொண்டாடுங்க ளுங்களிடமாக நன்றாய்
ஆவலுடனுங்களைவந்தாதரிக்குந்தெய்வமது
அதைவிடவுண்டோயிருப்பிடமாக இந்த
மூவுலகிலேயுமில்லை-முத்திக்கதுவேதான்முதல்
மூர்த்தியென்றுபோற்றிசெய்து - யேற்றிடுங்கள் நாற்றிசையில் (சாற்று)
சொற்கமத்தியபாதாளத்தில் வாழுந்திரிலோகத்தோரே
சூரனிரண்ணியேஸ்வரனே துரைசாமி இதை
தர்க்கமிட்டாலுங்கள்தலை தப்பாமல்துணிந்துகொல்வார்
சாற்றினேனிதைநன்றாகயிப் பூமிவாழும்
வர்க்கமெல்லாமவரிட வசமானபடியாலே
வணங்கிப்போற்றிவாருங்களினிநேமி தழை
பொர்க்கமலஞ்சூழ்கலவை-நற்கரிவரதனிட
பொன்னடி துதித்தாலுங்கள்சென்னியையுடைத்திடுவார் (சாற்)

பொது - வெண்பா.

மூவுலகமும்நடுங்க மூவர்களுமேயொடுங்க
தேவனிரணியனென்றே செப்பி - ஆவலுடன்
பறையனைந்துயினைவனிரு பாதம்தையேபணிந்து
குறையில்லையென்றே கூறுவான்.

வீரபாகு-இரணியனுக்குச்-சொல்-கவி.

ஐயனேதங்கள்கீர்த்தி அண்டரண்டங்களுக்கும்
ஐயனேகுறைவில்லாமல் அனுதினந்துதிப்பதாக
ஐயனேபறையறைந்து அகிலமுஞ்சுற்றிவந்தேன்
ஐயனேதங்கட்குநேர் யாரெதிரில்லையையா.

வசனம்.

தெண்டம் தெண்டம் சுவாமி, இந்ததிரிபுவனமுஞ்சுற்றி தேவர்களுக்கும்முனிவர்களுக்கும்-ரிஷிகளுக்கும்-தவக்கியானிகளுக்கும்-இன்னம் மற்றுமுண்டான பேர்களுக்கும், தங்களையே தெய்வநாயகனென்று துதிக்கும்படி பறையறைந்துவந்தேன், தங்களுக்கு இனி ஒப்பானபேர்களும், எதிரானபேர்களும், எங்குங்கிடையாது உங்கள் பிரதாபத்தின்பெருமை நானென்னென்று சொல்லப்போகிறேன் எங்கள் கர்த்தியமே.

இரணியன்-சொல்-வெண்பா.

பத்தியொடுயீரேழு பதினாலுலோகமுனீ
சுத்தியெனையேபுகழ்ந்துச் சொல்லி-வெற்றிபறை
யறையும்போதுந்தனைவந் தாராகிலும்மெதிர்த்துக்
குறைசெய்ததுண்டோ முன்கூறு.

வசனம்.

ஆஆ-அடா வீரபாகுவனே, நீபரிசுத்தமனதோடு இந்தஈரேழுபதினாலு லோகத்திற்குஞ் சென்று, எந்தனை தேவனென்று நீபறைவதைக்கேட்டு எவனுகிலும் தடுத்ததுண்டோ அதையொளியாமல் தெரியப்படுத்தும், வீரபாகுவனே.

வீரபாகு சொல்-வெண்பா.

ஆண்டவனேதங்களிரு வடியிணையேதஞ்சமென
நீண்டகடல்சூழ்புவியோர் நிச்சயமாய் - வேண்டிக்
கைதொழுதுமெய்வணங்கிக் காதலுடனுந்தனையே
தெய்வமெனச் செப்புகிறார்தான்.

வசனம்.

ஆளங்களகிலபுவனத்தரசாகியஆண்டவனே! இந்தசொற்கமத்திய பாதாளமென்று மூன்றுலோகத்திலும், தங்கள் பிரதாபத்தை யான் பறையறைகின்றகாலேயில் சுரர்தேவர்களிலாகிலும், அசுரர்இராக்கதர்களிலாகிலும், எவனும் பதில் வாய்திரக்கவில்லே தங்கள்கீர்த்திப் பிரதாபங்களைக் கேட்டவுடன் அவனவன் அடங்கி ஒடுங்கி நடுங்கி கெருடனைக்கண்ட சர்ப்பத்தைபோலே பதுங்கி வதங்கி ஒதிங்கினார்கள். வேறு நானென்ன சொல்லப்போகிறேன் தங்கள் பிரதாபகீர்த்திகளை சுவாமி.

இரணியன் சொல்-வெண்பா.

வாகாயென்க்குகந்து வந்தமைந்தமந்திரிகளே
சாகாவரம்பெற்றதா லல்லோ-லோகா
லோகமுழுதிற்கும் நானொருவனேதெய்வமதாய்
பாகமுடனானேன்பதி.

வசனம்.

ஆ எனது மந்திரிமார்களே, எனது பிரதாபத்தின் பெருமையை என்னென்று சொல்லுவேன் இவ்வுலகத்திற்கு யான்தெய்வமானதும் எனக்கு தகும்தியாகிய பூதபௌஷிய வர்த்தமானங்களை எந்தெந்த சமயத்திற்கு ஏதேதுகள் சொல்லவேண்டுமோ, அததுகளைச் சொல்லுந் திறமுடைய மந்திரிகள் எனக்கு வாய்த்ததும், எனது தவப்பெருமையேயாம், ஆதலால் இவ்வுலகத்தின்கண் வசிக்கும் சகலரும் அடங்கி ஒடுங்கினார்கள் மந்திரிமார்களே.

முதல் மந்திரி சொல்-வெண்பா.

பதியேயுன்பெருமைதனைப் பார்த்தல்லோவேர்த்தயர்ந்து
சதிசெய்மாயன்கடலிற்றொளித்தான்-கதியென்று
விதியும்மதியணிந்த வேணிமுதலோர்நடுங்க
எதிரியுனக் குலகில் ஏது.

வசனம்.

கேளும் எங்களாக்கிரம-வீரசூர-பராக்கிரம-வியாக்கிரம-துராக்கிரம-துரையே, தங்களுடைய சம்பூரண பிரதாபபெருமைகளைக் கண்டல்லோ அந்தஹரியென்னும் வெறிகொண்டமாயன் கருங்கடலிலொ

ளிக்கநேரிட்டது, அதுவுமன்றி விதியெனும் பிரமனும் தன்தரம் அடங்கித் தாழ்ந்தான், மதியெனும் சந்திரனை யணிந்தபரமசிவனும், ஒரு மார்க்கமாய் அடங்கினான் ஆகையால் இவ்வுலகத்திலுள்ள ஜனங்களடங்குவதரிதோ, கர்த்தீபமே.

இரணியன் சொல்-விருத்தம்.

நிறைந்தவென்கொலுவில்மேவும் நீதிமந்திரிகளேகேளீர்
பரம்பரயுலகிற்கெல்லாம் பகவானும்நானுமானேன்
திரமிகுமுனிவர்தேவதேவர்க்கும் தேவனானேன்
தரணியிலினிமேலென்னைச் சாதிப்பாரொருவரில்லை.

வசனம்.

ஆ-ஆ-ஆ-ஆ - ஓய்மந்திரிமார்களே, எல்லவரும் என்னருகில் வாருங்கள் இதைக்கேட்டீர்களா, என் பிரதாபமே பிரதாபம் இதை எவர்களால் சொல்வதற்கு முடியும், ஒருவராலும் முடியாதென்று எனக்குநன்றாய் தெரியவருகின்றது, இனியென்னை ஜெயிக்க ஒருவராலு முடியாது பாத்தீர்களா மந்திரிமார்களே.

இரணியன் புகழ்-தரு-இ-ம்-யமுனா

கல்யாணி-ஏகதாளம்.

இனியெனைஜெயிக்க-யெவர்தரம்பூசிக்கப்
பணிமதியணிந்த-பரன்மால்வேதனுலுமேலு (இனி)
அண்டர்முனிவர்சித்தர்-ஆகமயோகயுக்தர்
தெண்டனிட்டெந்தனையே-தினந்தொழுது போற்றியேற்றி ()
பரவுங்கடல்சூழும்-பாருலகினில்வாழும்
நரர்சுரருரகர்-கலங்கியேபலங்கலங்க (இனி)
பொரிமலரில்தாவும்-புகழ்கலைவமேவும்
கரிவரதனென்னுங் கபடனிப்போதுயேது. (இனி)

மந்திரி சொல்-விருத்தம்.

கதிரவன்யெதிரிற்சந்திரன் காந்திமுன்நிற்குமோதான்
எதிர்மகமேருக்கீடா யினியொருமலையுமுண்டோ



சதிர்பெருமுமக்கீடாக சமர்த்தர்யார்புவியுமடைடம்
துதிசெய்யத்தடையொன்றுண்டோ தூயனேதங்கள்முன்னே.

வசனம்.

கேளுமெங்கள் கர்த்தீபமே, இனியும்மைவெல்வதற்கு மும்மூர்த்திகளாலும் முடியாதே, ஆகலால் பாரிலுள்ள பரிஜெனங்களாலென்ன முடியும், சூரியப்ரகாசத்தின்முன்னே சந்திரனிடைய ஒளிபிரசிக்குமா, மேலும் எத்தனைமலைகள் கூடினபோதிலும் ஒருமகமேருவுக்கு ஈடாகுமா, அதுபோல் தங்களுக்குச்சமம்ஏதையென்று காண்பிக்கலாம் ஒன்றுமில்லையே, ஆதலால் தாங்களுக்குத் தாங்களே நிகரொன்று சொல்லவேண்டுமேதவிர வேறொன்றுங்கிடையாது, அப்படியிருக்க சகலமும் தங்களுக்கு அடக்கமென்பதற்கு தடையோ எங்கள் குலதெய்வமே.

இரணியன் சொல் விருத்தம்.

உள்ளதுநானினைத்தபடி சரியாய்ச்சொன்னீர்
உலகமதிலுங்களைப்போல் மந்திரியில்லை
வள்ளலெனுங்காசீப ரிடவமந்தில்
வந்துதித்துசகலமுமென் வசமாய்க்கொண்டேன்
தெள்ளுமெங்தனசுரர்கள்சூழ் கொலுவின்முன்னே
தேவரம்பையூர்வசி மேனகையையிப்போ
கள்ளமில்லாமலேநடனஞ் செய்வதாக
கடுகனவேவரச்செய்வீர் கருத்துள்ளோரே.

வசனம்.

ஓய் திரிகாலத்தின் செய்கைகளைத் தெரிந்துரைக்கின்ற மந்திரிமார்களே, என்னெண்ணப்படியே நீங்களுஞ் சொன்னீர் ரொம்பவுஞ் சந்தோஷப்பட்டேன் எனைப்போல் இவ்வுலகத்தில் இனியொருவன் ஜெனனமெடுக்கப்போகிறதேயில்லை, அது எனக்கு நன்றாய்த் தெரியவந்தது, நல்லதிருக்கட்டும் நமது நடனமாதர்களை வரவழையுங்கள் மந்திரிகளே.

மந்திரிகள்வசனம்.

அப்படியே தங்கள் சித்தப்படி வருகிறார்கள் சுவாமீ.



ரம்பைவருந் தரு-இ-ம்-உசேனி-ஏகதாளம்.

வாராரிதோ ரம்பைமாதர் வண்மையாகவே
வாசனிரண்ணியேசன்முன் பிரகாசமாகவே (வாரா)

தீரமாயுலகெங்கும்போற்றும் தேவன்காணவே
சித்திடையைக்கண்டமரர் நத்திவாடவே (வாரா)

கோகிலதொனியாகியகிளி கொஞ்சியமொழியார்
கோதையரிருவரும் விநோதமாகவே (வாரா)

சோதிமுநிவர்சோர்ந்திட வெழில்சுந்திரநடையார்
தெரிவையரிருவருமோருருவமாகவே (வாரா)

முத்திழைத்தரத்தினவா லாத்தியேந்தியே
முல்லைநகைவல்லியர்கள் கல்வியெனவே (வாரா)

நெத்திவிடுஞ்சாந்துங்கலவை நிகரிகென்னவே
நிருதன்முன்நடனஞ்செய்ய பரிதியொளிபோல் (வாரா)

ரம்பையர் இரணியனைப்புகழ்தல்.

தரு- இ - ம் - சுருட்டி - ஆதிதாளம்.

சீலாமேலாகிய பரிபாலா இந்த
ஜெகமதில்-புகழ்பெற-அகமகிழ்ந்-தருள்தருஞ் (சீலா)

ஆலாலமுமுண்டவகயன்மாலையும்
அலர்மலையலைதனிலோட்டி இந்த
அகிலமுழுதுஞ்செங்கோல்நாட்டி ஆளும்
அரசேயுனைப்போல்வெகுதாட்டி இங்கு
ஆரிருக்கின்றார்சொல்கைநீட்டி-மேட்டானமேட்டி (சீலா)

ககனவிபுதர்முனிவர்களனைவருமுந்தன்
கமலபதமேதுதித்தேற்ற கன
கருடர்மலர்மாரிபோல்தூற்ற திவ்விய
கவிஞர்பாசுரங்களைச்சாற்ற பெருங்
கடல்சூழ்புவியோர்தினம்போற்ற-நாற்றிசையேற்ற (சீலா)

வளம்பெருகியதிருகுளம்வயல்செறிகல
வையில்கரிவரதன்மேல்வாதி யுனைப்போல்
வான்புவியிலுண்டோபிரக்கியாதி யெங்கள்
வசுரர்குலதீபத்தின்சோதி மறைதனில்
வளரும்மாகமவேதநீதி-ஆதியாய்நின்ற (சீலா)

ரம்பை வசனம்.

பிரபுவந்தனம் நாங்கள் விடுதிக்குப்போய்வருகிறோம்.

—◦◦◊◦◦—



உ

கடவுள் துணை.

இரண்டாவது

# இரணியன் கொலு.

விநாயகர் விருத்தம்.

சீரணிப்பொருளுங்கல்விச் செல்வமுமளித்துக்காக்கும்
நீரணிக்கடவுளிந்த நிதிமதியுதையஞானப்
பூரணப்பதந்துலங்க பொற்சிலம்பசையயிந்தத்
தாரணிபுகழுமெங்கள் தந்திமாமுகன்வந்தாரே.

வசனம்.

கேளுங்கள் கனம்பொருந்திய மனந்தனையுடைய கனவான்களே சந்திரசேகர சடாமகுடதாரியாகிய சிவசாம்பவமூர்த்தியின் மூத்த குமாரனாகிய செல்வவிநாயகர் வருகின்ற விதங்காண்க.

விநாயகர் வருகிற

தரு-இ-ம்-கல்யாணி-ஆதிதாளம்

பல்லவி.

தாதா தயைபுரிந்தருள்தரவிதுசமயமே-வரந் (தாதா)

அநுபல்லவி.

வேதாதியர்தொழும்பிரக்யாதா கனவினோத
வெங்கயமுகவைங்கரவிநாயகமே
பொங்கமோடடியவர் புகழுந்தாயகமே (தாதா)

சரணங்கள்.

மாதாபிதாகுருதெய்வங்களுமெனக்குனைவிட-வே
ராதாரமேதகிலமதி லடியேன்றொழுதிட
சாதாரணமாயுன்பொற்-பாதாரவிந்தமதைச்
சதமெனத்துதிசெய்யுந் தனையனென்மீது
யிதயம்வைத்திடாதிருப்பதுவுந்தகாது (தாதா)

தேஜோன்மயமுடிவலங்கிர்தபரிபூரணு - திவ்ய
பாசாங்குசபஞுகிரணபவனி - வாரணு
வாசாவடைப்பாயாச-போஜா மஞ்ஞுளாக
வல்லபைதனைமருவியமனேகரனே
எல்லையெங்கணும்பணி யெழிற்பீதாம்பரனே (தாதா)

எங்குந்நிறையரல்பணைவயிலெழில்குயில்மயில்-கிளி
பொங்கும்பொழியருள் பெருகியதிருக்கலவையில்
தங்குஞ்சிவக்கொழுந்தே யிங்கோர்மனமகிழ்ந்தே
தருவாய்க்குமரசாமிதன்தமையா
பெருவாரிதிசூழ்ப்புவியிசீர்செம்மையா (தாதா)

சண்முகக்கடவுள் - துதி.

விருத்தம்.

தணிகையில்வளருமெங்கள் ஷண்முகக்கடவுள்செம்பொற்
றணிமலர்ப்பதந்துதித்துச் சாற்றுமிற்றமிழ்க்குநல்ல
தணிவொடுவாக்குங்கல்வி தந்தருள்மணியேமாமுத்
தணிகதிர்வடிவேலேந்துஞ் சரவணபவன்ருள்போற்றி.

தரு-இ-ம்-காபி-மீசுரதாளம்.

பல்லவி.

தணிகையில்வளர்ந்தோங்குஞ்-சண்முகதேவனே (தணி)

அநுபல்லவி.

பணிந்துன்பதம் போற்றி
துணிந்துமுரை சாற்றி ஐயா
பாலன்தினஞ்-சீலமொடு-ஞாலமேல்தொழுந் (தணி)

சரணங்கள்.

கேகயவாகனு கிருபைசெய்யுமோகனு இன்று
கேளும்முரைவந்து யெனை
யாளும்வரந்தந்து நல்ல
கருணைசெய்யதருணமிது ப்ரணவமேதிரு (தணி)

வெகுகோடிசூரரை - வேல்தனக்கேயிரை யாய்
வைத்தஞானவித்தே புகழ்
அத்திகிளேமுத்தே யுனை
வேண்டிவந்தேனுண்டருள்செய் தூண்டாதீபமே (தணி)

குலதெய்வமென்றுனை - கோரிவந்தேனெனை
கோதரகல்வி தாரும்
ஆதாரமதை கூறும் - தினம்
கோருங்குமாரசாமி குருவே தருவே (தணி)

காளியம்மன்பேரில்-தரு-இ-ம்-தோடி-சாப்புதாளம்

பல்லவி.

ஆதரியப்பிகைமனோன்மணி-யெங்க
ளாளி வாகினிபொற் ருளி மாகாளிவந் தாதரி (ஆத)

அநுபல்லவி.

சீதரிசெஞ்சடைமுடிவேணி-திவ்வியரசமொழிமதுரவாணி
மாதரிசூலிமாலிநவகோணி-மாந்தரிநித்தியமங்களகல்யாணி
மாசிலாமங்கையே-மாயவன்தங்கையே
நேசியென்சங்கையே-நீக்கிடும்நங்கையே (ஆதரி)

சரணங்கள்.

முத்துவைத்தமைத்தரத்தினக்கம்மல்வாளிநத்துபுலாக்கலங்காரி-சிவ
சத்திஜெகத்தில்மிகுத்தமகத்துவம்பெற்றப் பிரணவஓங்காரி கன
சித்தர்முனிவர்கள்நித்தியம்பணிபரமத்தைநாடியகௌமாரி பல
வெற்றிவேல்கத்திடால்பற்றிபயத்தைத்துரத்திய மகிடசம்மாரி
விண்ணவர் மண்ணவர்-வேண்டிடும் நாரணி
வேதசங்கீதவி-னோதசம் பூரணி
தண்மலர்ப்பாதச் சிலம்பணிதாரணி
தாசன்குமர -சாமித்தமிழ்க்காரணி
தந்திடுந் தேவியே-சர்வப்பிரதாபியே
சிந்தையில்மேவியே-செப்புநற்காவியே (ஆத)

பொது-விருத்தம்.

பரவியதிரைகடல்சூழ் புவியோர்த்தினம்
பணிந்திட தேவர்மாமுநிவர்
காமதைக்கூப்பிவந் தடிதனைத் தொழுதிடக்
கஞ்சன்மாலரனும்நெஞ்சொடுங்க
இரவிதன்னொளிபோல் ரத்தினமிழைத்த
வெழில்மணி மகுடமுஞ் சூட்டித்
திரமிகுமிரணிய சூரன்கொர்ச்சனையோடு
திகழ்பெருங் கொலுவில் வந்தனனே.

வசனம்.

அகோதெப்படியென்றால், கடல்சூழ்ந்த யீரேழு பதினாலு லோகாதிபர்களெல்லாம் போற்றவும், தேவர்-முநிவர்-யாவரும் கைகட்டிக்கொண்டு கிடுகிடுவென நடுநடுங்கி வணங்கியேற்றவும், கந்தர்வர் புஷ்பங்களை வாரி மாரிபோல் தூற்றவும், கஞ்சன்மாலரனும் நெஞ்சொடுங்கி பஞ்சுபோல் பரக்கவுஞ் செய்த இரணியேஸ்வரர் வருகின்றார் யாவரும் எச்சரிக்கையுடனே காண்க.



இரணியன்-வருகிற

தரு-இம்-கல்யாணி-ஆதி-சாபுதாளம்

பல்லவி.

தேவதேவனான தேவனெழிற்கனக
தேவனிரணியன் வந்தான்

அநுபல்லவி.

இந்த-திரிவுலகமுந்தானு மொருகுடையிலாள்ங்கானு
பாவநிரணியன்வந்தான்          கொலுவில்ங்கானு
பாவநிரணியன்வந்தான்          (தேவ)

சரணங்கள்.

மூவரானுஞ்சிவ்ன்மால் பூவனெனும்யாவரும்
ஏவல்செய்தனுதின மாவலொடுபணிய
முழுதுமென துகீர்த்தி          விளங்கிட
பழுதொன்றிலாதமூர்த்தி          யானே
முதலெனப்பதமதில்-சதமெனத்துதிசெய்யும்
விதமதை நிதந்தருந்-திதிசுதனெனவந்த          (தேவ)

தங்கமணிமகுடம் பொங்கமுடனணிந்து
சங்கையில்லாமலுல கெங்கும்புகழ்தணிந்து
செவியிற்குண்டலந்துலங்க புஜமதை
புவியிற்கண்டவர்கலங்க மார்பினில்
சிறப்பொடுபதக்கமும்-செருப்பெனதரிப்புகள்
இருபுரங்களுமணிந்-திரிபுவன்முந்துதி (தேவ)

ஆரவாரத்துடன்மல்லாரிபேரிபூரிகை
சாரியாகநின்றெங்கும் வாரிபோலேமுழங்க
அகிலம்கிடுகிடென்னவே வாள்கெதை
முகிலுள்வரும்போல்மின்னவே அமைச்சர்கள்
அருகினில்பெரிகிட-பரிகரிரதரொடு
திருவடிதனைத்தொழ-நிருதர்கள்குலஜெய (தேவ)

கருதுங்கல்வைக்கரி வரதனெனும்மாயனை
பரிதிமுன்பனியைப்போல் தரைமிசைச்செய்திடும்
பலத்தில்மிகுந்தசூரன் தைத்திய
குலத்திலதிகதீரன் எங்கும்
பரவியதிரைகடல்-நிரையுலகினையெலாம்
திரமொடுவருள்செயும்-பரமெனுமிரணிய (தேவ)

இரணியன் போற்றி-விருத்தம்.

திரைபெரும்பரவைசூழும் ஜெகமீரேழ்பதியில்வாழும்
மரைமுநிவர்கள்தேவர்க்கும் மாமுடிமன்னருக்குங்
குரைவிலாதெய்வமாகிக் கோதரவிளங்குமெந்தன்
திருமலர்தனக்கொப்பான திவ்வியபொற்பாதம்போற்றி.

முதல்மந்திரி போற்றி-விருத்தம்.

ககனமிப்புவிபாதாளம் கனதிரிலோகமெங்கும்
பகவனென்றெவரும்போற்றிப் பணிந்துகைகூப்பநான்கு
முகவனைநோக்கிவேண மூடிவிலாவரம்பெற்றோங்கி
அகம்கிழ்ந்தரசளிக்கு மையனேபோற்றிபோற்றி

உ-வது மந்திரி போற்றி விருத்தம்.

கருதுமிவ்வுலகீரேழுங் காதலோடரசளிக்கும்
நிருதர்களரசேயுந்த னிணையடிபோற்றி போற்றி
சுருதியின்மறையிற்றோன்றி துலங்கிடுமெங்கள்தேவ
இரணியேஸ்வரனேயுந்த னிணையடிபோற்றிபோற்றி.



தேசவிசாரணை.

இ-ன். மகிழ்பெருகுமெனதுதிரு கொலுமுகப்பினிலமிற்கும்
மந்திமார்களே கேளீர்

மு-மந்- மகுடவர்த்தனகிரீடேஸ்வர வெகுபராக்
மனமகிழ்ந் தேயுரைப்பீர்

இ-ன். மதிக்குமென்னீரேழு பதினாலுலோகத்து
மன்னர்வந்தார்களரபார்

உ-மந்- மாயனொருவன்றவிர மற்றபேரெல்லோரும்
மலர்க்கால்போற்றிநின்றார்

இ-ன்-இகழின்னம்காமிருந்தாலென்றுமாயவன்
இரந்தவன்போற்காணுது

மு-மந் - எப்படியோதெரியாது கபடநாடகசூத்திர
யீனனை நம்பொணுது

இ-ன். இந்திரனையிட்டசிறை கொட்டடிகளைக்கண்டு
யியல்பாக வந்தீர்களா

உ-மந் - இருப்புலக்கைக்கொண்டநேகராக்ஷதாங்
கிருக்கிருர் பார்த்துவந்தோம்

இ-ன். புகழ்பெருகுமென்றன் பிரதாபத்தைப்போலயிப்
பிரபஞ்சத்தி லொருவருண்டா

மு-மந் - வெகுகோடிக்ஷத்திரங் கூடினுமும்மொளிப்
பெருபதிக் கிணையாகுமா.

இ-ன். பிரியமொடுயெந்தனையே தெய்வமென்றெல்லோரும்
பிரார்த்தித்து வருகிருரா

உ-மந் - பிசகொன்றிலாமலே புவிமுழுதுமுந்தனைப்
பிரார்த்தித்து வருகுதையா

இ-ன். திகழுமொளிபெருகிவளர் நமதுகுலராக்ஷதர்
செழித்துமென் மேல்க்ஷேமமா

மு-மந் - தேவரீதங்களிட திருவருட்செயலினுல்
க்ஷேமமொடு வாழ்வுபெற்ருர்

இ-ன். திரிபுவனமதிலெனது பெருமையைக்கொண்டாடி.
செப்புதற்கெவர்கள் தரமோ

உ-மந் - சேடனுமிரனுவி நாலுமுறைசெய்திடத்
தெளிவுபோ தாதுதுரையே.

இரணியன் சொல்-தரு-இ-ம்-பியாக்-ரூபகதாளம்.

ல்லவி.

வாகன்கனயோகன்- வபோகன்-எனைப்போல்விவேகன்
வானவரிலுண்டோ ரிரதாபன்-எனக்கிணைசரிசமம்
வானவரிலுண்டோ பிரதாபன்.
வாகன்-கனயோகன்

அநுபல்லவி.

ஆகமமுதலாகினேன்சர்வ லோகமுமெனையேதொழுதிட
அதிபதியாகியக்ஷத்திரன் யெதிரொருவரிலாகாத்திரன் (வாக)

சரணங்கள்.

அண்டத்தமரர்களிருகரங் கொண்டுக்கொலுவினிலனைவருந்
தொண்டுச்செய்திடப்பெற்றஉத் தண்டன்னெனைப்போல்மணிபுய
திக்குத்திசையிலுமெனை ஜெயிக்கத்திரமில்லாமலேஹரி
வெட்கிக்கடலில்போய்விழ தக்கபடியேசெய்திடும் (வாக)
கருதும்கலவையில்வாழ்கரிவரத னென்றிடுஞ்சூதனை
துரிதமுடனேயவனிட சரிதம்பிரந்தரம்தெரிந்திடும் (வாக)

இரணியன் சொல்-விருத்தம்.

திடமுடன்மதியில்நன்றாய்ச் சிறந்தமந்திரிகளேகேளீர்
அடைவுடனெனைஜெயிக்க வாகாமலரிபயந்துக்
கடலிலேயொளித்துக்கொண்டான் கங்கையைத்தரித்தவேணிச்
சடையனைதுரத்தியிந்த ஜெகமுழுதுங்கைக்கொண்டேன்

வசனம்.

ஓய் சுகுர்தசுந்தர விநோதவிவேக ரஞ்சிதநயகுண மந்திரிகளே, அந்தஹரியென்பவனுக்கு பலமிருந்தால் எனக்கடங்கி ஒடுங்கி இடங்கிடையாமல் பெருங்கடலில்போயொளிப்பானு ஒளிக்கமாட்டான் தன்னிடத்தில் வீரமும்- சூரமும்- பலமும்-நலமும் - இல்லையென்று நன்றாய்த் தெரிந்துக்கொண்டேயொளித்தான் இனியவனுலொன்றுமுடியப்போகிறதில்லை, அதுநன்றாயெனக்குத் தெரியவந்தது மேலும்அந்தகெங்கையையணிந்த மங்கையோர்பாகனெனும் சங்கரனும் தலைக்காட்டாமல்மலைக்காட்டிற்போய் இலைகாய்களைத்தி மபலவிதமாயிரந்தவன்போல்காணுது, இனிசகலமும் நமதுவசமானபடியால் தேவர்கள் எனைப்பணியவும் ஏவல்கள் செய்யவும் பெருமை பெற்றேன் மந்திரிமார்களே.

முதல்மந்திரி சொல் விருத்தம்.

அண்டபிண்டங்களெல்லா மடக்கியோர்குடையிலாளும்
மண்டலேஸ்வரனேயும்மை மரித்திடவெவராலாகும்
தெண்டிரைக்கடல்சூழ்கின்ற திரிபுவனங்களேற்ற
சண்டப்ரசண்டமாக தனித்தினியரசாள்வாயே.

வசனம்.

கேளும் எங்கள் கனகதுரையே, இனியுமக்கு யென்னகுறைவு அண்டபிண்ட மெண்டிசையும், உமது வசமானது அதைமரிப்பதற்கு

ஆரால்முடியும், திரிபுவனமும் நீரே சுதந்தரமாய் ஆளும் அசுரர்குலத்தரசே.

நாரதர் வரும் பொது-விருத்தம்.

கடல்புடைசூழீரேழு பதினாலுலகங்களுங்
கரைந்து சோர்ந்துருகிக்
குடல்குழம்பிட வரசாக்ஷிசெய் திரணியன்
கொலுவில்வீற்றிருக்கும் நாளில்
தடமுடிபுனையுமிந்திர னிமையவர்முனித்
தபசிகள்கியானி மற்றுளர்தன்
இடர்தவிர்த்திட விதுததியெனநாரத
வெழில் முநிவந்தனர்பாரீர்.

வசனம்.

இவ்விதமாக கடல்சூழ்ந்த ஈரேழுபதினாலுலோகத்திலிருக்கின்ற சகலஜீவாத்மாக்களிட மனங்கலங்கிக் குடல் குழம்பி வாடும்படியாக அரசாக்ஷிசெய்து இரணியசூரன் கொலுவில் அதிகசந்தோஷத்துடனே வீற்றிருக்கின்றநாளில் நாரதமுநியானவர் இந்திரன்-யமன்-முநிவர்-முதல் யாவர்களின் இடர்களை நிவர்த்திக்க இதுதான் சமயமென்று தனக்குள்ளரிந்துகொண்டு இரணியன் நாரதர் கொலுவுக்கு வருகிறவிதங் காண்க.



நாரதர் வருகிற-தரு-இ-ம்-அடதாளம்.

பல்லவி.

நாரதமாமுநிநாதர்வந்தார்-நவிலும்பதமதில்விநோதர் - அன்பை
நாடிவீணையில்கூடி - பதமதைப்பாடி - நடனமும்ஆடி
புகழ்பெரும் (நார)

அநுபல்லவி.

சாரதவாணி சதுர்முகனும்மகிழ் - பூரணமான
புத்திரனென்றெங்கும் புகழ்
தானவர்குல மன்ன னிரணியன்
மேன்மையொடுகொலு வீற்றிருக்கையில் (நார)

சரணங்கள்.

தம்புருவீணையுங்கையிற்கொண்டு சகல
சாஸ்திரவேதகீதமுபவிண்டு கொண்டு
சம்பிரமோடுயாசிடர்-தனையனைக்கொண்டாடி
சாயுச்சியபதமென்னுஞ் சங்கீதங்களைப்பாடி
தருவுக்குரியசே ஞேர்கள்தவமினி
பெருகியோங்கிட பேசுங்குணகனி (நார)

முடியிற்சடையுங்குலுங்க காவிகாம்பிரம்
மேனியெங்கணு மிலங்க சொர்ன்னமதைப்போல்
அடியில்பாதக்குரடு அடைவுடனேயணிந்து
ஆத்மகருத்திலரி நாமத்தையேபணிந்து
அகிலபுவனமண்ட சராசரம்புகழும்
வேதபோதப் பராபர (நார)

செவியிற்குண்டலங்களும்மின்ன நாவில்மந்திரம்
ஜெபித்து முணமுணவென்ன திரு
புவியிற்புகழ்கலவை புரிசரிவாதனே
போற்றும்படிதாசர்க்குச் சாற்றுஞ்சமயத்தில்வஸ்
திரமதாயுரமதில்-முன்னூலுடன்
கரமதனிலாசனமான்தோலுடன் (நார)

நாரதர்-சொல்-விருத்தம்.

சூரர்தன்குலத்துமன்னன் துரைத்தனக்கொலுமுன்மேவும்
வீரரேநீங்கள்சென்று வேந்தனுரிடத்தில்நன்றாய்
சாரமாயுமைக்கொண்டாடி சகலருமறியவிங்கு
நாரதர்வந்தாரென்று நலமுடனுரைசெய்வீரே

வசனம்.

கேளுங்கள் சூரர்குலதுரையாகிய, இரணியேஸ்வரரே கொலு வலங்கரிக்கின்ற வீரர்களே, நீங்கள் அதிகதுரையாகச் சென்று உங்க

ள்வேந்தனுக்கு நாரதமகாமுனியானவர் உம்மைப் புகழ்ந்து கொண்டாடிக்கொண்டு வந்திருக்கிறரென்று அறிக்கைசெய்து வாருங்களப்பா வீரர்களே.

வீரர்-சொல்-விருத்தம்.

கனிவுடனுலகையாளுங் கர்த்தனேபோற்றிதங்கள்
தனிமுதற்கொலுவின்முன்னே சங்கீதமொடுதம்பூருந்
தொனியொடுநடனஞ்செய்து துரிதமாய்நாரதமா
முனிவந்தாரிதையுமக்கு மொழிந்திடவந்தோமையா

வசனம்.

கேளுங் தைத்தியகுலேந்திரரே, நமது சபாமண்டபத்தின்முன்பாக நாரதமகாமுனியானவர் தங்களைக் காணவேணுமென்று உம்மைநாடி, மேலானபதங்களைப்பாடி வந்திருக்கின்றார், இதை தங்களுக்கு அறிவிக்கவந்தோம் கனகதுரையே.

இரணியன்-சொல்-வெண்பா.

பரிந்துமிகயேவல்கள்செய் படைத்தலைவவீரர்களே
நிரைந்தமரர்சூழ்கொலுமுன் நாரதனைச்-செரிந்து
வரச்சொல்லிரோந்தன்முன் வையகத்தோர்மொழியுந்
தரத்தையவனு லறியத்தான்.

வசனம்.

ஆ-ஆ-வாரும் வீரரே, இந்தயீரேழு பதினாலுலோகங்களையும் பிரதிதினமும் சஞ்சரிக்கின்றவன், அவனுக்கு திரிபுவனத்தில் நடக்கின்ற சங்கதிகளெல்லாம் நன்றாய்த்தெரியும் ஆகலால் அவனால் சிலசங்கதிகள் தெரியவேண்டும், என்னருகில் வரச்சொல்லும் வீரரே.

வீரர்சொல்-துண்டு-கவி.

சீரதாய்புகழும் நாரதமுனியே
சேரதாயுமைவரத்தீரனர்சொன்னர்.

நாரதர்சொல்-வாழிவிருத்தம்.

மகுடவர்த்தனர்கனக வசுரர்குலசேகரா
மகிபனே மாதவத்தரசே
விகடஞ்செய்திடும்மாயனைப் புவியினிலில்லாம
விறந்திட வறைந்ததுரையே

அகடசாத்திரசுருதி கட்குமேலானகன
வற்புதமென் றெங்குமுனையே
புகடவும்வலுமைகள் பெற்றிடுமிரணிய
பூபனேவாழி மென்மேலும்.

வசனம்.

மகுடவர்த்தன கிரீடாதிபதியாய் விளங்காநின்ற பிரபுவே, உங்கள் தம்பியைக்கொன்ற, மாயனை எங்குமில்லாமல் செய்துவிட்டீர் எப்போ அவன்சங்கதி யெங்குமில்லையோ அப்பவே இறந்துவிட்டானென்று இந்ததிரிபுவனமும் முறையிடுகின்றது, மேலும்உன் ஆகம வேதங்ளெல்லாம், தங்கள்முன்னில்லாமல் இப்போது எந்தநூல்களைப்பார்க்கினும் தங்கள்பிரதாபமேமேன்மையாய் விளங்குகின்றது ஆதலால் உம்மைவிட தெய்வம்வேருண்டென்று சொல்வதற்கு ஞாயமுண்டா தேவனே, இன்னமும் மென்மேலாக வாழக்கடவாய் கனகதுரையே.

இரணியன் சொல்-விருத்தம்.

வாரும்வோய்நாரதாவுன்வார்த்தைக்கிமெச்சினேன்யான்
சீருடனுலகிலென்னை தொழுதுமேவருகின்றாரா
வேறொருவனைக்குறித்து விரும்பமாய்ப்பணிகின்றாரா
நேரதாயினைதனன்றாக நீயறிந்ததைச்சொல்வாயே.

வசனம்.

கேளும்ஓய்நாரதரே,இப்போநீர் சொன்னவார்த்தைசரிதான்நன்றாய்சச்சொன்னீர்பலே என்மனம், ஆனந்த பரவசமடைந்தது குறைவில்லை, இந்ததிரிலோகமும் நீர் சஞ்சரிக்கின்றபடியால் உமக்கு யெல்லாசங்கதிகளுந் தெரியுமல்லவா, ஆதலால் இந்த சர்வஜெகமுழுதும் எனைப்புகழ்ந்து, மகிழ்ந்து போற்றிவருகிறார்களா அல்லதுவேறொருவனையாவது, துதிக்கின்றார்களா அதையொளியாமல் எனக்கு தெரியச்சொன்னீரானால் உம்முடைய நிலையும், கியானமும், அதில் அறிந்துகொள்ளுகிறேன், ஆதலால் எள்ளுக்காய் பிளந்த பாவனைபோல் என் சபாமண்டப கொலுமுகப்பில் என்மந்திரிமார்கள்சந்தோஷிக்கும்படி தேவர் முனிவர் முகம்வாடி நாடியோடும்படி சொல்லும்ஓய்நாரதரே.

நாரதர் சொல்-விருத்தம்.

தேவாவுந்தனையேயிந்தத் திரிலோகத்தினில்வாழ்கின்ற
ஜீவாத்மாக்களுந்துதிக்கச் செவிதனில்கேட்டதுண்டு

நாவால்வேறொருவர்தம்மை நவிலவும்ரியேன்மகானு
பாவாநக்ஷத்திரமெல்லாம் பெருமதிக்கெதிர்நிற்காதே

வசனம்.

கேளும் சகலலோக சம்பன்னராகிய மஹாப்பிரபுவே தாங்களென்ன இப்படி கேழ்க்கின்றீரோ இந்ததிரிலோகத்தில் வாசம்பொருந்திய நான்குவகையோனி எழுவகை தோற்றம் எரும்புக்கடை எண்பத்திநான்கு சீவாத்மகோடிகளும், தங்கள் திருவடி பொற்பாதத்தின் பிரதாபத்தைக் கொண்டாடுகிறதும், போற்றுகிறதும் ஏற்றுகிறதும், புஷ்பங்களைச் சாற்றுகிறதும், அல்லும் பகலும் அருபது நாழிகையிலும், எமத்திலும் ஜாமத்திலும் இடைவிடாமல் இரணியநாமசங்கீர்த்தனைகளை பஜித்துக்கொண்டு வருகின்றார்களேயல்லது, உம்மைவிட வேறொருவன் யிருக்கிறானென்றெவராகிலும் சொல்ல நான்கேட்டதில்லையே, எங்காகிலுமுண்டா உம்முடைய திருநாம மந்திரத்தைத் துதிக்காதவன் பிராணனை வைத்துக்கொண்டு இந்த பூமியிலிருப்பானு நன்றாயிருக்கின்றது தாங்கள் கேட்டது, ஆஆஆ-நானெப்படி சொல்வேன் கோடானகோடி நக்ஷத்திரங் கூடினபோதிலும் ஒருசந்திரனுக்கு யெதிர்நிற்குமா, அதுபோல் தங்களைவிட வேறொருவரை சொல்லமுடியுமா தேவனே.

இரணியன் சொல்-வெண்பா.

சரியிதுநன்றாய்ச்சொன்னீர் சந்தோஷமிகவுங்கொண்டேன்
அரிவிலுயர்நாரதரே யருகில்வா - பரிவுடனே
வேதாகமங்கள்மறை விளங்கிடுமச்சங்கதியி
லேதாவதுண்டோ யினி,

வசனம்.

ஓய் நாரதரே ! இப்போதுதான் உன்ஞாயத்தை நன்றாய்த்தெரியலாயினேன், சபாஷ் மெத்தவும் யோக்கியன் வேதநூல்களின் விபரங்களில் ஏதாவது ஞாயமிருந்தால் சொல்லும் முநிவரே.

நாரதர் சொல்-வெண்பா.

பொங்கமுடனுலகாண்டு புகழுமிரண்ணியேஸ்வரனே
தங்களறியாச்சேதி தானுண்டோ-எங்கும்
மதிக்கும்படியுமக்கு வந்துதித்தமைந்தனுக்கித்
தகிக்கிவயதெவ்வளவு தான்.

வசனம்.

கேளும் கொடிபெற்றோங்கிய மகுடமுடி சூடிய துரையே, தாங்க ளரியாச்சங்கதி யென்னவிருக்கின்றதுவொன்றுமில்லையேபிரபு, நான் இன்னம் என்னசொல்லப்போகிறேன், ஆம்ஆம் ஒருசங்கதி அது யெ ன்னவென்றால் உம்து கெற்பத்தி லுற்பத்தியாகிய சத்புத்திரனுக்கு வயது யென்ன எனக்குக் கேழ்வியில்லை, அதை தங்களால்தெரிந்துக் கொள்ளவேண்டுமென்று கியாபகமிருந்தது, ஆகையால் தயவுசெய்து வயதைச் சொன்னால் மெத்த நன்றாயிருக்கும் பிரபூ.

இரணியன் சொல்-வெண்பா.

ஜெயம்பெருகுமென்கொலுமுன் சித்தமிகவேகளித்து
நயமுரைசெய்நாரதரே நன்றாய்க்கேள்-இயம்புகிறேன்
இந்துவதனத்தொளிசெ ரெழில்பெருமென்மைந்தனுக்கு
ஐந்துவயதென்றே யறி.

வசனம்.

ஓய் நாரதரோ ! நல்ல ஞாயம் கேட்டீர், என் குலபுத்திரனான குழந்தையின் வயது உனக்குத் தெரியவேண்டுமோ சந்தோஷம். இதோ சொல்லுகிறேன் கேளும் ஐந்துவயதுதானாச்சுது, இன்னம் குழந்தைப்பருவமாக யிருக்கின்றான் நாரதரே.

நாரதர் சொல்-தரு.-மத்யமாவதி-அடதாளம்

தருணமிரணியபூபனே தனயனுக்கு
சகலர்புகழ்வைபோகனே ஜெயித்த
அருணனுலவுமீரே ழுகிலமெல்லாங்கைக்கொண்ட
கருணாகரனேயுன்றன் கண்மணிபிரகலாதனுக்கு
கணிதநூல்வே தாகமங்களை
கண்டுகொண்டிட மண்டலந்தனில் (தருண)

பருவமதில்பயிர்செய்வதுபோல- மகிழ்ந்தளித்த
சிறுவர்தனக்கைந்து வயதுள்ளபால பிராயமதில்
படித்திடுங்கலைசாத்திரமும் பெரும்
பாறையெழுத்ததைப் போலேநின்றிடும்
தடித்துமுதிர்ந்தபின் னெடுத்தநூல்நீர்தனி
லெழுதுமெழுத் ததைப்போலாகிடும் (தரு)

மரீசிரிஷிகோத்திரமுல்லாசமாய் விளங் கவந்த
துரையேயுன்சேயனைப்பிரகாசமாய்கல்வியில்நன்றாய்
வரிசையுடனறிவிப்ப துலகினல
வழங்குந்தந்தையின்கடமை யென்றல்லோ
உரைசெய்கின்றதுவேதமுதலிலே
உண்மையாய்கண்மணிக்கிதுநல்ல (தரு)

செல்வமதைவிட கல்வியேமிகுதி யாகவரிந்தால்
நல்லவழிகளைக்காணவுந்தகுதி இதைநன்றாக
வல்லவாகேளுங் கலவையினில்
வாழும்நற்கரிவரதன் பகைதனை
வெல்ல மனதினில் விருதுகூரிய
வித்தகா புத்திரனுக்கிது (தரு)

வசனம்.

கேளும் இரணணியபூபாலகரே, உமது குழந்தைக்கி இதுவே கல்விக்கி நல்லததி பள்ளிக்குவைத்து படிப்பிக்கிற ஞாயத்தைபாரும் நானவருகிறேன் பிரபூ.

இரணியன்-சொல்-விருத்தம்.

ஆமிதுமெய்தான்மந்திரி யதற்குதிட்டாந்திரம்நானே
பூமியிலளவில்லாத பெருத்திடுங்கல்விதன்னை
காமினியரிந்ததாலே நடுங்கியேயொளித்தான்மாயன்
நேமிநாரதந்தான்சொல்லும் நீதிக்கோர்பிசகுமில்லை

வசனம்.

ஆ-ஆ-கேட்டீர்களா மந்திரிமார்களே, இப்போது நாரதன் சொன்னஞாயம், சரி அதுஎப்படியென்றால்நான் கல்வியில் சிறந்தவனுன படியாலல்லோ, எனக்குயாவும் அடங்கியதுமன்றி மாயன் காயத்தை தப்பித்துக்கொண்டு திருடனைப்போலொளிக்க நேரிட்டது,அவனும் சிறுபோதில் எனைப்போல் நூல்விசாரணை செய்திருந்தால் கொஞ்சத்திற்கு கொஞ்சமாவது, புத்தியுடையவனாக யிருப்பான் அதில்லாமல் போனபடியால்தான் அந்தகெதி அவன் அனுபவிக்கநேரிட்டது, ஆதலால் கல்விதான் பிரதானம் மந்திரிகளே.

முதல் மந்திரி சொல்-விருத்தம்.

உனக்குமுன்கேளீரிந்த-வுயர்கல்வியிருக்குமென்று
நினைக்கிலேன்கிஞ்சித்மாத்திரம் நிலத்தில்வாழ்யாவருக்கும்

தனக்குமேயிருக்குமாகில் சாதிக்குந்திரமையுண்டு
கனக்குமேலைகைபுண்ணுக்கு கண்ணாடிவேணுமோதான்

வசனம்.

கேளும் கர்த்தீபமே, உமக்குமுன் இப்பேர்ப்பட்ட கல்வியின்திரம் மிருக்குமென்று என்புத்தியிற் படவேயில்லை, ஏனென்றால் இவ்வுலகத்தில் எவனாகிலும், தெரிந்திருக்கமாட்டானா இல்லை எல்லாம் உம்முடைய கிருபையினா லுண்டானதாக நான் பூரணமாக நினைக்கின்றேன், கைபுண்ணுக்கு கண்ணாடி வேண்டுமோ அதுபோல் எல்லாந் தங்கள் திருவுளத்தின் செயலேயன்றி வேறில்லை, துரையே.

இரணியன் சொல்-விருத்தம்.

தானவர்குலக்தழைக்கத்தனித்து வந்தெனக்குற்பித்த
பானுதயம்போல்மின்னும் பிரகலாதன்தனக்கிப்போது
ஞானமும்கல்விநூலும் நற்பொருளோதிவைக்க
நானிதையோசிக்கின்றேன் நவிலுவீரமைச்சமாரே

வசனம்.

ஆ என் அருமைமந்திரிமார்களே, என்புத்திரனாகிய பிரகலாதனுக்கு கல்வியோதிவைக்க, அநேக நூல்களை யோதிவைப்பதற்கு இதுதான்தறி, உங்கள் கனம்பொருத்திய மனதிற்கு எப்படியிருக்கின்றது சொல்லுங்கள் மந்திரிகளே.

உ-வது மந்திரிசொல்-விருத்தம்.

பெருத்திடுமுலகேழும் போற்றிடுமாசேகேளீர்
குரித்திடும்மூங்கில்கிள்ளைகோதையர்சிறுவர்பொன்னைப்
பரித்திடுந்தாசிஐந்தும் ப க்குவயிளமைதன்னில்
திரித்திடில்சென்றுலெங்கும் சிறப்புள்ளமேன்மையாகும்

வசனம்.

கேளுமெங்கள் கனகதுரையே, இப்போது தாங்கள்செய்த யோசனை வெகுநன்றாயிருக்கின்றது, இதுதான்ஞாயம் எங்களுக்கும் தீரமாகவேயிருக்கின்றது, தாங்கள் சொன்னதற்கு திட்டாந்திரம்பாருங்கள் மூங்கில்-கிளி- பெண்கள்-சிறுவர்-தாசி • இவை ஐந்தும் இளமையில் திருத்தினதேயாமாகில் அதுகள்சென்ற இடங்களெல்லாம்மேன்மையாகிய சிறப்புகளை யடைகின்றதுமன்றி, அவர்களைச் சார்ந்தவர்களுக்கும் கீர்த்தி யுண்டாகின்றதென்று நூல்களில் முறையிடுகின்றது

ஆதலால் தங்கள்புத்திரனுக்கு ஐந்துவயதானபடியால் இதுதான்தகு முன்கல்வியில் வைக்கின்றதைப்பாரும் துரையே.

முதல்-மந்திரிசொல்-வெண்பா.

கல்வியேயாவருக்குங் கனமானமேன்மைதருங்
கல்வியேயாவருக்குங் கைபொருளாங்-கல்வியே
கற்றோர்பொருளுரைக்கிற் கைக்கொள்வர்மேலோர்கள்
மற்றோர்சொற் கேளார்மகிழ்ந்து,

வசனம்.

கேளுமெங்கள் அற்புத விற்பன் கற்பகமாகிய அசுரர்குலமணித் தீபமே, இதுநல்லபருவம்உமதுபுத்திரனுக்குஇதுதப்பிவிட்டால் அதிகபிரயாசம், ஆதலால் கல்விக்குமிஞ்சினபொருள் வேறொன்றுமில்லை கல்விதான் மேன்மையான கீர்த்தியும்-செல்வமும்-பொருளும்-அருளும்-நீதியும்-வண்மையுந்-தண்மையும்-குணமும்-மணமும்-சென்றவிடங்களில் சிநேகிதனைப்போல் காப்பதுங்கைசோரவிடாமல்குறைகளைத் தீர்ப்பதும், மேலானபதங்களில் சேர்ப்பதும் கல்வியேயல்லால் வேறொன்றுமில்லை, ஆதலால் தங்கள் நல்லகாலத்தின் மகிமையால் நாரதன் வந்து குழந்தையின் வயதைக்கேட்டான் இல்லாவிட்டால் நாமதை கவனிக்கப்போகிறதில்லை, இருக்கட்டும் சீக்கிரமாய் பிள்ளையை பள்ளியில்வை உ யுமையனே.

இரணியன்-சொல்-விருத்தம்.

மேன்மைபெரு மென்கொலுமுன்வீற்றிருக்கும்
விகிதநயராஜிதமந்திரி விருப்பமாய்க்கேள்
நான்மகிழ்ந்துயீன்றளித்த மைந்தனுக்கு
நலமுடையவயதைந்து யாகையாலே
தேன்மொழியாளென்மனைவி லீலாதேவி
தனக்குரைத்து யிம்மொழியை ஐலுதியாக
மான்விழிபோலுடையமடமாதர்சூழ
மற்புதமாயிக்கொலுமுன்வரச்செய்வீரோ.

வசனம்.

கேளுங்கள் மந்திரிமார்களே, என்குமாரனாகிய பிரகலாதனுக்குக் கல்வியின் திறங்களை யறிவிக்கவேண்டும், என் மனைவியாகிய லீலாவதியை அதிசீக்கிரத்தில் வரவழையுங்கள் மந்திரிமார்களே.

வீலாவதியம்மன் வரும்-பொது- விருத்தம்.

மதிமுகங்கரொளியெனுங்கனமிலகியகதிர்நவமணிபூண்டு
சுதியொடுமெத்தளதாளமுழங்கிட சுந்தரரஞ்சிதமால்
பதியெனுமிந்திரை ரதியிருவர்கள் துதிபங்கயமலர்க்கரத்தாள்
அதிபனென்றிடுமிரணியன் சதிலீலாவதிகொலுவந்தனளே

வசனம்.

இவ்விதமாக ஜெகதலப்பிரதாபராகிய இரணியேஸ்வரருடைய சதியாகிய லீலாவதியம்மனானவள் சந்திரனைப் பழிக்கின்ற முகமும் கதிர்கிரணங்களைப்போல் ஜொலிக்காநின்ற நவரத்தினங்களை யிழைத்த திவ்விய திருவாபரணங்களை யலங்கரித்துக்கொண்டு இந்திரை லட்சுமியும, ரதிமதன் தேவியும் கண்டு நாணங்கொண்டு வெழ்க்கும் படியாகிய அழகினை யுடையவளானவள் அநேக தோழிமார்கள் புடைசூழத்தக்கதாக வருகின்றவிதங் காண்க.



லீலாவதி வருகிற
தரு-இ-ம்-கல்லியாணி-ஆதிசாபுதாளம்
பல்லவி.

மதிமுகங்கரொளிமிகு நயகுணலீலா
வதிவந்தாளிதோபாரீர் (மதி)

அநுபல்லவி.

கதிருதயம்போல்மணி கனகாபரணந் தங்கக்
கையில்வங்கிதோடாவுங் கங்கணமு மிலங்க
யெதிரில்லாமலீரேழு லோகம் நடுநடுங்க
யாளுமிரணியன்யெங் காளும்மன மிலங்க
இமையமயமங்கைக ளிருபுரமுங்கவரி வீச
உம்மகளுங்கலங்கியோடிபதங்கள் பேச (மதி)

சரணங்கள்.

நீரமுகிலளகம் நுதற்புருவமிளம்பிறையதினுருவம்
சேலைப்பழிக்கும்காள்கலைவிழியுருவம் யெள்ளிளம்பூபோல்
களிக்கும்நாசியின்பருவம் - நிருதர்தங்கள்
தேன்மொழிவாயிதழ் செங்கனிகளையேயழிக்கும்
திரண்டமுத்துக்குநிகர் தந்தமென்மேற்செழிக்கும்
நானிலத்திற்குயில்கள் நாடிவந்தேவிழிக்கும்
நங்கைவதனத்தைக்கண்டேங்கி மதிமுழிக்கும்
தங்கநிரத்தை யுரைத்திடலாமெய்
தாமரைபூமலர் போல்செழுமேகை
கொங்கைதனங்க ளிரண்டுமெனவி
சூலகிரிமலைகளேயே நகையேசெய்
சாலவுமேல்வய ராலிலையென்னத்
தங்கிடுநாபியும் பூமலரொன்னச்
சேலையின்காந்திக ளும்புவிமின்னச்
சிங்கமருங்கெள வேயினிபன்னப்
பிடியிடை நடுவினில் கடிதடம்துபணி படமதையே வெல்லும்
இரு-துடைகளுங்கதலிதண் டடிகளைப்போலவே
படிமீதிலேசொல்லும்-திவ்விய-நடமிடுங்கணுக்காலிளஞ்சினை
விரால்களை தன்னைபழிக்கு மிகவன்னநடையழகி
தண்டைசிலம்புகெச்சை-தாள்கலகலவென்ன
தடவுஞ்சாந்துங் கலவையுங் குமுகுமுவென்ன
செண்டுபூமலரை கொண்டுதோழிபின்ன
தேடிக்கல்யாணிராகம்பாடி இரணியன்முன்னே (மதி)

தோழிகள் சொல்-விருத்தம்.

தங்கமாமகுடஞ்சூட்டித் தரணியிப்புவியீரேழும்
பொங்கமோடரசளிக்கும் புவனகர்த்தீபருன்னை
சிங்கபல்லக்கிலேறி சீக்கிரமாய்வரச்சொன்னாரம்
யெங்கள்நாயகமேயிப்போ யெழுந்திரு[illegible]





வசனம்.

இன்பரசக்கியமொழிகளை வசனிக்கா நின்ற லீலாவதி யென்னும் அம்மணீ, எங்கள் தாயகமாகிய நாயகமே வந்தனம். தங்கள் கருத்து க்கிசைந்த கணவராகிய இரணியேஸ்வரர் தங்களிடத்தில் ஏதோ சிலசங்கதி வேடிக்கையாய்ப் பேசவேண்டி தங்கமுகசிவிகையின்மீது மங்களகரமாக எங்களோடு உங்களை வரச்சொன்னதாக சில மந்திரி கள் வந்து சொன்னார்கள் நாம் போய்வருவோம் வாரும்மாதாயே

லீலாவதி சொல்-விருத்தம்.

மதியினில்மிருந்ததாதிமார்களே சொல்லக்கேளீர்
அதிபனுறொனதுமன்ன ரழைத்திடுஞ்சேதிதன்னை
யெதிரினிற்சென்றுநாமு மிம்மொழியரியவேண்டும்
சதிருடன்கூடிக்கொண்டு சம்பிரமாய்ப்போவோம்வாரீர்

வசனம்.

ஆ என்சகிகளே! அப்படியா என்நாயகர் வரவழைத்தால் நாம் போவதற்குத் தடையென்ன மெத்தவும் சந்தோஷமாகப் போகலா மம்மா.

தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

பல்லவி.

நிதிலீலாவதிவந்தாளிதோ பாரீர்
வேடிக்கையாக (நிதி)

அநுபல்லவி.

அதிபதியிரணியன் சதியிவளெனதிரு ரதியிருவர்கள்துதி
மதிமுகவதிசய (நிதி)

சரணங்கள்.

கொண்டலளகஞ்சேல் கெண்டையிவள்தன்விழி
தொண்டகனியிதழ்வாய்தண்டைச் சிலம்புகொஞ்ச (நிதி)
மின்னலிடையைவெல்லுங்கன்னல்மொழியைச்சொல்லும்
சொர்ன்னமேனியுடையா ளன்னநடைநடந்து (நிதி)
கொங்கைக்குடங்குலுங்க தங்கப்பணியிலங்க
சிங்கத்திடையிலங்க மங்கைகுலந்துலங்க (நிதி)

குங்குமமஞ்சள்கஸ்தூரி குமகுமென்றெங்கும்வீச
தங்குஞ்சாந்துங்கலவை சரமலரைக்கோதியே (நிஜ)

லீலாவதி போற்றிவிருத்தம்.

மேட்டியாயுலகேழும் மேன்மையாயரசளிக்கத்
தாட்டிகவலுமைபெற்ற தாள்களுக்கடியாள்போற்றி
பாட்டிமிலுயர்பெற்றோங்கும் பரிவுடனெனக்குமாலை
சூட்டியபிராணநாதா திருவடிபோற்றிபோற்றி

வசனம்.

மேட்டானமேட்டிகளை யெல்லாம் ஜெயித்து, யீரேழுபதினாலு லோகங்களுக்கெல்லாம் கர்த்தீபமாக விளங்கும்பொற்பாதங்களுக்கு அடியாள் வந்தனம் வந்தனம் என்நாயகரே.

இரணியன் சொல்-விருத்தம்.

மலர்க்கரங்களைக்குவித்து மகிழ்ந்துவென்றனைத்துதித்து
நிலைபொரத்தொழுதுநிற்கும் நிதிலீலாவதியேவாழி
சிலைநுதல்விழியினாளே செல்வமென்மேலும்பெற்று
அலைகடலுலகிலேநீ யனுதினம்வாழிவாழி.

வசனம்.

திவ்விய மங்கள மாணிக்கப் பிரதமைபோல் விளங்காநின்ற என் கண்ணே, ஆஆ-பொற்றாமரை மலர்போன்ற கரங்களைக்குவித்து என் திருவடிகளைப் போற்றிய பெண்ணரசே, நீ எப்போதைக்குமியாதொரு ன்றும் குறைவில்லாமல் அதிக செல்வங்களைப் பெற்று மென்மேலும் சிரஞ்சீவியாகெ வாழக்கடவாய் எழுந்திரும் பெண்ணே லீலாவதீ.

லீலாவதி சொல் - விருத்தம்.

ஜெகம்புகழ்மகிபரேயுன் திருவடிக்கடியாள்போற்றி
ககனதேவர்கள்சூழ்கின்ற கனமிகுகொலுவிலென்னை
அகமகிழ்வாகநீர்தா னழைத்திட்டசேதிதன்னைப்
பகருவீரெனக்கிப்போது பிராணநாயகரேயென்றாய்

வசனம்.

கேளும் எனைக்காதலுடனே யாளும் பிராணநாதரே வந்தனம். அடியாள் தங்களை ஒரு மநுகேட்கிறேன், அது யாதெனில் தேவர் - முனிவர்கல சசமஸ்தர்களும் பிரதிதினமும் இடைவிடாமல் போற்

திப்புகழும் சபாவலங்காரக் கொலுமண்டபத்திற்கு, அடியாளை வரவழைத்த ஞாயங்களை தயவுசெய்து சொல்லவேண்டும் சுவாமீ.

இரணியன் சொல்-விருத்தம்.

சித்திரப்பிரதிமையெல்லாந் திகைத்துமோணங்கொள்ள
வத்திசையுடைய லீலாவதியேநாமீன்றளித்த
புத்திரன்றனக்குக்கல்வி போதிக்கவேண்டுமென்றே
உத்தமியேயழைத்தே னுனக்குச்சம்மதமாபெண்ணே.

வசனம்.

சித்திரத்திலெழுதிய சிங்காரப் பிரதமைகளெல்லாம் உன்னைக் கண்டு தன்னைத்தானே மரந்து வாய்திரவாமல் வெழ்க்கமடைந்து விடும்படியாகிய அழகினையுடைய தேன்மொழிமயிலே உன்னை யான் வரவழைத்த வி ரம்யாதெனில், நமது அருமைச் சிவனுக்குப் பருவகாலம்மனதிறை பெருமை பெருகிய கல்வியைக் கற்பிக்கவேண்டுமென்று என் கருத்தில் சம்பூரணமாக விருக்கின்றது, ஆதலால்உனை வரவழைத்தேன் உன்மனதிற்குச் சம்மதமா பெண்ணே.

இரணியன் சொல்-தரு-இ-ம்-பேகடை-ரூபகம்.

பல்லவி.

மனதுக்குச்சம்மதமாபெண்ணே (மன)

அநுபல்லவி.

மானேகல்வியும்பன்னிட-கானேசொல்வதுமுன்னிட (மன)

சரணங்கள்.

கனந்தருங்கோகிலமொழி யாளே நற்
அச்சையணியுங்கலைமரன்விழி யாளே
தனகோடிபிடியிடை நடை யாளே
தனயனுக்குத்ததியென்மனே யாளே
சரசக்கிளியேபெண்ணே-யுரைசெய்தெளிவாய்கண்ணே (மன)

சரணங்கள்.

மைந்தருக்கைகந்துவயதினில் மதியே
யறிவிப்பதுதந்தைகடன் நீதியே
சுந்தரியேகேளடிபெந்தன் சதியே
துரிதமோடிப்போதேலீலா வதியே
துரயாய்கல்வியில்வைக்கவும்-நிரவாய்மெல்லியேயிப்பவும் (மன

நிலையாசிறுபோதுணர்வது தகை
நீதிசாத்திரத்திற்பாடி நின்துகை
கலவைநகர்கரிவரதன் பகை
கன்னியேமகன்கலங்கச் செய்வன் வகை
கதலிக்கனியேகன்னலே-மதலைக்கிளியேமின்னலே (மண)

வீலாவதி-சொல்-விருத்தம்.

மகிலம்படைத்தயெந்தன் மகுணநீரியம்பும்வார்த்தை
சகியள்யான்கேட்டபோதே சந்தோஷமிகவுங்கொண்டேன்
சுகிதசக்கரைபந்தல்மேல் தேன்மாரிபொழிந்தாப்போலே
பகிரெண்டங்களுந்துதிக்க பாலனுக்குரைசெய்வீரே.

வசனம்.

கேளும் என்பிராணநாயகரே, இப்போது நீர் திருவாய்மலர்ந்தருளிய திவ்வியமொழியைக்கேட்டவுடனே அடியாளுக்கு எவ்வித சந்தோஷமாயிற்றென்றால் சக்கரைபந்தலிலே தேன்மாரிபொழிந்தாலெப்படி சந்தோஷிப்பார்களோ அதற்கெண்மடங்குஅடியாள் மனம் பூரிப்படைந்தேன் சுவாமி, தங்கள்ளிஷ்டப்படி எனக்கும் சம்மதம் நாயகா.

வீலாவதி-சொல்-தரு-இ-ம்-ஆனநதபைரவி-அடதாளம்.

பல்லவி.

சம்மதம் துரையே தனயனுக்கு
ததிநல்லம்மரையே (சம்)

அநுபல்லவி.

செம்மையுடன்போதிக்கும் செழுங்கல்விச்சாலையிற்
சிறுவன்றனைவைக்கநல் பருவமிதுவென்றசொல் (சம்)

சரணங்கள்.

சீதமலர்முகவீ கோதமகனுக்குநால்
வேதசாரநூல்களை நீதியுடன்போதிக்க (சம்)
ஜெகம்புகழ்மகிபாநா மகமகிழ்ந்தேயளித்த
மகன்றனக்குநூல்களை சுகமோடோதிவைப்பது (சம்)
ஞாலம்புகழ்கலவை நகர்க்கரிவரதனை
சீலமுடன்ஜெயிக்க சித்தம்வைத்தகர்த்தனே (சம்)

வசனம்.

சுவாமி தேவரீருடைய மனதின்படியே, அடியாளுக்குமெத்த சம்மதம் குழந்தையை கல்வியில்வையும் நாயகா.

இரணியன்-சொல்-விருத்தம்.

துலங்குமென்கொலுவின்மேவுந் துன்முகமந்திரியேகேள்
பலங்களில்மிகுந்தவீரப் படைத்தலைவரையனுப்பி
நிலங்களிற்புகழுமெந்தன் நிதிபிரகலாதன்தன்னை
அலங்காரமாகவிங்கு வழைத்துமேவருகுவீரே,

வசனம்.

வாருங்கள் ஓய்மந்திரிமார்களே, என்மனமிஷ்டப்படி என்மனை விக்குச் சம்மதமானபடியால் இனிசும்மா யிருப்பதுயுக்தமல்ல சீக்கிரமாக நீங்கள்போய், என்னருமைமகனுன பிரகலாதனனை அலங்காரமாய் அழைத்துக்கொண்டு வாருங்கள் மந்திரிமார்களே.

மந்திரிகள்-பிரகலாதனனை-அழைக்கின்ற-கவி.

தாணியையாளுந் தையித்தியசக்ரேஸ்வர
ரிரணியரளித்த யின்பரத்தினமே
கருணைசெய்தெங்களைக் காத்துரக்ஷிக்கும்
பிரணவப்பொருளெனும் பிரகலாதாவாரும்

வசனம்.

திவ்விய மங்களமாணிக்க தீபம்போல் எங்கள் இரணியேஸ்வரர் கெற்பத்தில் உற்பவமாகிய கண்மணியே எங்களைகாத்து ரக்ஷிக்கும் பொருட்டும்மை கல்வித்திரமரியவைக்க உமது தகப்பனுர் வரவழைக்கச் சொன்னுர் வாரும் பிரணவப் பொருளாகிய பிரகலாதனு.

பிரகலாதனன்-வரும்-பொதுவிருத்தம்.

சீர்தருங்கற்பகத் தருவினிற்குரிய
தேவர்மாமுனிவர் மாதவர்செய்
ஏர்தவங்களு மோருருவதாய்த்
திரண்டெழுந்துவக் தருளியதுபோல்
கார்முகில்மேனிய னடியிணைதன்னைக்
கருத்தினில் திருத்தமாய்க்கருதி
பார்முழுதினில்வாழ் பக்தர்கள்களிக்கப்
பிரகலாதன னிதோவந்தான்.

வசனம்.

இவ்விதமாகச் சிறந்த பொருள்களுக்கு, நிகரந்த வஸ்து வென்னும் கற்பகத்தருவுக்கு வற்புதமாகிய தேவர்களும், முனிவர்களும், பெ

ருமைபொருந்திய மஹாதவகியானிகளும், பிராம்மண யாகயெக்கிய
ஓமாதிபதிகளும்,செய்ததவமானது திரண்டுருண்டொரு வுருவங்கொ
ண்டெழுந்தருளிய பாவனைபோல் பிரகலாதரானவர் கார்மேகவண்
ணனென்னும் கமலக்கண்ணனை தன்னிருதயகமலத்தில் தியானித்து
க்கொண்டு, பூலோகபக்தர்கள் மனங்களிக்க கந்தருவர் அந்திரமாற்க
த்திலிருந்து,புஷ்பங்களை வருஷம்போல் தூளிக்க வியாகூலசித்தர்களு
டைய துன்பம் இனியொளிக்க வானவர் சுபம் பரிமளிக்க தன்தாயார்
தகப்பனார் சமூகத்திற்குத் திவ்விய கடககங்கண ஹாரகேயூர திரு
வாபரணங்களை யணிந்துக்கொண்டு தன் தோழமாராகிய மந்திரி
குமாரர்கள் புடைசூழும்படி அதிக வலங்கிரத விநோதசமேதனுக
வருகின்றவிதங்காண்க.



பிரகலாதன் வருகிற

தரு-இ-ம்-பந்துவராளி-ஆதிதாளம்

பல்லவி.

சூரர்க்கதிபனென்னும் துரையிரணியனருள்
சுதன்பிரகலாதன் வந்தான் இங்கிதகுண
பதன்பிரகலாதன்வந்தான்

அநுபல்லவி.

தாரகமெனவே ஸ்ரீதரன்திருவடிகளை
தஞ்சந்தஞ்சமென்றே பிரபஞ்சமீதினிலோதி
தளிர்செந்தாமரை மலர்முகவிலாசன்
களிர்கொண்டனைவரும்புகழ் ஜெயப்பிரகாசன் (சூரர்)

சரணங்கள்.

செங்கதிர்முடி துலங்க புஜகிருதி
செழித்தாபரணங் குலுங்க
மங்களமாகமந்திரி மார்களுடனேகூடி
மருவும்மல்லிகைமுல்லை திருவும்சாமந்திசூடி
மரகதவச்சிராபரணமு மணிந்து
திரமுடனரிதிரு வடிதனைப் பணிந்து (சூர)

வானவர்கண்டுகண்களிக்க புஷ்பமலரை
வாரிமாரிபோல் தெளிக்க
ஞானமாதவர்தொழும் ஞாலமுண்டசெவ்வாயன்
நளினபொற்பாதமதை தெளிவுகொண்டுபஜனை
நாவினிலோதியே யாவல தாகயிப
பூவுலகாதிபர்மேவும் விவேக (சூர)

அனந்தன்மீதினிற்சயனன் அன்பருக்கருள்
அளிக்கும்மம்புஜ நயனன்
கனந்தருங்கமுகுசூழ் கலவைநகரினில்வாழ்
கரிவரதர்தன்னருள் பெருகும்புதயோகன்
கலகலவெனகிலம்பொலிகளு மசைய
அலைகடலுலகினில் பலர்புகள் விஜய (சூர)

பிரகலாதனன்-சொல்-வெண்பா,

சுத்தமிகுநீதி துலங்கு மெழில்மந்திரிகளே
இத்தலமெங்கும்புகழ் யெந்தனையே-பெற்ற
தாயரமனைக்குட்சென்று தாளிணைகளைவணங்கி
நேயமுடன் வருவேனிங்கு

வசனம்.

பரிசுத்தமாகிய நீதிகளை கவனிக்கின்ற என்மந்திரிகளே, நீங்களனைவரும்இவ்விடத்தில்தானே இருங்கள் என்தாயார் மனையிற்சென்று திருவடிதரிசனஞ் செய்துவருகிறேன் என்னருமை நேசர்களே.

பிரகலாதனன் தாயாரிடம் வரும்

தரு-இ-ம்-யமுனு-கல்யாணி-ஆதிதாளம்.

பல்லவி.

தண்மைமிகும்பிரகலாதநிதோவந்தானே (தண்மை)

அநுபல்லவி.

உண்மைதனையென்றாளுமுளமதனிற் றேரிமீறி (தண்)

சரணங்கள்.

ரத்தினகலிக்கிச்சுட்டி நகைசெகதாட்கட்டி
கொத்துமல்லிகைமுல்லை கோகனமலர்சூடிநாடி (தண்)
இந்தானவிலாசன் எங்கும்புகழ்ப்பிரகாசன்
கந்தனவிநுதலிற் கனதிலர்தபொட்டுமிட்டு (தண்)
மனமதுகளிக்க மலர்மாரிதுளிக்கச்
சினமென்பதொளிக்கச்செய்யும் நிதானஞானமான (தண்)
மாதவர்பயமோட மகிதருங்கொண்டாட
சீதரன்பாதாம்புயஞ் சிந்தயிற்றினம்பேறியேற்றி (தண்)
தீரமிகுகலவை ஜெயகரிவரதர்
உரம்வளரிந்திரை புத்தமியருளால்மேலே (தண்)




பிரகலாதனன் தாயாரைப் போற்றும்-விருத்தம்.

முன்னமேதவங்கள்செய்து முந்நூறுநாட்சுமந்து
என்னையீன்றளித்துரத்தின மிழைத்தொட்டிலில்வைத்தாளே

கன்னல்சர்க்கரைபாலன்னங் களித்தளித்தெனைவளர்த்த
அன்னையேயுனதுசெம்பொன் னடியிணைபோற்றிபோற்றி.

வசனம்.

அம்மணி ! மேன்மையாகிய நோன்பு நோற்று தங்கள் கெர்ப்பத்தில் பத்துமாதம் எனக்கிடங்கொடுத்துவைத்துப் பிறகு என்னைப்பெற்று வளர்த்து மிகவும் அருமையாய்க் காப்பாற்றி, கன்னல் சர்க்கரை கலந்த பாலன்னங்களை யூட்டி அமுர்தமொழி வேடிக்கையைக் காட்டி மிகவும் பாராட்டி தோகையரைக் கூட்டி தொட்டிலில் வைத்தாட்டி கண்குளிர மைகளைத்தீட்டி கனகாபரணங்களைப் பூட்டி தாலாட்டி எனை வளர்த்த அன்னையே ! உனது மனது மனமகிழ அடியேன் சரணம் சரணம்மா தாயே,

லீலாவதி சொல்-விருத்தம்.

பெருமையென்குலம்விளங்கப் பிரபலமாய்வந்துதித்த
பொருமையில்மிகுந்தசிரேஷ்ட புத்திரனேமணியேவாடா
வொருமைசேர்தவப்பலத்தின் உசிதரத்தினமேவாடா
அருமையென்மகனேயெந்த னப்பனேவாடாவாடா.

வசனம்.

ஆ என்குலம் விளங்கும்படி என்வயற்றில் மாணிக்கதீபம்போல் வந்துதித்த என்ஆணிமுத்தே உண்மையும் வண்மையும் பொருமையுமுடைய என்னருமை மகனே வாடா என்செல்வமே.

லீலாவதி சொல்-தரு-இ-ம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

அருமைமகனேதுரையே வாராயெந்தன் (அரு)

அநுபல்லவி.

பெருமையெனதுதவப் பலமதினாலேவந்த
புத்திராஎன்ரத்ன பத்தரைமாற்றுத்தங்கமே (அரு)

சரணங்கள்.

கன்னலம்தாமே கற்கண்டேகஸ்தூரிபாகேகண்முன்னிலே
சர்க்கரையேதேனேமுப்பழமே-யொப்பிலாத
மூவுலகாதிபருக்குங் காவலனாகவேவந்த (அரு)

மருவேமல்லிகைமுல்லையே மரிக்கொழுந்தே-மருவே
திருவேமலர்சாமந்தி செண்பகமேசெவ்வலரி
வுருவேவிரமாய்வந்த உத்தமியான்பெற்றெடுத்த (அரு)

மரகதமாணிக்கநீலமே மாந்தாளிப்பச்சை
மாநகர்மலர்ச்சோலைசூழும் கலவைநகரில்வாழும்
கரிவரதனைவெல்லும் பிரியமுள்ளயென்கண்ணே (அரு)

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

அற்புதமாகவென்னை யளித்திடுமன்னையேயுன்
பொற்பதத்தாளிணைக்குப் போற்றிபோற்றின்பமாக
நற்பகமலர்க்கொப்பான நயனமுங்களிக்கயென்னை
உற்பதமாய்வழைத்த வுண்மையையுரையுமம்மா.

வசனம்.

அற்புதமாய் என்றனையீன்றளித்த அன்னையே, உன்னிரு பொற் பாதங்களுக்கு அடியேன் வந்தனம். எனைவரவழைத்த விபரம் தாங் கள் திருவாய்மலர்ந்தருளுமம்மணி.

லீலாவதி சொல்-விருத்தம்.

உரைசெய்வேன்கேளும்பர் வுணர்வினிலுயர்ந்தபாலா
தரணியோர்போற்றுமுந்தன் தந்தையானவர்மிகுந்த
குரைவிலாவேதசாஸ்திரங் கோதரவோதிவைக்க
திரமதாய்வரச்சொன்னாரும் செல்வனேபடித்துக்கொள்வாய்

வசனம்.

கேளடா என்னருமை மகனே உன்தகப்பனார் அதிக ஆவலுட னே யுனக்கு வேதநூலை யோதிவைக்கவேண்டுமென்று வரவழைக்கச் சொன்னார் ஆதலால் நீமனமகிழ்ந்து போய் நல்லசிரியமான நூல்களை வாசித்துக்கொண்டுவாடா என்கண்மணியாய்விளங்காநின்ற மகனே.

லீலாவதி சொல்-தரு- இ௰ம்-காம்போதி-ஆதிதாளம்

பல்லவி.

பாலாயுனதுதந்தை மேலாகியநூல்களை
பண்பாயுனைபடிக்க அன்பாய்வரச்சொன்னார்நீ
பலகலையாதியும்நிலைதரும் நிலையும்
படிமிசைதனிற்புகழ்ந்திடப் படியடாயெந்தன் (பாலா)

சரணங்கள்.

கற்றுணர்ந்தவர்களே மெத்தப்பெரியோரென்று
கருதும்பழமொழியில் துரிதமுடனுதலால்
கனகநெழில்குலத்தில் தினகனெனயுதித்து
கருவிலெனைக்கண்மணி யுருயிலதிகமான (பாலா)

செல்வப்பொருளைவிட கல்வியருளதிகம்
சிருவரிதையரிந்து பரிவாய்பதவுமாயும்
தெளிவுடன்களிவுகூர்ந் துளமகிழ்ந்திடும்படி
வளமிகுசலேயேயென் கிளியேநீபடித்திட (பா)

வண்ணமுநிவர்சித்தர் கண்ணுவர்வசிஷ்டரும்
வாசித்ததினாலல்லோ பூசிப்பவர்களானார்
வலம்புரிதவிழ்ஜெய கலவையில்கிலேக்கரி
வாதனைப்பரதமோ டடும்மைதயரியயென் (பா)

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

பண்புடனெனைவேதத்தின் பயன்களையரிந்துநன்றாய்
அன்புடன்படிக்கச்சொன்ன வன்னையேபோற்றியெங்கும்
முன்பதாய்வீளங்குஞ்சாஸ்த்ர முறைகளைக்குறைவிலாமல் [ய்
தென்புடன்படித்துக்கொள்வேன்திருத்தமாய் விடைகொடுப்பா

வசனம்.

அம்மணி எனைவரவழைத்து வேதநூல்களை நன்றாய் ஓதிக்கொள்ளடாவென்றுரைத்தஎன்அன்னையேஉன்பொன்னடிக்கிவந்தனம்அப்படியே உங்கள் மனங்களிக்கும்படியாகிய நல்ல பிரியமான நூல்களையே வாசித்துக்கொண்டு வருகிறேன், சந்தோஷமாக வாழ்த்தி விடைகொடுத்து யனுப்பிவையும் அம்மணி.

லீலாவதி-சொல்-விருத்தம்.

பண்ணியபயிரில்நன்றாய்ப் பரிந்துமேயவர்கள்செய்த
புண்ணியந்தெரியுமென்று புகலுமாகமத் தூக்கொப்பாய்
எண்ணியபடியெனக்கே யீந்துனதந்தைவாழுந்
தெண்ணியங்களைப்படித்தென் கிளியேவந்துரைசெய்வாயே.

வசனம்.

ஆ என் அருமைத்தவத்தின் பெருமையால் வந்துதித்த என்சிறு வா யான்செய்த புண்ணியவசம் என்னவென்று சொல்லுவேன்உன்னை ப்போல் அறிவுடைய புத்திரன் என்வயற்றிலெப்போது வந்துஅவதரி த்தையோ அதுவே எனக்கு திஷ்டாந்திரம் இன்னும்வேறுவேண்டுமா உலகத்தில் பழமொழி பண்ணியபயிரிற் புண்ணியந் தெரியுமென்று வழங்கும் மொழியென்ன பிசகாகுமா ஆகாதென்றிருந்த என்னெண் ணப்படியேதான் முடிந்தது, என்செல்வனே நீபோய் உன் தகப்பனு ரிஷ்டப்படி அவருடைய கெண்ணியங்களை இடைவிடாமல் வூசித் துக்கொண்டுவாடா என் கண்மணியே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

உகந்துமேதாயார்சொன்ன உண்மையின்படியேமைந்தன்
அகமகிழ்ந்தெழுந்திருந்து அமைச்சர்கள்புடைகள்சூழ
ககனதேவர்கள்களித்துக் காதலோடாசிகூற
தகைபெருந்தந்தைமுன்னே தனயனும்வருகின்றானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாகப் பிரகலாதனானவன் தன்தாயார் சொன்ன மொழிகளைச் சிரமீதிற்கொண்டு ஆனந்தபரவசனாக மந்திரிகள் புடை சூழும்படி அரம்பைமாதர்கள் ஆலவட்டம்போடவும் அமரர்கள்ஆசீர் வதிக்கவும், கந்தருவர் புஷ்பமாரிபொழியவும், தகப்பனார் சமுகத்தி ற்கு வருகின்றவிதங்காண்க.

கண்ணிகள்-இ-ம்-துஜாவந்தி-ஆதிதாளம்

மகிதலம்புகழ்கனமகிபனிரண்ணியனருள்
மைந்தன்வந்தனன்தந்தைமுன் சிந்தைமகிழ்ந்து மைந்தன்
முகில்நிறமுடையஸ்ரீமுரஹரிதிருவடி
மூலமந்திரமென்றோதியே-தயாநிதியே- மூலமந்திர
கனகம்குடமுங் கங்கணம்வங்கிதோடாவுங்
கணையாழிகளுந்துலங்க-மனமிலங்க கணையாழிகளும்
தினகரரொளியைப்போல் தோளிற்புஜகிருதியும்
செழிக்கும்பணிகள்தரித்து-விவகரித்து செழிக்கும்
அண்டர்முனிவர்கள்கண் டகமகிழ்ந்தடிக்கடி
ஆசீர்வாதமுங்கூற-அருள்தவந்தேர ஆசீர்வாதமும்

தண்டைச்சிலம்புகெஜ்ஜை தாள்கலகலவென
சர்வேஸ்வரனேநினைந்து-தினமுனைந்து சர்வேஸ்வர,
சலவைமல்லுபட்டுப் பீதாம்பரமுஞ்சால்வைகள்
சகலாத்துகளுமணிந்து-மேனிதணிந்து சகலாத்துகளும்,
கலவைகரில்மேவங் கரிவரதரங்கிதங்
கவிமுழுதிலும்படித்து மேவியடுத்து கவிமுழுதிலும்
மகிதலம்புகழ்கன மகிபனிரண்ணிய



இரணியன் சொல்-விருத்தம்

கற்றறிவினிலுயர்ந்த கனகனென்குலம்விளங்க,
சிற்றஜன்போலுதித்த செல்வரத்தினமேவாடா
யெற்றினை சகளுந்துதிக்கு மெழில்பெருங்கொலுவிலன்பாய்
பத்தியாய்வந்துநிற்கும் பிரகலாதனனேவாடா.

வசனம்.

ஆ என் அருமை மகனே, திவ்விய நூல்களைக் கற்றுணர்ந்து எவ்வுலகையும் ஏகசக்ரேஸ்வரனுக ஆளும் என்வயற்றில் சித்தஜனை ஜெயிக்கும் அழகினையுடைய என்கண்மணி விளக்காய் நின்றுகனககுலம் விளங்க வந்துதித்த மாணிக்கமே வாடா செல்வசிகாமணியே.

இரணியன்-சொல்-தரு-இ-ம்-தோடி-ரூபகம்

பல்லவி.

என துகண்மணியே துரையே யுன்றன்
எழில்மொழிசெவிக்கின்பசர்க்கரையே (என)

அநுபல்லவி.

மனதுமகிழ்ந்திடும்படி யெந்தன்
மடிமீதினிற்-றிடமாகவோர்-நொடி தீதினி-லோடிவந்திடும்(என)

சரணங்கள்.

கனகுணசுகமொழி யுலாசா
கமலதளநயன விலாசா
தினகரநெழிலொளி ப்ரகாசா
செழிக்குமற்புதநற்பத வாசா
ஜெகமெங்கினும்-புகழ்தங்கிய-மகிழிங்கித-தகைபொங்கிய(என)

சீதளசெந்துகுத வதனா
திவ்வியானந்தபத நிதனா
தாதளசங்கீத மதனா
தனயனெனவந்திடுஞ் சுதனா
தெளிவில்மிக-வொளிமேவநய-களிகூர்ந்திடுங்கிளியே (என

மலைபுயநிருதர் குலதீரா
மகிழும்ரத்னமணியணி யாரா
கலைவைநகர்க்கரி வரதன் நேரா
கலங்கிடச்செய்திடுமென் குமாரா
கடல்சூழ்புவி-யுடையோர்நம-தடிதாழ்ந்திடுங்-குடைநிழலில் (என து)

பிரகலாதனன்-போற்றி-விருத்தம்.

மாமறைமுனிவர்தேவர் மலைநிகரசுரரியாரும்
நேமமாய்தொழுதுபோற்றும் நெடும்புவிதனையென்னாளும்
க்ஷேமமாயரசளிக்கும் ஜெயமிகுதந்தையேயுன்
தாமரைத்தாளிணைக்குச்சாஷ்டாங்கம்போற்றிபோற்றி.

வசனம்.

மஹாபெருமைபொருந்திய முனிவர்களும்,தேவர்களும், இன்னம் மற்றுமுண்டானபேர்களும், மலைகளுக்கு நிகராகிய புஜம்தோள்களைப்படைத்த அசுரர்களாகிய இராக்ஷதாளும் இத்தியாதிபேர்களுநித்

திய காலைக்கடன்களைக்கழித்து பரிசுத்தமாகிய உமது பொற்பாதகம லங்களைப் போற்றும்படியாகிய வலுமை தவத்தில் மிகுந்த என் தந்தையே, நெடியகடல்சூழ்ந்த யீரேழுபதினாலுலோகங்களையெல்லாம் ஓர் தவளச்சக்கரக் குடைநிழலிலே க்ஷேமப்படும்படி அரசளிக்கும் என்தந்தையே, உமது செந்தாமரை மலர்போன்ற திருவடிகளுக்கு அடியேன் வந்தனம் வந்தனம் தந்தையே.

பிரகலாதனன்-போற்றி-தரு-இ-ம்-பியாக்-திரிபுடைதாளம்

பல்லவி,

வந்தனம் வந்தனம் முந்தனரவிந்த
பாதமேநிதம்சதா (வந்த)

அநுபல்லவி.

அந்தரரிந்திரர்கந்தருவரும்-பந்தமோடுவந்துமே
பணியும்பதம் (வந்த)

சரணங்கள்.

சீதரரவுலகினையெந்நாளுமே கோதரவளித்தேவராளுமே
ஆதரவாகியவுனதுபொற்பாதாரமேசாதரணமாகயான் (வந்)
பொங்குமாமறையோர்முநிவரினம்-எங்கும்போற்றியிரஞ்சிடவுந்
தினம்-செங்கோலேந்திச் செழிக்கதைத்தியர்
மங்களமொடுவாழுந் தாழ்விலாப்பதம் (வந்த)
பரிதிமாமதிசூழுமீரேழ்புவி-கருதியேவருமேகலவைக்கரி
வரதநருள்பெரயுரமதாக-நிருதனேயுனதடிபடிமிசை (வந்)

இரணியன் சொல்-விருத்தம்.

கற்கண்டுநற்கதலி சக்கரையுமிக்கால்
கன்னலொடு நன்னல்மதுவும்
கலந்துண்ணும் நற்சுவையுன் மொழிதனக்குநிக
ரமென யுரைக்கலாமோ
தெற்குநின்றேவடக் கோடுமீதினிலேருஞ்
செழுங்கணைக் குடையமன்னன்
தன்னைப்பழிக்குமுன் வுன்னிதமெய் நிரத்தகை
யுரைத்திடவும் வசமோ
நீர்கொண்ட நற்றடத்திற்பொருட் டலரெழில்
நின்முகத் திற்குநிகரோ

நெடியதிரை சூழ்பரவை வெற்பில்யான்தவத்
  தின்பெருமை யென்றும்நன்றாய்ச்
சீர்கண்டு யெங்காளு மெந்தனைப்போலவே
  செங்கோல்கரத்திலேந்தி
தேவர்முனிவர்களசுரர்க் கெல்லாற்குமன்னனாய்
  சிரஞ்சீவி யாக வாழி.

வசனம்.

அடா என்னருமைமகனே, உன் திருவாய்மொழிகளைக் கேழ்க்கக்கேழ்க்க எப்படி யிருக்குதென்றால், கற்கண்டு சர்க்கரைதேன்களை ஒன்றாய்க்கூட்டி யுண்டாலும் உன்மொழிக்கிணையல்லவே மன்மதனும் உன்வடிவுக்கிணையல்லவே, தாமரை மலரும் உன் அலங்காரத்திற்குமுன் நிற்கமாட்டாதே, இதுகளெல்லாம்என் தவப்பலபெருமையென்றுதான் நினைக்கவேண்டும், என் செல்வமே நீஎப்போதுஞ்சிரஞ்சீவியாக வாழக்கடவாய் எழுந்திரு மகனே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

வண்மையோடெந்தனை வாழ்த்திடுந்தந்தயே
  வாகுபொற் பதமடிபோற்றி
தண்மையாய்முனிவர் வானவர்தைத்தியர்களும்
  தாழ்ந்துதாள்பணியுமுன் கொலுவில்
உண்மையாயெந்தனை யழைத்திடுஞ்சேதி
  யுளமதிற் கனிவுகொண் டன்பாய்
அண்ணலேயுரைப்பீ ரகில்முங்களிக்கு
  மடியிணைக்கனுதினம் போற்றி.

வசனம்.

வண்மையுடனே எந்தனை திவ்விய மங்கள சுபகரலக்ஷண கிருதார்த்தனாக வாழக்கடவாயென்று வாழ்த்திய எனது தந்தையேதங்கமழகிய திருவடிகளுக்கு அடியேன் வந்தனம், தண்மையில் மிகுந்த முனிவர்களும் தேவர்களும் தங்கள் வம்சதைத்தியர்களும் தாழ்ந்து வணங்கி போற்றியேற்றிப் புகழும்படி விளங்காநின்ற சபாமண்டபத்திற்கு அடியேனை அதிக துரையாக வரவழைத்த விபரம் தெரியச்சொல்லவேண்டுமென் தந்தையே.

இரணியன் சொல்-விருத்தம்.

ஐயனேயெனதுரத்த அருமைபாலகனேகேளாய்
வையகந்தன்னில்சின்ன வயதினில்கற்கும்கல்வி
பையவேபாரைமீதில் பதிந்திடுமெழுத்தாந்தங்க
மெய்யனேயுரைப்பதாலே மேன்மைநூல்படித்துக்கொள்வாய்,

வசனம்.

கேளடா என்னருமை மகனே இவ்வுலகத்தின்கண் பாலியர்க்கு இளமைப்பருவத்தில் கல்வியின் பயிர்ச்சிகளை யறிவித்தால் அது எப்படி விர்த்திக்குமென்றால் சிலாசதாரமைாக நீடூழிகாலமும் வீற்றிருக்கும் ஆதலால் உனக்கு கல்வியின்றிரமறிவித்து யான் கண்குளிரப்பார்த்து செவியாரக் கேழ்க்கவேண்டுமென்று வரவழைத்தேன் என்செல்வமே நீ நல்ல நூல்களைப் படித்துக்கொள்வாயடா மகனே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

தந்தையேயுன்வாக்குக்குத் தாகூவியேதாகிலுண்டோ
செந்தமிழ்கலைகளோதுஞ் செழும்பள்ளிக்கூடத்திற்கு
பந்தமாயனுப்பிவைத்தால் பகர்ந்திடும்நூலையெல்லாம்
சிந்தையின்மகிழ்வாயானும் தெளிவுடன்படித்துக்கொள்வேன்.

வசனம்.

கேளும் என் தந்தையே அப்படியே உமது இஷ்டப்படி படித்துக்கொள்ளுகிறேன் என்தந்தையே.

இரணியன் சொல் - விருத்தம்.

பெருகும்னுநீதியறிநதவமைச்சமாரே
பிரியமுடனமதசுரர் குலத்துக்கெல்லாம்
குருமணியாய்விளங்குகின்ற சுக்கிராசாரி
குமாரர்களில்நிபுணன்சண்டா மார்க்கன்றன்னை
திருகுறைசொல்லாமலவர் தனையிப்போது
சீக்கிரமதாயழைத்தோர் நொடிக்குள்ளாக
வருகுவீரொனதுதிரு கொலுமுகப்பில்
வாகுமிகுதளபதியே வண்மையாக.

வசனம்.

ஓய் தளபதி மந்திரிமார்களே நீங்கள் சீக்கிரமாக நமதுகுலகுருவாகிய சுக்கிரபகவான் குமாரனாகியசண்டாமார்க்கனை நாம்வரவழைத்தோமென்று சொல்லி அதிக துரையிலழைத்துவாருங்கள் தளபதி மந்திரிமார்களே.

தளபதி சொல்-விருத்தம்.

அசுரர்தன்குலத்துக்கெல்லா மகமகிழ்ந்துபதேசிக்கும்
புசுரராம்சுக்கிராசாரி புத்திரனேயுமையிப்போது
விசும்புரகமுமத்தியத்தில் விளங்குமற்புதனுருன்னை
நிஜமுடன்வரவேசொன்னார் நீரெழுந்திருந்துவாரும்

வசனம்.

சுவாமீ அடியோங்கள் வந்தனம் சண்டாமார்க்கரே உம்மை இரணியேஸ்வரர் அதிக துரையாய் வரச்சொன்னார் நீர் வாருமெங்கள் குருபுத்திரனே.

சண்டாமார்க்கர் வரும் பொது-விருத்தம்.

பார்க்கெல்லாமதிபரான பரமிரணியனார்சிந்தை
தீர்க்கமாய்மகிழ்ந்தனுப்புந் தளபதிவார்த்தைகேட்டு
ஏற்கவேசுக்கிராசாரி யீன்றிடும்நிபுணன்சண்டா
மார்க்கனுமெழுந்திருந்து மன்னன்முன்வருகின்றானே.

வசனம்.

ஈரேழு பதினாலுலோகத்திற்கும் ஏகசக்கிரேஸ்வரனாய் விளங்காநின்ற இரணியபூபாலகர் சொற்படி தளபதிகள் வந்து சொன்ன வசனத்தைக்கேட்ட மாத்திரத்திலே குருபுத்திரனாகியசண்டாமார்க்கர் அதிக துரையாய் வருகின்றவிதங்காண்க.



சண்டாமார்க்கர் வருகிற
தரு-இ-ம்-தர்பார்-ஏகதாளம்
பாதாளஞ்சுத்தி தந்தைசங்கீதமாம்
தீமத்தளந்தம-பூதமயனும் தாதாளம்
தூதேதைதோதெளதத்தி
தத்திமிதகதிமி தகஜெனு தகததிங்கணதோமென்று

பல்லவி.

மார்க்கர்வந்தார் இதோசண்ட
மார்க்கர்வந்தார்

அநுபல்லவி.

பார்க்குள்மாமறை யோர்க்கு மதிபன்
பகர்சுக்கிரன்மகனுகிய நிகர்தக்கரமிகயோக்கிய (மார்)

சரணங்கள்.

சோதிடமாகிய நான்மறையுரைப்பேன் திவ்விய
நீதிடமர்திட யோதிடகுறிப்பேன் செழுங்
காதிடமன்னவனன்குரு வூதிடசெய்திடுவேநினி
மேதினியாதினுமேமார்கொடிமீதினில் சோதிடுவேனென (மார்க்)

திதிநக்ஷத்திரம் வாரமுமறிவேன் லக்கண
பதியின்ஞானிவ னென்றேபுரிவேன் கற்ற
வெதியாகிலுமதியாமலேசதி செய்திடுவோன்கொண்டப்
பதியனிரணியன்வாழ் சபையெதிரோயின்றினுஞ்சண்ட (மார்க்)

அரியரயன்மூவரையுந்தூரத்தி ஜெகத்
தொருவனேதேவனைச் செங்கோல்நிறுத்தி எங்கும்
கருதியநூலோர்புகழ் கலவைக்கரிவாதன்தனேயே,
பெருதனயோதிடுபேர்கள்தன் குருதிகள்செதிரிடவாட்டிடும்
(மார்க்)

சண்டாமார்க்கர் சொல் விருத்தம்.

...திசெங்கும்புகழ்பெற்றோருங் தீரனுர்கொலுமுகப்பில்
...ருவமாகக்காற்கும் படைத்தலைவீராகேளும்
...ரோசாரியீன்ற சுதன்சண்டாமார்க்கர்தானும்
...கவேவந்தாரென்று வேந்தனுக்குரைசெய்வீரே.

வசனம்.

...ங்களப்பா கொலுமுகவீரர்களே, குருபுத்திராகிய சண்...ர் வந்திருக்கிறாரென்று உங்கள் வேந்தனுகிய இரணிய...ருச் சொல்லி வாருங்களப்பா வீரரே.

வீரர் சொல்-விருத்தம்.

...சூழுலகேழும் வணங்குமென்னரசேகேளீர்
...லாவேதசாஸ்திரம் நிகழ்த்திடும்நமதுசுக்கிரா
...ரியாரீன்றளித்த தனயனுஞ்சண்டாமார்க்கர்
...ரியமுடனேவந்தார் வெழில்பெருங்கொலுவின்முன்னே

வசனம்.

கேளுமெங்கள் கனகதுரையே, நமது நலகுருவாகிய சுக்கிரர் குமாரராகிய சண்டாமார்க்கர் கொலுமுகப்பில்வந்து அதிக துரிதமா யுமக்கு சொல்லச்சொன்னார் கர்த்தீபமே.

இரணியன் சொல்-துண்டு-கவி.

மதிமிகுந்திடுந்தள பதியேநீயவரை
சதிருடனேநம தெதிர்வரச்செய்வீர்.

தளபதி வசனம்.

சுவாமி சண்டமார்க்கரே சீக்கிரம் வரச்சொன்னார் போம்.

சண்டமார்க்கர்-இரணியன்முன் வருகிற

தரு-இ-ம்-பிலஹரி-அடதாளம்

பல்லவி.

எனையழைத்தவிபரந்தனையுரைப்பீர்கெவரம்
எங்கும்புகழ்சக்கிரேஸ்வரா-இரணியேஸ்வரா (எங்)

அநுபல்லவி.

உனைவிடயினியுலகினிலொருவருமுண்டோ
கனதவமுனையிற் பிரசனதீரமனங்கொண்டக்
கருணையொடியிந்தத்-தரணிமுழுதுமே
சரணமெனத்தொழு மிரணியபூபனே (எனை)

சரணங்கள்.

தேவர்முனிவர்கள்கண்டு நடுநடுங்கி
திகைத்துபயமிகக்கொண்டு யென்றும்
ஆவலுடனேதங்கட் கேவல்செய்யவுஞ்செங்கோல்
மூவுலகங்கைக்கொண்ட காவலனேயுத்தண்ட
முத்தேபொருள்முதல் வித்தேகனிவொடு
இத்தலத்திலுன் சித்தமகிழ்ந்திட (எனை)

காசிபர்மகிழ்சுதனே கனம்பெற்றோங்கும்
கருணாகரபதனே திவ்விய
மாசில்லாமகுடவர்த்தனகிரீடவதிரூபா
தேஜோன்மயப்பிரகாசஞ் செழிக்குமெழிற்பிரதாபா
தினமுமனைவர்கள் நினைவில்குடிகொள்ளுங்
கனமேயனைவர்தன் தனமேமனமகிழ்ந்து (எனை)

சகலபுவனயோகா மேன்மைமிகுந்த
தைத்தியகுலவிவேகா யென்றும்
அகமகிழுங்கலவை ஹரிகரிவரதர்தன்
பகைமுடித்திடவந்த பாக்கியமிகயோக்கியமே
படியுலகமதிற்-கெடிபெற்றோங்கிய
வடிவேகடிமலருடையகொலுவினில் (எனெ)



இரணியன்-சொல்-விருத்தம்.

திரிபுவனங்கள்போற்றுந் தைத்தியகுலத்துக்கெல்லாங்
குருவெனவிளங்குஞ்சுக்கிரர் குமாரனுய்வந்துதித்த
அறிவுள்ளசண்டாமார்க்க வையரோவாருமையா
பெருமையில்மிகுந்தரத்தின பீடத்தில்வீற்றிடீரோ

வசனம்.

திரிபுவனங்களும் போற்றி புகழும்படியாகிய தானவர்குலத்திற்கு மேன்மையாகிய குருபீடமாய் விளங்காநின்ற சுக்கிரர் குமாரராகிய ஓய் சண்டாமார்க்கரோ, வாரும் இத்தரத்தினபீடத்தில் வீற்றிரும் சுவாமி.

சண்டாமார்க்கர் சொல்-விருத்தம்.

சகலபுவனவகண்டலோக சக்கரேஸ்வரா
சிரஞ்சீவி யாசிர்வாதம்
புகலுமறைவேதமதி லாதியாய்நின்ற
பரிபூரண வாசீர்வாதம்
ககனமத்தியபுரகமெங்கு புகழிங்கிதக்
கனகனே யாசிர்வாதம்
திகழுமொளிமகுட வர்த்தனகிரீடேஸ்வரா
சிரஞ்சீவி யாசிர்வாதம்

வசனம்.

சுபவா ஆசீர்வாதம், சிரஞ்சீவியாக வாழக்கடவீர் பிரபு.

இரணியன் சொல்-விருத்தம்.

அன்புடனாசிகூறும் மருமையென்குருவைப்போலே
முன்புவர்வேதையித்திய முறைகளைக்குறைவில்லாமல்
தென்புடனிருந்தநன்றாய்ச் செழித்திடவாழிகூறும்
இன்பமேற்றுடையோநென்றே யென்மனங்களித்ததின்றே

வசனம்.

ஆ-ஆ வாரும் சண்டாமார்க்கரே, உம்மைமெத்தவும் புத்திசாலி யென்று என்மனம் ரொம்பவும் களிப்புற்றன அதுயேனென்னில் என் குருசுக்கிரர்போலவே என்பெருமைகளை கொண்டாடினீரல்லவா அதினால் நீர் நன்றாய்த் தெரிந்தவரேயொழிய வேறல்ல வந்தனம் ஓய் சண்டாமார்க்கரே.

சண்டாமார்க்கர் சொல்-விருத்தம்.

வானவர்முனிவரஞ்சி வாடிகைகூப்பிப்போற்றும்
தானவர்க்கரசேயுந்தன் தாழ்விலாதரசும்வாழி
மானமோடசுரர்சூழ்ந்து மகிழ்ந்திடுங்கொலுவிலென்னை
ஏனழைத்தீரிரண்ணிய யீஸ்வராயுரைசெய்வீரே.

வசனம்.

சுபவா சிரஞ்சீவி இரணிய பூபாலகரே, தேவர்-முனிவர்- சித்த வித்தியாதரர் முதலான பேர்கள் தங்களைப் போற்றியேற்றிப்புகழும் சித்திர கொலுமுகப்பிற்கு என்னை வரவழைத்த விபரம் சொல்லும் பிரபூ.

இரணியன் சொல்-விருத்தம்.

அரக்கர்தன்குலத்துக்கெல்லா மமைந்திடுங்குருவேகேளீர்
உருக்கமாயளித்தவெந்த னுயர்பிரகலாதனுக்கு
பெருக்கமாம்வேதநூலைப் பிரியமாயோதிவைக்க
செருக்குடனுனையழைத்தேன் செப்பிடவும்மாலாமோ.

வசனம்.

கேளும் அசுரர்குலத்திற்கு மேன்மையான குருபீடமாய்விளங்கும் ஒப்சண்டாமார்க்கரே உம்மை ஏன்வரவழைத்தேனென்றால் என் குமாரனாகிய பிரகலாதனனுக்குக் கல்வியின்றிரங்களைக் கற்பிக்கவேண்டுமென்று யோசித்து உம்மை வரவழைத்தேன் ஆகலால்என்குமாரனுக்கு வேதவித்தியாப்பிபாசங்களை சொல்வதற்கு உம்மால் முடியுமா சண்டமார்க்கரே,

சண்டாமார்க்கர் சொல்-விருத்தம்.

தீரமாய்த்தாங்களீன்ற செழும்பிரகலாதனுக்குச்
சாரமாயிருக்கும்வேத சாஸ்திரமெல்லாம்நன்றாய்
தேரவேயோதிவைப்பேன் செந்தமிழ்ச்சாலைக்குன்
குமாரனையனுப்புமையா மனமகிழ்வாகத்தானே,

வசனம்.

கேளும் பிரபுவே, அதற்கென்னதடை உம்துபுத்திரனுக்கு நான் கற்றனூல்களை சொல்லாமல் இன்னம் யாருக்குச்சொல்லப்போகிறேன் ஆ-ஆ பிரபுவே, சாரமாகிய நூல்களைதுவோ அதுகளையே குழந்தைக்கு புகட்டுவேனேயல்லாமல் விருதாகாலங் கழிக்கின்ற நூல்களை அவர்கண்ணில் காண்பிக்கமாட்டேன் பாரும் என்திறத்தை பூலோகமுள்ளவரையிலும்,என்கீர்த்தி விளங்கும்படி செய்விக்கின்றேன் தாங்கள் குமாரனை பள்ளிக்கூடத்திற்கு அனுப்பிவையும் பிரபு.

இரணியன் சொல்-விருத்தம்.

மைந்தனேயென்தன்கண்ணே மாணிக்கமேநீவாடா
செந்தமிழ்க்கலைகளோதுஞ் செழும்பள்ளிக்கூடஞ்சென்று
முந்தியேவாத்திசொல்லும் முறைகளைபடித்துக்கொண்டு
வந்துமேயுரைப்பாயப்பா வாகுடன்மனங்களிக்க,

வசனம்.

கேளடா யென்செல்வமகனே, நீயிந்த உபாத்தியாருடன் சென்று நல்லநூல்களை கற்றுக்கொண்டு என்மனங்களிக்கும்படி வந்துசொல்லடா, என்செல்வமே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

கலைதனிலிருக்குங்கியான கல்விகளெல்லாங்கற்று
தலைவனேயுன்முன்வந்து சாற்றுகின்றேன்தப்பாமல்
விலையிலாமணிபோலெங்கும் வேதத்தின்முதலிற்றங்கும்
நிலைதனையுணாக்கும்வாத்தி நிபுணர்தன்னுடனனுப்பும்

வசனம்.

தந்தையே வந்தனம், அப்படியே உமதுமனங்களிக்க கற்றுக்கொண்டு வருகிறேன் விலையிலாமாணிக்கம்போல் விளங்கிய வேதமுதலா நிலை யோதியநீதியையுடைய நிபுணராகிய உபாத்தியாயருடன் அனுப்பு மென்தந்தையே.

இரணியன் சொல்-விருத்தம்.

வல்லமைமிகுந்தவேத வாத்தியேசொல்லக்கேளாய்
செல்வன்மேல்கண்ணுண்டாகி திருத்தமாயிருக்கும்வேத
நல்லசாத்திரங்களெல்லாம் நலமுடன்வோதிவைக்க
எல்லையோர்புகழ்பள்ளிக்கு யிட்டுக்கொண்டேகுவீரே,

வசனம்.

கேளும் கல்வியில்மிகுந்த வல்லவரொன்னும், உபாத்தியாயரே யென்செல்வன்பேரில் கண்ணுண்டாகப் பார்த்து, வேதநூல்களை யோதிவைக்கின்ற பள்ளிக்கூடத்திற்கு அழைத்துக்கொண்டுபோம், சண்டாமார்க்கரே.

பொது-விருத்தம்.

கந்தனைக்கடவுள்முன்னால் கஞ்சன்முன்விட்டாபபோலே
மைந்தனையிரணியன்சண்டாமார்க்கர் தன்கையிலொப்பிக்க
அந்தணன்மனமகிழ்ந்து யரும்பள்ளிக்கூடத்திற்கு
விந்தையாய்மைந்தரோடு வேகமாய்வருகின்றாரே

வசனம்.

இந்தபிரகாரமாக ஆதிகாலத்திலே பரமசிவமானவர் தன்குமாரனாகிய சிவசுப்ரமண்யக் கடவுளை பிரம்மாவிடத்தில் எப்படி கல்விக்கியனுப்பிவைத்தாரோ அவ்விதமாக இரணியனானவன் பிரகலாதனனை சண்டமார்க்கர்கையில் வொப்பித்துவிட்டான் சண்டமார்க்கன் ஆனந்தபரவசமடைந்து பிரகலாதனனையும் தானவர்பிள்ளைகளையும் பள்ளிக்கூடத்திற்கு அழைத்துக்கொண்டு வரும் விதங்காண்க.







சண்டாமார்க்கர் சொல்வசனம்.

அப்பா பிரகலாதனு! சீக்கிரம் நின்தந்தை யுத்திரவின்படி யாவருளமு மானந்தமடையும்படி சகல பிரபந்தங்களை உன் சிந்தைமகிழ ஓதிவைக்கின்றேன் வருவாயப்பா.

பிரகலாதனன் வசனம்.

ஓ சுவாமீ! போற்றி போற்றி அடியேன் இதோ ஓடிவருகிறேன் என் குருவே.

சண்டாமார்க்கன் சொல்-வசனம்.

ஆ-நேத்தி நேத்தி சிரஞ்சீவியாகவிரு, எழுந்திருந்து சீக்கிரம் வருவாய் பாலகா.

பிரகலாதனன் சொல் தரு.

இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி.

மறைமுதல்வேதநாதமேயிதோவோடி
வந்தேனெந்தன்குருவே (மறை)

அநுபல்லவி.

பெருமையுடன்பிரபலப் பிரம்மகுலத்திற்சந்திர
பிம்பமதைப்போல்வந்த பெருமணியே
அருமையுடனேகல்வி யகமகிழ்ந்தடியேனுக்
கருளுமையுடனேயுந்த னடியிணைக்கேவந்தனம் (மறை)

சரணங்கள்.

பலபலஜெனனத்திற் பட்டுழலாமலே
பரிந்தெனையாட்கொள்ளும் பராபரமே
அலைகடல்சூழுமிந்த யவனியில்வாழுமடி
யார்க்கடியேனுமது வடியிணைக்கேவந்தனம் (மறை)

உடல்பொருளாவிமூன்றுந்தருளேயல்லாமல்
உலகிலினிவேறேதென்குலகுருவே
திடமுடையகல்வியைத் தெளிந்திடக்களிகூர்ந்து
தெரிவிக்கவந்தவுந்தன் சேவடிக்கேவந்தனம் (மறை)

காமங்லைகட்டொய் கர்த்தனேயொழித்தெனக்குநல்
கருத்தரிவிக்கவந்த கற்பகமே
க்ஷேமப்படுங்கலவைத்திருக்கரிவரதர்தன்
சேவடிதனைத்தொழத் திருவருள்செய்யுந்தேவே (மறை)

சண்டாமார்க்கர் சொல்-வெண்பா.

மாமறையோர்தங்குலத்தில் மகிழ்பெரயான்வந்துதித்து
க்ஷேமமிகப்பெற்றேனிச் சேயனால் - பூமன்முதல்
அரனும்மாழலைகடலி லரவமதிற்றுயில்பீதாம்
பரனுமெனக்கிணையோ பார்.

வசனம்.

ஆ என்பெருமையை நானென்னவென்று சொல்லுவேன் மாபெ ருமைபொருந்திய பிரமகுலத்தில் யான் பிறந்ததே பூர்வதவப்புண்ணி யமென்றிருந்தேன் அசற்றிணங்க விப்புத்திரனால் எனக்கு வந்த க்ஷே மத்தை யாரால் சொலலிமுடியும், ஆ ஆ ஆ-உலகில் வழங்கும் பழ மொழி வாழ்வுவரும்பின்னே மதியோடிவரும் முன்னே யென்பது போல, எனக்கு மிகுந்த செல்வம் வந்தமைந்தது,என்பாக்கியமேபாக் கியம் என்யோக்கியமே யோக்கியம், இனி பிரமன் - விஷ்ணு-சிவன்- இம்மூவரும் எனக்குச் சமமாவார்களோ.

தரு-இ-ம்-எ துகுலகாம்போதி-ஆதி

பல்லவி.

எனக்குவந்ததேயோகம் இதைவிடவே
ரொவர்க்குண்டிந்தவைபோகம் நான்

நினைக்கும்படியந்த மைந்தனுக்குவேதசாத்திரம்யான்
குணிக்கும்படிவந்தால் தேவனுக்குமனமகிழ்ந்து
திரிபுவனமுமெந்தன் பெருதனமாகவே
கருதிடுவாரதர்க்கொருபிசகிலாமலே (என)

பட்டமரத்திற்பொன் திட்டமுடன்காய்த்ததே
எட்டுதிக்கிலுங்குருப் பட்டமெனக்காச்சுதே
திடமுடனிரணிய நருள்சுதனாலே
கடகரியெதிர்முன் மடங்கலைப்போலே (என)

சாத்திரத்திலேயிருக்கும் சூத்திரமெல்லாமிரணியன்
கோத்திரம்விளங்கப்பாலன் தோத்திரஞ்செய்வானேயாகில்
வானவர்குருவென வரும்பிரகஸ்பதிதனை
நாநினிக்குரங்குபோ லாட்டுவேன்வாட்டமாய் (என)

செழித்தநூலின்ரசத்தைச் சீருடனேயெடுத்துத்
தழைத்தோங்கிடதயித்திய் தனயன்றனக்கூட்டியே
தகைமிகுகலைவம்ச நகர்க்கரிவரதனைச்
செகமதிலிலாமலே செய்குவேன்சிறுவனால் (என)

வாத்தி-சொல்-விருத்தம்.

கல்வியையெனதுதந்தை கர்ப்பித்தபடியினாலே
வல்லவன்மைந்தனுக்கு வாகுள்ளகுருவுமானேன்
செல்வத்தால்பயனொன்றில்லை திருத்தமாயிதையறிந்து
நல்வழிகளைப்படித்து நலமுடன்வாழ்குவீரே.

வசனம்.

கேளுங்களப்பா சிறுவர்களே, கல்விதான் யாவத்துக்கும் பிரதானமென்று இப்போதுதான் தெரியவந்தது, அது எப்படியென்றால் நான் இளமையில் விளையாடிக்கொண்டு திரிந்தால் என் தகப்பனார் வெருமைவர அடிப்பர் என்னமோவென்றிருப்பேன், அது இப்போது லோகாராட்டியனுடைய புத்திரனுக்கே குருவாயினேன் பார்த்தீர்களா ஆதலால் கல்விதான் உங்களுக்கு விசேஷமாய்வேண்டியதுநீங்களனைவரும் வரிசையாக உட்கார்ந்து பயபக்தியுடனே நம்முடைய நாவினாலேவருகின்ற மூலமந்திரங்களைக் கவனமாகக் கேட்டுப் பிராண ஆதாரமாகிய பொருளானது எந்தயிடங்களில் தங்குகின்றதோ அதை ஊணிப்பிடித்து வாசித்துக்கொள்ளுங்களப்பா பாலர்களே.

பிரகலாதனன் சொல்-வெண்பா.

தேசிகரேயிம்மொழியை சிறியேனுக்குபதேசம்
வாசிகரைமுனையறிந்த வாரிதியே -மாசுகரைப்
போலடியேனுக்கொரு போதனையேயோதுந்திரு
மாலடிக்கேயாளா மதி.

வசனம்.

ஆம் என் குருவே, இப்போது தாங்கள் சொன்ன கல்வியின் பெருமைகளை அடியேன் செவியிற் கேட்டவுடனே ஆனந்த பரவசமாயினேன், இன்னம் வேண்டுமா இதே உபதேசம் சுவாமி சுகப்பிரம்மரிஷியானவர் பரிக்ஷித்துக்குப் போதித்த மூலமந்திரம் ஒன்றையே அடியோங்களுக்கு தயவுசெய்து போதியும் போதகுருவே.

வாத்தி சொல் - வெண்பா.

ஜெயமிருந்தவிரணியர்தான் செய்தவத்தில்வந்துதித்த
நயமிருந்தபிரகலாத நாயகமே - புயலதுநீர்ச்
சொரியுமதைப்போல்வேதந் தோன்றுமுதல்பிரணவத்தை
பரிவுடனேயுரைசெய்வேன் பார்.

வசனம்.

வெற்றியிலும் கீர்த்தியிலும் சிறந்தவராகிய இரணியேஸ்வரருடைய தவபல சிரேஷ்டனாகிய அப்பா பிரகலாதனே, உன் சூக்ஷ்ம கருத்தின் பெருமையை யான் என்னென்று சொல்லுவேன், ஆஆ- மெத்தவும் புத்திசாலியென்று என் வியாபகத்தில் தெரியவந்தது, கல்வியின்றிர மின்னவிதமென்று யான் சொல்வதற்கு முன்னமே எனை மிகவும் பரிந்து பயபக்தியுடனே யான் கடைத்தேரும் பொருளைக்காண்பியுங் குருவேயென்று கருதிய கனகனருள் கண்மணியே, சந்தோஷம் தானவர் பிள்ளைகள் இத்தனைபேர்கள் இருந்தும் என்னபிரயோசனம், எந்த பிள்ளைகளாவது அந்த கல்வி இன்னவிதமென்று சொன்னரே அதை யூகித்தார்களா இல்லை அந்தரத்தில் அநேக நக்ஷத்திரங் கூடினபோதிலும் ஒரு சந்திரனுக்கிணையாகுமா ஆகமாட்டாது குழந்தாய் அப்படியே மேகமானது ஜலங்களை. எப்படிப் பொழியுமோ அத்தன்மையாகிய பிரணவநூல்களை யுனக்கு போதிக்கின்றேன் நீகவனமாக கற்றுக்கொள்ளும்ப்பா பிரகலாதனே.

வாத்தி பிள்ளைகளுக்கு நேமகங்கூறல்.

தரு - இ-ம் - யமுனு - கல்யாணி - ஆதிதாளம்

பல்லவி.

நேமகமாகபோற்றுங்கள் இரணியர்தன்
நாமமதையேசாற்றுங்கள் நாற்றிசையினில் (நேம)

அநுபல்லவி.

தாமிஷஞ்செய்யாமலே தானபானஞ்செய்து
தழைத்தலர்ந்திடுஞ்செழு கருமலர்களைக்கொய்து
தாணியில்புகழிரணியன் பதமதிலதை
கருணையுடனர்ச்சித்துச் சரணமென்னபஜித்து (நேம)

சரணங்கள்.

இந்திரன்திசைமுகமாகநின்றனைவரும்
எழில்மறைநூல்களை யோதுங்கள் தினமுஞ்
சுந்திரமலர்முகங்களிக்க சங்கல்பத்தை
தூரிதமாமனதிலெப்போதுங்கள் நன்றாய்
தொழுதனுதினஞ் சுருதிகள்முறையிடுவீர்
பழுதிலாமலேசெல்வ பதமதையடைவீர் (நேம)

முத்திக்கிமுதலென்று மொழியுமூலப்பொருளை
முனைந்துதைகூப்பிடுங்கள் அதுநமக்கு
சித்திக்கும்படிநல்ல விக்கிரஹங்களுக்குமெய்
சிறந்தெண்ணை காப்பிடுங்கள் சுண்ணமிட்டு
ஜலத்தைவிட்டலைத்து பொன்னிலத்தில்வைத்தனுதினம்
இலத்தியகலத்தீயன் புலத்தையுந்துலைத்தே (நேம)

அளவிலாவாகமங்களுக்குமேலாகிய
ஆனந்தபரஞ்சுடரே அதைநிதமும்
உளமதிற்சொருழுதிடும் பேர்க்கணுமாத்திரம்
ஓட்டுமேர்வினையிடரே பயந்தொடுங்கி
உலவியகலவையில் நிலைகரிவரதனை
விலையிடுபலமுள தலம்புகழ்கலைதனை (நேம)

தானவபிள்ளைகள் சொல்-வெண்பா.

வாத்தியரேகேளிதனல் வெகுநேரமாகிறது
சாற்றினதுபோதுமினி தயைசெய்து-நேத்தியுங்கள்
வாக்கில்வரும்பொருளதனை வண்மையுடனேயெழுதி
தூக்கியெங்களுக்குவைத் தோது.

வசனம்.

கேளும் எங்கள்வாத்தியே, நீங்கள் சொன்னதெல்லாம்போதும் வீண்காலமாகிவிடுகுது இனி தயவுசெய்து உங்கள் வாக்கிலிருக்கும்

பொருளை எழுதி தூக்கி வைத்து அதில் காட்டினீரானால் எங்களுக்குப் பிடிபடும் ஆதலால் சுவடி தூக்குகிறவேலையைப்பாரும் குருவே.

வாத்தி சொல்-வெண்பா.

தங்கத்தினால்கலசந் தாம்பூலந்தக்ஷணையுஞ்
செங்கைவிரல்மோதிரமுஞ் செபமாலை-பொங்கமுடன்
பட்டுசரிகைபிட்டகுரி கட்டுமடிதிட்டமொடு
சட்டமுடன் வட்டமணை தா.

வசனம்.

அன்னுடா தூமகேது இவ்விடத்தில் பிரகலாதனனுக்கும் தானவர் பிள்ளைகளுக்கும் வித்தியாப்பியாசஞ்செய்யவேண்டுமல்லவாகலச பூசை செய்யவேண்டுமதற்கு இரண்டாயிரங்கலம்பச்சைஅமுதுபடியும் நாலுலக்ஷம் விராகன் தாளுவதான கலசமும், எண்பது மணங்கு பாக்கும், அதற்குத்தகுந்த வெற்றிலைக்கட்டுகளும், கணையாழி மோதிரம் மாணிக்கம்வைத்து யிழைத்ததாயிருக்கவேண்டும் ஜெபமாலையோ தங்கங்களாக பத்துவீசை நிறையிருந்தால் போதுமானது, அதின் பிரகு பார்த்துக்கொள்வோம், தக்ஷணை பூவிராகனாக ஒருகோடிவிராகன் போதுமானது, வேஷ்டிகள் இதுகளைக் கொண்டுவாடா சீக்கிரமாக அடா தூமகேது.

தூமகேது சொல்-வசனம்.

ஐயா வாத்தியாரே நீர்கேட்டதெல்லாந் தாங்கள் எடுத்துக்கொண்டுபோகிறதைக் கேட்டீர்களேதவிர பூசைக்குத் தகுந்ததைக்கேழ்க்கவில்லையே, இதை எங்கே சொல்லி யிந்தக் குறையைத் தீர்ப்பேன் வாத்தியாரே.

வாத்திசொல்-வெண்பா.

மஞ்சள்ஜலம்பச்சை மாவிலையுந்தெர்ப்பை
பிஞ்சிளநீர்தேங்காய் கர்ப்பூரம் - மிஞ்சளவு
பெர்ரிகடலைவெல்லமவல் புகழ்கதலிகனியினமும்
இருகுடலைபுஷ்பமதை ஈ.

வசனம்.

அன்னுடா தூமகேது முன்னே சொல்லி விட்டமோ வென்னமோவென்று இருந்துவிட்டேன், இப்போ நீ சொன்னபோதே கியாபகம் வந்துவிட்டுது, மஞ்சள் ஐம்பது வீசை-மாவிலை-நல்ல தீர்த்தம்-தெர்ப்பை-நாரிகேளம் நாலாயிரம்- வெல்லம் ஐம்பது வீசை - கதலி

பழம் எண்பது குலை - அவல்-கடலை-பொரி-சுண்டல்- இதுகளெல்லாம் குறைவில்லாமல் கொணடுவேந்தையா, இதோ கலசபூசை செய்கிறேன் செவிகொடுத்துக் கேளுங்கள் பாலகர்களே.

வாத்தி கலசபூசை மந்திரம்.

தானவர்குலதேவாயநம: சாஸ்விதப்ரம்மகல்பாயநம;
சகலலோகதயாபராயநம; சததளநேத்ராயநம;
ஆதிவேதாயநம; வேதமுதலாயநம;
விபுதபயங்கராயநம : வீரதத்துவாயநம;
கோரஸ்வரூபாயன்னநம; கோகர்ன்னஜெயாயநம;
திதிசுதாயன்னநம; கனகாயன்னநம;
கயாதுமநோகராயனனநம; ஜெகதலப்பிரதாபாயன்னநம;

திவ்விய ரஞ்சித பாதபத்ம கேயூர மகுட வர்த்தன கிரீட இரணியேஸ்வர தீரபாராயண முத்திவித்த மூலவித்தியாரம்ப சுவஷ்டாமிய கலசபூசை நைவேத்திய சோட்ச பலவித புஷ்பாணி சமர்ப்பயாமி



வாத்தி சொல்-வெண்பா.

ஆண்மைமிகப்பெறலாம் ஆனந்தமுங்கொளலாம்
சேண்மன்னரையேவல் செயக்கொளலாம் - பூண்மதியால்
தரணியெங்கும்போற்றும் தயாபரனுமெங்கள்
இரணியனை போற்றியிருந்தக்கால்.

வசனம்.

அப்பா குழந்தாய் நான் சொன்ன பிரணவநூலை நன்றாய்க்கேட்டுக்கொண்டையா இன்னமும்சொல்லுகிறேன்கேள் அதினுட்பங்களை ஒன்றேயென்று அரிந்துக்கொண்டு விபரமாகச்சொல்லவேண்டும் அதின்விபரம் சொல்லுகிறேன்கேள்.

வாத்தி சொல் - கவி.

ஆத்மகியானத்தைவிட் டானந்தமாபர
மாத்மகியானத்தி லைம்புலன்களையொடிக்கி
ஆத்மகியானத்தைசிக் கருத்துமேயிரணிய
ஆத்மமேயடைவீ ரறிவுஉயருமே.

வாத்தி பிள்ளைகளுக்கு கூறிய நீதிபோதகம்.

மதுசனைமரந்தால் பதியிலையெவர்க்கும்
மாமிஷமரந்தால் தாமிஷகுணமாம்
பெண்டுகள்வார்த்தையைப் பிரியமாய்க்கேட்டால்
கண்டுகொள்ளானந்தங் கைப்பலனுகும்
மெதுவாயிருந்தால் மேதினிநகைக்கும்
மேலாயிருந்தால் மென்மேலும்வாழலாம்
அடங்கியிருந்தால் யாருமேமதியார்
ஆரபாரஞ்செய்வ தசுரர்க்குநன்மை
வானவர்தம்மை வாட்டுவதெல்லாம்
தானவர்குலமினி தழைத்தோங்கிவாழும்
கருணையாயிதைதினம் கருத்தினில்வைத்தே
இரணியநமாவென் றியம்புவீர்தினமே.

துன்முகன் வசன

வாத்தியாரே இப்போ நீங்கள் சொன்ன மந்திரமிருக்கின்றதே பேஷானது எங்களுக்குதகும் இவ்வளவுவித்தைஉம்மிடத்திலில்லாமலாஉமக்கு சண்டாமார்க்கரெனறு பேர்வைத்திருக்கிறுர்கள், பலேரொம்பவும் நன்றுயிருக்கின்றது, இவ்வளவுதானே இன்னம் இருக்கின்றதோ இருந்தால் சொல்லும் குருவே.

வாத்திசொல் நன்னெறிபோதகம்,

அரியென்பவனை பரிகரியுங்கள்
ஆதிமாலென்பவன் சேதியைக்கேட்டால்
இருவிழிகளிற்பொரி பெரிகிடுநமக்கு
ஈனவஞ்சமதால் பூனைபோலொடுங்கி
உருகிவாருதியினில் கரிகிப்போய்விட்டான்
ஊடாடியெதிர் வந்தாநாடாளதரமோ
எங்கும்நிறைந்த பிரசங்கமுதலெல்லாம்

ஏகவானென்ற வொளிபோகவானென்னும்
ஐயனிரணியன் மெய்யனேதெய்வம்
ஒருவனல்லாமல் வேறொருவருமில்லை
ஓங்காரப்பிரணவமது ஆங்காரமாய்வரும்
ஔயம்பேசுவது யெவ்வையும்வெல்லும்
அஃமதுசிக்கினால் முக்கியவிலாசம்
கருணைபெருமிரணியனைவிட தெய்வமெங்குந்
தரணிதனிலில்லை சாற்றினேன்பிரசங்கம்

அக்கினிக்கண்ணன் சொல் வசனம்.

கேளுங்கள் உபாத்தியாயரே உம்மிடத்தி லிருக்கின்ற நீதிகளை அளவிட ஆராலும் முடியாது, அதைக் கேழ்க்கக் கேழ்க்க எங்களுக்குவினோதமாகத்தானிருக்கின்றது, எங்களுக்குஇதேபோதும்மஹா னுபாவனுடைய குமாரராகிய பிரகலாதனருக்கு பேர்தியும் அதில் உமக்குக் கீர்த்திகிடைக்கும் சுவாமி குருவே.

வாத்தி சொல் - வெண்பா,

கல்விமுதலிரணியனைக்கருதித்துதிப்போர்க்கு
செல்வமிகச்சிறுஞ் ஜெயமுண்டாம் - வல்வினையை
தீர்க்குந்திரிபுவனத்தில் வாழ்பவரையெல்லாங
காக்கும்பிரணவமிது காண்.

வசனம்.

அப்பா பிரகலாதனு என்சொற்படி எழுது பிரகலாதனு.

துண்டு கவி.

சரணமென யேகமனதாகத்தொழுது
இரணியநமாவென விப்புவியிலெழுது.

வாத்திசொல்-தரு-இ-ம்-சங்கராபரணம்-ரூபகம்

பல்லவி.

ஜாலமின்னமேகோபாலா
ஜாலமின்னமேன் உன்
தந்தையைசிந்தையில் வந்தனஞ்செய்தெழுதிட
ஜாலம்நீயெழுதிட-ஜாலம்இன்னமேனோ
ஜாலமின்னமேனோபாலா (ஜால)

அநுபல்லவி.

நாவிதுவேநல்ல காலமிதேசொல்ல
காலமிதேசொல்லபாலா ஜாலமின்னமேனோபாலா (ஜால)

சரணங்கள்.

சீலமாமறையோர்தினம்பணிகுணபதி சீலமாமறை
தேவனைதுதித்தேற்றியே போற்றியேசாற்றிட
ஜாலம்நீசாற்றிட ஜாலமின்னமேனோ
ஜாலமின்னமேனோபாலா (ஜால)

விடமேவியஅரவணையுரமணிபரமனும் வேதனுமாலும்-பயந்
துடல்வாடியேமலையலைமலர்தனிமேலயினைத்தொளித்திடமேலும் - பெ
ரும்சடையாரிருடிகளினமொடமடமாமுநிவர்கள்கனிவொடுதிடமாய்
தொழுதிடுமிரணியக் கடவுளையடைவுடனெழுதிட
ஜாலம்நீயெழுதிட ஜாலமின்னமேனோ
ஜாலமின்னமேனோபாலா (ஜால)

பரவுந்திரைகடல்புடைசூழ்படியினந்தினம்பணிந்திடும்பாதன்- என்று
ம்நிரைவாகியசுருதியைக்கருதியமுதல்வரும்புகழ்ந்திடும்போதன்-எ
ங்கும்-இரவிலும்பகலிலுமிரவான்வரமதிலுயர்ந்திடுமுரவான்
திரமொடுதரைமிசை தொழுதிடும்பரமனை இரணியநமவென
ஜாலம்நீநமவென ஜாலம்இன்னமேனோ
ஜாலமின்னமேனோபாலா (ஜால)

நிலையாகியதிருவுளமகிழ்ந்தருள்தரும் பொருளொன்றே-வெகு
பலமாகியவானவர்தானவர்களுமுன்னின்றே-தொழக்
கலவையில்மேவியதிரு கரிவரதனைபரிகரிந்தனுதினம்
பலமதமதாயுலகினையாட்கொளும் பதியதைநிதியொடுதுதிசெய
ஜாலம்நீதுதிசெய ஜாலமின்னமேனோ
ஜாலமின்னமேனோபாலா (ஜால)

வாத்திசொல்-வசனம்.

அப்பா குழந்தாய்! ஜாலமேன் இரணிய நமாவென்று சீக்கிரம் எழுது தாமிஷமேன், சொற்க மத்திய பாதாள மென்கிற திரிலோகத்திற்கும் தெய்வமாய் விளங்கும் பொருளான பரம் ஒன்றே வேறொன்றில்லை ஆகலால் நீ இதே முதற்பொருளென்று எழுதுமப்பா பிரகலாதனை.

பிரகலாதனன் சொல்-வெண்பா.

ஹரிஓம்நமாவென்றே யாதிமுதல்வேதமதில்
பரிவாயுரைக்குமெழில் பிரணவமதை-யுணாயாமல்
தீதுசெய்யும்ராக்ஷதனை தெய்வமெனவேமுனைந்து
வோதுவது போதும்துணர்.

வசனம்.

ஹரி ஹரீ-ஹரி ஓம் என்று வேதமுதல் விளங்கும் மூலமந்திரத்தை அடியேனுக்கு போதிக்காமல் தீதுடைய இராக்ஷதனை போதிக்க வந்தீரோ இதுவென்ன வன்னீதம் குருவே ஹரிஹரீ.

பிரகலாதனன் தரு-இ-ம்-காபி-ஆதிதாளம்

பல்லவி.

ஹரிஓம் நமோநாராயணனே ஹரி
குருவே வேதமுதல்கோரும் பாராயணனே (ஹரி)
பெருகிவாரிதிசூழ் புவனமதில்வாழ்
பெரியோர் மறையோ ருரையும்முனைஸ்ரீ (ஹரி)
வேதமுதலாதி விளங்கும்பிரக்யாதி
விகிதம் சுகிதம் மகிதம் மாதவம் (ஹரி)
சூக்ஷ்மநிலையறிந்து தொழுதனைபுரிந்து
துதிக்கும் மதிக்குள் நிதிபோல் விளங்கும் (ஹரி)
கலவைகர்மேவும் கரிவரத னன்றியாவும்
கருதுஞ் சுருதி பரிதி யொளிபோல் (ஹரி)

வாத்தி சொல் - வெண்பா.

பாலாயிதுவென்ன பரியாசம்ஹரியையினி
மேலானவனென்று விளம்பாதே - நாலாம்
பதமளிக்குமிரணியனை பகவானென்றேதொழுது
இதயமதிற்சதமிதுவென் றெழுது.

வசனம்.

அப்பா இதென்ன உன்குணம் மாரினகாரணம் தடமாடிவிட்டதோ, விளையாட்டின்பேரில் வந்துவிட்டதோ, ஆஆ-பரியாசக்காரனை பாம்பு கடித்த பாவனையாகப் போய்விடும், அதை இனி நினையாதே

உன்னையும் என்னையும் மற்ற சகல சமஸ்தத்தையும் காத்து ரக்ஷிக்கும் பொருளாகிய இரணிய நாமத்தை யெழுதும் பிரகலாதனே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

ஹரிஹரிமுகுந்தநாதா யானந்தகிசயவிநோதா
திருமகள்மகிழ்சமேதா திவ்வியமங்களபொற்பாதா
பெருகுமிவவாத்திகுதாய்ப் பேசுவதெல்லாம்வாதா
உருகுதெந்தனுக்குநீதா னுகந்துவந்தருள்செய்தாதா.

வசனம்.

ஹரிஹரீ ஓம் நமோ நாராயணா -ஆபத்பாந்தவா- பன்னகசயனா- பதுமநாபா -புராண புருஷோத்தமா- புண்டரீகாக்ஷா- குக்ஷகடாக்ஷ மோக்ஷ சாக்ஷாத்காரமாய் விளங்காநின்ற யென்னப்பனே குலகுருவாகிய சண்டமார்க்கனைவர் சொன்ன வசனத்தைக் கேட்டமாத்திரத்திலே என்னிரண்டு செவிகளிலும் நயங்களைக் காச்சி ஊத்தின பாவனைபோலிருக்கின்றதே இந்த பாவத்திற்கு என்னசெய்வேன் ஹரிஹரீ.

பிரகலாதனன் சொல் தரு-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி.

ஆதரிமாதவாயெனை-பூதலமேல்-ஆதரிமாதவாயெனை

அநுபல்லவி.

வேதமுதலோதிய-நீதியெனுஞ்சோதியே
காதலுடனுந்தனை நம்பினேனே-தாமோதரனேயெந்தனை
காருந்திரு சமேதவைகுந்தனே இந்தவேளை (ஆதரி)

சரணங்கள்.

எத்திசையும்புகழும் பக்தர்மனமகிழும்
நித்தியபரிபூரணா - அன்பர்க்கிதங்கி-முத்திதரும்காரணா
கராமடுவில்-அத்திகருள்தாரணா-ஜெயசரணா (ஆதரி)

வாழ்வைச்சதமென்றெண்ணி-தாழ்வதேனோயான்குண்ணி
வீழ்வதிதுஞாயமோ-வனஜமதில்- வாழ்நான்முகன்
மாயமோ-யெல்லாமுன்செய்த-ஊழ்வினையின்காயமோ-இது
நேயமோ (ஆதரி)

கருதுங்கலவைக்கரி வரதனெனும்ஸ்ரீஹரி
பிரியமுடன்வாருமே-கெருடனேரி-சிறியேன்முகம்பாருமே
சிந்தைகூர்ந்தினி திருவாய்மொழிகூருமே-குறையாறுமே (ஆத)

வாத்தி சொல்-கொச்சகம்.

ஆதிமுதல்வேதமதில் அமையுமிரணியேஸ்வரர்தன்
பாதம்தையோதியே நீபாகெதியும்டையாமல்
சூதுமிகுகாதகஞ்செய் திருடனந்தமாயனிட
சேதியரியாமலேநீ செப்புவதுவொப்பாதே

வசனம்.

அப்பா இதென்ன விவேகம் முதல்பொருளென்னும் இரணியநா மந்திரத்தை நானுனக்கு போதித்தால் அதை நீ தெளிந்துவோதி நல்ல கீர்த்திகளை யடையாமல் அந்த மாயன் சங்கதிதெரியாமல் அவனைத் துதிப்பது ஞாயமல்ல, அந்த வீண்மதியை விட்டுப்போடு அதை இனி கினவிலும் நினைக்கப்போகாது, ஜலத்தைவிட்டு நன்றாய் வாயை அலம்பிவிட்டு இரணியநமாவென்று யெழுது அப்பாபிரகலாதனே.

பிரகலாதனன் சொல்-கலிவிருத்தம்.

இக்குவேள்தனை யீன்றிடும்நாதனே யீதென்ன கொடுமைகுரு போதனே, முக்கியமிதுவென்றொருசாதனை முறையமிடுகிறுர் மலர்ப் பாகனே, சர்க்கரைப்பாலிருக்கக்கறைதனை தானுண்பாரோஜெகம்தில் வேதனே, சிக்கருத்துனையேதொழுதேத்திடசித்தம்வைத்தெனையாட் கொளும்ஸ்ரீதரா.

வாத்தி சொல்-விருத்தம்.

ஏதடாவடாதுன்மார்க்கா யீனமாயனையென்முன்னே
ஓதிடவந்தாயுந்த னுளமதில்பயமில்லாமல்
காதிடமன்னரெல்லாங் கருதியேஇரண்ணியநாமம்
ஓதிடவிட்டுவேறு உளருராயறிவில்லாமல்.

வசனம்.

அட யென்னடா சிறுவா உன்னை மெத்தவும் புத்திசாலியென்று நான் எண்ணி நல்ல பொருளை யுரைத்தால் அதை கருத்தில் கவனமாக யெழுதாமல் துன்மார்க்கமான வார்த்தைகளை யெல்லாம் உளருகின்றாய் வேண்டாம் கெங்கையும் மூன்றுபிழை பொருக்குமென்று

சொல்வார்கள் அப்படி நானும்மூன்றுதரம் பொருத்தேன், இனிஅந்த யீனமாயனை சொன்னதேயாமானால் அதிக கோபம் வந்துவிடும் என் சொற்படி யெழுது மூடா விவேகமிலாச் சிறுவா.

பிரகலாதனன் சொல் தரு-இங்-சுருட்டி-சாப்புதாளம்.

பல்லவி.

கோபஞ்செய்வதாகாதையா யென்குருவே
குவலயந்தில்தவம்ருமே மனதினிற்சினமெனுங் (கோப)

அநுபல்லவி.

பாபமொழித்துப் பதிதரும்பதுமநாபனடியை
நாடிக்கொண்டாடினார் (கோப)

சரணங்கள்.

அலைந்தலைந்துவவனியையோர் குடையதின்
நிழலிலரசா ளசுரனை
நிலையென்றிங்கு நிகழ்த்துவதுமக்கு
நீதியோவேதியரே யதிவேகமாய்க் (கோ)
சித்திதரும்பொருளைவிட் டருளிலா
தீயவஞ்சகச்சித்தனைசுத்த னென்று
பத்தித்தொழுதுப் பணியென்றெனக்குநீர்
பண்ணுமுபதேசம் வண்மையோஉண்மையோ (கோப)

மந்திரமாமறையோர்புகழ்ந் தேத்திய
மாசிலாவற்புத சாஸ்வித மாகிய
செந்திருவாழ் கலவைக்கரிவரதர்
சேவடியைமிக வாவல்கொள்ளாமல்நீர் (கோப)

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

அறிவினிலுயர்ந்தோரெல்லா மாதிநூல்சாஸ்திரத்தில்
அரிமுதலென்றுசொல்லி யப்பியாசஞ்செய்வாரத்தை
அரியாமல்வெரிகொண்டந் ந வரக்கனைதெய்வமென்று
அரிவிக்கத்தானேவந்தீ ரசுரர்கள்குலத்துக்கெல்லாம்

வசனம்.

கேளும் குருவே கோபித்துக் கொள்ளவேண்டாம் அறிவினிலுயர்ந்த பெரியோர்களும் ஞானவான்களும் முதல்வித்தை யப்பியாசஞ் செய்தால் ஹரி ஓம் என்னும் மூலமந்திரத்தை போதிப்பார்கள்தாங்களதை விட்டுவிட்டு மோக்ஷத்திற் கேதுவில்லாத இராக்ஷதனுகிய

இரணியனை முதல்பொருளென்று அசுரர்களுக்கு போதிக்கும் வல்லமை உம்மிடத்திலிருக்கின்றதல்லவா உம்முடைய தைரியத்தைக்கடவுள்தான் விசாரிக்கவேண்டியது குருவே, இனியாவது நன்றுயோசித்துப் பரத்வமின்னதென்றறிந்து மகானுபாவராகிய ஹரிநாமஸ்மரணமென்பதை யறிந்துணைப்பிரயோமாகில் உன்னையீன்ற தாய்தகப்பனும் என்னையீன்ற தாய்தகப்பனும் நல்ல விருத்தியடைவார்கள் இல்லாவிட்டால் அழிந்துபோய்விடுவார்கள் குருவே.

வாத்தியாயருக்கும் பிரகலாதனனுக்கும் தர்க்கம்

தரு-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்.

அடடாயீதென்னடாமூடபாலா
ஹரிஓமென்றிங்கேயென்முன் ளைக்குராய்மேலாய் (அட)
தடமுடிபுனைந்த தைத்தியகுலதேவனை
தாரகமென்றெண்ணுமல் தனித்தொன்றைபினத்துவது (அட)

பிரகலாதனன் சொல்-தரு.

தனித்திடுஞ்சஹஸ்த்ரதளநேத்ரன்
சமஸ்தவேதத்தின்முதல் தங்குஞ்சத்விஷயபாத்திரன் (தனி)
பனித்துளியதினுல்பயிர் செழித்தோங்கியே
பலனதுதரும்ா பாபமதாளைரும்ா (தனி)

வாத்தி சொல்.

பலன்தரும்பொருளென்றல்லோதேவர்
பணிந்துகைகூப்புகின்றார் பலமுனிவர்யாவர் (பல)
நிலையென்றனுதினம் நிகழ்த்திடுமிரணிய
நமாவென்றெழுதினல் சுகமாகவாழ்வாய்கேள் (பல)

பிரகலாதனன் சொல்.

வாழ்வைசதமென்றெண்ணி இனியேனே
வரக்கனைதெய்வமென்றாய் வயிர்வளக்கத்தானே (வாழ்)
சூழ்வினையினுல்வந்த தேகனையோகனென்றே
செப்பிடத்துணிந்தீரோ வொப்புமோஉலகத்தில் (வாழ்)

வாத்தி சொல்.

ஒப்பாதென்றிங்கேநீயுளரிடாதே
ஓதுங்கனகமந்திர மூலமறிந்திடாதே (ஒப்)
எப்போதைக்குமுன்தந்தை யீசனுக்குமேலாமே
இதையெண்ணிப்பாராமல் என்சொற்படிகூறாமல் (ஒப்)

பிரகலாதனன் சொல்.

எண்ணும்சுகந்தரும்ஆதிமூலமே
என்றோதிடாஜென்மமெடுத்ததுவும்வீண்காலமே (எண்)
பண்ணுந்தவப்பயனே பாரிலெனைப்படைத்து
பாகமொழிகேழ்க்க மாதவாவுன்செயலோ (எண்)

வாத்தி சொல்-தரு.

மாமாதவனென்றிடும் துன்மார்க்கசேயா
மானமென்பதுனக்கில்லைமதியில்லாதபேயா (மாத)
காதகனுங்கலைவைக் கரிவரதனைநீ
கருதிடஞாயமா நிருதர்குலதுரோகி (மாத)

பிரகலாதனன்-சொல்.

கருதுநூல்வளர் கலைவைவாசன்
கவிக்குதவிசெய்திடுங் கரிவரதராஜன் (கரு)
சுருதிமுதலிலேதோன்றும் பிரணவமதை
சேர்தித்தினிமேல்நன்றாய் போதித்திடுங்குருவே. (கரு)

வாத்தி சொல்-விருத்தம்.

அச்சமில்லாமலென்ன வடிக்கடிஹரிஓமென்று
மெச்சிடப்புகழுராயுன் மேனியில்சதைகள்ரத்தம்
பிச்சிடவரும்படிக்குப் பிரம்பினாலடிப்பேன்தேவ
நெச்சனென்றிருந்ததாலே யிப்படிசொல்லவந்தாய்.

வசனம்.

அடா என்னடா கொஞ்சமாகிலும் அச்சமில்லாமல்என்மொழிகளைத்தடுத்து, ஹரிஓமென்று மொருவுகிராயா நான் இரணியதேவனுடைய புத்திரனென்று இதுவரையிலும் மரியாதையாகச் சொன்னேன், இனி தாக்ஷண்ணியம பாரேன் பிரம்பினாலடித்து சதைத்துவிடுவேன் நான் சொன்னபடி யெழுதடா சிறுவா.

பிரகலாதனன் சொல்-தரு-இ-ம்-சுருட்டி-ஏகதாளம்

பல்லவி.

கோபஞ்செய்வதாகாதையா யெந்தன்குருவே
குவலயமதித்தவருவே-மனதினிற்சினமெனும் (கோப)

அநுபல்லவி.

பாபமொழித்துப்பதிதரும்பத்மநாபனடியை
நாடிக்கொண்டாடினால் (கோப)

சரணங்கள்.

அலைந்தலைந்துயவனியை யோர்குடை
மதிநிழலிலரசா ளசுரனை
நிலையின்றிங்கு நிகழ்த்துவ துமக்கு
நீதியோவேதியரேயதிவேகமோடு (கோப)

சித்திதரும்பொருளைவிட் டருளிலாத்
தீயவஞ்சகசித்தனை சுத்த னென்று
பற்றித்தொழுது பணியென் றெனக்குநீர்
பண்ணும்உபதேசம் வண்மையோ உண்மையோ (கோப)

மந்திரமாம்மறையோர்புகழ்ந் தேத்திய
மாசிலாவற்புத சாஸ்வித மாகிய
செந்திருவாழ்க்கலவைக் கரிவரதன்
சேவடியைமிக வாவல்கொள்ளாமல் (கோப)

இதுவும் பிரகலாதனன் சொல்

தரு-இ-ம்-இந்துஸ்தான்-காபி-ஏகதாளம்

பல்லவி.

தகாது தகாது குருவே-தைத்தியனைத்தொழத் (தகா)

அநுபல்லவி.

சுகாதீதமானபரி சுத்தமெனுமத்விதத்தை
விகாதமாகநினைந்து வேறொன்றைக்கூறுவதும்க்குத் (தகா)

சரணங்கள்.

தாலமுழுதிலும்வளரும் சர்வஜீவன்களுக்குமநு
கூலமெனும்பொருளைவிட்டுக் கொடியனைப்படியினிலெழுதத் ()

திவ்வியரஸ்தாளிபலா தேங்குமாங்கனிகற்கண்டு
ஒவ்விஇருகையினிலெட்டிஉண்ணநீரெண்ணுவதிப்போது (தகா)

கற்றறிவில்லாதவரை க்ஞானவந்தரென்பதுபோல்
சுத்தமில்லாப்புல்லனைநீர் தேவனென்றுவல்கொள்வது (தகா)

செல்விவளர்கலவையில்வாழ் திருக்கரிவரதர்பதம்
கல்விமுதலில்விளங்கும் கருத்ததையுறுத்திநீபாராமல் (தகா)

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

தானவர்குலத்துக்கெல்லாம் சதிருடன்வேதமோதி
மேன்மைகள்பெரவேவந்த வேதியரோநீர்கேளீர்
கானலைநீரென்றெண்ணிக் கடிகிப்போய்புசிப்பாருண்டோ
யீனனைதெய்வமென்று யியம்பிடநீதியாமோ.

வசனம்.

கேளும் குருவே தானவராகிய இராக்ஷதபாலியர்களுக்கு கடைத்தேரும் பொருளாகிய நூல்களை யோதிவைத்து மேன்மையும் கீர்த்தியும் பரிசுகளும் பெற்றுக்கொள்ளவந்தவர் யுக்தாயுக்தமரியாமல்போதிக்கின்றீரோ அதில் உமக்கு என்னசிலாக்கியம் ஒன்றுமில்லையே தாகவான்களுக்கு ஜலமிருக்குமிடங் காண்பிப்பது நீதி அதைவிட்டு கானலைக்காண்பித்தால் அதிலென்ன பிரயோசனம், அதுபோல் இன்பமில்லா மூடனை முதற்பொருளென்று கொண்டாடுகிறீரோ போதும் போதுங் குருவே.

வாத்தி சொல்-விருத்தம்.

அடிமீதிலடியடித்தா லம்மியுநகருமென்று
படிமீதிற்சொல்லுவார்கள் பரிஷ்காரமாகத்தானே
துடியாம்லெதிர்த்துப்பேசுந் துன்மார்க்கப்பயலேயுன்னை
சடியாமல்வாதைசெய்து தலைவனைத்துதிக்கச்செய்வேன்.

வசனம்.

அடா அறிவிலாத சிறுவா கொஞ்சமாகிலுங் குருவென்கிற மரியாதையில்லாமல் எதிர்நின்று யேடாகூடமான வார்த்தைகளை இன்னம் உளருகிறையா அதுயேன் அடிமேலே அடியடித்தால்அம்மியும் நகருமென்னும் பழமொழியென்ன தப்பா உன்னிடத்தில்தான் தெரியவருகிறது இதோபார் அரைநொடிக்குள் அபயம்பயமென்று கதறச்செய்கிறேன் பாரடா பாலா.

வாத்திக்கும் பிரகலாதனனுக்கும் தர்க்கம்

தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

வாத்திசொல்.

இரண்ணியநமாவென்றேசொல்லியெழுது-அடடாமூடா
யீனமாயவனைத்தொழுவதுபழுது
இரணியநமாவென்று தரணியிலனைவருங்
கருணையுடன்துதிக்கும் பிரணவப்பொருளாமந்த (இரணி)



பிரகலாதனன்-சொல்.

ஆதிவேதமுதலிற்றங்கும் ஹரியைவிட்டு
அகமதில்வினேயேனொருவரை யெங்கும்
ஆதியந்தமுடிவில் சோதியாகவிளங்கும்
நீதியுடன்மறையோ ரோதிவரும்பிரசித்த (ஆதி)

வாத்தி சொல்

பேயாயுனக்கென்ன இந்தபுத்தித் தாருமாராகப்
பிணத்துகிறாய்வீணாய் கத்தி
பேயாமதியில்லாமல் வாயால்வந்தமட்டுக்கும்
மாயாவென்றடிக்கடி சேயாபிணத்திடாமல் (இரணி)

பிரகலாதனன் சொல்.

பெருமைதரும்பொருளைவிட்டு துன்மார்க்கஞ்செய்யும்
பேயினைதொழுவனோ மதிகெட்டு
பெருமையுடனடியா ருருமையறிந்துமவர்
சிறுமைகளையகற்றும் பொருமைமிகுந்ததிவ்விய (ஆதி)

வாத்தி சொல்.

சாட்டிப்பிரம்புகளைநானெடுத்து சக்கைசக்கையாய்
சதைவேரொலும்புவேரா யெடுத்து
சாட்டிகளாலுந்தனை வாட்டிடுவேன்கோபத்தால்
நீட்டிநீட்டியென்னெதிர் போட்டியாகப்பேசாதே (இரணி)

பிரகலாதனன் சொல்.

சதைசதைத்திடவேநறுக்கினாலும் ஸ்ரீஹரிநாமந்
தான்மறவேனேயானொருக் காலும்
சதைசதைத்தெந்தனை வதையதிகஞ்செய்தாலும்
புதைப்பொருளாய்விளங்கும் பதப்பொருளாமிங்கித(ஆதி)

வாத்திசொல் தரு.

பலவானவரென்றேகுறியாமல் வீணாகப்பாழில்
பதறிவிழுகிறாய் தெரியாமல்
பலவானவருக்கந்தக் கலவைக்கரிவரதன்
இலவம்பஞ்சிக்கொப்பென நிலையாசொன்னேனிப்போது (இர)

பிரகலாதனன் சொல்.

கருதுங்கலவைகர்வாசன் கவிக்குதவி
காசூஷியீயும்கரிவாத ராஜன்
கருதுமன்பர்களிட யிருதயங்களிற்றுதி
பொருதுமையனைவிட்டு நிருதனை துதித்திடேன் (ஆதி)

வாத்தி சொல்-விருத்தம்.

துதித்திடேனென்றுசொல்லுந் துன்மார்க்கமதியையிப்போ
கொதித்திடுமனலிற்காச்சும் குழைமெழுகதைப்போல்நெஞ்சை
சிதைத்திடயென்னுலாகுந் திரமாயிரணியநாமம்
மதித்தினிதுதித்தாயானுல் மகிழ்ந்துசீர்பெருவாயப்பா.

வசனம்.

கேளடா மூடசிகாமணியாகிய பிரகலாதனு, உன் துன்மார்க்க மதியை திருப்புவதற்கு யென்னுலாகாதென்று யோசிக்காதே நெருப்பில் காச்சிய மெழுகைப்போல் உருக்குவதற்கு என்னுலாகும் ஏன் வீண்யோசனைகொண்டு கெட்டுப்போராய் என்சுரூபம் இன்னமுனைக்குத் தெரியவரயில்லையோ வேண்டாம் இனியாவது என் சொற்படி இரணியநாமமந்திரத்தைத் தொழுது எழுதுவையானுல் நீ நல்லசுகத்தை யனுபவிப்பாயடா சிறுவா.

பிரகலாதனன்-கரு-இ-ம்-இந்துஸ்தானி-ஏகதாளம்.

பல்லவி.

தகாது தகாதுகுருவே தைத்தியனைத்தொழ (தகா)

அநுபல்லவி.

சுகாதீதமானபரி சுத்தமெனுமத்விதத்தை
விகாதமாகநினைந்து வேறொன்றைக்கூருவதுமக்குத் (தகா)

சரணங்கள்.

தாலமெங்கும்வளரும் சர்வஜீவன்களுக்குமனு
கூலமெனும்பொருளைவிட்டுக்கொடியனைப்படியினிலெழுதத் (த)
திவ்வியரஸ்தாளிபலா தேங்குமாங்கனிகற்கண்டு
ஒவ்வியிருகைதனிலெட்டியுண்ணநீரொண்ணுவதிப்போது(தகா)
கற்றறிவிலாதவனை க்ஞானவந்தனொன்பதுபோல்
சுத்தமில்லாப்புல்லனைநீ தேவனென்றுவல்கொள்வது(தகா)

செல்விவளர்லவையில்வாழ்    திருக்கரிவரதர்பதம்
கல்விமுதலில்விளங்கும்    கருத்ததையுருத்திரேபாராமல் (தகா)

பொது-விருத்தம்.

சீரியேபுகர்தன்மைந்தன் செப்பியவசனங்கேட்டுப்
பாரினில்விழுந்துசேயன் பஞ்சபூதமுங்கலங்கி
கார்முகில்மேனியானைக் கருத்தினில்திருத்தமாகத்
தேரியேஹரிஓமென்று சிந்திப்பான்வந்திப்பானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக சுக்கிரர்குமாரராகிய சண்டாமார்க்கர்கோப சித்தனுக சொன்னவசனத்தைக் கேட்ட பிரகலாதனனவன் பூமியிலே விழுந்து பஞ்சபூதங்களுங் கலங்கி பங்கயம்போல ஜொலிக்கும் முகம் கலங்கி ஓம்பஞ்சாயுததாருகிய மெய்ஞ்ஞானப்பொருளேஎன்னப்பனே யென்று துதிக்கும் விதங்காண்க.

தரு-இ-ம்-பிலஹரி-அடதாளம்

பல்லவி.

ஹரியேதுரைகாரணு    ஆகமங்களில்
நிறைவாகியபூரணு

அநுபல்லவி.

அரியேயுனைபரிகரியென்றெனைகுரதட்டியேயுதட்டியே
முறையமிடுகிறுரிதற்கென்செய்குவேன்
சிரியனெனக்குநல்கிருபைபுரிமுர    (ஹரி)

சரணங்கள்.

அடியாரிடர்தீர்த்தவா    தடமதில்முறையிடு
மானையைக்கார்த்தவா
திடமோடுனைமடமுநிவர்புகழ்திருநாதனேபோதனே
கொடியனிரணியனடியைத்துதிசெய்யக்
கடினமிடுகிறுரடியேனென்செய்வேன்    (ஹரி)
விண்ணேர்பணிமாயனே    யெங்கும்நிறைந்
தொன்ருகியநேயனே
தண்ணுந்தாமரைக்கண்ணனேயுனைத்தாவினேன்கூவினேன்
யென்றுமுனைத்துதி பண்ணயெனக்குநல்
லுண்மையருள்மணிவண்ணனேஸ்ரீ    (ஹரி)

அலைமேல்துயில்கொண்டவா கமலையுறமலர்
மார்பினிற்பூண்டவா
நிலையென்றனைத்துதிபுலவர்க்கிரங்கியநித்தியனேபரிசுத்தனே
உலகிலுனைவிடவொருவரில்லைகதி
கலவைநகர்கரிவரதனேதிரு (ஹரி)

வாத்தி சொல்-விருத்தம்.

கோடிரத்தினத்திலேர் குருடடுக்கல்முளைத்தாற்போல
மேட்டியாய்ப்புகழ்பெற்றோங்கு மிரணியேஸ்வரன்வயற்றில்
போட்டிசெய்திடவோநீதான் புத்திரனுய்வந்துதித்தாய்
நாட்டினில்நகைப்பார்கேட்டால் நான்சொன்னபடிநவில்வாய்

வசனம்.

அடா மூடப்பயலே உனக்கென்ன கொஞ்சமாகிலும் விவேகமென்பது விளங்கவில்லை கோடிரத்தினங்களைக் கொட்டியாராய்ந்து தேடியெடுத்தவர்கையில் குருட்டுகல்அகப்பட்ட பாவனைபோல்நீஎங்கள் இரணியேஸ்வரர் வயற்றில் எங்கேயிருந்து பிறந்தாயடா அறிவில்லாச்சிறுவா வாயைமூடு போதும்போதும்-இதையிவ்வுலகில்யாராகிலுங் கேட்டதேயாமாகில் சிரிக்கப்போகிறார்கள் என்சொற்படி படியடா பாலகா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

படிபடியென்றுவீண்பழிக்காளாய்ப்போநீரையா
பிடியிடைகற்புமாதர் பேய்க்கிடங்கொடுப்பாரோசொல்
கடிகமழ்மலர்க்கொப்பான கௌத்துவாபரணன்பாதம்
அடியனுக்கிருக்கப்பொல்லா வசுரனைத்துதிப்பதேனோ

வசனம்.

கேளும் குருவே தாங்கள் ஏன வீண்யோசனைகொண்டு எனை மிரட்டியுருட்டிப் பார்த்துப் படியடாவென்று உபத்திரவப்படுத்துகிறீர் ஜெகத்ரக்ஷகராய் விளங்கிய ஸ்ரீமந் நாராயண மூர்த்தியினுடைய திருநாமமந்திரமே நமக்கு தாயகமாக யிருக்கின்றபோது அதைவிட்டு மோக்ஷத்திற்கு யேதுவையில்லாத இராக்ஷதனைநீரபேக்ஷித்துருக்ஷம சுருதிகளுக்கு முதன்மையென்று உமது வாய்கூசாமல் அடியேனுக்கு போதிப்பதில் என்வாக்கில் வருமோ ஒருக்காலும் வரமாட்டாது

கற்புடைய மாதர்கள் பேய்களுக்கிடங்கொடுப்பாரோ, எங்கையாவ துண்டா நீரேன் பழிக்கியாளாகப்போகிறீர் குருவே.

வாத்தி சொல்-விருத்தம்.

தேங்கியேமுனிவர்சித்தர் செழுமறையோர்கள்வானோர்
சோங்கியேயிரணியன்முன்னே துதிபபதையறிந்திருந்தும்
சாவகமாயதையோதாமல் தாறுமாராகவந்த
தீங்குசெய்மாயன்தன்னைச் செப்புவதொப்பாதப்பா

வசனம்.

அடயென்னடா முடமதியையுடைய கெடுவா,தேவர்களும்முனி வர்களும் வேதமறையோதும் மாதவரும் திருஷ்டாந்திரங்களைகட்டிக் கொண்டு பணிவதை நீபார்த்திருந்தும் தெரியாதவன்போல் ஹரியெ ன்பவனை யுளறுகிறாய், இனியாவது தெளிந்துக்கொண்டு இரணிய வமாவென்று சொல்லடா சிறுவா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

பரந்தலைபரவைசூழும் பாரில்வாழ்முன்னோர்க்கெல்லாஞ்
சிறந்தநற்பொருளாமாதி ஸ்ரீதரனொருவனென்பார்
தாரதரமறிந்திடாத தைத்தியனைதெய்வமென்று
நிரந்தரமாயுரைக்க நீதியோமுறையோவையா

வசனம்.

கேளுமென்குருவே இந்த சமுத்திரஞ்சூழ்ந்த வையகத்தில் வா சம்தொருந்திய சகல ஜீவாத்துமாக்களும் ஸ்ரீமந் நாராயண மூர்த்தி யின்பொற்பாதகமலங்களைத்துதிப்பதே மோக்ஷத்துக்கு வாய்த்தபொ ருளென்று பெரியோர்கள் சொல்லுவார்களேயன்றி வேறொன்றில் லையே அதை தாங்களறியாமல் தாரதன்மையில்லாத ராக்ஷதனை தெ ய்வமென்பது முறையல்லவே மறையவரே.

பிரகலாதனன் சொல்
தரு-இ-ம்-சாமா-சாபுதாளம்
பல்லவி,

முறையோமறையோதியகுருவே ஹரி
துரையேநீகுறையென்பது (முறை)

அநுபல்லவி.

திருமாமலரணியும் எம்பெருமான் பதமுதலனையாவும்
போதித்திடு மாதியேநீ பேதிப்பது நீதியல்ல (முறை)

சரணங்கள்.

வேதமுடிவில்விளங்குஞ்ஜெகநாதனையோர்தரமாகிலும்
நினையாதபேர்மனம் வெம்பியகனிபோலதுவினையாகிய (முறை)
காதகன்காமுகன் கனருணபாதகன்றனைபரமென்றோதி
பன்னுகிறீரன்னிதமாய் மன்னுமுலகென்னுமிது (முறை)
அலைகடல்சூழருமறைதொழுங் கலவைநகர்கரிவரதரருள்
காற்குங்கவியோர்க்குமிடர்தீர்க்குஞ்சண்டமார்க்கரேகேள் (மு

வாத்தி சொல் - விருத்தம்.

முறையென்றேமுநிவர்சித்தர் முழுதபோதனர்கள்தேவர்
உரையிரணியநமாவென் றோதியேவருகும்போது
குறையென்றேயதைநீமெத்தக் கூறுகின்றாயேபாவி
இறையவநிதியறிந்தா லிடர்வருமெண்ணிப்பாராய்.

வசனம்.

ஏதடா கொஞ்சமாகிலும் உன்நெஞ்சிலீனமானமில்லாமல் வஞ்சகஞ்செய்யும் பஞ்சமாபாவியாகிய மாயனைக் காயமென்று எனக்கு ஞாயஞ்சொல்ல வருகிறாய் போதும்போதும் நல்ல புத்திசாலிதான் பிரதிதினமும், தேவர்-முநிவர்-ரிஷிகள் முதலான பேர்களும் இரணிய நாமமந்திரத்தைவிட நமக்கு வேறொரு ஆதாரமில்லையென்று அல்லும்பகலுமறுபதுநாழிகையும் தோத்திரஞ்செய்வதுமன்றிப் பணிவிடையேவல் செய்துக்கொண்டு வருகிறார்களே அதையாவது பார்க்கவில்லையா இதுகளை யோசியாமல் தாறுமாறாக பதறாதே இதையுன் தந்தையறிந்தாலுனக்கு அனேகயிடர்கள் வந்துநேரிடும் இதை நன்றாகயெண்ணி என்சொற்படி துதிசெய்துவருவாயாகில் சுகம்பெறுவாயடா பாலகா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

எண்ணுமரிதனைத்துதிப்போர்க் கிடர்வருமோ
யெழில்மிகுந்த வாவின்பாலை
உண்ணுதற்குக்கூலிதர வேண்டுமென்று
உரைப்பாரோ யுணர்வில்லாமல்
பண்ணுகிறீ ருபதேசம் வீணேயன்றோ
பழமிருக்கக்காய்புசிக்கப் பயன்படாதே
விண்ணுலகம்மண்ணுலக மெங்கும்போற்றும்
வேதம்தைவிபரமதா யுரைசெய்வீரே.

வசனம்.

கேளுமென் ஆசாரியரே, எப்போதைக்கும் எம்பெருமானுகிய ஸ்ரீயங்காராயண மந்திரத்தை தியானஞ்செய்கிற பேர்களுக்கு இடரென்பது தீபத்தைக்கண்ட இருள்போல் நீங்கிவிடுமே, அதைநீர்சொற்பமாக நினைக்கவேண்டாம், மேலும் பசுவின்பாலை யுண்ணுவதற்கு யெவராகிலும் கூலிகொடுத்தால்தா னுண்பேனெனபார்களோ, ஏன் உமக்கு அவ்வளவு வருத்தம் சர்வலோக தயாபரன் நாமமந்திரத்தை போதித்தீரேயாமாகில் சுகமடைவேன் குருவே.

வாத்திக்கும் பிரகலாதனனுக்கும்தர்க்கம்.

தரு-இ-ம்-பேகடை அடதாளம்
வாத்திசொல்.

எதிர்த்துவார்த்தைநீபேசுராய் என்னடாபாலா
யெண்ணப்படியேவீசுராய் முன்பு
கதித்ததேவருமஞ்சி கலங்கிமனநடுங்கி
காவலன்சொற்படிக்கிக் கிடக்கின்றாரடங்கி
சிரித்துபுரமெரித்த சிவனுமோடியடங்கி
திசைதெரியாமல்போன திருமாலைநீதுடங்கி (எதிர்)

பிரகலாதனன்-சொல்.

துடங்கியவினைபோகும் ஸ்ரீஹரிநாமம்
சொன்னாலானந்தமாகும் என்று
திடங்கொண்டுவரக்கனைத் தெய்வமென்று சொல்லாதே
திருமாலைப்பழிப்பதுந் தீரமினியில்லாதே
மடமுனிவர்கள்தபமழிப்பதுவும்பொல்லாதே
மதங்கொண்டுசெய்வதெல்லா மாயவன்முன்னில்லாதே (துட)

வாத்திசொல்.

நில்லாமல்போவதேதடா ஸ்ரீதரனை
நினைப்பில்லைக்கலாகாதடா யெதிர்க்க
வல்லமையில்லாமலே மாயவன்பரந்தோடி
வெகுகாலமாச்சேயந்த விட்டுணுவைமிகாடி
சொல்லுகிறாய்நீயேனோ துர்ப்புத்திமிகத்தேடி
ஜெகமெங்கும்யாவரும் தெய்வமென்போனைக்கூடி (நில்)

பிரகலாதன் சொல்,

கூடுமோகொலைபாதகம் செய்யுமவனை
குறித்தால்வருமோபாதகம் இனி
நாடியவனைத்துதி நான்செய்வேனென்றெண்ணாதே
நாரணமந்திரமென்றன் நாவிலிருக்கும்போதே
தேடவேணுமோவின்னந் தெரிந்தேனிப்புவிமீதே
தெரியாமற்சொல்லுகிறீர் தேவரீர்க்குத்தகாதே (கூடு)

வாத்திசொல்,

தகா துனக்கிதுவென்றாய் நல்லதாகட்டும்
சபாசுமெச்சினேன்நன்றாய் பருப்பு
வேகாததினாலொன்றும் வீணனையேநாடாம
விருந்தையானால்செல்வம் விளங்கும்சொன்னேன்வாடாமல்
சாகாவரம்பெற்ற தந்தையைநீதேடாமல்
சாதிக்கிறாயென்னடா தவடைமீதில்போடாமல் (தகா)

பிரகலாதனன் சொல்.

போடாவென்றுநீதுணிந்து இரனியனைப்
புகழுராயென்பணிந்து வீணாய்
மூடமதிகொண்டந்த முரடனைத்தெய்வமென்று
முறையிடுகிறீர்போம் மோனமந்திரமென்று
சேடனாயிரநாவால் செப்பவுமரிதென்று
செந்தமிழாகமத்தின் சிறப்பரியாமலின்று (போடா)

வாத்திசொல் தரு.

சிறந்தநற்பொருளரிந்து யுரைசெய்தாக்கால்
சிறியாயதைவேர்புரிந்து யென்றும்
தாந்தாமரியாமல் தைத்தியகுலதேவனை

தான்பழியாதேதாலைவ தீர்த்திடுவார்தீவினை
தூரக்கிடுங்கலவைவாழ் துரைகரிவரதனை
தோற்கச்செய்யுமுன் தந்தைசொல்லுரைபாவனே (சிற)

பிரகலாதனன்சொல்.

உரைத்தாலுமுணர்வருமோ துர்ச்சனருக்கு
உண்மையென்பதுதருமோ
இறைத்தாலுமணற்கிணறெழிற்சலம்வற்றுமோ
யெரிநெருப்பைக்கண்டீக்கள் எதிர்வந்துசுத்துமோ
கரைத்தாலுமன்பர்தன் கருத்தழிந்தோற்றுமோ
கலவைக்கரிவரதன் கழலதைசுதமா (இதை)

வாத்திசொல்-விருத்தம்.

தத்தமொடியுரைக்குமொழி தனைதடுத்து
துணிந்தரியைப் பணிந்துவருந் துன்மார்க்காகேள்
எத்திசையீரேழ்புவியாளிரணியேசன்
இதையரிந்தாலெழில்வேலம்பிலகுதெண்டு
கத்திகள்கொண்டுனதுடலை நறுக்கிவேராய்க்
கழுகாக்கைக்கிரைகொடுப்பார்கண்டிப்பாயுன்
சித்தமதிலிதைநிச்சமென் றெண்ணியிரணிய
தேவனையேதெளிந்துதினந் துதிசெய்வாயே.

வசனம்.

அடா துன்மார்க்க மதியை மிகவும் பாராட்டிக்கொண்டே வருகிறாய், வேண்டாம் இந்த சங்கதிகளை உன் தந்தையரிந்தாரேயாமாகில் சின்னபின்னஞ் செய்து பருந்துகளுக்கும் காக்கைகளுக்கும் மனங்களிக்கும்படி இரைகொடுத்துவிடுவார் இதைதிரமாய் உன்மனதில்நினைத்துக்கொண்டு நமது தேவனுகிய இரணியநாம மந்திரத்தை உன்மனதில்தெளிந்து துதிசெய்யடா பாலா.

பிரகலாதனன் சொல்விருத்தம்.

துதிக்குமுநியோர்கள்தவ மழிக்கும்பொல்லாத்
துர்ச்சனனைதெய்வமென்று சொல்லுமூட
மதிக்குநீதிகளுரைத்தா லதைத்தோராமல்
மகிழ்ந்துமருவியவிஷத்தை மகாக்தமென்று

விதிக்கவருகிறீரிதுவீண் வார்த்தையையா
வெந்நீரில்வீடுவெந்து போமோதிவ்விய
நதிக்குசமமென்றுசிறு கால்வாய்தன்னை
நவிலவந்தீர்தமக்கு ஞாயந்தானோ

வசனம்.

கேளுமையா சுவாமி யென்குருவே, முனிவர்கள்-தவக்கியாமிகள் இன்னமநேகபேர்களுடைய சந்தி ஜெப தபம் யாக யெக்கியோமாதி கிரமங்களையெல்லாம் அழித்து தானென்கிற மமதையைக் கொண்டு தன்னைத்தானே புகழும் புத்தியில்லா வரக்கனை நித்தியானந்தக்கடவுளென்று எனக்கு போதிக்கவருகிறீரோ அதற்கிசைவனோ, சுட்ட ஜலத்திலே வீடுவேகுமா ஒருபோதும் வேகமாட்டாதே திவ்வியநதிமுன் சாக்கடைக்கால்வாய் நிற்குமா சுவாமீ நீரிப்படிக்கெல்லாஞ் சொல்வது ஞாயமல்லவே என்குருவே.

வாத்தி சொல்-கவி.

ஞாயமென்றுதான்மாயனுனவ னுபாயமாகவேதாயவாகினன்
சேயனேயவனைகாயமென்றுசொலும் வாயைமூடுவதாமலே.

வாத்தி சொல்-தரு-இ-ம்-ஆரபி-ஆதிதாளம்

பல்லவி.

வதாராதேநீவாயைமூடு பொல்லா
வருத்தம்வருமினியுன் கருத்திலவனை (வத)

சரணங்கள்.

சிதாரமலேயுலகினில்வா ழனைவருந்
தேவிரணியனைப்போற்றி தினம்
தொழுதுவருவதைநீமாற்றி மாயன்
றிருவடிதனைச்சதமெனயெனதுமுன் (வத

ககனவிபுதர்முனிவர்களனைவரும்பணி
கனகன்பெருமையறியாமல் நன்றாய்க்
கருத்திலதைநீகுறியாமல் கருங்
கடலிலொளிக்குங்கசடனைநிஜனென் (வத)
பரம்பதமருளுமிரணியநமவெனும்
பிரணவமதையினிநாடாமல் யான்

பரிந்துரைப்பதிலுங்கூடாமல் வீணாய்
பலமிலாக்கலவைப்பின்கரிவாதனை (வத)

வசனம்.

அந்த புத்தியில்லாத மாயன் எங்கள் இரணியனுக்குப் பயந்து தாழ்ந்தது நீயரியாயா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

தாழ்ந்தத்துதங்கமென்றுந் தலைக்கிமேலெழும்பிப்பொங்கி
வீழ்ந்ததுபொய்பாலென்று விளம்புவர்காகங்கோடி
சூழ்ந்ததுசோலையென்று சொல்வரோசொர்ப்பனத்தில்
வாழ்ந்ததைநிஜமென்றெண்ணி வசனிப்பாருலகிலுண்டோ.

வசனம்.

கேளுமென்குருவே தாழ்ந்தது தங்கமென்றும் உயர்ந்தது பித்தளையென்று உலகத்தில் வழங்கும் பழமொழி தாங்கள் கேட்டதில்லையோ, மேலும் பொங்கினபால் பொய்பாலென்றுரைப்பதையு மரியீரோ, அநேக காக்கைகள் கூடி கத்தினபோதினும் ஒருகோகிலத்தொனியாகுமா ஒருபோதுமாகமாட்டாது தாங்கள் சொல்லப்பட்டதெப்படியிருக்கிறதென்றால் ஏழையானவன் சொர்ப்பனத்தில் கண்ட தனம்போலாகுமே குருவே.

வாத்தி சொல்-விருத்தம்.

உரைக்குமென்மொழிதடுத்து வோதியசிறுவாபானை
மறைக்குமோபனிமுன்னாக மாலதுபோல்தானெங்கள்
துரைக்கவநீடாவாரோ துஷ்டாநீயதைத்தோராமல்
செருக்குராயுன்தந்தைக்குத் தெரிந்திட்டால்மோசமப்பா

வசனம்.

அடா அறிவில்லாச்சிறுவா நான் அநேக தடவைகளாக சொன்னபோதிலும் தடுத்துப்பேசுவது ஞாயமல்லவே சூரியன்முன் பனிநிற்குமோ அதுபோல இரணியதேவனுக்கு அந்த மாயன் யீடாவாரோ அது உன் புத்தியில் படாமல் நீயேதோ வாயில்வந்தபடி யுளருகிறாய் இதையுன்தந்தை யரிந்தால் மோசம்வந்து நேரிடும் இனியாவது என் சொற்படி யோதடா பாதகா.

பிரகலாதனன் சொல்-இ-ப்-முகாம்-அடதாளம்.

பல்லவி.

குருவேஸ்ரீஹரிநாயமே துதிப்போர்க்கு
குறைவில்லைமிக்க்ஷேமமே (குரு)

அநுபல்லவி.

கருமலரணியுஞ்செந்திருவளர்மணிமார்பன்
பெருமையையறிந்துணர்ந்து பெரியோ
ருரைசெய்யுமறைகளை யறியாமல்வெறியன்போல்
புரிவதுநெறியிதுவோஓம் (குரு)

சரணங்கள்.

படியில்வாழடியார்களிடமதிற்குடிகொள்ளும்
பரந்தாமன்திருவடியே பணிவோர்
கொடுவினையிடரொல்லாமடியோடே குடியோடி
விடுமெரிதிடமிதுவே ஓம் (குரு)

மாதவர்தொழுதிடுஞ் சீதரன்திருவடி
ஆதாரமென்றுலகில் என்றும்
மோதிடும்பேர்க்கெம தூதராணுகாமல்
சாதகமரமதுவே ஓம் (குரு)

கன்னல்சூழ்கலவைமாநகர்தனில்மேவுங்
கரிவரதனைப்புகழ்ந்து தமிழ்
உன்னிதமாய்செய்தால் முன்னின்றருள்செய்யும்
பன்னகசயனனே ஓம் (குரு)

வாத்தி சொல்-விருத்தம்.

குறைவில்லையென்றுநீதான் கூரியமொழியைப்பார்த்தால்
திரமில்லாமாயன்சேதி தெரியாதுபோலேயார்க்கும்
கரமாகயவனைவீணாய் கத்தியேன்கெட்டுப்போராய்
உரமாயென்சொற்படிக்கி வோதிடாய்நீதியாக

வசனம்

அடா கேளடா மூடா அந்த மாயனுடையசேதியாவருக்குந்தெரியாத சங்கதிபோல் அவனை யொரு பெருமையாக நினைத்து குறைவில்லையென்று சொல்லுகிறாய் அவனோ டிகாருதன் அவனைநம்பினவன்

எவன் கடைத்தேரியிருக்கிறான் அதையாவது சொல் பார்க்கலாம் அதுவுமில்லை ஏன் வீண்புத்திகொண்டு கெட்டுப்போகிறாய் என் சொற்படி நல்ல நீதிகளைப் படித்துக்கொள்ளடா பாலகா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

உள்ளதைத்தனைசொன்னாலு முன்மனந்தெளிந்திடாமல்
கள்ளவஞ்சனைகள்செய்யுங் கபடகன்வேதந்தன்னை
தெள்ளரவோதுமென்று தெரிவிக்கவந்தீர்வீணாய்
வள்ளல்நாரணனைவிட்டு மற்றொருவரைத்துதிக்கேன்.

வசனம்.

கேளும் குருவே அநேக திட்டாந்திரங்கள் தங்களுக்கு யான் சொல்லியும் அதையுமது கருத்தில் ஊணிப்பாராமல் விவேகமில்லாத வெரியனைத் துதிபுரியென்று முறையிடுகிறீரே, நான் எம்பெருமானை விட்டு வேறொன்றும் சொல்லேன் குருவே.

பிரகலாதனன் சொல்

தரு-இ-ம்-சங்கராபரணம்-அடதாளம்.

பல்லவி.

ஹரிக மமுறையேகெதி-அய்யாமெய்யா-வேதியரே (ஹரி)

அநுபல்லவி.

முறையேகெதிஹரி முறையேகெதியே
முறையேகெதிவேரொன்-முறையேயினி- (ஹரி)

சரணங்கள்.

மறைமுடிவினிலாடும் மாயனைத்துதிப்போர்க்கு
குறைவினிவருமோசொல் குருவேயின்னமேன்வாது (ஹரி)

திருவளர்மணிமார்பன் சேவடிதனைமுன்னோர்
கரிமுறையிடவந்து கருணைசெய்திடும் (ஹரி)

கலவைககரினில்வாழ் கரிவரதரடியை
நிலையென்றுதுதிப்போர்க்கு நிறைசெல்வந்தரும் (ஹரி)

வாத்தி சொல்-விருத்தம்.

தருக்கமிட்டெதிர்த்துப்பேசுஞ் சண்டாளபாதகாகேள்
பெருக்கமிப்புவியீரேழுக்கும் பிரபலமுன்தந்தைசெங்கோல்
இருக்கவேயொருநாமத்தை யின்பமாயுளரும்நாக்கை
குருக்கவேதரிப்பார்கேட்டால்குலத்துரோகியறிந்துகொள்வாய்

வசனம்.

எதிர்த்து வார்த்தையாடும் இராக்ஷச குலதுரோகி இந்த யீரேழு பதினாலுலோகங்களையும் செங்கோல்செலுத்தும் உன் தந்தை இந்த சேதியை யரிந்தால் உன் நாக்கை குருகத் தரித்துவிடுவார் இதை நிசயென்றறிந்துகொள்ளடா பேயா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

அரிந்துகொள்ளெனவுரைத்த வசுரர்கள்குருவேகேளாய்
செரிந்துவாழ்பனங்காட்டேரி சலசலப்பதுக்கஞ்சாது
வருந்தியெத்தனைசொன்னாலுன் வசனத்தைக்கேழ்ப்பதோ
தெரிந்துகொள்வீர்சித்தத்தில் சீதரரொருவனென்றே,

வசனம்.

கேளுமென் குருவே நீரெத்தனை பூசிதமாக அந்த அரக்கனை புருக்கமாக எனக்கு போதிக்கவேண்டுமென்று *பயங்காட்டினபோதிலும், பனங்காட்டுநரியானது சலசலப்புக்கஞ்சுமோ அதுபோல் நீர் செய்கின்ற ஞாயங்களுக்கு நான் பயந்தவனல்லவே ஸ்ரீதரனாகியநாராயண நாமத்தைவிட வேறொன்று மில்லை வேதியரே.

வாத்திக்கும் பிரகலாதனனுக்கும் தற்கம்

தரு-இ-ம்-ஆனந்தபைரவி-அடதாளம்

வாத்தி சொல்.

சரியென்றேதேவரெல்லோரும் தாழ்ந்து
தாள்களைப்பணிகுவர் தரணியிலெல்லோரும் (சரி(

பிரகலாதனன் சொல்.

பணிவதைநிசமென்றெண்ணாதே திரு
மணிவண்ணன்சேவடி மரக்கவொண்ணாதே (பணி)

வாத்தி சொல்.

ஒண்ணென்றபொருளிரணியனே துதி
பண்ணென்றால்பினத்துராய் பக்ஷமாயவனை (ஒண்)

பிரகலாதனன் சொல்.

அவனன்றியாதொன்றுமில்லை யுன்றன்
கவனத்திலறிந்திடும் கனமாயிச்சொல்லை (அவ)

வாத்தி சொல்

கருதினிவருந்திருக் கலவைமாநகர்க்கரி
வரதனுனக்குநாளை வருவானேர்சலுவை (கரு)

பிரகலாதனன் சொல்.

செரிமலர்மதிதவழ்க்கொன்றை கலவை
கரிவரதனைவிட்டுகருதிடேனென்றை (செரி)

வாத்தி சொல்-விருத்தம்.

எத்தனைவிதத்தில்புத்தி யெடுத்துநானுரைசெய்தாலுன்
சித்தத்திலதைத்தோமற் சீதரனொருவனென்றே
கத்தியேன்கெட்டுப்போராய் கடவுளுன்தந்தைபேரை
பத்தியாய்தொழுதால்நல்ல பதமதைப்பெற்றுவாழ்வாய்.

வசனம்.

இன்னமென்னடா புத்தியென்பது உனக்கு கொஞ்சமாகிலும்இல்லையே எத்தனையோ காலங்கண்டவன்போல் பினத்துகிறாய், வேண்டாம் இன்னம் இளமைவயதின் விளையாட்டைபாராட்டிக்கொண்டே வருகிறாய் இதுகளெல்லாம் நிலைநிற்கமாட்டாது. இதைநீக்கிவிட்டுபய பக்தியுடனே உன் தகப்பனுடைய நாமமந்திரத்தை போற்றியேற்றி தொழுதையானால் நீ நல்ல சுகத்தைப்பெற்று வாழ்வாயப்பா, எனக்கும் நல்ல கீர்த்திகிடைக்கும். உன்னால் நான்வேண்டிய போகங்களை யனுபவிப்பேன், ஆதலால் என் சொற்படி கேளடா அப்பா பிரகலாதனே.

பிரகலாதனன் சொல் விருத்தம்.

வாழ்வையேசதமென்றெண்ணி வரக்கனைதெய்வமென்றூற்
சூழ்வினையாலேவந்த சென்மமெப்படியீடேறும்
பாழ்நரகினில்வீழாமல் பாதுகாத்தளிக்குந்திவ்விய
ஆழ்கடற்றுயின்றோன்செம்பொனடியினை துணையென்றெண்ணீர்

வசனம்.

கேளுமென் குருவே சொற்பமான அற்பவாழ்வை சதமென்றும் தாங்கள் சொல்லுகிறீரோ இதை நாம் எப்படி நம்புகின்றது, வினைப் பயனாலெடுத்த ஜென்மம் எப்படி யீடேறும், நமனாக்கினைக்கு நானே

யாளாகவேண்டுமேயென்று நன்றாக தெரிந்திருந்தும் அதை பாராட்டுகிறீர் வேண்டாம் திருப்பாற்கடலில் சேஷசயனனாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய திருவடிகளை தாங்கள் துதிசெய்யும்படி அடியேனுக்கு உபதேசிப்பீரானால் இந்த வம்சம் விருத்தியடையும் என் குருவே.

பிரகலாதனன் சொல்-தரு-இ-ம்-துசாவந்தி-அடதாளம்.

பல்லவி.

ஹரியென்றேயொருதர மாகிலுமனம்
உரைசெய்திடவேண்டுமே
ஓம்குருவே யுரைசெய்திடவேண்டுமே (ஹரி)

அநுபல்லவி.

பரிபூரணானந்தபரம்பதமே நாடும்
பெரியோர்களுரைசெய்த பேரின்பமேகைகூடும் (ஹரி)

சரணங்கள்.

செய்தவினைகளொழிக்கும் ஜன்மமரண
தீவினைகளையழிக்கும்
மைவிழியார்களாசை மனதினில்நினையாமல்
கைதொழுதிடும்பேர்க்கு கருணைசெய்திடுந்திரு (ஹரி)

அகமகிழ்ந்தருள்கொடுக்கும் நமனருகி
லணுகாமலதைத்தடுக்கும்
ஜெகத்தில்புகழ்கின்ற திருவணிமணிமார்பன்
சுகத்திற்சாரலாந் துன்பமதையறலாம் (ஹரி)

பருதிசூழுலகோர் துதி கலவைக்கரி
வரதர்பொன்னடியேகெதி
சுருதியின்மறைமுடிவினிலாடும்பெருமானே
கருதியவடியார்க்கு கருணைசெய்கனவானே (ஹரி)

வாத்தி சொல்-விருத்தம்.

துண்டகப்புத்தியாலே சொற்புத்திதனைக்கேளாமல்
புண்டரீகனைத்துதித்துப் பினத்துராயரிவில்லாமல்
குண்டலமளவுமிந்தக் கோதண்டந்தன்னில்மாட்டி
கண்டகோர்வுத்தையெல்லாங் காட்டுவோன்வாட்டுவேன்பார்

வசனம்.

அடா துன்மார்க்கப்பயலே கொஞ்சமும் பயமில்லாமல் தற் மிட்டுப்பேசுங் உன் கெர்வத்தை யடக்க என்னாலாகாதென்று நினைத் தாயல்லவா இதோபார் ஆகாயமளாவிய கோதண்டத்திலுன்னைப்போ ட்டு அடியில் வசிகளை நாட்டி அடிக்கிறேன் பாரடா மூடச்சிறுவா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

பச்சையாலிலையின்மீது பரிவுடன்பள்ளிகொள்ளும்
அச்சுதன்கிருபைநன்று யடியனுக்கிருக்குமாகில்
கொச்சையாயெனைதூஷித்துக் கோதண்டந்தன்னிற்போட்டு
மெச்சிடவதைசெய்தாலும் மேனியிற்படாதுகண்டாய்.

வசனம்.

கேளும் சுவாமி குருவே, வடபத்திரசயனராகிய ஸ்ரீஅகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகருடைய கிருபை அடியேனுக்கிருக்குமா கில் தாங்கள் என்னை கல்லின்பேரில் வைத்து நறுக்கினபோதிலும் என் மனம் வேறொன்றை நினைத்து வருகமாட்டாது குருவே.

வாத்தி சொல்-கவி.

நீட்டுறான்மிகவும்பேசி நிர்மூடன்றனைக்கோதண்டம்
மாட்டுறேன்மாட்டிசண்ட மாருதம்போலேதீயை
மீட்டுறேன்மீட்டிக்கூர்மை மிதமிலாவசிகள்தன்னை
நாட்டுறேன்நாட்டிஜாட்டி நான்கொண்டுவாட்டுறேன்பார்

வசனம்.

அடா என்னுடைய கோபந் தெரியாமல் எதிர்நின்று மாயனென் பவனை மகாபெரியவனென்று உளருகிற உன் குண்டி தைரியத்தை இதோ அரைநொடியிலே யறிகிறேன் பாரடா சிறுவா.

வாத்தி சொல் துண்டு கவி.

அண்டையிலிருக்கு முத்தண்டபாலகரே
துண்டகப்பயலை கோதண்டம்போடுவீரோ.

வசனம்.

அடா வரடா தானவர் பிள்ளைகளே! இவனுடைய தாக்ஷண்ணி யம் இனிநமக்காகவேண்டியதென்ன நீங்கள் இவனைப் பிடித்துக் கோ தண்டத்தில் போட்டு வசிகளைநாட்டி சாட்டிகளால் வாட்டி விடுங்க ளடா பிள்ளைகளே.

பொது-கவி.

வாத்தியின்சொற்படி மைந்தனைப்பிடித்து
நேர்த்தியாய்த்தூக்கி நெருங்கத்துசமாய்
ஏத்தியேகோதண்ட மெரிநெருப்பிடவும்
பாத்திரமாயரி பதமதைத்தொழுவான்.

வசனம்.

இந்தப்பிரகாரமாக சண்டமார்க்கரானவர் அதிக கோபங்கொண்டு பிரகலாதனைக் கோதண்டம் போட்டு வாதனை செய்கின்றபோது பிரகலாதரானவர் ஸ்ரீமந்நாராயண மந்திரத்தை தியானிக்கின்ற விதங் காண்க.



கோதண்டம் போடும்போது பிரகலாதனன் சொல்

கொச்சகம்.

அண்டமுண்டசெவ்வாயா வார்ப்பரித்துயெந்தனைதான்
கோதண்டமதிர்போட்டுகுரு சாட்டியினால்வாட்டுகிறார்
எண்டிசையில்நின்னைவிட திக்கெனக்கொருவரில்லை
அண்டையில்வந்தெனையாளு மாதிமூலப்பொருளே.

தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

பக்தவச்சலாபரமதயாளா பன்னகசயனு-ஓம்ஹரியே
நித்தியானந்தாநிர்மலசொரூபா நளினதளநயனனும் (பக்)

அத்திமுரைக்கியுன்சித்தமிரங்கிநல்முத்தியளிக்குமாயாமெய்யில்ஓம்
சத்தம்பெருகவுபத்திரஞ்செய்கிறார் கர்த்தரேயெனையாளா (பக்)

அண்டநடுங்கப்ரசண்டமாக கோதண்டம்போட்டுயென்னை ஓம்
துண்டமுதிலையமிகக்கொண்டு பிரம்பாலென்னை துடிதுடிக்கவதைக்கி
றார். (பக்)

அலைமகளுலவியகலவையில்வாழ்திரு கரிவரதரேயுந்தன்-ஓம்
மலரடிதனைதினமுலகினில்துதிசெய்யவரமினிதரும்ஹரியே(பக்)

பொது-விருத்தம்.

பெருகியகோதண்டமதில் சண்டாமார்க்கன்
பிரகலாதனன்றனைமாட்டிப் பிரம்புஜாட்டி
இருகையிலுங்கொண் டடம்பெங்கெங்குஞ்சாட
யெழிற்சிறியன்சிதரனை யிருதயத்தில்
ஹரிஹரியென்றெனக் கூரவடிகளெல்லாம்
அலர்மலர்ச்செண்டா லடித்தாற்போலதாச்சு
உருகிமனம்பெருகியரியிருபதத்தை
யுளமதிற்கொண்டுருதியொடு யுபசரிப்பார்

வசனம்.

இந்தப்பிரகாரமாக சண்டாமாற்கரானவர் பிரகலாதனைகோதண்டத்திலே மாட்டி வாதைசெய்கின்றபோது ஸ்ரீமந்-நாராயண மூர்த்தியினுடைய நாமமந்திரத்தை பிரகலாதனன் வருந்திமிகவும் தோத்திரஞ்செய்யச் சண்டாமாற்கர் அடித்தவடிகளெல்லாம் யெப்படியிருந்ததென்றால் மல்லிகைசெண்டினு லடித்தாலெப்படி யிருக்குமோ அப்படியாக தேகத்தில் படபிரகலாதனன் பின்னையும் மனகளித்து மஹானுபாவராகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தியினுடைய திருவடிகளைஸ்தவுத்தியஞ்செய்கின்ற விதங்காண்க.

பொது விருத்தம்.

ஆதரியென்றபோதே யந்தரந்தன்னில்வாக்கியம்
சிதரனருளினாலே ஜெயம்ஜெயமென்றுகூற
காதல்கொண்டகமகிழ்ந்து களிப்பு டனிருக்கச்சேயன்
வேதமாமறையோனைவாத்திகண்டேதுசொல்வான்

வசனம்.

இந்தப்பிரகாரமாக ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைதோத்திரஞ்செய்கின்றபோது அந்தரத்திலே கெந்தர்வர்கள் ஜெயம்ஜெயமென்று ஆசிகள்கூற பிரகலாதனனவன் ஆனந்தசந்தோஷங்கொண்டிருப்பதை வேதமறையவராகிய சண்டாமார்க்கர்கண்டு ஏதென்றுசொல்லுவார்.

வாத்திசொல் விருத்தம்.

அடாகுடிகேடாயுன்னு லனேகபாக்கியங்களெல்லாந்
திடமுடன்பெறலாமென்றே தென்புடன்வந்ததெல்லாம்
சுடரின்முன்பூச்சிவந்து சோர்ந்துமாண்டதுபோலாச்சே
படவிதிவசமோவிந்தப் பழிக்கினுனென்செய்வேனே.

வசனம்.

அடாகுடிகேடா உன்னாலனேகபாக்கியங்களைப் பெற்றுவாழலாமென்று யெண்ணி வந்த யெண்ணம் எப்படியாச்சுதென்றால் தீபத்தைக்கண்ட பூச்சிகளானது எவ்வளவு சந்தோஷப்பட்டு அதில்வந்துமடியுமோ அந்தகெதியுன்னாலெனக்கு அனுபவிக்கநேரிட்டுதே இந்தப்பழிக்குநானென்னசெய்வேனடா பாதகா.

பிரகலாதனன் சொல் -விருத்தம்.

பழிக்கென்னசெய்வேனென்று பரதவிக்கின்றீர்வீணாய்
செழிக்குஞ்செங்கரும்பைவிட்டுத் தெளிவிலாப்பேய்க்கரும்பை
விழிக்குமுன்பொசிப்பாருண்டோ விருதாவிலேநீர்காலங்
கழிக்கிறீரிதைப்போயுங்கள் கனகனுக்குரைசெய்வீரே.

வசனம்.

கேளுமென்குருவே தாங்கள் ஏன்வீண்காலம்போக்குறீர் வேண்டாம் உங்கள் கனகனுக்குப் போய் இந்த சங்கதிகளைச் சொல்லிவிடும் சுவாமி குருவே.

வாத்திசொல் தேவாரம்.

திடமுடனேயித்தனைநாளுந் துயரிலாதிருந்தேனையோ
இடர்தரபிரகலாதந்தா னெமனாகவந்தானிப்போ
தடவரைப்புயத்தோன்முன்னே சாற்றினோனாலெந்தன்
குடல்தனைப்பிடுங்கிமாலே கொள்ளுவான்துள்ளுவானே

வசனம்.

ஆஆஇதென்னகாரணம் இந்தபள்ளிக்கூடத்திற்நானேன்வந்தேன் என் தந்தையிடத்தில் யான்செல்வமாயிருந்தேனே அப்படியே யிருக்கப்போகாதா இந்தபிரகலாதனன் எனக்கு எமனாகவந்தவன்போல திருஷ்டாந்திரமாகவேகாணுதே இந்த விதிக்கு என்னசெய்வேன்அப்பனே.

வர்த்தி-தரு-இ-ம்காம்போதி அடதாளம்.

வாத்தி சொல்-தரு-இ-ம்-காம்போதி-அடதாளம்

பல்லவி.

இந்தமொழியையந்த இரணியன்முன்சொன்னால்
எதிர்த்துயெறியெண்ணைபோல்
கொதித்துக்கொக்கரிப்பானே (இந்த)

அநுபல்லவி.

சொந்தகுருவினுட சுதனென்றும்பாரானே
சொல்லிவிப்பதமென்று சோதித்துத்தேரானே (இந்த)

சரணங்கள்.

போனவுடனேபிள்ளை பெருமையைக்கேழ்ப்பானே
புகழ்ந்தானுந்தனையென்றால் மகிழ்ந்துள்ளங்களிப்பானே
கியானமாய்ஹரியைத்தன் கருத்தினில்துதித்தானென்று
கருதுமுன்னமேவெட்டிக் குருதியையிறைப்பானே (இந்)

வானவர்குருவென்றும் வியாழனுக்கிடமாச்சே
வசுரரெனைத்தொழுத வணக்கமித்துடன்போச்சே
ஏன்வந்தேனையையோ என்தலைவிதிதானோ
எனக்கென்றுபிரகலாதன் எமனாகவந்தானோ (இந்த)

ஊட்டியைகடித்தெந்த னுதிரத்தைக்குடிப்பானே
உரவினிற்போட்டிருப் புலக்கையாலிடிப்பானே
வாட்டியேயிலவம்பஞ் செனக்காற்றில்விடுப்பானே
வருந்திசதையைவரும் பருந்துக்குக்கொடுப்பானே (இந்)

உலவாய்மெழுகதைப்போ லுருகுதெந்தனுவி
உரைப்போமென்றாலுட லுதருதெப்படிக்கூவி
கலவைகர்வாழ்கரி வரதனென்றேபாவி
கருதுமொழியையந்த நிருதன்முன்னிலேமேவி (இந்)

இரணியன் கொலுவுக்குவரும்

பொது-விருத்தம்.

அகிலமும் நடுங்க அண்டமுமதிர்ந்திட அயன்மால்ருத்திரன்
திகில்கொளதேவரெல்லாந் திகைத்துகைகூப்பிநிற்க
முகிலினம்போல்கெர்ச்சித்து முடிகியார்பரித்துச்சீறி
இகலவன்றனைக்குறித்து இரணியேஸ்வரன்வந்தானே.

வசனம்.

அகோரதெப்படி யென்றால், இரணியேஸ்வரரானவர் அகிலபுவனங்களும் நடுநடுங்கும்படி தேவர்கள்-முநிவர்கள் கைகட்டிக்கொண்டு போற்றவும், கெந்தர்வர் அந்தரத்தில் புஷ்பங்களை வாரிவாரி தூற்றவும், மேகம்போல் கற்ஜித்து கோடையிடிபோல் கொக்கரித்து இகலவனுகியபகைவனைக்குறித்துமகுடமுடிதரித்துவருகின்றவிதங்காண்க

தரு-இ-ம்-நாட்டை-ஆதிதாளம்.

பல்லவி.

வீரசூரனானே இரணிய வீரசூரனானே
ஆரவாரமொடு அமரர்முநிவர்தினந்
தோருந்தொழும்புகழ் தீரனுமிரணிய (வீர)

அநுபல்லவி.

சிரசில்மகுடமின்ன நவமணி
சிரசில் கிரிகளைப்போல்
செவியில்குண்டலந்துன்ன மேளதாளங்கள்
முரசுபூரிதாரைகள் சல்லரிகோஷ்டம்போல்
வரிசையுடன்முழங்க வரசிலுயர்பிரபல (வீர)

சரணங்கள்.

பெருந்தவமுங்கொண்டேன் அசைவிலா
பெருந்தவரமுங்கொண்டேன் எவைகளுக்கும்
பெருமைமிகவும்பூண்டேன் திருத்தமாய்
சிரித்துப்புரத்தைநகைத் தெரித்தசிவன்மாலையும்
தாத்திவேதன்வெண் குடைவிரித்துப்பிடிக்கச்செய்த (வீர)

ககனமுகடதிரவே கிடுகிடெனக்
கலங்கிநிலைசிதரவே கண்டவர்நெஞ்சந்
கலங்கிநிலைசிதரவே தகதகென
புகழுமகமேருவை யிகழுமிருபுயமும்
மகிழுமலைகடல்சூழ் ஜெகமுழுதுங்கைக்கொண்ட (வீர)

சுருதிமுதலுமானேன் அளவிலாச்
சுருதிமுதலுமானேன் சாஸ்வித
தெய்வனுயானுமானேன் நிருதர்கள்
கருதுங்கலவைக்கரி வரதனெனும்மாயனை
துரிதமுடன்கொன்றிட விருதுகூறியஜெய (வீர)



இரணியன் போற்றி விருத்தம்.

சராசரபுவனத்திற்குஞ் சாஸ்திரமறைநூலோர்க்கும்
சுராசுராசுரருக்கும் துய்யமாதவத்தோருக்கும்
நிராநிரைபொருளாயெங்கும் நெடியசெங்கோல்செலுத்தும்
பராபரவஸ்துவாமென் பாதமேபோற்றிபோற்றி.

முதல்மந்திரி போற்றிவிருத்தம்.

திரியுலகமுஞ்செழிக்கத் தேவனுய்வந்துதித்து
தரியலர்களைஜெயித்து தங்கமாமகுடஞ்சூட்டி
பரிவுடன்செங்கோலேந்தி பார்முழுதுங்கைக்கொண்ட
அறிவினிலுயர்ந்தயெங்க ளாண்டவாபோற்றிபோற்றி

உ-வது மந்திரி போற்றி-விருத்தம்.

விண்ணவர்முனிவர்சித்தர் வேதமாமறையோர்மூத்தர்
மண்ணுள்வாழனைவர்நித்தியம் வந்தடிவணங்கியேத்தும்
வண்ணமேமாமலைகையாளும் வசீகரமணியேயுந்தன்
தண்மரைமலர்க்கொப்பான தாள்தனக்கனந்தம்போற்றி.

தேசவிசாரணை.

இ-ன். பொங்குகடல்சூழுலக மெங்குமெனையேதொழுது
போற்றியே வருகின்றதா

மு-மந் புகழ்பெருகுமகிபனே யுமதுதிருவடிகளை
போற்றியே வருகுதையா

இ-ன். திங்களணிவேணிவேதன்மாலெனும்மூவர்
சேதியெங்காகிலுண்டா

மந். திரிவுலகமதிலெங்கு மவர்களிடசேதியை
செப்பிடக்கேட்டதிலேயே

இ-ன். பங்கப்படுத்துவா ரென்றெண்ணியேயவர்
பராரியாய்ப் போயினரோ

மந். படுசூனியன்கபட னீன துர்க்குணமுடைய
பாவிகளை நம்பொணுது

இ-ன். மங்களமதாகயெனைப் போ லுலகையாண்டவன்
மகிதலந்தன்னிலுண்டா

மந். மாராமலுனைப்போல யுலகாளும்வல்லமை
மகிதலநதனில்காண்கிலோம்.

பொது விருத்தம்.

பெருமையைப்பிரபலமாகப் புகழ்ந்துகொண்டிரணியேசன்
அருமைமந்திரிகள்சூழ வமைந்திடுங்கொலுவின்முன்னே

குருமகன்சண்டாமார்க்கன் குலைகளும்நடுங்கிவந்து
இறுவன்வார்த்தையைமன்னன்முன் செப்புவான்வொப்புவானே.

வசனம்.

அகோதெப்படியென்றால், இரணியபூபாலகரானவர்சபாமண்டபத்தில் கொலுவலங்காரமாய் இருக்கின்றபோது சண்டாமார்க்கர்பள்ளிக்கூடத்திலிருந்து புறப்பட்டு இரணியன்முன் வரும்விதங்காண்க.



சண்டாமாற்கன் இரணியனுக்குச்சொல்

தரு-இ-ம்-மோகனம்-அடதாளம்

பல்லவி.

துரையேஇரணியபூபா துலங்கும்சூரப்பிரதாபா
மறைவேதவேதத்திற்கதிபா மலைபுயமணிமார்பா

சரணங்கள்.

அண்டர்புகழும்பாதா அகிலலோகேசநாதா
துண்டகமதியால்தீதா துதித்தான்வேறொன்றைதான் (துரை)

சொன்னேனனேகநூருஞ் சுருதியாகமசாரம்
மூன்னவனென்றேதீரம் மொழிந்தானென்செய்வேன்பாரம் (து)

வலையில்சிக்குமான்போலே வந்தகப்பட்டேனென்றாலே
கலவைக்கரிவரதன்மேலே கழறினேனென்முன்னாலே (துரை)

இரணியன் சொல் விருத்தம்.

தெண்டப் ஓய் சண்டாமார்க்கா
சீக்கிரமென்னருகேவாரும்
மண்டலம்புகழ்பெற்றோங்கும்
மகிழ்பள்ளிக்கூடத்தைவிட்டென்
னண்டையில் வந்ததென்ன
வதிசயமதையிப்போது
கண்டிதமாகச்சொல்வீர்
கலக்கமில்லாமல்தானே

வசனம்.

தெண்டம்தெண்டம்ஓய் சண்டாமார்க்கரேவாரும் தாங்கள்கல்விச்சாலையை விட்டிங்கு வந்தகாரணம் சீக்கிரந்தெரியும்படி சொல்லும் குருபுத்திரரே.

சண்டாமார்க்கன் சொல்-விருத்தம்.

சொல்லுவேனசூரர்கோவே சுகிபவாயாசீர்வாதம்
மல்லிகைமலரைவிட்டு மணமதுயெங்கேசெல்லும்
எல்லையிவ்வுலகுக்கெல்லா மேகநாயகனுய்நின்ற
வல்லவுன்கொலுவில்வாரார் வையகந்தன்னிலுண்டோ

வசனம்.

சுகிபவா ஆசிர்வாதம் சிரஞ்சீவியாக வாழக்கடவாய் தங்கள் திவ்வியமங்கள கொலுவின்முகப்பில்வாராமல் வேறிடமுண்டோபிரபுவே

இரணியன்-சொல் விருத்தம்.

உற்றது சொன்னீர்மெய்தா னுமக்கொருகுறைவுமில்லை
சித்தசனிகர்க்கொப்பான செழும்பிரகலாதனன்றோன்
எத்தனை வேதசாஸ்திர மெழில்பெரபடித்துக்கொண்டான்
வித்தகமறையோன்பாலாவிளம்புவீரெந்தனுக்கே.

வசனம்.

வாரும் என் குருபுத்திரரே இப்போது நீர்சொன்ன வார்த்தை மெத்தவும் சந்தோஷம் உமக்குயாதொருகுறைவுமில்லை இருக்கட்டும்

என்குமாரனுகிய பிரகலாதனன் என்னநூல்கள் கற்றுக்கொண்டான் அதையான் சந்தோஷிக்கும்படி சொல்லும் சண்டாமார்க்கரே.

சண்டாமார்க்கர் சொல்-விருத்தம்.

விருதுபெற்றுலகேழும் விருப்பமோடரசளிக்கும்
நிருதர்களரசேயுந்தன் நீதிமைந்தனுக்குநல்ல
கருதும்வேதாகமத்தின் கல்வியையுரைக்கலுற்றேன்
சுருதியிதல்லவென்று துணிந்தொருவார்த்தைசொன்னன்.

வசனம்.

கேளும் பிரபுவே நானென்னென்று சொல்லப்போகிறேன், தங்கள் குமாரனுக்கு வேதாகமவிதிப்படி போதித்தேன், அதுயுக்தமல்லவென்று வேறொரு தூர்விஷயமாகத் துணிந்துசொன்னதை நானென்னென்றுசொல்லுவேன் பிரபூ.

இரணியன்-சொல் விருத்தம்.

துணிந்தொன்றைசசொன்னனென்றே சொல்வதற்கோநானுன்னை
பணிந்திங்குவரவழைத்தென் பாலனையனுப்பிவைத்தேன்
தணிந்தவன்னியின்மேலெண்ணை தானெடுத்தூக்கினர்போல்
கணிந்துமைந்தன்வேராகக் கழரியதுரைசெய்வாயே.

வசனம்.

ஓய்சண்டாமார்க்கரேநல்லவார்த்தைசொன்னீர் சரிசரிநன்ருயிருக்கின்றது, போதும்உமது வாத்தியார் தனம் இதற்குத்தானே உம்மைநான் அதிக மரியாதையுடனே வரவழைத்தேன், தணிந்தநெருப்பின்பேரில் எண்ணைகளை யூத்தின பாவனைபோலிருக்கின்றது, நீர்சொல்லுகின்ற ஞாயம் என்மகன் உம்மிடம் துணிந்து சொன்ன வார்த்தையைசொல்லும் வாத்தியாரே.

சண்டாமார்க்கன் சொல் விருத்தம்,

உரைசெய்வேன்கேளுமையா யுந்தன்மைந்தனுக்குநல்ல
நிரைசெல்வம்பெருவதாக நீதிசாஸ்திரத்திறங்கும்
இரணியகமாவென்றேதான் துதித்திடச்செய்தேனியானும்
தரைமிசையதையோதாமல் தாழ்ந்தவன்பேரைச்சொன்னன்.

வசனம்.

கேளும் இரணியேஸ்வரரே, என்பேரில்கோபிக்கவேண்டாம் நானென்னசெய்வேன், தங்கள் குமாரன் நல்லகீர்த்திகளை யடையும் படியாகிய உமதுநூல்களை போதித்தேன். அதையவன் நீக்கி தாழ்வா னவனுடைய பெயரைசொன்னான் பிரபூ.

இ-ன்-சொல் விருத்தம்,

தாழ்ந்தவனை யென்றனையன் துதித்தானென்று
　சமர்த்தாகப்பேசுகின்ற சண்டாமார்க்கா
விழ்ந்துவிடுமுன்றலைகீழ் முன்னமேதான்
　விகிதகுருமைந்தனென்றே யெண்ணிவிட்டேன்
சூழ்ந்திடுமந்திரிமாரே யிவன்சொன்னவார்த்தையெல்லாம்
　சூதாகத்தோன்றுகின்ற தாலேநம்முன்
வாழ்ந்திடும்வல்லசுரரிடங் காவல்வைத்தால்
　வசனிப்பானிம்மொழியை வண்மையாக

வசனம்.

ஓய் சண்டாமார்க்கரே நீரிப்போது என் குழந்தையின்பேரில் அனீதமாக தாழ்ந்ததைச் சொன்னானென்றும், தத்தாபித்தாவென் று மனம்போனபடி பேசுகின்றீர் உன்றலை முன்னமேபூமியில்விழுந்து விடும் என்குருபுத்திரனென்றும் விட்டுவிட்டேன், இப்பதானென்ன ஓய் மந்திரிமார்களே இந்த சண்டாமார்க்களை இப்படி கேட்டால் இவன்விபரமாய் சொல்வதில்லை நமதுவல்லவசூரராகிய மதோன்மத்த னுடைய காவலிலேவைத்தால் அப்போதுதான் நிசத்தைச்சொல்லு வான்போல்காணுது மந்திரிமார்களே.

முதல்மந்திரி சொல் விருத்தம்.

ஆமிதுமெய்தானெங்க ளசுரர்களரசேகேளும்
பூமியிலிவனைப்போலே புதுமைகள்சொன்னோர்காணேன்
தாமதஞ்செய்திடாமல் சக்கரக்காவல்வைத்தால்
நாமிதையரிவதாக ஞாயமோடுரைப்பானையா.

வசனம்.

கேளுமெங்கள்தைத்தியகுல மாணிக்கதீபமே தங்கள் முன்னே யெவனுமிப்படி எதிர்நின்று பேசினவன் எங்குங் கண்டதில்லை. உம

திஷ்டப்படி வல்லசுரர்காவலில் வைத்தால் பள்ளிக்கூடத்தில் நடந்தவுண்மையைச் சொல்லிவிடுவான் எங்கள் துரையே.

2-வது மந்திரிசொல்-விருத்தம்.

அதற்கென்னயட்டியந்த வமரரெப்படிபயந்தார்
மதகரிக்குங்கொரந்துக்கோல் மலைபோலேவேணுமோதான்
சிதைத்தெரியுங்காவலுக்குள் சீக்கிரமாய்வைத்தோமானால்
பதத்தோடுவிபரமாகபகர்ந்திடத் தடையொன்றுண்டோ.

வசனம்.

சுவாமீ இதுநல்லவாலோசனைதான் அவனை நாமுண்மையைச் சொல்லென்று கேழ்ப்பானேன், பலவீரர்கள்காவலில் சண்டாமார்க்கனை வைத்தால் அப்போது உண்மையானது தனக்குத்தானே வெளிப்படுகின்றது ஆதலால் நமது காவலர்கையில் ஒப்பிவையும் இரணியேஸ்வரரே.

சண்டாமார்க்சர் மனுகேட்கும் ஆசிரியவிருத்தம்.

மகதேவதேவனே மகிழும்பிரதாபனே
மகுடவர்த்தனகிரீடனே
மாணிக்கமார்பனே மதிக்குமொளிதீபனே
மங்களகுணானந்தனே
மட்டிலாத்தவப்பல மதிலுயர்ந்திடுந்திவ்விய
மாசற்ற நேசவடிவே
மறைமுடிவினிற்றங்கு மற்புதப்பொருளான
கவுணர்குல துரைசேகரா
ஜெகமுழுதுமொருகுடை நிழலிலரசாள்கின்ற
தேவநேயா வொருமனு
செப்புகின்றேன்தாங்கள் தயவுசெய்தென்மீதில்
சினமிலாமற் கேளுமுன்
சிறியனையழைத்துபோய்ச் செந்தமிழ்ச்சாலையில்
தேவரீர்வேதமெல்லாந்
தெளிவாகயாவற்கும் ஓதினேனபிரகலாதன்
திகம்பரன் போலிருநதான்
பகலவனுன்தந்தையல் லாமல்வேரில்லைநீ
பண்புடன் பகருமென்றே



பலநீதிகலைகளை யுபமானமாகவின்
பாலனுக்குரைசெய்துமே
பரிவுடனிரணிய நமாவென்றெழுதினேன்
பரிவுகூர்ந்ததைத்தொழாமல்
பகைநின்றெனக்குவயிர் பற்றிடும்படியொரு
பழியானவார்த்தை சொன்னான்
அகமீறிஇப்படிச் சொல்லவேண்டாமென்
றனேகபுத்திகளுரைத்தேன்
அதையவன்கேழ்க்கவிலை யென்செய்வேனையனே
யமரர்சூழ் கொலுமுகப்பில்
அருமைமைந்தனையழைத் தந்தவிபரந்தனை
யரிந்திடு ரசுரர்கோவே
அப்பனேயதுவரையில் தப்பிவையுமெந்தனை
யடியேன்விண்ணப்பமிதுவே.

இரணியன்-சொல் விருத்தம்.

விகிதமொடுகொலுவினில் வாழமைச்சமாரே
வேதியன்சொல்வார்த்தைகளை விபரமாக
மகிமைதவமதிலுதித்த யெனதுசிரேஷ்ட
மைந்தனுவிதையரியவேண்டுமிப்போ
அகிலமதிற்புகழ்பள்ளிக்கூடஞ்சென்று
அருமைமகன்பிரகலாதன்றனையிப்போது
தகுதியதாகியசிவிகைமீதில்வைத்துச்
சனுதியில்வந்திடச்செய்வீர்தகமையாக

வசனம்.

ஆ-ஆ-ஆ-வாருங்கள் மந்திரிமார்களே, இந்த சண்டாமார்க்கர் ரொம்பவும் நம்மை மனுகேட்டுக்கொள்ளுகிறபடியால் நீங்கள் சீக்கிரமாகப்போய் என்குமாரனான பிரக்லாதனனை யழைத்துக்கொண்டுவாருங்களப்பா மந்திரிமார்களே.

மந்திரி-தண்டு-கவி.

அப்படியேதங்களாக்கினைப்படியே
கொப்பெனப்பள்ளிக்கூடத்திற்சென்று
இப்புவிபுகழுமெழில்பிரகலாதனனை
சொற்படியழைத்துச் சுருக்கினில்வருவோம்.

மந்திரிகள்-பிரகலாதனை அழைக்கும்-கவி.

அரக்கர்தன்குலத்துக்கெல்லா மாண்டவனானதேவன்
செருக்குடனீன்றளித்த செல்வமேயுன்றன்றந்தை
பெருக்கமாங்கொலுவுக்கிப்போ பெருமையாய்வரவேசொன்னர்
உருக்கமாய்வருவாய்நாமு மொருநொடிதனிலேபோவோம்.

வசனம்.

அப்பா பிரகலாதனசிரோன்மணியே உமதுதந்தை அதிக வினோ வாயழைத்துக்கொண்டு வரச்சொன்னர் வாரும்குழந்தாய்.

பிரகலாதனன்-சொல்-கவி.

பொங்குமிப்புவியோர்தாழ்ந்து போற்றுமென்தந்தைஎன்னை
இங்கிதமாயழைக்க யெத்தனைபாக்கியம்பெற்றேன்
மங்களமாகமந்திரி மார்களேநானுமிப்போ
சங்கையில்லாமலெந்தன் தந்தைமுன்போவோம்வாரீர்.



தரு-இ-ம்-காபி-ரூபகதாளம்

பல்லவி.

வந்தனன்தந்தைமுன்மைந்தனும்
வண்மையோடிதோ (வந்த)

அநுபல்லவி.

சிந்தையில்ஸ்ரீஅரிநாமம் மந்திரமாவாதியான்
திரமொடுமந்திரிகளிரு புரமுஞ்சூழ்ந்திடவே
வரும்பரமானந்தகவிக்கு பாக்கியமிகவும்பெருக (வர)

சரணங்கள்.

ரத்தினமிழைத்தகலைக்கு நெத்தியிற்சுட்டி
முத்துகளமைத்துதலைக்கு பச்சைமந்தாளி
ஒத்திடும்பிறைகுப்பிமேல் வைத்திடுஞ்செகதாட்குச்சி
ஒளியிற்கதிரவனுதயம்போ லெங்குஞ்சொலிக்கக்
களிகொண்டினிமேல்தேவர்கள் கைதவங்கள்பலிக்க (வர)

வண்ணப்பசுங்கிளிபோல் மொழியும்யாவர்க்குநல்ல
உண்மைப்பதமதனில்விழியும் மண்ணுலகினில
தண்மரைமலர்வதனன் கண்மணிப்பிரகலாதன்
தழைக்குந்தானவர்குல சக்ரேஸ்வரனாகியசீலன்
அழைக்குஞ்சேதியைக்கேழ்க்க அன்போடுமிகவும்பாலன்-வர

அண்டர்களாசிகள்கூறவே அன்பரானந்தம்
கொண்டுளங்கள்களித்துதேரவே விண்டலமும்பூ
மண்டலமதில்வாழ்கன தொண்டர்கள்தொழுதேதினம்
மகிழுங்கலவையில்வாழ்கரி வரதன்றனையேகூறி
புகழும்பதமிலங்கிதம் பொருந்தும்படியேதேரி(வர)

இரணியன் சொல் விருத்தம்.

திங்கள்தன்னொளியைபபோலே செழிக்குமென்வதனுவாடா
மங்களகுணவானென்னும் மாணிக்கமேனிவாடா
சங்கையில்லாமலிந்தத் தாணியிற்புகழ்பெற்றோங்குந்
இங்கிதரத்தினமென்னுமென் துரைசாமிவாடா.

வசனம்.

சந்திரப்பிரகாசம்போ லென்குலம் விளங்கவந்துற்பவித்த என் கண்ணே என் மடிமீதில் வாடாதுரைரத்தின சிகாமணியென்னும்என் துரைசாமி.

இரணியன் சொல்-தரு-இ-ம்-தோடி-ஏகதாளம்

பல்லவி.

துரைசாமி வாராய்எந்தன் (துரை)

அநுபல்லவி.

சூரனெனது குமாரனெனவந்த (துரை)

சரணங்கள்.

கிரைமதிமுகவரை புயமணியுரவலங்
கிரகதரவசிகர (துரை)

கதிர்கிரணகமல விலோசனசதுர்பெரு
முலகினில்பிரகாச (துரை)

கற்பகம்சூழ்கலவைக் கரிவரதன்கெர்ப்பங்
கலங்கவுற்பத்தியானயெந்தன் (துரை)

பிரகலாதனன் சொல்-விருத்தம்,

இந்திராரிமையோர்சித்த ரெழில்தவமுனிவர்சித்தர்
மந்திரமரையோர்நித்தியம் வந்தடிதொழவும்பெற்று
சிந்தையும்மகிழவீரேழ் ஜெகமுழுதுங்கைக்கொண்ட
தந்தையேயுனதுசெம்பொற் ருள்களுக்கடியேன்போற்றி

வசனம்,

சகலபுவன லோகாதிபதிகளும் தேவர்களும் முனிவர்களும் பிரதிதினமும் உம்மைதெரிசித்து போற்றிதொழும்படி கீர்த்தியையுடையயெனதுதந்தையே யுன்பொற்பாதகமலங்களுக்கு அடியேன் சரணம் சரணமையா தந்தையே,

இரணியன்-சொல் விருத்தம்.

பொங்கமோடிருகைகூப்பிப் புகழ்ந்தெனைத்துதிக்குமெந்தன்
தங்கமேனியனேயிந்தத் தானவர்குலம்விளங்க
துங்கரத்தினமிழைத்தச் சுடர்மணிமகுடம்சூட்டி
திங்கள்சூழுலகிலென்றுஞ் சிரஞ்சீவியாகவாழி

வசனம்.

அடாசெல்வமேநீ சிரஞ்சீவியாகவாழி எழுந்திரும்பா பிரகலாதனு

பிரகலாதனன் சொல் விருத்தம்.

வாரிசூழுலகீரேழும் வண்மையோடரசளிக்கும்
நேரிலாதந்தையேயுன் னிணையடிக்கமலம்போற்றி
தேரியவசுரர்வானோர் செறிந்துசூழ்கொலுவிலென்னை
வீரியமுடனழைத்த விபரமேதுரைசெய்வாயே,

வசனம்.

சமுத்திரஞ்சூழ்ந்த யீரேழுபதினாலுலோகங்களை வண்மையுடன் ரசளிக்கும் என்தந்தையே அடியேனை யழைத்தவிபரம் தெரியச்சொல்லும்தந்தையே.

இரணியன் சொல்-தரு-இ-ம்-செஞ்சுருட்டி-ஆதிதாளம்

பல்லவி.

கண்ணேயென்னசொன்னையடா
கல்விச்சாலேதன்னிலேயென் (கண்)

அநுபல்லவி.

வண்ணமுடைய உன்வாத்திவந்து
யென்தன்முன்னே சிந்தைநொந்தழுதிட (கண்)

சரணங்கள்.

இன்னவிதமென்றெந்தன்முன்னவனுரைசெய்யாம
லன்னையழைத்தேவிபரந் தன்னையறிந்திடவென்று
இருவிழிகளில்ஜலம் பெருகிடயவர்மனம்
உருகிடயிவடம்வந்தருகினில்முறையிட (கண்)

மைந்தர்களோடேதாவது சிந்தைவார்த்தைகளையடி
அந்தணன்முனிந்துனை நிர்ப்பந்தஞ்செய்வதில்
மருத்துமவர்மொழியைகருத்திலுரைசெய்யாமல்
வெரித்தனமாயேதாவ துரைத்தனையோயென்னிரு (கண்)

வேதமுதலிலெந்தனை யோதுவதிலேதாவது
சோதனைகாண்பியுமென் முன்மீதில்தோதகமதாக
விரசமாகமின்மீதில் குரோதமிகச்செய்தாரோ
உரைசெய்குவாய்கலவை வரதநடுநடுங்கக் [கண்)

இரணியன் பிள்ளையை கேழ்க்கும் விருத்தம்.

விளங்கிடும்வேதாகமசாத்திரநன் னூலே
விபரமொடு உனைபடிக்கச்சொன்னால்வாத்தி
உளம்துசஞ்சலப்படநீ பழித்துவேறே
புரைத்தமொழிதனையிங்கு உண்மையாக

வளம்பெருமிப்புவியிலுள்ளோர் வணங்கிப்போற்றும்
வாகுமிகுகொலுவிலதை வரிசையாகக்
களங்கமரவேயுரைப்பாய் மகனேயந்தக்
கருத்தின்னதென்றுயான் தெளியத்தானே.

வசனம்.

கேளடா என் அருமை மகனே உனது ஆசாரியனாகிய சண்டாமார்க்கர் வேதநூல்களை யோதிவைத்தால் அதை தடுத்து நீயேதோ துர்விஷயமான சங்கதி சொன்னதாக இவிடம்வந்து முறையிமிட்டார் அது என்ன சங்கதிஎனக்கு நன்றாய்தெரியும்படி சொல்லடாமகனே.

பிரகலாதனன்-சொல் விருத்தம்.

கண்டிதைநன்றாய்த்தெளிய வேண்டுமென்று
காதலுடனெனையழைத்துக் கருதுங்கோவே
விண்டொருபொல்லாப்பழியான் சொல்லவில்லை
விளங்குஞ்சதுர்வேதமதி லாதியென்று
அண்டர்முநிகளுமயனு மகிலத்தில்வாழ்
ஆத்மகோடிகளுமுத லன்பாய்போற்றும்
பண்டுபரம்பொருளெனும்நற் பதத்தைநாடி
பரிவுடனேயுரைசெய்தேன் பண்பாய்த்தானே.

வசனம்.

கேளுமெனது தந்தையே சகலலோகங்களும் தேவர்களும் முநிவர்களும் பிரம்மன் முதவானவர்களும் முன்துதிக்கும் பரம்பொருளேதுவோ அதைத் தொழுதேனேயல்லாமல் வேறொன்றும் யான் சொல்லவில்லை என் தந்தையே.

இரணியன் சொல்-விருத்தம்.

பரிந்தெந்தன்முன்னேநீ சொல்லுகின்ற
பதமதிவிவ்விதமென்று தெரியவில்லை
பொருந்தியநால்வேதமதில் முதலோனென்றும்
புகழ்ந்தயன்மால்தேவர்முனிவர் போற்றுமன்பாய்
நிறைந்தபரிபூரணவஸ்து தானென்றும்நீ
நின்மனதிலேதெளிந்தா லெவர்க்குத்தெரும்
அறிந்தவன்பேரின்னதென் றென்முன்பாக
அறிவிப்பாயதின்விபரந்தெரிவிப்பாயே.

வசனம்.

கேளடா என்மகனே நீ இப்போது சொல்லுகின்றதில் இன்ன விதமென்று வொன்றுந்தெரியவில்லை அதை விபரமாகத் தெரியச்சொல்லடா என்மகனே.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

அவனியெலாமொருகுடைக்கீழரசளிக்கு
மையனேகேளதின்பெருமைதன்னை
ஆயிரநாவுடையோனெனுஞ்சேட
நரலுரையாப்பெருமையையான்
கவரமோடதையொரு கருத்தினில்தெளிவாய்
கருதவுமெந்தனலாமோ
காணுமுன்னூலினிற் றோன்றியரூபக்
கருணையைக்கனிந்துரை செய்வேன்
பவனிவாரணனெழிற் பண்புடையோருளம்
பரஞ்சுடராகியபரமன்
பாரில்வாழுமவையும் பரிந்தனையெனையும்
படைத்தளித்தழிக்குமாபதியே
புவனமெங்கினுமவர் செயலிலாமலேவேல்
புல்லசையாதுபோகியின்மேல்
பூரணமாய்வளராதிநாராயணன்
பொன்மலரடிதனைப்புகழ்ந்தேன்.

வசனம்.

கேளுமென்தந்தையே சொற்கமத்தியபாதாளமென்கிற திரிலோகத்தில் வாசம்பொருந்திய நான்குவகையோனி யெழுவகைதோற்றமெரும்புக்கடையெண்பத்திநான்கு லக்ஷஞ்சீவராசிகளையும் உன்னையுமென்னையும் படைத்தளித்தழிக்காநின்ற எம்பெருமானாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய பொற்பாதகமலங்களை அடியேன் போற்றிப் புகழ்ந்தேனேயல்லாமல் வேறொன்றுஞ் சொல்லவில்லையே என்தந்தையே.

இரணியனுக்கும் பிரகலாதனனுக்கும் தற்கம்.

இரணியன்கோபித்து பிள்ளையின்பேரிற்சீறி
சொல்லுகின்ற-தரு-இராகம்-நாட்டை-அடதாளம்-சாப்பு.

அடடாயீதென்னடாமூடப்பயலே
ஹரியென்றுயென்முன்னேநீ
நின்றுப்பினத்துராய் (அட)

அடடாயிதென்னவன்னீ தமதியுனக்
கார்சொன்னூர்சொல்லெந்தன்னேரில் அவன்
அங்கப்பிளப்பேயிப்பாரில் மணிக்
குடலைப்பிடுங்கிக் கூர்வாளுக்கிரையாக்கிக்
கொத்தும்பருந்துகளுக்கிரை
வைத்துவிருந்திடுவேனடா (அட)

மெத்தப்பெருத்தத் தவஞ்செய்துவுந்தனை
பெற்றததிர்க்காகத்தானோ இந்த
பேதைமதியுனக்கேனோ பரி
சுத்தம்தாய்சொற்கமத்தியபாதாளமுஞ்
சுருதிமுதலிலேயெந்தனை
கருதும்பதமதுமைந்தனே (அட)

வானுலகும்மன்னனைப்பிடித்தடித்து
வைத்தேன்சிறைச்சாலைக்காவல்
வைத்தபேர்களெல்லாமெனக்கேவல் செய்ய
பானுலவும்பதினாலுலகங்களும்
பகவானென்றெனைப்போற்றிட
ஜெகதீசனென்பவனானடா (அட)

அண்டசராசரமெண்டிசையிலவன்
ஒண்டயிடங்கிடையாது அவனைக்
கண்டவன்போலேஇப்போது செழும்
வண்டுலவுமலர்சூழ்க் கலவைக்கரி
வரதாவென்றினிகூர்வது
விருதாவாயடபாதகா. (அட)

பிரகலாதனன்-சொல் விருத்தம்.

வீராதிவேசங்கொண் டென்தகப்பன்
விண்மண்ணதிர்ந்திடயேதுந்
தேரதவார்த்தையையே யின்பமாகச்
சிந்திக்குமூர்க்கமனதை
ஆராய்ந்துபார்த்ததி னுட்பொருந்து
ஹரிவைத்தெளிந்துணராப்
பேராசைகொண்டுதா னென்றவாண்மைப்
பேசுமிதொருஜென்மமோ.

வசனம்.

விசாலமாகிய அலைகள் மோதும் கடல் சூழ்ந்த நெடிய உலகெங்கும் நிறைந்து நான்குவேதங்களுங் கொண்டாடப்பட்ட தாமரைமலரையொத்த நேத்திரங்களுடைய மேகவண்ணா இராக்கத வரசன் முன் ஸ்ரீஹரியென்று தேவரீருடைய திருநாமத்தை அடியேனுரைக்க அவன் மிகுந்த கோபங்கொண்டு கையினில் வாளையேந்தி தமியேன் சிரத்தைக் கொய்திடுவேனென்று மிகு உக்கிரமாகி ஆர்ப்பரித்துக்கொண்டு வருகிறார். இதற்குச் சிறுவன் இன்னமென்னசெய்குவேன் ஆதிசேடன்மீது திருக்கண்வளரும் உம்துகிருபையன்றி ஓரணுவுமசையுமோ ஜெகதீசனே.

இதும் பிரகலாதனன் சொல்-விருத்தம்.

பரவுந்திரை கடலுலகில் நிரையுஞ்சதுர் மறையில்வளர்
பங்கயமலர்க்கண்வண்ணா
இறைவன்முன் ஸ்ரீஹரியெனயானுரையபெருங்கரம்தனி
லெழில்பெருகும் வாளையேந்தி
சிரமதைக்கொய்திடுவேனெனவுறமோடெழும்புகிறானினி
சிறியனிதற்கென்செய்குவேன்
அரவசயனனேயுன திருபையல்லாமலொரு
வணுவசையுமோ புவியின்மேல்

வசனம்.

ஆதந்தையே யிப்படியுங்கோபிக்கலாமா தாங்கள்யெதையும்ஆராய்ந்துபாராமல் ஏன்என்பேரில் வருத்தப்படுகிறீர் போம்இப்பேர்க்கொத்தசென்மமும் உலகத்திலிருக்கின்றதல்லவா ஹரிஹரி.

தரு-இராகம்-காம்போதி-அடதாளம்.

என்னஜெனனமிது யெடுத்துயிப்புவிமீது
யிதைச்சதமென்றெண்ணலாமா வொன்றை
வதைசெய்தும்துவுண்ணப்போமா பொல்லா
பின்னமிதிறுலென்றுப்பசுந்தர்ம சாத்திரம்
பேதமரியாதற்கவாதமிடுந் துன்மார்க்க (என்ன)

பஞ்சபூதங்களென்னும்பசுக்களுலவுமகம் இது
பாழ்மலம்பொருந்தியக்காடு நிணச்
சீழ்ஜலம்திருந்தியகூடு அதை
மிஞ்சும்படிவிடாமல் மிரட்டிநற்பதம்தில்
மேலாய்விளங்குந் திருமாலைத் துதிசெய்யாத (என்ன)

பேதைப்பொன்புவியென்னும்புகலுமூன்று ஆசையில்
பொருந்திமாய்கைவலையில்சிக்கி வீணாய்
திரிந்துதிகம்பரன்போல்வெட்கி நாளை
வாதைப்படும்போதுடல் யேதைச்சொல்வதையையோ
வண்ணனென்னுங்கமல கண்ணனடிதொழாத (என்ன)

கடிமலர்தடம்வயற்கழுகுசூழுங் கலவை
கரிவரதரடியைப்போற்றி யன்பாய்
பிரியமுடனேதொழுதேற்றி நன்றாய்
படிமீதிலனுதினம் பஜனைசெய்புந்தாசரை
பணிந்துபாததூசியை யணிந்துமனமகிழா (என்ன)

இரணியன் சொல் விருத்தம்.

மதித்துமாயவனென்போனை மனதினிற்பயமில்லாமல்
துதிக்கும்வல்லமையுனக்குச் சொன்னவன்றனைக்காட்டெந்தன்
கொதிக்கும்வாட்கிரைகொடுத்துக் குடல்தனைப்பிடுங்கிவேராய்
விதிக்குறேன்கழுகாக்கைக்கு விரைவினிலுரைசெய்வாயே.

வசனம்.

அடா குழந்தாய் மூன்றுலோகங்களையும் என் ஆக்ஞா சக்கரத்திற்குள்ளாகும்படியாகவும், சகலதேவர்களும் என்னை வணங்கும்படியாகவும், தனிச்செங்கோல் செலுத்தும் என்னை யவமதித்து எனக்கு விரோதியாகி ஒளித்துக்கொண்டு திரியும் மாயவனென்பவனைமதித்து துதிக்கும்படியான வல்லமை யுனக்கு கற்பித்தவன் யாவன். அவனை என்முன்னம் காட்டுவையேயாகில், சாணைபிடித்து தைலதாரணம் செய்து மின்னலைப்போலப் பிரகாசிக்கும் வாளுக்கு அக்கொடியனை வெட்டி யிரைகொடுத்துக் குடல்தனைப் பிடுங்கி கழுகாக்கைகளுக்கு விருந்து செய்கிறேன். அந்த துஷ்டனை இன்னுனென்றுசீக்கிரஞ்சொல்லுவாயடா மூடா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

தந்தையேசினத்தைநீர்தான் தணிந்திடீர்சாற்றுகின்றேன்
செந்தமிழ்க்கலையிற்றங்கும் ஸ்ரீஹரியொருவனென்றே
முந்தினோர்சொற்படிக்கு முனைந்துயான்படித்தேனல்லால்
பந்தமாயெனக்கொருத்தர் பகரவுமில்லையையா.

வசனம்.

கேளும் என்னைப் பெற்ற தந்தையே அடியேன்பேரில் நேரிட்ட கோபத்தைப் போக்கிச் சாந்தமடைவீராகில் உண்மையைச்சொல்லு

கிறேன். அதென்னவெனில், வேதசாஸ்திரங்களில் பொருந்திய சாக்ஷாத்-ஸ்ரீமந்நாராயணனொருவனென்றே பெரியோர்கள்சொல்லியிருக்கிறபடியால், படித்தேனேயல்லாமல் அன்னியர்களெவரும் எனக்குப்போதிக்கவில்லை எந்தையே.

இரணியன் சொல்-விருத்தம்.

அகமீறிபடடாயென்முன் அதிகவார்த்தைகளாடாதே
ஜெகமீரேழுலகுக்கெல்லாந் தெய்வமென்பதநானடாவென்றே
மகாதேவர்முனிவர்சித்தர் மகிதலத்தோர்களியாவும்
பகவானென்றெனைக்கைகூப்பிப் பணிவதையரிந்திடாயோ

வசனம்.

அடா பிரகலாதனு, கெர்வமதிகரித்து நீஎன்னுடன்அதிகமாகப்பேசாதே, இந்த யீரேழுபதினாலு லோகங்களுக்கும் நானொருவனே தெய்வமென்று, பிரமன்-ருத்திரன்-தேவர்கள்-முநிவர்கள்-சித்தர்கள்-மனிதர்கள் முதல் யாவரும் சென்னிமேற்கரங்களைக்கூப்பி என்னைத் தொழுவதை நீ அரிந்ததில்லையோ.

பிரகாதனன் சொல்-விருத்தம்.

பணிகிறார்தேவரென்ற பதமதைநிவர்த்திநித்தியந்
துணிவுடன்கொலைகள்செய்யுந் துரோகிநீதெய்வமார்கண்
மணியெனவிளங்குமாதி மலரடிதாசர்தூஷி
அணியுமன்பருக்குநீதா னனுத்திரளாகமாட்டாய்

வசனம்.

இந்திராதி தேவர்களும், குபேராதி யக்ஷர்களும், பாகவகாதிவசுக்களும், பிரகஸ்பதி முதலாகிய புரோகிதர்களும், சந்தாதிசேனாபதிகளும், பிருகுமுதலாகிய மகாரிஷிகளும், நாரதாதி தேவரிஷிகளும், சித்தாதி கந்திருவர்களும், கபிலாதி சித்தர்களும், வியாசாதிமுனிவர்களும், சுக்கிராதிகவிகளும், நிரந்தரமும் வந்து உன் திருவடிகளில் விழுந்து சேவிக்கிறார்களென்றதை நீக்கிவையும். கொலைகட்களவு காமம்பொய்என்னும், பஞ்சமாபாதங்களையும் பூததயாளம் இல்லாமல் துணிந்துசெய்யும்மகா துரோகியாகிய நீதெய்வமாவாயோகண்களுக்கு மணியைப்போல ஒளிதரும் ஆதிலக்ஷ்மி மணாளனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியின் திருவடிகளுக்குத் தொண்டர்களுடைய பாததூளியை சென்னியிற்றரிக்கும் தாசர்கள் அணுவுக்கும் நீ சமமாக மாட்டாய் தந்தையே.

இ-ன்-சொல் விருத்தம்.

ஆகமுதல் வேதமும்நாதமும் நானென்றே
யரியயனும்ருத்திர னு மடங்கிப்போனார்
சாகரமுமீரேழும் புவியுமண்டச்
சராசரத்திலெனக்கிணைதா னொருவனில்லை
பூகமிடுகிறாய்என்னுடன் பயமில்லாமல்
ஓகோநின்மனதைரிய மென்னடாசொல்
காகம்நரிபேய்கணங்கள் களிக்கவுன்னைக்
கைவாளுக்கிரைகொடுப்பேன் கண்டிப்பாக

வசனம்.

ருக்கு-எஜுர்-சாமம்-அதர்வணமெனும்நான்குவேதங்களும்ஆறு சாஸ்திரங்களும், நாதமுங்கீதமும்நானென்றறிந்துபிரமா-விஷ்ணு-ருத்திரன் மூவரும்எனக்குக்கீழ்ப்படிந்தார்கள் ஆகையால் சப்தசாகரமும் யீரேழுபதினான்கு லோகமும் அடங்கிய அண்டமும் அதற்குட்பட்ட சராசரத்திலும் எனக்கிணையானவன் ஒருவனுமேயில்லை இதைநீயுணராமலும், கொஞ்சமேனும் பயமில்லாமலும் என்னுடன் எதிர்த்து வார்த்தைப்பேசுகிறாய் உன்மனத்திலிருக்கும் தைரியந்தான் என்ன சொல்லடா யிதோபார்ஒருநொடியில் உன்னைஎன்கைவாளினாலேவெட்டிகாகங்கழுநரி கூளிகளுக்கு விருந்துசெய்கிறேன் ஈதுண்மைஎன்றுநம்படாமூடா.

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

வாளுக்கேயிரைகொடுப்பே னென்றுயேன்வீண்
வலுமைசொல்லி நீமிரட்டவேண்டாமிந்திரை
தோளுக்கேயிசைந்ததிருச் செங்கண்மால்தன்
துலங்குமெழிலரவிந்த மலர்க்கொப்பான
தாளுக்கேயடிமைதொண்டர்க் கடியாரிந்த
ஜெகவாழ்வைச்சதமென்று நம்பாருன்போல்
ஆளுக்கேயிவ்வுலக வாசையாலென்
றாலேந்திடுவாரிம் மொழியையறிந்துபாரீர்.

வசனம்

கேளும்என்தந்தையே உண்மைமொழிகளைச் சொன்ன என்னை உமதுவாளுக் கிரைகொடுப்பேன் என்றுபயமுறுத்தி மிரட்டிஉமக்குள்ளவலுமைகளைச் சொல்லவேண்டாம். ஸ்ரீமகாலட்சுமி தோளுக்கி

னைசந்த மலர்ந்த செந்தாமரையை யொத்த நேத்திரங்களுடைய ஜெகதீசன் திருவடித்தாமரைகளுக்கு அடிமைபூண்ட தொண்டர்களுக்குத் தொண்டர்களும் இந்தபிரபஞ்சவாழ்வைச் சதமென்று நம்பமாட்டார்கள் நானெனும் அகம்மதைகொண்ட உன்னைப்போ லொத்த துஷ்டர்களுக்கே இவ்வுலகவாசைமேலென்று அலைவார்கள் இந்தவார்த்தையை நன்றுயோசித்துப்பாரும் என்தந்தையே.

இரணியன் சொல்-தரு-இராகம்-சுருட்டி அடதாளம்

பல்லவி.

எத்துகளித்தனை மெத்தவுங்கற்றுநீ
எந்தனுடன்-பந்தமொடு-சிந்தையுமே-நொந்திடவே (எத்து)

அநுபல்லவி.

எத்துகளித்தனைகற்றுப் பேசுவது பெற்றவனோ
டுக்தமோ-புத்திரா-இனியென்சத்திராதியைப்பினத்துரா
யினமீதுன் கியானமது மானமில்லா (எத்து)

சரணங்கள்.

கைத்தலமுழுதும் நித்தியமுமெனையே
காதலதாய்-வேதமுதலாதியென-நீதியொடு-கைத்தலமுழுதும்
கைத்தலத்தி-லுத்தமர்கள்-சுத்தமொடு-நித்தியமெனை
கண்டுகைகுவிக்க-காவலர்சேவிக்க-கஞ்சன்மால்களிக்க
காலேயேயிதேளிதமென்-தாள்களைத்தொழுதிடா (எத்து)

கியானமறிவில்லா யேன்மதாகிய
கசடனைச்-சுசீலனென்-றிசைவதோ-திசையிலே-கியானமறிவில்லா
கியானமொடு-வானிலவும்-பானுவின்முன் னூனமான
கடுகெதிற்குமா- கண்டதுதோற்குமா-கவலைதீர்க்குமா
கண்டகெர்வங்-கொண்டுமேநீ-விண்டுமெத்த (எத்து)

அச்சமில்லாமலே மெச்சுமுன்கலவை
ஹரிநரிவரதனைப்-பெரிதெனப்பிதற்றுராயச்சமில்லாமலே
அச்சமில்லா-துற்சனுவுன்-கக்ஷியும்பார்-நிச்சயமாய்
ஆலையிலாட்டியே-யாவையுங்கூட்டியே-யதைப்பாராட்டியே
ஆத்திஞர்போல்கிழித்திடுவேன் பார்த்திடுபயமில்லாமல்(எத்து)

பிரகலாதனன் சொல்-விருத்தம்.

சங்குசக்கரமுந்திவ்விய சாரங்கந்தண்டுவாளுஞ்
செங்கைவேலேந்துகின்ற ஸ்ரீமுராஹரியின்நாமம்
எங்கணுமநிறைந்திருக்க வினையரியாமல்வீணய்
பங்கயக்கண்ணன்மீது பகையதுவேண்டாமையா

வசனம்.

சங்குசக்கரங் கெதைவாள் சாரங்கமெனும் பஞ்சாயுதங்களைத் தரித்தவனுமுரனெனும் அசுரனை வதைத்த சாக்ஷாத் எம்பெருமான் நாமம் அகிலவுலகங்களெங்கும் நிறைந்திருக்க யினையரியாமல் அறிவினத்தினல் அந்தபகவானைவீணய் விரோதஞ்செய்துக்கொள்ளவேண்டாம் தந்தையே.

பிரகலாதனன் சொல்-தரு

இ-ம்-நாதநாமக்கிரியை-ஆதிதாளம்

பல்லவி.

ஹரிபகைவேண்டா மசுரர்குலசேகரா (ஹரி)

அநுபல்லவி.

சுருதியின்மரைதனில் கருதுநற்றிருமுக (ஹரி)

சரணங்கள்.

திரிபுவனமுந்தாங்கள் ஜெயங்கொண்டாண்டாலுமென்ன
பெரியவர்ரோவீரோ பேதைமதியிதுகாண் (ஹரி)

துற்புத்தியாலேபத்மா சூரன்கொண்டவரமும்
கற்றவங்களுங்கெட்டு நலிந்துசெந்தணலானன் (ஹரி)

சிலைநுதல்விழிலக்ஷ்மி தேவிமகிழ்மணளன்
கலைவைநகர்வாழ்கரி வரதனெனுங்குணளன் (ஹரி)

இரணியன் வாத்தியைப்பார்த்து சொல்-விருத்தம்.

குருவெனயுனையழைத்தென் குமாரனையனுப்பநல்ல
அறிவையுங்கெடுத்துமிக்க வாந்தைபோல்முழிக்குமுன்னை
இருபிளப்பாய்பிளக்கு யீரலைப்பிடுங்கியானுங்
குருவிகாக்கைகளுந்தின்னக் கொடுக்கிறேனிரையதாக

வசனம்.

ஓய்சண்டாமார்க்கரே எங்கள்குலகுருவென்று உன்னைமதித்து என்புதல்வனை யுமிடம்வாசிக்கும்படி கூட்டியனுப்பினேன் அவனை

யழைத்துக் கொண்டுபோய் அவனுக்குள்ள நல்லறிவையுங்கெடுத்து என்முன்வந்து ஆந்தையைப்போல முழிக்கும் உன்னை என்கைவாளி னலே யிரண்டுபிளப்பாகப் பிளந்து உன்னுடைய ஈரலைப்பிடுங்கிகழு குகாக்கைகளுக்குப் பசிதீரப்புசிக்கும்படி நான்கொடுக்கிறேன் யிரை யாகப்பாராய் சண்டாமார்க்கா

சண்டாமார்க்கன்-இரணியனுக்கு சொல் விருத்தம்,

இரையாகவென்னைகொடுக்க வேண்டாமையா
 யெங்கும்நிறைந்தருள்கொடுக்கு மிரணியபூபா
மறையாகமங்கள்முதல் நீயேயென்று
 மைந்தனுக்கநேகவித மரியச்சொன்னேன்
முறையாகமனதிலதை வைத்திடாமல்
 முகுந்தனையே முதலென்று நானென்செய்வேன்
துரையேயுன்பாதமலர் சாக்ஷியாகச்
 சொன்னேன் கேளென்மீதில்தோஷமில்லை

வசனம்.

சகலபுவனகர்த்தராகிய இரணியபூபாலரே உமதுவாளுக்குஎன் னையிறையாகக் கொடுக்கவேண்டாம் உமதுபுதல்வனுக்கு மறையாக மபுராணங்களும் நீரேஎன்று அனேகவிதங்களாக அவனுக்குத்தெரி யச்சொல்லியும் அதையும்து குமாரன் எள்ளளவும் மனதினில் அதை வைத்து தியானஞ்செய்யாமல் முகுந்தனையே முதல்வனென்று துதி செய்கிறான் அதற்குநான்என்னசெய்வேன்பிரமன்-விஷ்ணு-ருத்திரன் முதலானோருக்கும் துரையாகிய உமதுதிருவடித்தாமரைகள் சாக்ஷி யாகவிரோதியின் சாஸ்திரத்தை யுனதுதனயனுக்கு போதிக்கவேயி ல்லை தானவகுலத்தாசனே.

இரணியன்-மந்திரிகளுடன் சொல்-விருத்தம்.

பரவியகொலுவில்மேவும் பராக்கிரமந்திரிகளேகேளீர்
கரமொடுசிறுவனந்தக் கசடனைக்கருதியென்முன்
பரமெனத்துதிக்குமூடப் பயலுக்குயிந்தபுத்தி
திரமுடன்வந்ததென்ன செப்புவீர்தெளிந்துநீங்கள்

வசனம்,

விசாலமாகிய என்கொலுவில் மேவியிருக்கும் பராக்கிரமத்தில் மிகுத்தமந்திரிகளே கேளுங்கள் இந்தச்சிறுபயல் அந்தக்கசடனாகிய மகாவிஷ்ணுவைதியானித்துக் கரங்களைக்குவித்து அவனைஏகபரனெ

ன்று சொல்லும்மூடனுக்கு அந்தத்திட மாகியஎண்ணம் எப்படியுண்டாச்சுது. அதையோசித்துச் சொல்லுங்கள் அமைச்சர்களே.

முதல்மந்திரிசொல் விருத்தம்,

வீரியத்தினிலுயர்ந்த விண்ணவர்பயங்கராகேள்
வாரியில்பயந்தொளித்த வசடனுக்கிவன்பரிந்துத்
தேரியேபேசுகின்றான் றிருடனுக்குளவானுப்போல்
பாரிலுள்ளோர்நகைக்கப் பதிகெடுத்திடவந்தானே

வசனம்.

தேவர்கள் கண்டுபயந்து நடுங்கும் வீரசூர பராக்கிரமதீரராகிய அரசேகேளும் தங்களுக்குப்பயந்து ஓடிகடலிலொளித்துக்கொண்ட சீலமிலாதவனாகிய மாலுக்காகத் தேர்ந்து யிவன்பரிந்துப் பேசுகின்றான் இதுஎப்படியிருக்கிறதெனில், திருடனுக்கு உளவுசொல்பவனைப் போலயிருக்கிறான் இந்தவிபரீதத்தைத் தெரிந்து உலகிலுள்ளவர்கள் நகைத்து கேலிசெய்யவும் பதியைக்கெடுக்கவும் உமக்குப்பிள்ளையாக ப்பிறந்தான்.

மந்திரி-சொல் விருத்தம்.

சொன்னதுமெய்தான்செல்வஞ் சொற்கஞ்சாதென்பார்போல
மன்னனேநீரும்வேணமதிகளை எடுத்துரைத்தும்
உன்னியேயிதைத்தேராம லுளரினுனரியைமேலாய்த்
தன்னினத்தையேகெடுக்கத் தனையனாய்வந்தானையா

வசனம்.

மிகுதியாகிய மதியையுடைய யெங்களரசே முதன்மந்திரி சொல்லியது சரி சரியே செல்வஞ்சொல்லுக்கஞ்சாதென்பதுபோல, உமது புதல்வனுக்கு நீர் வேண்டிய புத்திமதிகளைச் சொல்லியும் இதையரிந்து தேர்ச்சி யடையாமல் ஹரியைவிட மேலான தெய்வங்களில்லையென்று புகழ்ந்து கொண்டாடுகிறான் இதையோசிக்கில் குலத்தைக்கெடுக்கவந்த கோடாலிக்கு நிகராகப் பிறந்தான் பிரபூ.

இரணியன் சொல்-விருத்தம்.

வேணதெத்தனைசொன்னாலும் விருப்பமாயதைக்கேளாமல்
ஆணவமாகஎன்முன்னளக்கிறானரியென்போனைச்
சேணுலகினில்வாழ்கின்ற தேவரும்நகைக்கவொட்டை
சாணில்லையிவன்நமக்குச் சத்திராதியாகவந்தான்.

இரணியன்-சொல்வசனம்.

இச்சிறுவனுக்குயெத்தனைவிதத்தில் புத்திகளைப்பன்னிப்பன்னிச் சொன்னபோதிலும் விருப்பமாய்க்கேளாமல் கெர்வங்கொண்டுயென் முன்னே ஹரியென்பவனைப் பலவிதங்களாய்ப் புகழ்ந்துகொண்டா டுகிறான் இவனுக்கென்ன கெடுதிகாலமோ விண்ணுலகில் வாழப்பட் ட தேவரும் மூவரும் மத்தியாவருங்கண்டு நகைக்கும்படியாக ஒட் டைஜாணில்லை இவன் நமக்குச்சத்திராதியாக வந்துதித்தானே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

வண்மையாயுலகீரேழும் வளம்பெரக்காத்தளிக்கும்
புண்ணியமூர்த்தியென்னும் பூமகள்நாதனென்றே
தண்மையில்லாமல்நீர்தான் தனைத்தானேதெய்வமென்று
எண்ணம்நீர்கொள்வதேதழை யிரவில்காண்சொற்பனம்போல்.

பிரகலாதனன்சொல்-வசனம்.

சிருஷ்டி திதி சங்காரங்களெனும் முத்தொழில்களையுஞ்செய்து லோகாலோகங்களையும் பிரளயகாலத்தில்தன்குக்ஷியில்வைத்துக்காக் க்கும் புண்ணியமூர்த்தியாகிய பூமகள்மணாளன் ஒருவனென்று அறிந் து தெளியாமல் உன்னைநீயேபுகழ்ந்து உன்னைவிட வேறுதெய்வமில்லை யென்றெண்ணுவது யெப்படியாமெனில் மிகுந்தஈனனுனவன் சொற் பனத்தில் கண்டதிரவியங்களுக்கொப்பாகும் தந்தையே.

இரணியனுக்கும் பிரகலாதனனுக்கும் தர்க்கம்,

தரு-இ-ம்-தற்பார்-ஆதிதாளம்.

இந்தமதி யுந்தனுக்கு வந்ததென்னடா யென்மைந்தா
சிந்தை நொந்தாழிதனில் மறைந்திடும்மாயனைச்சொந்த
தெய்வமென் றவனைநீ செப்புகுறாயே சேயா
வையமுழுது மெந்தன் வசமல்லவோடா பேயா (இந்தமதி)

பிரகலாதனன்சொல்-தரு.

செந்திருநாதனைவிட மந்திரம்வேறில்லையென்று
முந்திறோர்சொல்வதினுலென் சிந்தைமகிழ்ந்தேனுனின்றுறு

வோதினேன் ஸ்ரீஹரிமாதவன் பாதமே
ஆதரமாய்வளர் பூதலமீதில் (செந்திரு)

இரணியன்சொல்-தரு.

அண்டபகி ரண்டங்களென் தண்டனைக்கு ளண்டினது
கண்டரியாமல் கோதண்டன் தொண்டனென்றே துதிப்பது
கனகன் குலத்துக்கது கௌரவமல்லா மூடாமூடா
அனைத்துலகமு மெனக்கடிமை யரியாயடா (இந்தமதி)

பிரகலாதனன்சொல்-தரு.

ஆகமபுராணங்கள் விவேகமரியாமல்வீணு
யூகமிடுகூரீரூப யோகமதி னுலுண்டோசொல்
லுலகில்பனியைக் கண்டேருழுதுதடி யாகுமோ
மலையைவிழுங்கும் பேர்க்குமசக்கம் பெரிதாகுமோ (செந்திரு)

இரணியன்சொல்-தரு.

தேவனென்றெனை யாவலாய் நாவலர் பாவலர்சசி
காவலன் முதலோரெனக் கேவல்செய்வதைப் பாராமல்
கள்ளனவனுடைய கருத்தைநீ யரியாமல்
உள்ளமதில் மதித்து யுருகுராய் தெரியாமல் (இந்தமதி)

பிரகலாதனன்சொல்-தரு,

மதியாமலே யுன்தம்பி கெதியரியாயோ வீணு
சதிசெய்கிறு யின்னமும் நிதியிதுவல்லாமனுனை
சமமெனவான் கோழி சிறகைவிரித்தாடினும்
அமையுந்தோகை மயிலுக்கதுயிணை யாகுமோ (செந்திரு)

இரணியன்சொல்-தரு.

யேகசக்கரவர்த்தியாய் சர்வேஸ்வரனுமா யீரேழு
லோகமுகுந்தனுன் தெய்வமாகச் செய்திடுந்தவத்தின்
பலமரியாமல்திருகலவைக் கரிவரதன்
மலரடியைமனதில் நிலையென்று துதிக்கிருய் (இந்தமதி)

பிரகலாதனன்சொல்-தரு.

சென்னல்வளருங்கலவைகன்னகர்தனில்மேவிய
பொன்னணிகரியரதன் னின்னிதபாதமலரை
யொருதரமாகிலும் வேரதுமடியவர்க்கு
பரிதிமுன்பனிபோலே பலவினைகளுந்தீரும் (சென்திரு)

முதல்மந்திரிசொல்-விருத்தம்,

பரிதிசூழுலகுக்கெல்லாம் பகவானுன்தந்தையென்றே
சுரிதியாகமங்கள்வேதத்தோர் மறையோர்கள்யாவும்
கருதியேதொழுதுபோற்றுங் கடவுளைனிந்திடாமல்
துரிதமாய்க்கரியமாலை துதிப்பதுஞாயமல்ல.

முதல்மந்திரிசொல்-வசனம்.

அண்டபிண்ட பிரம்மாண்டங்களுக்கெல்லாம் பகவான் உன்தந்தையென்று சுருதியாகமங்கள் மறையோர்கள் தேவர்முதலியாவரும் யெண்ணித்தொழுதுக்கொண்டாடுங் கடவுளாகிய இரணியேஸ்வரனைப்பணிந்துபோற்றாமல் வீரபட்டு கருத்ததிருமேனியையுடையமாலைத்துதிப்பது உமக்குஞாயமல்லவிளவரசே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

சுத்தமாய்விளங்குமெங்கள் ஸ்ரீஹரிமூர்த்திநாமம்
பத்தியொடுதுதிப்போர்க்கெப்பமேதுமொன்றாகாது
யெத்திடுஞ்சமுசாரத்தி னியல்பேதுயின்பமெல்லாப்
புத்தியேபுகலவேண்டாம் போதும்போதுங்கள்நீதி.

பிரகலாதனன்சொல்-வசனம்.

குற்றமற்றுபரிசுத்தமாகி யெங்கும்பரவியெங்கள் ஸ்ரீமுகுந்தனுடையநாமத்தை பக்திவைராக்கியத்தோடு துதிசெய்யும் முக்தர்களுக்கு பயமும் விரோதமும் அற்பபுத்திகளைச்சொல்லிப் பயமுறுத்துகிறீர் பணங்காட்டுநரி சலசலப்புக்கஞ்சாதுபோலஉங்களுருட்டுபிரட்டுகளுக்குக் கிஞ்சித்தும்பயப்படுவேனோ போதும்போதும் உங்கள் நீதிநிறுத்தும் மந்திரி.

தும் மந்திரி.

2-வது. மந்திரிசொல்-விருத்தம்.

நீதியாயுலகுக்கெல்லாம் நினதெய்வமென்றதிப்பிரக் (ன்
கியாதியைக்கேட்டுமாயன்கடலில்போய்யொளித்துக்கொண்டா

சேதியையுனக்கிப்போது தெரிவித்தோமினியாகிலும்
சோதிபோல்விளங்குந்தந்தைச் சுருதியைத்துதிசெய்வாயே.

2-வது, மந்திரிசொல்-வசனம்,

சொற்கமத்திய பாதாளங்களுக்குள்ளடங்கிய பதினுன்குலோகங்களிலும் நன்னீதிநடத்தியெங்குநிறைந்து பெருங்கீர்த்தியையடைந்தஉன் தந்தையின்புகழை நீதுதிசெய்யும்விஷ்ணுவான் தெரிந்துபயந்து கண்ணுக்ககப்படாமல் ஓடிப்போய்க் கடலினில்பதுங்கிக்கொண்டான் அந்தரகசியத்தை உனக்குத்தெரியச்சொன்னேம் யிதையுணர்ந்து யினியாகிலும் உனதுதந்தையின்பேரை யிப்போதே துதிசெய்வீர் இளவரசே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

சுருதியைக்கடலில்முன்னே சோமுகனொளித்தபோது
இருதயங்கலங்கிவேதன் யெம்பெருமானைத்தாழ
துரிதமாய்மச்சமாகிச் சூரனைவதைத்துவேகம்
பரிவுடனளித்துக்காத்தல் பகவானுக்கிணையாவானே.

பிரகலாதனன்சொல்-வசனம்.

சிலவருடங்களுக்குமுன்னம் சோமுகாசூரன் பிரமதேவனிடத்திருந்த வேதங்களைத்திருடிக்கொண்டு கடலிலேயொளித்துக்கொள்ள யிதையறிந்தபிரமன் ஸ்ரீமந்நாராயணன் திருவடிகளில்விழ்ந்து முறையிட அவனுக்கருள்புரிந்து விறைவாக மச்சாவதாரஞ்செய்து கடலில்புகுந்து அந்தவசுரனைமடித்து பிரமனுக்குவேதத்தையளித்துரக்ஷித்தமாயோனுக்கு நிகாரவனே இவனுடையநாமத்தை நான்துதிசெய்வதற்குமந்திரி,

இரணியன்-சொல்-தரு-இ-ம்-காம்போதி-அடதாளம்.

பல்லவி,

பாலகாயிப்படிக்கொற்ற பழியானமொழியென்முன்
பகர்வதெவர் சொல்பலமோ யிதுநலமோ வனுகூலமோ.பாலகா

அநுபல்லவி,

வேலைசூழ்புவிமேலேநீதிரு-மாலென்றிட்டெடு-காலமேமாவடா பாலகா

சரணங்கள்,

பகலவனுலவும் செகதலந்தனில்
சகலசுருதிகளும் புகலுமெனைத்தினம்
யிகலவனுகிய முகில்நிரவண்ணனைத்
தகலினக்கிது மிகபலமாரடா(பாலகா)

அண்டரண்ட ப்ரம்மாண்டமெண்டிசை
கண்டுயெனதடி தெண்டனிடும்படி
விண்டகீர்த்தியைக் கண்டரியாமல்கோ
தண்டன்றனையிப்பூ மண்டலந்தனில்(பாலகா)

துய்யமலரினி லுய்யுந்தோன்மாரி
பெய்யுமெழில்கல வையில்வாழ்கரி
ஐயன்வரதனை மெய்யென்றெனத்துதி
செய்யும்வலுமையென் கையிலரிகிறேன்(பாலகா)

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-துஜாவந்தி-அட்தாளம்.

வேண்டாமித்தனைகோபந் தந்தையே யதில்
வரும்வெகுமனத்தாப நிந்தையே யெங்குந்
தூண்டாமணித்தீபம்போல் துலங்குங்களங்கமில்லா
சுருதிமுதலினில் பரிதியுதயம்போல்
பெருதவமுனிவர் கருதும்ஹரிதன்மேல்(வேண்)

அண்டர்க்கமுதளித்த நாதன் அண்ட
மகிலமளந்திடும் பொற்பாதன் பொல்லா
துண்டனெனுந்தெண்டகா சூரனுன்வனிந்த
தொல்லுலகமதையல்லல் படச்செய்த
வல்லனைக்கொம்பால் கொல்லும் ஹரியின்மேல்(வேண்)

ப்துங்குஞ்சிங்கப்பாச்சல் பொல்லாதே மதம்
படைத்தவேழமதை வெல்லாதே யென்ற
விதமதையரியாமல் வீண்பயித்தியங்கொண்டு
விண்ணவர்கள்துதி பண்ணுமெழில்மணி
வண்ணனெனுமலர் கண்ணன்மீதினில்(வேண்)



அளவிலாவரகம் வேதன் யாவையு
மளித்துக்காத்தருள் ஞானபோதன் பஞ்ச
வளம்பெருங்கலைவயில் வளர்கவிக்கருள்கரி
வரதரடிதனை தரைதனிலெயெங்கும்
பெரிதெனவேதொழும் மிருதயந்திலே(வேண்)

இரணியன்சொல்-விருத்தம்.

ஏதிவனினியொருவருக்கடங்கா னிதுவரையிலுஞ்சுதனென்றே [மா
நீதியோடமைச்சரேயெண்ணி நானிருந்தேதின்னமும்பொருத்திடவச
சூதுசெய்மாயனைத்துதித்திடு மிந்ததுரோகியைத்துணிந்துநாகிப்போ
சோதிவாளுக்கிரைகொடுக்கிறேன்பாரீர்துஷ்டப்பயலிதோடொழிய.

இரணியன்சொல்-வசனம்.

ஆ-ஆ-ஆ-மதிமந்திரிமார்களே கேட்டீர்களா யிவன்மொழிகளை ஏதேது இவன் யினியொருவருக்கும் அடங்கமாட்டான் தர்மத்தைய னுசரித்து யிதுவரையிலுந்தம் குமாரனென்சுதேசென்று யெண்ணியிருந்தேன் யிவன்சொல்லும்பதங்களை யினியான் கேட்டு சகிக்கிறேனோ சஞ்சகிய மாயவனைத்துதிசெய்யும் யிந்த துரோகியாகிய யிப்பயலை இப்போதே சாணைபிடித்து பளபளென்றுமின்னும் யென்னுடைய வாளுக்கு யிரைகொடுத்து யிவனையின்றொடொழியச்செய்கிறேன் பாருங்கள்மந்திரிகளே.
நதிரிகளே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

ஒழிவதேநல்லதென்று முறைத்திடுவார்கள்மேலோர்
பழிவகைக்கஞ்சிடாத பாதகர்கையிற்சிக்கி
அழிவதைப்பார்கிலுந்தான் அதுமிகமேன்மையென்றுச்
சுழிமுனையறிந்தோர்சொல்வார் சுத்தமதாயெப்போதும்.

பிரகலாதனன்சொல்-வசனம்,

கேளும்யென்தந்தையே பழிவதைக்குகிஞ்சித்தும் அஞ்சாதகொலைபாதகர்கையிலகப்பட்டு மரணமடைவதைப்பார்க்கிலும் இப்பிரபஞ்சவாழ்வையொழித்து மேலாகியபதவியையடைவது மிகவும்நலமென்று சுழிமுனையறிந்தபெரியோர்கள் நிரந்தரமும் நிர்மலமாகிய மனதோடும் சொல்லுவார்கள் என்தந்தையே,

முதல்மந்திரிசொல்-விருத்தம்,

சுத்தமாய்மனைதநன்முப் சோதித்தவன்போல்நீதான்
மெத்தவுஞ்சமர்த்தைபேசும் வெறியாமிகள்தவமிருந்து
பெற்றவர்க்கடங்கிடாத பிள்ளையைவையாருண்டோ
பித்தனேயிதையறிந்தும் பிளத்தாதேயவனையின்னம்.

முதல்மந்திரிசொல்-வசனம்,

களங்கமற்றமனதினால் கடவுளைக்கண்டுசேவித்தவனைப்போல்நீ தற்ற சமர்த்தைக்கூறும்பயித்தியக்காராமிகள் தவஞ்செய்துபெற்றதாய் தந்தையருக்குஅடங்கி ஒடுங்கியவர்களிஷ்டப்படி நடவாதபிள்ளையை ப்பூவுலகில் உயிருடன்வைப்பவர்களுமுண்டோ பித்தசுவாதீனமில்லா தவனே யிந்தமொழியையாகிலும் தெரிந்துக்கொண்டு அந்தகூதனை கிய மாயவன்பேரைச்சொல்லாமல் உன்பிராணனைக்காப்பாத்திக்கொ ள்ளடா சிறுவா,

பிரகலாதனன்சொல்-ஆசிரியவிருத்தம்.

இன்பமிகுசங்கீதந்தொனியிசைகுசை
யேற்குமோசெவிடனிடமென்சொன்னாலும்
இலகியமாணிக்கமதைக்குருடன்கையில்
யீந்திடினும்மதின்விபரமொளிகாண்பானோ
துன்பமிலாக்கற்கண்டின்சுவையைக்காகந்
தொகுத்தறியுமோபுவியிற்சுத்தமாக
துலங்குமெழிற்கஸ்தூரிகுங்குமத்தின்
சுகமறியுமோகழுதைசொகுசாயன்பு
மிகுமலர்மாலைமணத்தின்
வண்மையருமைகுரங்கறிந்திடுமோவன்றியெங்கும்
அழகியதேங்காய்ருசியைநாய்தான்கண்டு
யதிகசந்தோஷப்படவதினாலாமோ
தன்பெருமையேபெரிதென்றெண்ணிப்
பேசுந்தையித்தியதுலசூரனேனும்மினைக்கு
தாமோதரன்றன்னருளின்னதென்றுக்
சாற்றிடினுமவன்மனதிற்பட்டிடாதே.

பிரகலாதன்சொல்-வசனம்.

மிருந்தயின்பத்தை பெருகச்செய்வதாகிய சங்கீதம்யெத்தனைபாடினபோதிலும் செவிடன் காதுக்குக்கேளாதது போலவும் ஒளிபெருகும்மாணிக்கத்தைக் குருடன்கையில்கொடுத்தால் அதின்பிரகாசத்தையும் குணத்தையும்கிஞ்சித்தும் அறியமாட்டான் போலவும் மதுரந்தரும் கற்கண்டின்யினிப்பைக்கரகம் அறியுமோ அறியாதுபோலவும் குங்குமமூட்டையைச்சுமக்குங்கழுதையதின் குணத்தையரியுமோ அறியாதுபோலவும் மிகுவாசனைபொருந்திய பூமாலையின்மணத்தைக் குரங்கு அறியுமோ அறியாதுபோலவும் தேங்காயைத்தின்று அதின்ருசியைநாயரிந்து சந்தோஷப்பட அதினலாகுமோ ஆகாதுபோலவும் தன்பெருமையைத்தானே புகழ்ந்தும்தன்காலுக்குத்தானே கும்பிடும் அரக்கர்குலத்துக்கதிபயீனனுக்கு பகவானுடையகுணமின்னதென்று யெத்தனைவிதத்தில்போதித்தபோதிலும்கிஞ்சித்தும்அவன்மனதிற்படமாட்டாது.

2-வது. மந்திரிசொல்-விருத்தம்,

தட்டாதென்றெனவுரைத்த சங்கதிமரந்திடாமல்
கட்டானகுலத்தில்வந்து கனமரியாமல்மூட
முட்டாளுனக்கென்சொன்னாலுமூர்க்கன்போலெதிர்த்தும்பேசுந்
துஷ்டாநின்னுக்கைரெண்டு துண்டாகத்துணிப்போம்பாராய்.

2-வது, மந்திரிசொல்-வசனம்,

அடாகத்தேரிக்காயிக்குக் காலுங்கையுமுளைத்தாப்போலசாணுண்டுபயல் கிஞ்சித்தும்பயமில்லாமல் யிச்சபையிநடுவில்நின்று சகலவுலகங்களுக்கும் தேவனாகிய உன்தந்தையைக்கேவலமாய்ப் பேசியமூடப்பயலே நீமூமுட்டாளாகையினால் உனக்கெத்தனையாய்ப்புத்திமதிசொன்னாலுங் கேளாமல்மூர்க்கனைப்போல தந்தையுடனெதிர்த்துசகலநூல்களையும் வுணர்ந்தபெருத்த வித்துவானைப்போல பேசும்துஷ்டனாகிய உன்னுக்கைஇரண்டுதுண்டாகத் துணிக்கிறேன்பாரடாபயலே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

எத்தனைதான்மூடருக்குஞானநூலையியம்பிடினுமவர்குணத்தை விடவேமாட்டார், சுத்தமிலாவேசிதனைவேசியென்றால்துரிதமுடன் கோபிப்பாள் ஆடித்துமண்மேல். சத்விஷயமரியாச்சண்டாளர்தம்மைச் சண்டாளரெனவுரைத்தாலும்மைப்போலே, மெத்தமனங்கோபிப்பாரெண்ணிப்பாரார் மேலோர்களிதைப்போலேயிஞ்சமாட்டார்,

பிரகலாதனன்சொல்-வசனம்.

நாயின்வாலைக்குணக்கெடுக்கும்நிமித்தியம் வெகுவிதஉபாயங்கள் செய்தபோதிலும் பழயபடிவால்வளைந்திருக்குமேயன்றிநிமிராதது போல எள்ளளவும் ஞானமிலாதமூடர்களுக்கு மேலாகிய வேதநூல் களையெத்தனையாக மனமுருகபபோதித்தபோதிலும் தங்கள்குணமாற மாட்டாது வேசியைவேசியென்றுசொன்னால் நாணுவேசியென்றுபட படத்து துடிதுடித்து சினங்கொள்வார்கள் அதைப்போல சத்விஷ ய த்தின்பெருமையை பரியாதசண்டாளர்களைச் சண்டாளர்களென்று சொன்னால் உங்களைப்போலேகொஞ்சமேனும் யோசிக்காமல் கோபி ப்பார்கள் நன்மார்க்கத்திலீடுபட்ட சுத்தசாதுக்களேது சொல்லினுஞ் சினங்கொள்ளமாட்டார்கள்.

மந்திரிகளுக்கும்-பிரகலாதனுக்கும்-தற்கம்.

தரு-இ-ம்-கவுளம்-அடதாளம்.

மந்திரிகள்சொல்-தரு.

மாலென்றவனையெங்கும் மேலென்றுராமாயிங்கு
மகிழ்ந்துமதித்துமே பூசிக்குராய் யெங்களை
யிகழ்ந்துவெறுத்துமே தூஷிக்குராய் சிறு
பாலனென்றுனையெண்ணி பார்ப்பதினால்மெத்த
பரியாசம் பேசுராய்பாலகா

பிரகலாதனன்சொல்-தரு.

பாதகக்கொலைக்கஞ்சாக் காதகப்பழிசெய்யும்
பாவியைப்பரமென்னலாமோ கஞ்சை
மேவியதனையுண்ணப்போமோ பொல்லாத்
தீதகமனத்தோனை தாதாவென்றுரைப்பது
செல்லாதுங் களுக்குந்தீரம்

மந்திரிசொல்-தரு.

தீரமாயுலகெங்குஞ் சாரிவரும்போதந்த
திருடன்யெங்கள் சூரத்தைக்கண்டு செங்
கெருடன்மீதினி லேறிக்கொண்டு கட
லோரமாகவேயோடி யொளிக்குங்கள்ளனையிங்கே
யுளராதேயொருமித்து வாழ்குவாய்

பிரகலாதனன்சொல்-தரு.

ஒருமித்துவாழ்வென்னுங் கருமத்திலுழல்கின்ற
யுலகமாய்கையி லகப்பட்டு துற்

பலமாகியபின் மதிகெட்டு வருந்
தருமத்தைவிரும்பாத தமித்தியமந்திரிகளுங்கள்
தம்வுயிதுவரையில் போதும்

மந்திரிசொல்-தரு.

போதுமென்ருய்நீமுதல் வாதுக்கேரினேவெட்டிப்
போடுவாரதை தடுத்தோமே வெகு
பாடுபட்டதர்க் கடுத்தோமே இந்த
சூதும்வாதுமுனக்கு தெரியுமென்றறியாமல்
செய்தோமுனக் குபகாரம்

பிரக்லாதனன்சொல்-தரு.

உபகாரிகளென்று வெகுபேர்கள்சொல்வது
உலகமதிலுங்களைத் தானே வீணாய்
கலகஞ்செய்குரீ ரின்னமேனே சந்தி
செபதபமறியாத தீயர்செய்திடும்நன்மை
திறமென்றெண்ணூர் தெரிந்தோர்கள்

மந்திரிசொல்-தரு.

தெரிந்தவராகையால் வருந்தியுனக்குப்புத்தி
செப்பினோம்தைநீ கேளாமல் யீரே
ழிப்புவிகளையு மாளாமல் யேனோ
வருந்திக்கலவைக் கரிவரதாவென்றுயின்னம்
வாளுக்கிரைகொடுப்பார் வதராதே

பிரகலாதனன்சொல்-தரு,

வகரும்துன்மார்க்கனாப ப்தரிடும்படிக்கொல்ல
வண்ணொருவனென்றே யெண்ணு தமிழ்ப்
பண்ணும்பாவலர்க்கவர் கண்ணு செந்நெல்
கதிரும்வயல்சூழ்கின்ற கலவைக்கரிவரதர்
கனமறியாநிற் மூடகியானோ

இரணியன்சொல்-விருத்தம்.

கியானமாய்நீங்கள்சொல்லுங்கருத்தையுமுரித்திப்பாரா
யீனனையினிச்சும்மாவைத்திருப்பதுநமக்கேயூனம்
வானுலகமும்நடுங்கவரிவிலாச்சிறுவன்றன்னை
கானினிக்கொல்வேனப்பால்நடந்திடீர்மந்திரிமாரே,

இரணியன்சொல்-வசனம்,

கேளுங்கள் மந்திரிமார்களே நீங்கள்சொல்லும் நன்மார்க்கத்தின் பொருளையோசித்து அதின்பயனையடையாத யினப்பயிலே யினியவனை க்ஷணமேனும் உயிருடனிருக்கச்செய்தால் நமக்குமானக்கேடு சம்பவிக்கும் ஆகையால்கொஞ்சமாகிலும் அறிவில்லாதயிக்கொடிய சிறுபையலை வின்நன்னதிரும்படி யினிநான்வதைசெய்வேன் தூரமாய்ப் போங்கள்மந்திரிகளே.

முதல்மந்திரிசொல்-விருத்தம்.

மார்க்கமதாயநேக மதிகளையுரைத்துங்கேளா
மூர்க்கனைவைத்தோமானால் முழுமையுங்கெடுப்பானென்று
தீர்க்கமாயெங்களுக்குத் தெரிந்ததுயிவன்முகத்தைப்
பார்க்கவேயாகாதிந்தப் பாவியெங்கிருந்துவந்தான்.

முதல்மந்திரிசொல்-வசனம்.

நன்மார்க்கமாகிய வெகுவிதபுத்திமதிகளைச்சொல்லியுங் கேளாதயிந்தமூர்க்கனையினியிந்த பூமியில்வாழும்படி உயிருடனிருக்கச்செய்தால் தான்கெட்டகுரங்குவனத்தையுங்கெடுத்ததைப்போல்அவன்கெட்டுப்போவதுமல்லாமல் யின்னமிருப்பவர்களையுங் கெடுப்பானென்றுயெங்களுக்கு திடமாய்தெரியவந்தது ஆகையால் யிந்ததுன்மார்க்கன் முகத்தைப்பார்க்கவேகூடாது யிப்பாவியுங்களுக்கு யெங்கிருந்துவந்துபிறந்தானோ தைத்தியேந்திரரே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

வஞ்சனைக்கபடஞ்சூதும் வருங்கொலைசதிகள்துரோகப்
பஞ்சபாதகத்துக்கஞ்சாப் பாவிகளுங்களுக்கு
அஞ்சிடேனென்சொன்னாலு மறிவிலாவமைச்சமாரே
கஞ்சனையளித்தமால்தன் கமலபொற்பதம்விடேனே,

பிரகலாதனன்-சொல்வசனம்.

வஞ்சனைகபடஞ்சூது கொலைசதிதுரோகமாகிய பஞ்சமகாபாதகங்களைக்கொஞ்சமுமஞ்சாமற்செய்யும் கொடியபாவிகளாகிய உங்களுக்கு அணுவளவாகிலும் பயப்படமாட்டேன் பிரமனைத்தன்னுபிக்கமலத்தில்யீன்ற திருமாலின்உபயசெந்தாமரைப்பாதங்களைஒருகிணைப்பொழுதாகிலும் துதிசெய்யாமலிருப்பதேயில்லை மந்திரிமார்களே.

இரணியன்சொல்-தரு-இ-ம்-அடாணா-திரிபுடைதாளம்.

ஹரியெனும்நெறிபரி     கரியடாமூடா     இது
சரிதிரிபுவியொரு     யெனக்கீடா (ஹரி)

அருமறைமுனிவர்க ளனைவருமென்னை
பரமென்றுதிப்பது தெரிந்திருந்துநீ
கரமொடுதிரமி லாமலேயெனதுமுன்
பரமெனச்சொல்லுந் தரமதையினமுர (ஹரி)

அலைகடல்சூழுலகினி லவனிட
பலமதையறிய லரமெனயானங்
குலவியேபெருமலை களுந்தேடும்போ
தலைமரைந்தொழுது லவினிலோடிய (ஹரி)

அண்டபுவனமெண் டிசையோர்களும்
கண்டுபயங் கொண்டுநடுங்கிட
விண்டதவங்கண் டரியாமல்கோ
தண்டனைபூ மண்டலந்தன்னிலே (ஹரி)

சுருதியின்மறைமுடி வினிலவன்பதம்
பெரிதெனயினி கருதிவருசூரர்
நிருதர்கள்பகைவன் கலவைக்கரி
வரதனைநிஷ்க் கரதமதாகவே (ஹரி)

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

ஆதியெனும் வேதமதில் விளங்குகின்ற
ஹரிநாம மந்திரமென்னு மமுதந்தன்னை
நீதியோ டுண்டுசுவை கண்டபேர்கள்
நீனிலத்தில் வேறொன்றை நிகழ்த்துவரோ
தீதுடைய விடமதைக் கொண்டடிக்கடிக்குத்
தின்னென்று லுண்ணுவரோ தெளிவில்லாமல்
யேதினிசொன் னலுமினி யுன்னாமத்தை
யியம்பிட யென்னாலாகா தெந்தன்கோவே.

பிரகலாதனன்சொல்-வசனம்.

சிருஷ்டிக்குமுன் ஆதியாகியும் வேதத்திற்குள் பொருளாகியும் விளங்குகின்ற ஸ்ரீஹரிநாமமெனும் திவ்விய அமுதத்தை பக்திவைராக்கியத்துடன் உண்டு அதின்ருசியை யறிந்தவர்கள யிப்பூமியில் மற்றொன்றைச்சொல்லுவார்களோ நலத்தைத்தரும் அமிர்தத்தைப்புசிப்பதைவிட்டு துக்கத்தைத்தருவதாகிய கொடியவிஷத்தைப் புசியுமென்று அடிக்கடிச்சொன்னபோதிலும் சேர்ச்சியையகற்றி உண்பார்களோ உண்ணமாட்டார்கள் அதுபோலநீர் யென்னசொன்னபோதிலும் ஸ்ரீஹரியின்னாமத்தைவிட்டு உம்முடையநாமத்தை யென்னுவினால் சொல்லமாட்டேன்யென் தந்தையே,

இரணியன்சொல்-விருத்தம்.

பாரிலென்கீர்த்திதனைப்பிரபலமாகப்
பரிவுடனேயுரைசெய்வானென்றுயானுந்
தேரிமனங்களித்துமிகசந்தோஷித்துத்
திரமாகயெண்ணியதோரெண்ணமெல்லாம்
நாரிபெருவயருகொண்டதரிந்திடாமல்
நலமானஸ்ரீமந்தநாள்போலாச்சே
தூரியநம்புலிவயத்தில்பூனைவந்து
துரிதமுடனுதித்தாற்போல்தோன்றினனே.

இரணியன்சொல்-வசனம்.

இப்பிரகஞ்சத்தி லென்பிரதாபத்தை விசேஷமாகக்கொண்டா டிப்புகழ்வானென்று யித்துஷ்டன்விஷயத்தில் திடங்கொண்டவனாகி உண்மையாய் மனங்களித்து மிகவுஞ்சந்தோஷித்து யான்யெண்ணியி ருந்த யெண்ணமெல்லாம் வீணாய்போச்சுது அதுயெப்படியெனில்ஒரு வனிதையைக் கட்டுக்காவலுடன் பந்தோபஸ்தில்வைத்திருந்தும்அவ ன்இரகசியத்தில் அன்னியபுருடனைப்புணர்ந்து கெர்ப்பம்பெற்றுக்கொ ண்டதறியாமல் ஸ்ரீமந்தநாள்சமீபித்ததுபோல இவன்புலியின்வயித்தி ல் பூனைபிறந்ததுபோல யெனக்குயிக்கொடியபாவிவந்துபிறந்தானே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

கெடாகெடாவென்றுலோர் பிர்காந்துக்கொள்வோமென்பார்போல்
திடாரிகமெனக்கேதேதோசெப்புகின்றீர்நீர்வீணாய்
முடாத்தலைப்பெண்களுக்குமுனைந்தனைகஞ்சொன்னாலும்
அடாதுயங்கனமேசெல்லுமதுவிதென்றெண்ணலாமே.

பிரகலாதனன்சொல்-வசனம்.

கெடாகெடாவென்று பலதரஞ்சொல்லிக் கொண்டிருந்தபோதிலும் மற்றொருவன் ஒருபிராவிலுங்கரந்துக் கொள்ளுவோ மென்பதைப் போல யெனக்கேதேதோ தைரியங்கள் வீணாய்ச்சொல்லுகிறீர்கள் அக்கெடாவானது யெத்தனையுபாயஞ்செய்யினும் ஒருபிர்பாலுங்கொ டாததுபோலநீங்கள்சொல்லும் இந்தஞாயத்தை மறந்துஞ்சொல்லேன் மேலும் துஷ்டர்களுக்கு நன்மார்க்கங்களை யெத்தனையாய்போதித்த போதிலும் அம்மாதர்கள் துன்மார்க்கத்திலேயே நடப்பார்களதைப் போல உமக்கெத்தனையாய் உண்மையை யெடுத்துரைத்தபோதிலும் உமதுகெட்டகுணம்மாறாது யென்றுயெண்ணுகிறேன் தந்தையே.

இரணியன்சொல்-விருத்தம்,

சண்டாளப்பயலேநீ யென்சத்துருவின்பேர்தன்னைக்
கொண்டாடிக்கொண்டு வாதுகொடுக்குராய்பயமில்லாமல்
அண்டரண்டமும்நடுங்க அலைமலைகளைப்பிடுங்கிச்
செண்டாடும்வீரராலுன் சிரமதைத்துணிக்கச்செய்வேன்,

இரணியன்சொல்-வசனம்.

அடாசண்டாளப்பையனேக்கு கொஞ்சமேனும் பயமில்லாமல் யென்சத்துருவின்பேரைக் கொண்டாடிவாதுகொடுக்கிறாய் உன்னை பராக்கிரமசாலிகளாகிய வீரர்களிடம் ஒப்பிவித்து உன்னை இரச்சேதம்செய்விக்கிறேன்பாராய் பிரகலாதனு,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

சிரமதையருத்திட்டாலுந் தெண்டுவாள்கொண்டுயெந்தன்
கரமதைத்துணித்தெலும்பைக் கல்லின்மேல்நரிக்கினாலும்
பரமதயாளனான பத்மனாபன்பாதத்தை
விரதமோடுதுதிக்கும் நாவால்வேறொன்றையுறையேனையா,

பிரகலாதனன்சொல்-வசனம்.

சிரசைவெட்டினபோதிலும் தெண்டுவாள்களால் யென்கைகளைத்துண்டு துண்டாகவருத்துயெலும்புகளைக் கல்லின்மேல்போட்டுபொடிப்பொடியாகும்படி நரிக்கினபோதிலும் பரமகிருபாமூர்த்தியாகிய பதுமநாபன் உபயதிருவடிகளைத்துதிக்கும்படியான நாக்கினால் உன்னுடைய நாமத்தைத் துதிசெய்யமாட்டேனையா தந்தையே.

இரணியனுக்கும்-பிரகலாதனனுக்கும்-தற்கம்.

தரு-இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்.

இரணியன்சொல்-தரு.

சேயாயரியவன் தெரியோடினேன்
ஜெகமெங்கிற்குந் தெய்வநானுமானேன்
பேயாயவனேநீ பிரியமாகத்தானே
பெலவாரென்றினிப் போற்றிபுகழ்வதேனோ
புவியில்தானே
போகவானே
யெவைக்கும்கானே
யேகவானே (சேயா)

பிரகலாதன்சொல்-தரு.

ஏகனென்றுநீ யெண்ணமெண்ணலாமா
யெழில்சேரமாயனை யிகழ்பண்ணலாமா
தாகமென்றிடில் தனத்தையுண்ணலாமா
தவயோகிகள்மனந் தாழ்ந்துகுண்ணலாமா
வைத்திராமா
தனையேநோமா
பைத்தியகாமா
பகரலாமா (ஏகனெ)

இரணியன்சொல்-தரு.

பகரீரேழுப்பாரை யாளுந்தீரன்
பலத்திலதிகபராக்கிரம ஞசூரன்
நிகரில்லாத நெடியபோரில்வீரன்
நிமைக்குள்தேவரை கடுங்கச்செய்யுங்கோரன்
நிலத்தில்சிரன்
நெடியபாரன்
தலத்தில்பேரன்
தேவவீரன் (சேயா)

பிரகலாதன்சொல்-தரு,

தேவனென்றுனை செப்பஞாயமேது
சினமுன்னகமதில் சீரமிருக்கும்போது
காவலதிகார மிதுதகாது
கரித்திலிந்தக் கப்டமார்க்கமேது
கடிதகாது
கலையின்மீது
விடுமிப்போது
விளங்குஞ்சாது (ஏகனெ)

இரணியன்சொல்-தரு.

சாதகத்தொழில் சாற்றத்திரமையிலேயே
சகலாகமங்களில் தங்குமெந்தன்கலையே
பேதகமாய்பிரிக்கு முந்தன்குலையே
பிடிங்கிவாளால் பொடிகள்செய்வன்தலையே
புத்தியிலேயே
புகழுமிலேயே

வெற்றிசொலேயே
விரும்புநிலேயே (சேயா)

பிரகலாதனன்சொல்-தரு.

நிலேயாய்கலேதனில் நிற்கும்மாதியதுவே
நெறியோரிடமதிற் பிரியமானபொதுவே
பலவாயிகழ்ந்துநீ பதருகின்றீர்முதுவே
பாராமலே பகருங்கோபமெதுவே
பாரிலிதுவே
பத்தர்பொதுவே
வாரிலதுவே
வளர்கின்றதுவே (ஏகநெ)

இரணியன்சொல்-தரு,

வரம்பெற்றெதிரினில் வருகும்போர்துமுன்னே
வாய்விட்டலரிவர் ருதியிலொளித்தவன்னே
திரமென்றெண்ணிநீ செப்புங்கலவைதன்னே
தங்குங்கரிவரத னென்றுமுன்னே
செப்பவென்று
தீரமென்று
இப்பவென்று
யெனேநீபன்று (சேயா)

பிரகலாதனன்சொல்-தரு.

பன்னுங்கலவயில் பக்தர்துதிக்கும்வாசன்
பாரோரர்பணியுங் கல்யாணவரதராஜன்
முன்னின்றடியர்க்கு முத்திபளுக்கும்போஜன்
மொழியுந்தமிழ்க்கவி வாணனென்னுந்தாசன்
மீதில்நேசன்
முழுவுலாசன்
சோதிநேசன்
சுயம்பிரகாசன் (ஏகநெ)

இரணியன் குலேவீரர்களாகிய கோரயிராக்ஷதர்களே
வரவழைக்கின்றது.

விருத்தம்.

சுயம்பிரகாசனென்றே திருமாலென்பவனேயென்முன்
பயமிலாமலேதுதிக்கும் பயலேவைத்திடலாகாது

வசனம்.

சிரஞ்சீவியாகவாழக்கடவீர் யெழுந்திருங்கள்வீரசூரரே உங்களுக்கு யாதொருகுறைவுமில்லாமல் நல்லநீதியும் கல்வியுஞ் செல்வமும் கீர்த்தியும் மேன்மையும்பலமும்பெற்று யெப்போதும்தாக்ஷிணியமில்லாமல் வாழக்கடவது வீரசூரரே.

கோரவீரர்சொல்-விருத்தம்.

விருப்பமோடெங்களைக்காத்திடுமரசேவிரவினிலழைத்திடுஞ்சேதி, பொருப்புகளைக்கரத்தாலெடுத்தாட்டவோ புவிதனைச்சுருட்டிநட்டிடவோ, நெருப்பனல்போலவிழிசிவந்துமே சீறிநெடுங்கடல்ஜெலம்வரண்டிடவே, குறிப்புடனெடுத்ததையேகுடித்திட்டுவோ கூறுவீர்யெங்களாண்டவனே.

வசனம்.

அதிகவிருபத்துடனே யெங்களைக்காத்துரக்ஷிக்கும் கர்த்தபமே தாங்கள்மனமகிழ்ந்து வரவழைச்சகாரணம் யாதோ எங்களுக்குவொன்றுந்தெரியவரயில்லையே மலைகளைப்பிடுங்கி சென்டாடவோ அல்லது இந்தப்பூமியையச்சுருட்டிநாட்டவா யெங்கள்பலத்தைக்காட்டவோ தேவர்களையெங்குமில்லாமலோட்டவா சமுத்திரஜலமெல்லாங்குடித்துச் சண்டைமீட்டவா இன்னவிதமென்றுசொன்னீரானால் அவ்விதம் அனைத்தொடியிற்செய்வோம் சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்.

கூறுகிறேன்சுரர்களே யென்றுசிரேஷ்டக்
குமாரனெனும்பிரகலாதன் கொடியபாவி
நேருபடாமலேயொளித்த மாயன்தன்னை
நிகழ்த்துகிராரணியரி யென்றகத்தினாலே
சீருடனென்னவனேகப் புத்திசெப்பியினுங்
கேளாதசிறுவன்றன்னைத் தூரிப்பிடித்தேகொடுபோய்
போர்க்களத்தில்தடித்திடவே மடித்திடுவீர் துணிந்திடப்போதே.

வசனம்.

கேளுங்களப்பா கொலைவீரராக்ஷதர்களே உங்களையேனழைத்தேனென்றால் இதோசொல்லுகிறேன் கேளுங்கள் யென்ஜேஷ்டகுமாரனாகிய பிரகலாதனானவன் நமக்குசென்மசத்துராதியாகி அந்தமாயனைதாயகமநினைத்து பின்தொடர்ந்துவருகிறான் அனேகநீதிகளைச்சொல்லியும் கேழ்க்கவில்லை ஆதலால்யினியவனைவைப்பதீனமென்று யோசித்து உங்கள்கையிலொப்புவித்து அவன்பிராணனைவாங்குவதற்கு வரவழைத்தேன்கொலைவீரரே.

கோரவீரரில்-மந்தோமத்தன்சொல்-விருத்தம்.

துணிந்திந்தத்துற்புத்தி மைந்தனுக்குச்
சொன்னதார்சொன்னாலுங்கேழ்கலாமா
தணிந்ததிரிலோகமு மாகமத்தோருமெல்லார
தங்களையேதெய்வமென்றுச்சாற்றும்போது
புணிந்திதைகன்றாகத் தொழுதேத்திடாமல்
பாதகனுகியஹரியை பல்மென்றெண்ணி
கணித்துதொழும் மைந்தனைக்காட்டேந்தன்முன்னே
ச்சக்கிரசம்பிழிந்திடுவேன் கண்டிப்பாக.

வசனம்.

ஆ ஆ-ஆ-பேலகன்றுயிருக்கின்றதுகாரெனங்கும்கேட்டதில்லையே இப்பேர்ப்பட்ட துற்புத்திமது குமாரனுக்கு சொன்னவன்யார், அப்படி தான்புத்தியில்லாமல் ரெவ்வனகிலும் சொன்னபோதிலும் இவன் யெப்படிகேழ்க்கலாம் சொஞ்சமாகிலுமானத்தின்பேரில் திரிஷ்டியைத்தவனுகயெனக்குதோற்றப்படவில்லையேதோ அவனைகாணயுங்கள் அரகோடிக்குள் அவனுடலை கச்சகசவென்றுகசக்கி நசுக்கி ரசம்பிழிந்து விடுகிறேன்யென்குரத்தனத்தைப்பாரும் சுவாமி.

ரணமுகன்சொல்-விருத்தம்.

தடமகுடமுடிதரித்த தேவாவுந்தன்
றனையனுக்குயிந்தபுத்தி வந்ததென்ன
குடல்நடுங்கிப்பதுங்கியதோர் மாயன்றன்னை
கூசாமல் துதிக்குமவன் கொஞ்சநெஞ்சின்
திடமறியவிந்தனையா யெம்போர்வீரர்
செல்லவேணுமேமாயவ ரெங்கட்கொருபொருட்டா
விடைகொடுப்பிரவனையரை கோடிக்குள்ளாக
வேந்தனுந்தன்கீர்த்திதனை விளங்கச்செய்வேன்.

வசனம்.

தடம்விசாலம்பொருந்தியகிரீடந்தரித்து சகலபுவனங்களையும்காத்துரக்ஷிக்குங்கடவுளே இதுவென்ன ஆச்சரியமாயிருக்கின்றது தங்கள்குமாரனுக்கு இப்பேர்ப்பட்ட துற்புத்திவந்தகாரணமென்ன உமது பிரதாபத்தைக்கேட்டு அந்தஹரியானவன் கருங்கடலில்விழுந்துவொழிந்துவிட்டானே அப்பேர்க்கொற்றவனை இவன்யெப்படிதுதிக்கலாம் அவ்வளவுபயமற்ற சிறுவனைவைப்பது நமக்குஞாயமல்ல சீக்கிரத்தில் விடைகொடுத்தால் உமது யிஷ்டப்படிமுடித்துவிடுகிறோம் யெங்கள் துரையே.

இரணியன்சொல்-விருத்தம்.

கொலைகளுக்கஞ்சாக்கொடியவீரர்களே
  கொப்பெனச்சென்றுமே நீங்கள்
இலைகெண்டவாள்தடிதெண்டுளக்கக்கொண்டுமே
  ஏனத்தொடுகணேந்துகொற்ஜனையோடு
அலைகடலினிற்போய்யெரளித்திடுமந்த
  ஹரிதனைப்பிரியமாய்த்துதித்து
நிலையெனப்போற்றுஞ்சிறுவனைக்கொல்ரீ
  நிகழ்த்தினேனினித்தடையிலையே.

வசனம்,

ஆ-ஆ-வாருங்கள் கொலைவீரஇராக்ஷதர்களே நீங்கள்யாதொன்றுக்கும் அச்சப்படவேண்டியதில்லைஇந்தவார்த்தையில்லெயன்றும்பிறுங்கள் முப்பத்திரண்டு ஆயுதங்களை யெடுத்துக்கொண்டுபோயதிருடனைப்போல் கடலிலெய்ரளித்த கள்ளனைத் துதிக்கும் துற்குணமிகாமணியாகிய பிரகலாதனென்கிறப்பெயர் யென்றேம்மையும்படிசெய்து வாருங்கள் வீரரே.

சிங்கமுகசூரன்சொல்-விருத்தம்.

நல்லதப்படியேநாங்களுஞ்சென்று
  நலமிலாச்சிறுவனைப்பிடித்து
வல்லமையில்லாமாயனைத்துதிக்கும்
  வாய்தனைக்கிழித்துடலழித்து
கொல்லுவோமினித்தடையிலையுமதருளால்
  கொற்றவாயாங்களுமொன்றாய்ச்
செல்லுவோமினியேதாகிலு
  செப்புவீர்ப்பெருங்கோலுமுன்.

வசனம்.

சுவாமிதங்கள்வாக்கினால் யெப்போதடையில்லாமல் கோல்லென்றுசொல்லிவிட்டீரோ யினியெங்களைமரித்துப்பேச யாரால்முடியும் முடியமாட்டாது இதோ நாங்களனைவரும் அந்தச்சிறுவனிடம்சொல்லுகிறோம் இன்னம்யேதாகிலுமிருந்தால் சொல்லுவீரானால்அவ்விதம் முடித்துவருகிறோம் யெங்கள்கனகதுரைாயே.

இரணியன்சொல்-தரு-இ-ம்-பேகடை-ஆடதாளம்.

சொல்லுகிறேன்கேளுங்கள் சூரர்களென்றிராதியினி
துடிநடைகெதி ரிக்குரைகளைப்பேசும்
முடிசுதன்மதமனத யடக்கும்விதமதைபேஆ (சொ)

சல்லியுஞ்செய்மாயவனை
தெய்வமெனும்சேயவனை இனி
தாக்ஷணியமில்லாமலே பிடித்துக்கட்டி
தீக்ஷணியதோடத்துட் கடித்துநெட்டி
தன்னிரே துடைச்சதைதயைகிள்ளியெவெள்ளமதைப்போல்
சாயுமுதிரத்தை நாயும்நரிகளும்
பேயுங்குடித்திட இயவனையினியேஆ (சொல்)

சங்குசக்ராயுதனை
சாற்றிவரும்வாயதனை இந்த
தரைலயக்கவிடும் டடியேமோதியே
மறைவிர்குலத்துக் க்காவிரோதியே
தாக்கியே-கட்டியுருட்டித் தூக்கியே-சீக்கிரமாக
தெண்டுவாள்கெதை கொண்டவனுடலை
துண்டமாடுவீர் கண்டிதமிதுவேஆ (சொ)

பல்லையுதிரக்கொட்டிடப்
பாசக்கயித்தால்கட்டி உங்கள்
படைகளனைவரும் திடமோட்டவன்மணிக்
குடல்தனைபிடுங்கி யுடல்தசைக்கையினால்
பத்தியெகிருகிரொன்று சுத்தியே-நத்தியங்கேவாழ்
புருந்துகழுகுகள் விருந்துயிதுவென
பொருந்திமகிழ்ந்துண்ண வறிந்துயெரியுங்கள்ஆஆ (சொ)

யென்மகனென்றுநெஞ்சம்
யெண்ணப்போரீர்கள்கொஞ்சம் சற்றும்
இரக்கமென்பதெள்ளளவும் வைத்திடாமலே
தருக்கமிடுஞ்சிறுவனை தூக்கதின்மேலே
யேத்தியே-யவனுயிரை மாத்தியே-கூத்தனுலகம்
இன்றுசென்றிட வென்றுகலவையில்
நின்றவாதனை யென்றுந்துதிபுயலைகொல்லச் (சொ)

இரணியன்-விடைதரும்-விருத்தம்.

திடமுடனேயுங்களுக்கு விடைகொடுத்தேன்
சீக்கிரமாய்ச்சென்றந்தச் சிறுவன்றன்னைக்
கடகரியின்மேல்மடங்கல் சீர்வதைப்போல்
கற்ஜித்துப்பிடித்தவனை கொடுபோயுங்கள்
படைகளெல்லாமவன்மீதில் தூரிமீறி
பாசந்தால்கட்டி நெட்டியேதூக்கி
யுடலைச்சின்னபின்னமதாய் நருக்கிவேராய்
வேரிக்கழுக்கிரைகொடுப்பீ ருண்மையாக,

வசனம்,

கேளுங்கள் கொலைவீரசூரராக்ஷதர்களே நீங்கள்கொஞ்சமாகிலும் சந்தேகப்படாமல் புலிகளைக்கண்ட சிங்கம் எப்படி கெர்ஜிக்குமோ அப்படி அந்தசிறுவனைக்கண்டு கெர்ஜனைகொண்டுசென்று கொன்றுசெய்து மாம்சங்களையருத்து பருந்துகளுக்கு விருந்துசெய்திடுங்கள் யாவரும் சிறந்தசந்தோஷத்துடனே வாருங்கள்வீரரே.

கொலைவீரசூரர்சொல்-விருத்தம்.

வீரசூரர்களேகேளீர் வேந்தனார்சொற்படிக்கி
ஆரவாரங்கள்செய்து வண்டமுநடுங்கவக்கு
மாரனைக்ஷணத்திற்குள்ளே மடக்கிநாம்பிடித்தோமானால்
நாரணனென்றுசொல்லும் ஞாயமெங்கோடிப்போமோ.

வசனம்.

ஆ-ஆ-வாருங்கள் மேகத்தைப்போலொத்த தேகத்தையுடையவீரசூரரே நமதுகர்த்தாவாகிய இரணியேஸ்வரர்இட்டகட்டளைப்படி நாம் அதிகஆரவாரங்கள்செய்து அந்தச்சிறுவனைப்பிடித்து அதிகவாதை செய்தோமானால் அவன் துதிக்கின்றமாயன்ஞாயமெங்கே பரந்தோடுகின்றது பாருங்கள்வீரர்களே.

வீரர்சொல்-தரு-இ-ம-நாட்டை-அடதாளம்.

கொல்லுவோம்வாருங்களடா ப்ரகலாதனை,
வெல்லுவோம்வாருங்களடா.

தொல்லுலகையாளும் வல்லவரிரணியன்
சொல்லியபடியேநு மெல்லவருங்கூடி
அஷ்டப்பயலதனை யிரக்ஷணத்திலே
கஷ்டப்படுத்தியே நஷ்டமாகவே (கொல்)

ஹரியென்றுதுதிக்கின்ற நாக்கையும் பவன்
ஞானம்பேசும்பெரும் வாக்கையும் மேல்
பிரியமுண்டமதிரு மூக்கையும் பேய்
பூதங்கழுகுகளு காக்கையும் வரும்
பருந்துகளுக்குமிந்தசதைகளை
விருந்துசெய்குவோம் பொருந்தியேவருங் (கொல்லு)

கதையாயுதங்களை யெடுத்து கே
சரிமார்க்கம்போகவே விடுத்து பெரும்
மதையானைபோலே கொக்கரித்து தெண்டால்
மண்டையுடையும்படி யடித்து பொல்லா
மட்டியவனுடல் கெட்டிகயத்தினில்
கட்டிவாளினால் வெட்டிவீழிடக். (கொல்லு)

கோண்டயிடி போலவேயிடித்து
கொக்கரித்தார் பரித்து (கோண்ட)
சேடனுமிருந் சிரங்கலங்கிட
திசையஷ்டட குலவரைகுலுங்கிட (மல்ல)
தெண்டுவாள்கெதை கொண்டுமேதுடித்துச்
சிறியன்மேல் கெற்ஜித்து (தெண்)
அண்டர்முனிவர் கண்டுநடுங்க
அதட்டியுகட்டி யகிலமொடுங்க (மல்ல)
தஞ்சமென்றுந்தன்தாள் தனையடைந்தேன்
தனையனைகாத்தருளுண் மாதவா (தஞ்சமென்)
கஞ்சமாமலர் சூழ்தடமேவிய
கலைவகர்க் கரிவரதாயிதோ (மல்ல)

வீரர்சொல்-கவி.

ஆரடாபயலேயுந்த ஹரிதனைப்பரிகரித்து
கூரடாயிரண்ணியனுமங் குறிப்பறிந்துரையாவிட்டால்
பாரடாயெங்கள்கையில் பலவிதவாயுதத்தால்
காரடாஞ்செய்திடாமல் கண்டிப்போமுனையிப்போதே,

வசனம்.

அடாபயலே பிரகலாதனே ஹரி ஹரியென்று வுள்ளுகின்ற கியான த்தை நீக்கிவிட்டு இனியிரணியநமாவென்றால் பிழைப்பாய் அல்லாவி ட்டால் உன்பிராணத்தை வாங்கிவிடுவோம் இதைதிரமாகயோசனை செய்து கொள்ளடா சிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

அஜத்தைக்கண்டிடும்வியாக்கிரம்போலாக்கிரமத்துடனேசீறி
தஜத்துடனொருவரொடொருவர்சூரதத்துவங்கள்பேசி
புஜத்தைநுந்தட்டிக்கண்கள்பொறிபரந்திடவேவீரர்
கிஜத்துடன்வராரையாசீர்முகில்வண்ணனுகாரும்.

வசனம்.

ஹரி ஹரி இதோகொடியவீர இராக்ஷதரானவர்கள் அடியேன் பேரில் ஆட்டைகண்ட புலியைப்போல் சீறிவருகுரார்ரே யடியேனை இந்தவேளையில் ஆதரித்துகார்க்கவேண்டும் ஹரி ஹரி.

தரு-இ-ம்-கெளளம்-ஆதிதாளம்.

சூரர்கள் வாராரையனே
சுறிதியின்மறைதனில் கிறிதியமுராஹரியே
சூழ்ந்துகொண்டென்முன் மெய்யனே





ஆரவாரத்துடனே யண்டம்நடுநடுங்க
கோர்ராக்ஷதமல்லர் கொக்கரித்துவார்ப்பரித்து
கும்ருமிடியதுபோல் கூவிபற்களைக்காட்டி
சமரிலெனைவரென்று தடக்கரங்களைநீட்டி (சூரர்)
கண்டோர்விழிதெரிக்கவே
கதிரவனெதிரினில் சிதறியபனியைப்போல்
கரித்துள்செந்துள் பரக்கவே
சண்டமாருதம்போலே தாம்தாமெனகுதித்து
மண்டியிட்டெதிர்பாய்ந்து மலைகள்போலேயெதிர்த்து
மதகரிகளதைபோல் மார்போடுமார்களைதாக்கி
வதைசெய்குவோம்யாரென்று வலபுஜங்களைத்தூக்கி (சூரர்)
யீட்டிவல்லயமெடுத்து
இடையினிலுடைவாள் திடமுடநதுமின்ன
யென்மேல்துஜங்கள் தொடுத்து
தாட்டீகமுடன்வெகு தட்டிசல்லடிங்கட்டி
போட்டிகள்பேசியவர் புஜத்தோடுபுஜங்கள்தட்டி
புவிகளதிர்ந்திடவே புலிகளதைபோல்சீறி
செவிகள்செவிடுபட திக்குவிஜயங்கள்கூறி (சூரர்)
திருவணிந்திடுமாயனே
ஜெகமதிற்ஞெரூபவ ரகமதிற்பதியாக
தங்குமிங்கித நேயனே
தருவுக்குரியசேனைர் தாழுந்தயாநீதியே
வருவினைகளைர்யிக்கும் மங்கைலட்சுமிபதியே
வயல்சூழ்கலவைநகர் வர்ழ்கரிவரதாவுன்
செயலோனுனரிகிலேன்சிறியேனிதற்கென்செய்வேன் (சூரர்)

வீரர்சொல்-விருத்தம்.

யேதடாங்கள்சொல்வார்த்தையைத்தடுத்து யியம்புராயின்னமும்வ
நிதடாநீதிப்பதுமிகச்செனன்னேம்தெளிந்துபார்மதியுனக்கிது [னே
தகாதடாகடவுள்தானிரணியனென்றேகனிவுடன்மனதினில்நன்றாய்
ஓதடாயல்லால்லூட்டிடையைக்கடித்துதிரமுங்குடித்திடுவோமே,

வசனம்.

அடர் துன்மார்க்கப்பயலே யென்னடா நாங்கள் உன்னைகொலவ
தற்குவந்து யிருக்கின்றபோது நீகொஞ்சமாகிலும் பயமில்லாமல்அந்
தமாயனைகாயமென்றுயினத்துகுறையா யேன்வீண்யெண்ணங்கொண்

டுகெட்டுப்போகுறாய்வேண்டாம்இனியாவது இரணியநாமமந்திரத்தை தோத்திரஞ்செய்தாயானால் சற்பாத்திரனாகவாழ்வா யல்லாவிட்டால் உன்னுட்டியைகடித்து உதிரத்தைகுடித்து சதைகளையருத்து சக்கை சக்கையாய்கரிக்கி யெலும்புகளைநொரிக்கிகாகம்பருந்துகளுக்கும் இரைகொடுத்துவிடுவேர்ம்இதைநிரமாகயெண்ணிக்கொள்ளடாபயலே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

மாதவர்முனிவர்போற்றும் மங்கைலக்ஷ்மிசமேதா
காதகரானவீரர் கடுஞ்சினத்துடனேசீறி
வாதனைசெய்வோமென்று வாள்களைபிடித்துவாரார்
சீதராயினியென்செய்வேன் சித்தம்வைத்தெனையாள்வாயே.

தரு-இ-ம்-ரீதி-கௌளம்-ஆதிதாளம்,

இனியென்செய்குவேன்-சீதரா-தாமோதரர்வோ
இனியென்செய்குவேன்-சீதரா

முனிதபோதனர்தொழுஞ்செங்-கனியிதழ்வாயா (இனியென்)

குதித்தெழும்பி முன்னிற்குரார்
கும்பல்சேற்குரார் குதித்தெழும்பிமுன்னிற்குரார்
கொதித்தகோபத்துடன் கொக்கரித்தார்ப்பரிக்குரார் (இனி)

படியளந்நெடுமாயா பக்தர்சகாயா-படியள
கொடியராக்ஷதவீரர் தடிகொண்டேதிரேவரரார் (இனி)

சிறியேன்மீதினிற்கோபமோசெய்யும்பாவமோ-சிறியேன்
பொரிவாழ்கலவைக்கரி வரதாவுன்செயலேதோ (இனி)

வீரசூரர்சொல்-விருத்தம்.

ஆங்காரங்கொண்டுநீதானச்சமும்பயமில்லாமல்
தீங்கானமாயன்பேரைச் செப்புகின்றாயேபாவி
போங்காலபுத்திதன்னைப் போக்கடித்தினியானாலும்
சோங்காமவிரண்ணியநாமந் தோத்திரஞ்செய்குவாயே.

வசனம்.

அடாசிறுவாயேதடா இன்னம்அந்தமாயன்பேரையேபெரிதாகபினத்துகுராய் வேண்டாம் இனியாவது துற்புத்தியைபோக்கடித்துஇரணியநமாவென்னடா சிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

தொண்டருள்மகிழ்த்துரைசெங்கண்மால்
சுரிதியிற்றங்குமெய்ப்பொருளே
வெண்டிரைசூழ்க்ஷீரப்பரவையின்மீது
விளங்குரற்றுரகமேல்சயனு

துண்டகந்திதனைத்துரத்திட்டாமன்னன்
சொற்படிக்கேட்டிடுதோமல்லர்
அண்டையில்வந்துதானழைக்குராரரியே
யடியனின்னடிதனக்காளே.

தரு-இ-ம்-ஆனந்தபைரவி-அடதாளம்.

நாரணனேதிருநாதா உன்னை
நம்பினேனென்னையாளும் நளினபொற்பாதா
ஆரணங்களுக்குமுன்போதா திவ்விய
அலர்மகளோடென்றுமமையுஞ்சமேதா (நாரண)

தஞ்சமென்றுனைநாடினேனே யென்னைத்
தற்காற்றருள்செய்யுஞ்சற்குணவானே இதோ
வஞ்சகரெனுமல்லர்தானே கொல்ல
வாவென்றழைக்கின்றவலைக்தெரியேனே (நாரண)

கருணைசெய்புவியின்வாயா தந்திக்
கதரவந்தெதிரிலாதரித்தச்சகாயா வாருந்
தருணமென்றிடுமென்பர்நேயா பரி
தாபந்தனைதீர்த்திடுமசற்குணமாயா (நாரண)

புன்னகசயனுகண்பாராய்ச் சிறு
பாலன்மேல்கிருபைகூர்ந்துபண்புடன்காராய் செழுங்
கன்னல்சூழ்கலவையில்நேராய் வாழுங்
கரிவரதனேயுன்றன்கழலதைதாராய் (நாரண)

வீரமல்லர்சொல்-விருத்தம்.

தருமாரூகதற்கபிட்டெதிற்குந்தனயனுக்கினிதயவென்ன
தூருவோம்நாமனவோருமெயந்ததுற்சனபயல்தனைபிடித்துக்
கூருவோமிரணியநாமமேதுதித்துகுரிப்புடனதைதொழாவிட்டால்
சிறுவோமன்னன்செப்பியப்படியேதுணித்திடுவோமினியவனை,

வசனம்.

ஆ-ஆ-வாருங்கள் வீரசூரமல்லரே நாமெவ்வளவு சொல்லியுங் கேளாதசிறுவனை யினிதூரிப்பிடித்து மீரியடித்து நமதுமீதவனுத்தாரப்படி குலைபுரிவோம் வாருங்கள்வீரரே.

மல்லர்-பிரகலாதனை-பிடிக்கின்ற-தரு-இ-ம்-நாட்டை-அடதாளம்.

பிடியுங்கள்சேயனை பிடியுங்கள் அவன்
பிடித்திடும்தம்பரக்கடியுங்கள் அரை

நொடியினிலவனிட்டவுடல் செதரிடப்பெருந்தடி கொண்டு
வீரமேரபடியதிர்க்கிடவிப்போ (பிடியுங்கள்)
வெள்ளளவச்சமில்லாமல் நா
மியம்பும்வார்த்தைகளைச்சொல்லாமல் மீறி
வள்ளலிரணியனையுள்ளமதிற்கொள்ளாத
கள்ளனைக்கூறுக்குக்கொள்ளையாடுவோமினி (பிடியுங்கள்)
மாயனை துணையென்றுயெண்ணுறான் நம்மை
மதியாமலெதிற்றுதிபண்ணுறான் பொல்லா
சேயனிவனுடையகாயமதைநரிக்கி
பேய்ப்பூதங்களிட்டவாயிக்கிரைகொடுப்போம் (பிடியுங்கள்)
திரமோயிவனுக்கிந்த்திரம் யின்னக்
தெரியாதெங்களிட்டூரம் கவி
வந்தரக்கலவையில்வளர்கரிவரதனை
பரமெனுக்கிரமையைவிரைவினிலரிகுவோம் (பிடியுங்கள்).

பொது-விருத்தம்,

கொக்கரித்தார்பரித்துக் குவலயநடுங்கச்சூரர்
திக்கெங்கேவொடிவந்துச் சிறுவனைப்பிடித்தபோது
தக்கதோர்தேவரெல்லாந் தயங்கியேமயங்கிநின்றார்
அக்கணம்பிரகலாதனன்தா னறிவிப்பான்தெரிவிப்பானே.

வசனம்.

அகோதெப்படியென்றால் கொடியவீரசூர மல்லரானவர்கள் பிர கலாதனைப்பிடித்துக்கொண்டபோது தேவர்களெல்லாம் தயங்கிமயங் கியாகூலமுற்றார்கள் அந்தசமயத்தில் பிரகலாதனானவர் ஸ்ரீமந்நாரா யணமூர்த்தியைத்துதிசெய்கின்ற விதங்காண்க.

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

இருரெண்டுமுகவன்றன்னை யீன்றளித்திடுமாலேயுன்
திருவடிக்கடியாற்கேயான் செய்தகுற்றங்களேதோ
ஒருமையாய்நிருதசூர ரோங்கியேபிடித்துக்கொண்டார்
சிறியனுக்கினியேதென்ன செயல்நடக்குமோதாமோதரனே.

வசனம்.

ஹரிஹரிசதுர்முகபிரம்மனைநாபிகமலத்தில் யீன்றளித்தஓம்நமோ நாராயணா உமதுதிருவடியை பூசிக்கும் புண்ணியவான்களோ அடியேன் என்னதூஷணைசெய்தேனோ யாதொன்றுமறியேன் இதோநிருதகுல இராக்ஷதர்வந்து அடியேனைப்பிடித்துக்கொண்டாரே ஹரிஹரி.

தரு-இ-ம்-குறிஞ்சி-யேகதாளம்.

நாரணன்செயலெப்படிபோலறியேன்-இந்த
ஞாலத்தின்மேல்புகழ்நீலத்திருமுகில் (நாரண)

பூரணமானநற்புத்தி யுள்ளோர்தமைப்
பூசித்தவரடி தூசிப்பொமல்
காரணமோபொல்லா காதகர்வார்த்தையென்
காதினில்கேழ்க்கவு மேதினியின்னமும் (நாரண)

துஷ்டர்கையிற்சிக்கித் துன்பப்படுவதுந்
தொல்லுலகத்தினில் செய்வினையேமன
திஷ்டப்படிக்கி நடக்காதொருக்காலு
மெல்லாமவர்செய லல்லாமல்வேறில்லை (நாரண)

கல்லுக்குள்தேரையை கண்டுவதற்குநீர்
களித்தளிக்குங் கருணாகரப்பொரு
ளில்லாமலோரணு வெங்கும்மையாது
மிதற்கும்மனக் கியங்கிடலாகாது (நாரண)

பலகலைகளைப் பகரும்வேதர்கள்
பதமறிவார்க வி‌தமொடுதிரு
கலவைநகர்க் கரிவரதரிட்ட
கட்டளையைநாம் தட்டிடலாகாது (நாரண)

வீரமல்லருக்கும்-பிரகலாதனுக்கும்-தற்கம்.

தரு-இ-ம்-புன்னாகவராளி-அடதாளம்.

வீரமல்லர்சொல்-தரு.

நாரணனென்றுநீ நாவில்துதிப்பது
நலமல்லடாசிறுபயலே யெங்கும்
காதனிரணியன்செயலே அதை
ஆரணமென்றறியாம லடிக்கடி
வக்கிரிப்பேசுரா யென்னடா

பிரகலாதனன்சொல்-தரு,

அகமீரிபேசுரா யென்றரக்கமல்லர்
ஆக்ரமஞ்செய்குராரையனே யெனை
யாளுஞ்சங்குசக்ரகையனே இந்த
ஜெகமதினிலேவிடதுணை யொருவருமில்லை
சிறியேனையாள்கொள்ளும் ஹரியே

வீரமல்லர்சொல்-தரு.

ஹரிதிரைபரவையிலடங்கி போனதவும்நீ
அரியமாட்டாயந்தசேதி யுன்னை
அரைக்தெரிவோமம்பரவீதி இதை
தெரியாமல்வெரிகொண்டு சீதரனென்கிறாய்
சென்னிதனையுடைப்போம் பாரடா

பிரகலாதனன்சொல்-தரு.

பாரென்றுரவாரம் பண்ணிமண்ணிதிர்ந்திட
பல்லைமடமடென்றுகடிக்கிறார் துற
பாஷைமிகவும்பேசி பிடிக்குறார் செழுங்
கார்முகில்மேனியனே யுன்திருவடிக்
கட்டளையோ கருணாகரா

வீரமல்லர்சொல்-தரு.

கருணாகரனென்றுங் கதருகுறாயுன்னைக்
கண்டித்திருதுணடாய் சாடுவோம் கையால
செண்டுபோலே தூக்கிப் போடுவோம் இரணியன்
சரணாரவிந்தத்தை தஞ்சமென்றேற்கொரு
தாகூிவாராது சற்றுகிலும்

பிரகலாதனன்சொல்-தரு.

சற்றும்குருவில்லா மனுநீதிதப்பிய
தைபித்தியகுலமித்தோடுமுடிவோ அன்பர்
தனைக்காணவந்திடும்வடிவோ மீறின்
பற்றும்நெருப்புக்குமுன் செத்தையெதிர்ப்பதுபோல்
பதரிமேல்விழுகுறா ரையனே

வீரமல்லர்சொல்-தரு.

ஐயனென்றுமெரழிகையனென்று மெங்க
ளாண்டவனையனுவைப்போலெண்ணுராய் மாயன்
அடியிணையே துதிபண்ணுராய் கடல்சூழ்
வையகத்தோர்பணியுங் கலவைக்கரி
வரதனென்றுலனை விடுவமோ

பிரகலாதனன்சொல்-தரு,

விடுவமோவென்று வீண்வார்த்தைகளைப்பேசும்
வெரியருங்களாலென்னவாகுமோ ஆயன்

வெழுதினதுதப்பிப்போகுமோ திரு
கடிமன்னர்புகழ் கலவைக்கரிவரதர்தன்
கமலபொற்பாதமே கெதியே

கொலைவீரமல்லர்சொல்-விருத்தம்.

கெதியென்றுந்துதிசெய்கின்றக் கரித்திலாச்சிறுவாகேள்பார்
வதிமன்னன்வாணிமன்னன் வெண்திணாமகள்தன்மன்னன்
செதிரிடச்செய்தீரேழு ஜெகமாளுமிரணியேசன்
விதிப்படிவதைகள்செய்வோம் வேகமாய்நடடாசேயா,

வசனம்.

அடாவென்னடா பேயனுயிருக்கின்றாய் நடமேபிடிங்கிக்கொண்டோகுரபோது நந்தவனத்துக்கு யெந்தவழியென்றுகேழ்க்கின்றபாவனைபோல் நீயந்தமாயனைமகா பெரிதாகயெண்ணிக்கொண்டு அவன் திருவடியே கெதிகெதியென்று உளருகுராய் பார்வதிக்கி நாயகனானசிவனும் வாணிமன்னனாகிய பிரம்மனும் வெண்வெள்ளியதினர் அலைகளையுடைய திருப்பாற்கடலிலேபிறந்த லக்ஷிமிநாயகனாகிய அந்தமாயனும் யெங்கும் இறந்தழிவில்லாமல் அண்டஆதாரவிலலாமல் செதிரிப்போகும்படிசெய்த யெங்கள்ஆண்டவனாகிய இரணியேஸ்வரருடைய விதிப்படியுன்னை சின்னபின்னஞ்செய்து சீக்கிரமாக்கொல்லவேணும்நட.

வீரர்சொல்-தரு-இ-ம்-காபி-ஆதிதாளம்.

நடநடப்போர்களம் விடோமுனை திடமதாய்
படையெங்களுடனின்னமடஞ்செய்யாமல்நீயடே (நடநட)
படிமுழுதிலும்புகழ்கெடி பெற்றிடுமிரணியன்
அடிதொழுதிடாஉந்தன் முடிதரித்திடசுருக்கா (நடநட)
தடைவரைபுயமன்னன் விடைப்படியுன்டயவாட்குன்
சடமதையேகொய்திட வடஞ்செய்யாமல்நீயடே (நடநட)
பரிவுடன்கலவயின் கரிவரதனென்றிடும்
உரிதனையரிவோம் துரிதமுடனிப்போது (நடநட)

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

நடந்திடத்தடையொன்றில்லை நான்சொல்லுமொழியைக்கேளீர்
திடமுடனைவயித்தில் சுமந்துபெற்றிடுமென்தாயார
ரிடமதிற்சென்றுநானு மிம்மொழியுரைத்துவுங்க
ளுடன்பின்னேவருவேனிப்போ தொருமனுதருகுவீரே.

வசனம்,

அப்பாவீரரே நானடக்கவா நானடப்பதற்கு யாதொருதடையுமில்லை யென்னைப்பத்துமாதம் சுமந்துபெற்ற யென்தாயாரிடம் யான் சென்று நல்லபிரியவசனங்களைச்சொல்லிவருகுறேன் நீங்கள் அதுவரையிலும் யென்பேரில்தயவுசெய்து அனுப்பிவையுங்களப்பாவீரரே,

வீரமல்லர்சொல்-துண்டு-கவி,

வாயினில்வளப்ப மடித்திடும்பொல்லா
மாயனைதுதிக்கும்மதியிலாமூட
பேயனேநீதான்பினத்திப்படியுன்
தாயிடமனுப்பத் தயைபுரியோமே,

வசனம்,

அடா புத்தியில்லாமல்வாயினால் வளப்பமடித்துத்திரியும்மாயனை நீகாயமென்று துதிக்கு முன்மூட மதிபோலவே யெங்களை நினைத்தாயோ அரைநிமிஷமும் உனைவிடோம் நடநடடா,

பிரகலாதன்சொல்-தரு-இ-ம்-பைரவி-ஆதிதாளம்.

மாதாவுக்கிந்தசேதி வோதிவருமளவும்
மனம்பொருங்களப்பா மல்லர்களே
வாதாடுமிரணியன் வாக்கியப்படியேபத்த
வந்தவீரரேயென்னை வயத்திற்சுமந்துபெற்ற (மாதா)
சினங்கொண்டென்னைப்பிடித்துச் சிதரும்படிஜாடீர்
தெண்டுகொண்டெந்தனிட மண்டைமீதில்போடுநீர்
இனம்பிரிந்தயானைப்போல் யெங்கிரண்டுமூவாள்
இக்ஷணத்தில்போயவரை தக்ஷணத்திற்குள்ளாக (மா)
புயமிரண்டையுங்கட்டி புவிமேல்விழதள்ளுநீர்
போர்களத்தில்வாவென்று பிடித்திழுத்துக்கிள்ளுநீர்
தயவுசெய்தெனக்கோர் விடைதாரும்வீரசூரரே
தடங்கலில்லாமலுங்க ளுடனேதாவருகுறேன் (மா)
கொடுமைசெய்தடிக்கடி குலைநடுங்கக்கூவுநீர்
கொஞ்சநெஞ்சிரங்காமல் கொல்லமனந்தாவுநீர்
அடிமைதொண்டர்க்கருள்செய யமரர்புகழ்கலைவ
ஹரிகரிவரதர்தன் திருவடிசாக்ஷியாய் (மா)

வீரமல்லர்சொல்-விருத்தம்.

திருவடிசாக்ஷியென்று திருமாலென்பவனைமேலா
யொருபிடியாயுரைக்கு முணர்வரிவில்லாப்பேயா

இருபடியைக்கைக்கொண்ட விரணியராரிந்தால்மோசம்
வருமிடியினியுன்தாயா ரரமனைக்கனிப்பிடோமே.

வசனம்.

அடாயென்னடா அருவிலாச்சிறுவனாயிருக்கின்றாய் அந்த ஹரியென்பவனை நகாபிரியமாகநினைந்து அவன்திருவடி சாக்ஷியாகநான் யென்தாயாரிடம்போய் வருகுறேனென்று சொல்வதைபார்த்தால்நாங்கள் அவனுடைய தயவுக்கு காத்துக்கொண்டு யிருப்பவர்கள்போலே யல்லவோ தோற்றப்படுகிறது நல்லவார்த்தைசொன்னாய் போதும்போதும் வாயைமூடு யிதுதான் லோகஆச்சரியமென்பது இதுவெல்லாம் இங்கேமுடியாது செழிந்தகதலியின் கனிதெரியாத பேர்களுக்கு பழுத்தமிழவன் ப்ரஜாபதியைகாட்டின கதைபோலெங்களை நினைத்தாயல்லவா அதற்கு நாங்களல்ல திரிபுவனகர்த்தியமாகிய யிரணியதேவன் யெங்களுக்கு விதித்தப்படியுனை கொலைகளம்கொண்டுபோகவேண்டும் யெதிர்பேசாமல் துரிதமாய் நடநட.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

மெத்தவுங்களாளுடை மிகமனுகேழ்க்கிற்சற்றும்
சித்தமுமிதங்கிடாமல் சினங்கொண்டுபேசுகின்றீர்
இத்தரையரியயென்தாயிடஞ் சென்றுவொருநொடிக்குள்
சத்தியமாகவாரேன் தயவுசெய்தனிப்பிடீரே.

வசனம்.

கேளுங்களப்பா வீரராக்ஷதமல்லரே நீங்கள் கோபித்துக்கொள்ளவேண்டாம் இந்தபூமிதேவியரிய நான்வருகுறேன் நீங்கள்சந்தேகப்படவேண்டாம் அனிப்பிவையுங்களப்பா வீரரே.

படைமல்லன்சொல்-விருத்தம்.

வெற்றியில்மிகுந்தவீரரேசிறுவன்விரைவினில்வருகுறேனென்று
சத்தியஞ்செய்வதாலே தடுப்பதுஞாயமல்ல
பெற்றிடுக்தாயிடஞ்சென்றுப் பின்னிங்குப்பிரியமாய்வாருஞ்சில்
பத்தினமிழுத்தேகப்பலநம்க்கிலையோ பார்த்திடுவோமனிப்பிடீரே.

வசனம்,

அடாயாரடாயென் ஆக்கினைக்கிஅடங்கிய அசுரமல்லரே இந்த சிறுவன் பூமிதேவியரிய வருகுரேனென்று சொல்கிறபடியால் இனிநாம்தடுப்பது ஞாயமல்ல அனிப்பிவையுங்கள் பார்ப்போம்உத்தமனுக்கும் வேலக்கட்டானுக்கும் சீட்டுங்கைநாட்டும் வேண்டுமோவேண்டியதில்லை அதுபோல் நேமாய்வருபவனுக்கு சத்தியமென்பது மலையாக

தான்யிருக்கும் மோசகியாபமுடையவனுக்கு சத்தியம் தயிருஞ்சாத மென்கிற பழமொழியொன்றுண்டல்லவா அதையும்பார்ப்போம் அனி ப்பிவையுங்கள்வீரரே.

கொலைவீரர்சொல்-கவி.

சிறுவாநீதான்சீக்கிரமாக
உருவாயளித்தயுன்தாயிடம்போய்த்
திருவாயாலுன்சேதியைச்சொல்லி
வருவாய்கொடிக்குள்வாக்களித்தோமே,

லீலாவதி-பொதுவிருத்தம்.

வஞ்சனைக்கொலைக்கஞ்சாத வசுரர்களிடத்தில்சேயன்
பஞ்சைபோல்கெஞ்சிதாயின் பதிதனக்கேகும்போது
கஞ்சமாமலர்க்கொப்பான காம்இவதனசுந்திர
வஞ்சியர்சூழலீலாவதி கொலுவருகின்றுளே.

வசனம்.

இவ்விதமாக பிரகல்ாதனுனவர் வீரசூரஇராக்ஷசரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தன்தாயிடம் வருகுரபோது அந்தசமயத்தில் லீலாவதியம்மனுனவள் வருகின்றவிதங்காண்க,





தரு-இ-ம்-அசாவேரி-ஆதிதாளம்.

வந்தனள்சுந்தா லீலாவதிகனபதிசதி
வன்மையுடைய மயில்போல்
சந்தனகதம்பப்பொடி விந்தையோடணிரதிபோல்
தருபதிம்ங்கயர்களுமடிதாழ்வருபதியிவ்ளெனமாதருஞ்சூழ(வந்)

(1) பத்தரைமாத்துத்தங்கத்தைவைத்திழைத்ததைபோல்
தனு-பார்க்ககண்களுங்கூசுமே — எழுதியாற்
சித்திரப்ரதிமையெனுமுத்தமியளகம்து
செலமேகங்களையேசுமே — கடல்புடைசூழ்
இத்தலமதில்வாழ்கிளிமுத்தினும்வந்துமேநம
தினமென்றின்பமாய்ப்பேசுமே — மேனியெங்கணும்
அத்தர்புனுகுசவ்வாதுசுத்தமோட்டணியுமணம்
அகிலமெங்கும்போய்வீசுமே — செழிக்குமரை
அலர்மதிமுகவொளிக்கதிசயமாது
நிலைபெருமுலகினிலிலகியசாது. — (வந்தனள்)

(2) முத்தாரத்தினமுமூக்குத்திநெத்திற்சுட்டி
முகத்திலகதிர்போல் மின்னவே — வாளிகளுடன்
கத்தரிப்பாவல்ஜிமிக்கிகம்மலொட்டியாணம்வங்கி
கையிற்கணையாழி துன்னவே — மின்னலதைப்போல்
குத்தனிரவிக்கைச்சேலைஸ்தாரகனகமாலை
குசமேல்பளபளென்னவே — உச்சிதமாக
தத்தளித்திடுந்திவ்வியதண்டைசிலம்புகெஜ்ஜை
தாளிற்கலகலென்னவே — யென்றுளுமிந்தத்
தரணியில்புகழிரணியன்மகிழ்தேவிக்
கருணையுடனேகலைவதனேதேவி — (வந்தனள்)

(3) இடையுநடையுங்கண்டுயெகினமடங்கவிரண்
டேந்தியிளைத்தொளிக்க — ஸ்தம்பத்தைவெல்லுந்
துடைநிதம்பங்கண்டகிப்படமுமிளவாழையுஞ்
சோர்ந்துதுவண்டகிளைக்க — திடமுடைய
கடைபம்பரத்தையும்பொற்குடங்கும்மழையும்
வென்றகனதனமுந்தத்தளிக்க — பின்னியவெழில்
சடையிலணிமல்லிகைசரமுந்திரமோடுசில
தாதியர்சூடிகண்களிக்க — மாலரம்மணிகள்
தழைத்திடுங்கழுத்தினில்பழுத்தபொன்பணிகளும்
மழித்தியேதானவர்செழித்திடுங்கொலுமுன் — (வந்தனள்)

லீலாவதிசொல்-வெண்பா.

மாமயிலைப்போலெனுடன்மரிவிளையாடுமெழில்
தாம்துரமொழியுடையத் தாதி களே-சாமமதில்

சித்திரக்கூடந்தனிலே செழிக்குமலர்பஞ்சணையில்
நித்திரைசெய்வேனினிநேர்.

வசனம்.

திவ்வியமங்களமாணிக்க பிரதனைமகளைப்போல் அழகினையுடைய எனது தோழிமார்களே யெப்போதும் யென்மனம்சந்தோஷிக்கும்படி மயிலைப்போல்சாயலும் குயிலைப்போல்குரலும்கிளியைப்போல்மொழியும் மரிவிளையாடிய மங்கையரே நமது சித்திரக்கூடமண்டபத்தில் சற்றுநேரம் நித்திரை செய்யவேண்டும் ஆதலால் நீங்கள்மலர்மெத்தையை அலங்கரியுங்கள் தோழிகளே.

முதல்தோழிசொல்-வெண்பா

உண்டயிளப்புலகுதனிலுணரபெரியோர்
தொண்டருக்குமுண்டெனவே-சொல்லுவர்கா
வெண்டாளமாலையணிமாதரசேமனமகிழ்
மலரணையின்மேலேதுயில்வாயேமெலி.

வசனம்.

கேளுமம்மணித்தாயே பெரியோர்கள் பழமொழிஉண்டயிளப்பு தொண்டருக்குமுண்டென்றுசொல்லுவார்கள் ஆகவால் அம்மணிநீங்கள் போஜனஞ்செய்தபடியால் தேகம்யிளப்பாகதான் யிருக்கும் இதோமலரணையை அலங்கரிக்கின்றோம் தடையில்லாமல் நித்திரை செய்யுந்தாயே.

தோழிகள்சொல்-தரு-ஆதி-இ-ம-குரிஞ்சி.

நித்திரைநீபுரிவாய்
நிதிதனபதிசதிலீலாவதி
நித்திரைநீபுரிவாய்,

சித்திரப்பதுமை செழும்பஞ்சணையில்
உத்தமிநினது வுளமதுகளிக்க (நித்தி)
மஞ்சளளகத்தில் மலர்மணம்வீசும்
கஞ்சவதனியே கனிவொடுதனியே (நித்தி)
சித்திரவிச்சித்திரத் தேனேமடமானே
உத்திரபாரிசம் வொருசாமவேளை (நித்தி)
சாந்துங்கலவையுந் தனிவாடைவீச
மாந்தளிர்மேனியில் நலர்சாந்தணிய (நித்தி)

லீலாவதி-நித்திரைதெளிந்து-சொல்-விருத்தம்.

நீதிரும்நெறியுங்கன்ருய் நிகழ்த்திடுமெனக்கிசைந்த
தாதியரேகேளுங்கள் தழைத்திடுமரைமனைக்குள்
சோதிஙேயாகயானேர் சொற்பனங்கண்டேனம்மா
சாதினமுலகாள்கின்ற தலைவருக்கெனமோகாணேன்.

வசனம்.

அடியம்மாசகி இதுவென்னவாச்சரியம் வொருநாளும் காணாத சொற்பனங்கண்டேன் யென்னுயகருக்கு யென்னகெடிதிநேரிடுமோ தோழிமார்களே,

இரண்டாவது-தோழிசொல்-கொச்சகம்.

தங்கநவமணியணிந்த சப்பரமஞ்சமீதில் துயில்
பொங்குமுடன்கொண்டெழுந்த பூவையேனிமனங்கலங்கி
சங்கைமிகவேநினைந்து தவிக்குமுந்தன்சொற்பனத்தை
யெங்கள்மனமேயறிய யியம்புமதின்விதமறிவோம்.

வசனம்.

ஆயெங்களம்மணி இதுவென்னவாச்சரியம் அலர்ந்தசெந்தாமரை புஷ்பம்போல் இருந்த தங்கள்முகம் இப்போது வாடிதிடலென்றெழுந்து சிந்தைகொந்தளிகி வியாகூலப்படுகுர காரணம்யென்னவம்மணி சொல்லும்தாயே அதின்விபரத்தைநாங்கள் அறிந்துசீக்கிரத்தில் உமக்குதெரிவிக்குரோம் மாதரசே.

லீலாவதிசொல்-தரு-இ-ம்-புன்னுகவராளி-ஏகதாளம்.

என்னமோமதிகொண்ட விறு
இன்றிரவுநான்கண்ட கிறு

அன்னமேயென்னை தலைவருடனென்
மன்னனெதிர்வந்தாரோடி
கன்னியரேகேளசுரர் காவலர்க்கென்னமோவரியேன்
வன்னியைமூட்டினதுபோல் வயர்குபுகுபென்றெரியுதடி (எ)

தீதிலாசெங்கோல்செலுத்துஞ் செழிக்குமெழில்மண்டபத்தில்
சோதினைபோலக்கினியின் சுவாலையுண்டாச்சம்மா அது
வீதியெங்குந்தணல்வீச வீரர்மனைகளுமிடிய
தாதிகளேயிதுகளவசகுனம் வீண்போகாதே (எ)

கூவியழுதேயொருபெண் கோடிதுயில்தனைகொடுத்து
மேவியகுங்குமத்தை யென்மேலிரைத்தாளம்மா பின்
தாவியிருபெண்ணரிசா யெடுத்தேன்கழுத்திட்டு
பாவிகள்கால்மோதிரத்தை பறித்துக்கொண்டாரம்மா (எ)

தானவர்கள்குலத்துக்கொரு தாகூடிவாராதென்றிருந்த
நியாயத்துக்குடனே கெடுதிகாலமோநானறியேன்
வானவர்கள்மனமடங்கி வந்துபணிந்திடுமண்டபம்
மீனமதாயிருள்மூட யேந்திழையேனான்கண்டனடி (எ)

இப்படியொருநாளுஞ்சொப்பனம் யேந்திழையேநான்கண்டதில்லை
கற்பிலிதுவார்மதர்க்கே கண்டிதைநன்றாயுணாப்பீர்
அற்புதஞ்சேர்கலைவல்லிமாதன் செய்யுங்குறிதுவோ
யெப்படியோதெரியாது எவர்ஜெயமோநானறியேன் (எ)

முதல்-தோழிசொல்-விருத்தம்.

ஜெகமதைபடைத்தவெங்கள் தேவனார்தேவியாரே
யுகம்பிரண்டாலுமுங்கள் கொருதீங்கும்வாராதம்மா
திகில்படவேண்டாம் பித்தச்செய்கையுமதிகமானால்
அகமதிலவ்வினவே யக்கினவாகுமம்மா.

வசனம்.

கேளுமெங்கள் கனகதுரைக்கிசைந்த கற்புடையதேனே இதை உன்மனதில் கனவென்றுநினைத்தும் யோசிக்கவேண்டாம் யிதைப்பத் தியாகூலபடுரா ஆ யெங்ஙயாவுண்டா அண்டத்தோடு அண் பிரண்டபோதிலும் தங்கள்ஜமான்களுக்கு யிம்மியவ்வளவு குற்றம் நேரிடுமா வொருபோதும்நேரிடமாட்டாது இதுபித்தத்தின்செய்கை யான கனவானதுனக்கு நினைவாகத்தோற்றமாயிற்றுதே அன்றிமற்றொன்றுமில்லை நீவியாகூலப்படவேண்டாம்தாயே.

இரண்டாவது-தோழிசொல்-விருத்தம்.

தாயேயிதைகினவென்றுநீமனதிற்
றியங்கியேமயங்கவேண்டாம்
பேயோடாடியச்சிவனயன்மாலும்
புரந்தரனிமயவற்புவியோர்
வாயேமூடிவணங்கிடப்பெற்ற
வல்லவர்தேவியேகேளும்
மாயேயிதுவெனவெண்ணியேயினியுன்
மனக்கலக்கத்தைநீக்கிடுவாய்.

வசனம்.

அம்மணி இதை நீ கனவென்று நினையாதே சகலமானபேர்களும் நடுங்கிவணங்கும் நாதர்தேவியே இதுயாவையுமென்குரகாரணம் ஆதலால பயப்படாதே தாயே அப்படி உங்களுக்கு யொருதுன்பம்நேரிடமா நேரிடமாட்டாதம்மா நீயெழுந்து முகங்கழுவிக்கொண்டுதாம்பூலம் தரித்துக்கொள்ளும் அம்மணி.

பொது-விருத்தம்,

தாதியர்களிதைமரித்துவெவ்வேருகச்
சாமதிகள்சொல்லித்தையல்தன்னைத்தேற்ற
மேதினியாளிரணியன்சொற்கேட்டகல்லர்
மிகுபடைகளுடன்பாலன்முன்கெற்ஜித்து
வாதினைசெய்திடுங்களத்துக்கினியெழுந்து
வரவென்னச்சிறுவனுமேயென்தாய்க்கிந்த
சேதிசொல்லிவாரமட்டும்பொருங்களென்று
திறஞ்சொல்வான்தாயிடவந்துரஞ்சொல்வானே.

வசனம்.

இவ்விதமாக லீலாவதியம்மனுனவள் கனவுகண்டு மனமயங்கிய போது அவ்வரிகிலிருந்த தாதியர்கள் தேருதலைசொல்லி மனக்கவலையை நீக்கிசந்தோஷப்படுத்திக்கொண்டிருக்கும் தருணத்தில் இரணியன்சொற்படி பிரகலாதனனைகொல்லவந்தமல்லரிடத்தில் பிரகலாதரானவர் விடைபெற்றுக்கொண்டு தாயாரிடம்வருகின்ற விதங்காண்க.




தரு-இ-ம்-காம்போதி-அடதாளம்.

அன்னையேசரணமுன் னடியிணைக்கே நன்று
யருள்கொடுத்தனுப்பு மிப்பவுமெனக்கே

லீலாவதிசொல்-விருத்தம்.

சார்ந்திடுமூலகில்கல்வி சகலமும்படித்தென்சிந்தை
கூர்ந்திடயுரைப்பாயென்றே கொண்டயென்னெண்ணத்தின்முன்
சோர்ந்துநீயழவும்மல்லர் துடித்திழுக்கவுமிப்போது
நேர்ந்தகாரணமிதென்ன நிகழ்த்துவாயெந்தனுக்கே.

வசனம்.

ஆ யென் அருமைமகனே இதுவென்னகாரணம் உன்தந்தையானவர் உன்னைவரவழைத்து கல்வியில்வைத்தாரென்றதாக அதிகசந்தோஷப்பட்டிருந்தேனே இப்போது அழுதகண்ணீருஞ்சிந்தையுமாகவரவேண்டியகாரணம் நேரிட்டவிபரம் யெனக்குத்தெரியச்சொல்லடா யென் கண்ணே,

பிரகலாதனன்சொல்-மட்டுவிருத்தம்.

இன்பமாயென்றனையீன்றெடுத்தன்னையே
யியம்புவேன்கேளுமிப்போது
யெழில்முடிதரித்தயென்தந்தையானவர்புகர்
யீன்றிடுஞ்சண்டமார்க்கரையே
இப்புவிப்புகழ்கொலுமுகப்பினிலழைத்துமே
யென்மகன்றனக்குநூன்முறையின்
இசைகளைத்தெளிந்திதயமாயுரைசெய்யென
யென்னையனுப்பிடவுமவர்தான்

அன்புகொண்டளவிலாவானந்தபரவசம்
ஆகியேயந்தணன்மனமகிழ்ந்து
அரும்பள்ளிகூடந்தனிற்கென்னையழைத்துப்போய்
அத்விதமுதற்பொருளென
ஆதிவேதந்தனிற்சேர்தியாய்நின்றிடும்
அகிலாண்டகோடிப்ரபல
அப்பனேமெய்யென்றுயப்பியாசம்செய்யாமல்
அரும்பாவியெனவுலகினில்

துன்பமிகசெய்திடுந்துன்மார்க்கனேமுன்
தொழுதுகைகூப்பிநின்று
துதியென்றுயெந்தனுக்குபதேசஞ்செய்தனர்
தோஷமிதுவுறையேனென்றேன்

துடிதுடித்தோடியென்தந்தைமுன்வந்துகுரு
சொல்லியிதைமுறையிடவே
துரையாகவென்னையழைத்திறைவனுங்கேட்க்கையில்
சுரிதிமுதல்கருதும்ஹரியின்

பொன்பதந்தனை துதித்தேனெனவுமன்னவன்
பொரிகள்சித்ரிடகண்களிற்
பொல்லாதபாதகமல்லரைவிடுத்தெனைக்
கொல்லென்றுவிடைகொடுத்தார்
புவியதிர்ந்திடவேவந்தெந்தனைபிடித்தவர்
போர்களம்வாவென்குரார்
போகவேணும்மிதுச்சங்கதிவேரொன்றில்லை
பிரியமுடன்விடைகொடம்மா

லீலாவதிசொல்-விருத்தம்.

மங்கையிவ்வசனங்கேட்டு மண்மீதில்மரம்போல்வீழ்ந்து
கங்கைபோல்கண்ணீரோடக் களைத்துமேகலங்கிவாடி
அங்கமும்பதைபதைத்து யலரியேயெழுந்திருந்து
திங்கள்தன்னொளிபோல்நிற்கும் சுதனைகண்டேதுசொல்வாள்.

வசனம்.

இந்தப்பிரகாரமாக தன்குமாரனாகிய பிரகலாதனன்சொன்னவசனத்தைகேட்டமாத்திரத்திலே லீலாவதியம்மனானவள் பூமியிலே மரம்போல்வீழ்ந்து கண்களிலே ஜெலமானது கெங்காநதியைபோல்பெருகியோடவும் களைத்துமெய்கலங்கிவாடி யெழுந்து சந்திரவிம்பத்தைபோலொத்த முகததினையுடைய மகனைப்பார்த்து சொல்லுகின்றவிதங்காண்க.

லீலாவதி-புலம்பல்-தரு-இ-ம்-முகாரி-ஆதிதாளம்.

ஐயையோமகனேயான்-யிதற்கோயுன்றனைப்பெற்று
அருமையாகவளர்த்தேனடா அடாமகனே
ஆவின்முன்புலியைப்போல்-பாவிமல்லர்களுன்னை
ஆக்கரமித்துப்பிடிக்கையில் அடாமகனே
கையுங்காலுநடுங்கி-கதரியழுதுன்மனங்
கரித்தில்யாரைநினைந்தாயோ அடாமகனே
கத்திக்கொண்டுனைசூரர்-பத்தியிழுக்கும்போது
கலங்கியுன்முகஞ்சோர்ந்ததோ அடாமகனே

தையலென்வயர்பற்றிதனைலாயெரியுதையோ
தரிக்குமோபினியென் னுடல் அடாமகனே
தங்கமுடிதரித்தங்கிருந்கோலகியாள்வாயென்று
சதிராகுனிருந்தேனடா அடாமகனே
துய்யவுனைக்கொலைகள்செய்யமல்லர் கள்கைக்கு
சூழ்ந்தவிதிக்கென்செய்குவேன் அடாமகனே
அற்புதவிவீனைக்காஞ்சாதென்பாரதுமிஜமா
சோதினையாயின்றுச்சுதே அடாமகனே
வையகந்தனிர்சுவைதப்பொல்லாதென்றமச்சர்
வந்ததடுக்கவில்லையோ அடாமகனே
வண்மையிலிருந்தயென்கண்மணியேமன்னவன்
வஞ்சகத்துக்கென்செய்வேனடா அடாமகனே
பையரான்செய்தபூஜாபலமிந்தமட்டுந்தானோ
பாவியானேனேயினிமேல் அடாமகனே
பாதகம்விடுமோயிந்தப்பூதலமுள்ளமட்டுந்தும்
பழிக்கிடமுமாச்சுதே அடாமகனே
பொய்யுரையாதசத்தியபுத்திராயுனைபோலிந்த
புவியிலெங்கேனுங்காணேனடா அடாமகனே
பொருளையுங்குணமுமுந்திருமுகத்தொளியைய்ப்
பிரப்பிலயான்காணேனடா அடாமகனே
மெய்யென்றுனைநாடிமெத்தமகிழ்ந்ததெல்லாம்
வெட்டின்மழைபாச்சுதே அடாமகனே
மெத்தபுகழ்கலைவயத்திவரதனிட
சித்தப்படிமுடியுமோ அடாமகனே.

விலாவதிசொல்-விருத்தம்.

ஐயையோமகனேயிந்த யவதியான்காணத்தானோ
உய்யவென்வயத்தில்வந்து வுற்பத்தியானாயப்பா
வையகந்தன்னிலிந்த வன்னீதக்கொடுமைதன்னை
செய்யுமுன்தந்தைமுன்னே செல்வமேபோவோம்வாடா.

வசனம்.

ஆ யென் அருமைமகனே ஐயையோ யிப்படிப்பட்ட வன்னீதம் யெந்தவுலகத்திலும் நடவாதே. இதென்னவன்னீதமென்று சொல்லு வேன் இப்பேற்கொற்ற துன்பங்களை காண்பதற்குதானோ யென்கெற்ப

த்திலிருந்து புறப்படலாயினுபடா யென்கண்மணே உனைகல்வியில்லைவக் கவேண்டுமென்று வரவழைத்துசொல்ல மல்லர்கையில்கொடுத்தஉன் தந்தைவல்லமையைப் பார்ப்போம் நாமிருவரும் உன்தந்தைமுன்போ கலாம் வாடாயென்மகனே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

அன்னையேகேளென்றந்தை ஆக்கினைபடியேமல்லர்
யென்னையேகொல்வேனென்று யிழுக்குப்போ றுணதுபாதக்
தன்னையேதொழுதுபோற்றி ஜவிதியில்வருவேனென்று
னிணணயஞ்செய்துவந்தே நிமிஷமிங்கிருக்கொண்ணாதே.

வசனம்.

கேளும்மணிதாயே யென்தந்தை ஆக்கியாபனைப்படி யென்னை கொல்லவந்தமல்லரிடத்தில் அநேகவிதமான ஞாயங்களைச்சொல்லி தங்கள் திருவடி தரிசனஞ்செய்துவருகுமேரன் ஒருவிடைபெற்றுக்கொ ண்டு வந்திருக்கின்றபடியால் யான்வருவது நிபரமல்ல சந்தோஷ மாக விடைகொடுத்து அனிப்பினையும் யென்னம்மணி.

லீலாவதிசொல்-விருத்தம்.

ஆதவனொளியைப்போலே அழகுநற்குணமுமெந்தன்
மாதவத்தினிலுதித்த மைந்தனேயுனைநானந்த
பாதகமல்லர்கையில் பரிகொடுத்தனுப்பிவிட்டுப்
பூதலமீதில்யானும் பொரிந்தியெப்படிவாழ்வேண்டா.

வசனம்.

ஆ யென் அருமைமகனே இந்தபூமியில் உன்னைபாதகராகிய மல் லர்கையில்கொடுத்து நானெப்படி உயிர்வைத்துவாழ்வண்டா யென் செல்வமே.

லீலாவதிசொல்-தரு-இ-ம்-சுருட்டி-ஆதிதாளம்.

அப்பனேவுனைப்பிரிந்தெப்படியான்மனம்
ஆர்வேனோடாஇனிநானெங்கேசார்வேனோடா

தப்புரையாதயெந்தன் தங்கமணிவிளக்கே
இப்பிராயத்திலுனக் கிந்தகாரணம்வர
யேர்க்குமோடாசத்தியந் தலைகார்க்குமோடாபார்க்குள்ளே (அ)
மூலப்பால்வாசனை யின்னம்முகத்தில்மாறவில்லையே
கலைப்பார்சொல்கேட்டுன் தந்தைகல்லாமல்லர்கையினில்
காட்டலாமோகிற்றியை நிலைகாட்டலாமோதர்ட்டியா (அ)

பரிந்திதவமிருந்து பத்துமாதஞ்சுமந்து
வரிந்தியுந்தனைபெற்ற வயர்குழம்பிடயிங்கு
வாழ்வேனோடா கூவியெனைதாழ்வேனோடா (அ)

விரிமலர்வாவிசெந் திருவளருங்கலவை
கரிவரதநேயிந்த உருவம்தாய்வந்தாற்போல்
காணுதோடா மனமெனக்கு தோணுதோடாசேணுலகினில் (அ)

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

தேகமென்பதுயென்றைக்குஞ்சாஸ்விதமல்லவென்று
ஆகமமரிந்தோர்சொல்வதவனியில்கேட்டிருந்தும்
சோகங்கொள்வதினாலென்னசுதந்தரமாமோவர்ழ்வு
தாகந்தீர்க்காதுகானல்தாயேசஞ்சலப்படாதே.

வசனம்.

அம்மணி யெப்போதைக்கும்சென்மம்சதமல்லவென்றுபெரியோர்கள்சொல்லியிருக்கின்றார்கள் யென்றைக்கியிருந்தாலும் மண்ணுக்கிரையான தேகம்யென்று நமக்குநன்றாய்தெரியுமல்லவா அப்படியிருக்க இந்த உலவாழ்வைநம்பி பாபத்துக்காளாவதைவிட அய்யனருள் சேர்வதே நல்லகெதி தாகவான்கள் கானலைகண்டதுபோல் உலகத்தின்ஆசைதாயே நீசஞ்சலப்படவேண்டாந்தாயே.

பிரகலாதனன்-சொல்-காம்போஸ்-ஆதிதாளம்,

தாயேசஞ்சலமிதிபடவேணடாம் இந்த
தரணியில்புகழ்அரிகருணையிருக்கயிலே (தாயே)
காயமிதுசதமாமோ சொல்வீண்
காலங்கழிப்பதினால் பலனாமோ (தாயே)

மாமரை முடிவினில்வள்ரெழில்வாசன் மலர்மகள்
மரிவியபரந்தாமன்நன்பர்க்கருள்தருநேசன் செந்
தாமரைமலர்ந்தாள்தஞ்சமென்றநுதினந்
தனயனுக்கிருக்கயில்மனமுரிகிநீஇப்போ (தாயே)

காதகத்தொழில்களைகனமென்றெண்ணி செய்யும்வஞ்சகப்
பாதன்றனைதொழுதிடேனம்மணி பொல்லா
வாதைசெய்தனுதினம்வருந்தும்படிசெய்தாலும்
சீதரனைவிட்டினியோதிடேனொருவரை (தாயே)



குலைசெய்திடமல்லர்களிதோகூவுரார்கோஷ்டமிட்டங்கு
பலவாயுதங்கொண்டெனையினிதாவுரார்
சிலைநுதல்விழிலக்ஷ்மிதேவியருள்பெருகும்
கலைவைமாநகர்கரிவரதர்கிருபையிருக்க (தாயே)

குலைவீரர்சொல்-விருத்தம்

தாயிடஞ்சென்றுதாள்தனைப்பணிந்து
சலிதியில்வருகுரேனென்று
நேயமாய்நம்மிடமனமதுகரைய
நிலைபெருஞ்சத்தியஞ்செய்து
போயினசிரியனினம்வராதேனோ
பொரிந்தியுள்ளிருப்பதாலந்த
தீயனையினிவிடுவதுமதியல்லா
சீக்கிரமெழுந்திருந்திடீரே

வசனம்.

கேளுங்கள் யென்து குலைவீரர்களே. அந்தசிருவனுன்வன் நமக்குஅநேகமான சத்தியங்களை சொல்லிப்போயினவனை இன்னம் வரவில்லை பார்த்தீர்களா இப்பேர்கொத்தவனை யெப்படி நம்பலாம் நல்லதாகட்டும் இனியுவன் தாட்சண்ணியம் நமக்காகவேண்டியதென்ன யாவரும் யெழுந்திருங்கள் அப்பாவீரசூரரே.

குலைவீரர்-சொல்-தரு-நாட்டை-அடதாளம்

இன்னம்வெளியில் வாராதிருப்பதென்னஞாயம்
யேதுசெய்வதுபாயம்

மன்னனிந்தசேதி மாத்திரமறிந்தாக்கால்
மசக்கமதைபோல்நம்மை கசக்கிவிடுவானென்று
சொன்னோமல்லோவநேகம் சிருவன்னம்மைதேற்றியே
தூரவில்வருவேனென்று விரவிச்சொல்லிபோனவன் (இ)

புக்கென்றெழும்பிப் புலிப்பாய்வதைப்போலே
பிடித்துக்கடித்துரத்தம் குடித்துவிடுவோமிப்போ
திக்கெங்கும்புகழ்மன்னன் தேவியரைமனைக்குள்
புக்கலாகாதென்று வெக்கினுமிருக்கயில் (இ)

ஆனுலுங்குரவில்லை அவநமக்கனுவல்லோ
அதட்டியரைமனைக்குள் உதட்டியுடன்புகுந்து

தேனார்மொழிமாதுக்கும் செப்பியிம்மொழிகளை
சிலைபிடித்திழுத்திட் வகைகமக்குப்போதாதென்றின்னம்
நிலைவகண்டுநக்ஷத்ரம் கெட்டினகதைபோலே
நினைக்குமன்புத்தியை நிமிக்ஷத்திற்றிருகுவோம்
தலைவநகர்வாழ்நரி வரதனென்றுசொல்லும்
கதையதைகாட்டுவோம் மதமதைவாட்டுவோம் (இ)

குலவீரமல்லர்சொல்-விருத்தம்.

தாதாவின்சொற்படியுனைப்பிடித்திடத்
தஞ்சமென்றெங்களைப்படுத்தித்தன்
பிதாவுக்கிசையோதியின்னொடிக்குள்
வருவேனென்றுரைத்தாய்வேண
சாதாரணமதாகியவிஞ்ஞமொழிகளோ
சாற்றிவந்திடுஞ்சிறுதனயா
போதாதுபோய்விடுதுசீக்கிரம்
புறப்படாய்போர்களம்போக.

வசனம்.

ஆ தனையா நன்றாயிருக்கிறது உன்னுடைய ஞாயம்போதும் போதும் அந்தமட்டும் நல்லியோக்கியந்தான் தாதாவின் உத்திரவுபிரகாரம் உன்னைப்பிடித்துப்போர்களம் கொண்டுபோகவந்த வெங்களைமெத்தவும் வணங்கி அநேகமான சீத்தியங்கள் செய்துகொடுத்து யின்னொடியில் பெண்மாசர்வினைபாதார்க்கை தொழுது வருகிறேனென்று சொல்லிவந்தவன் இன்னும் வராமலிருந்தால் உன்னையெப்படி சத்தியவானென்று நம்புகிறது ஆயினுங்குற்றமில்லை போதாதுபோய்விடுகிறது சீக்கிரம் வாவா தனையா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

காரமோடாரபாரங்களைத்துதெற்ஜனைகள்செய்யுங்
கோராரக்ஷசோகங்கள்கோபிக்கவேண்டாமப்பா
தீரயாவுங்களுக்குச்செப்புஞ்சத்தியஞ்தப்பாமல்
வாரநாளுங்களுக்குமுன்னைவருசனையிலில்லைகண்டாய்

வசனம்.

ஆ குலவீரமல்லரே இதோவருகிறேன் நீங்கள் கோபிக்கவேண்டாம் அடியேன் உங்களுக்கு அநேக நிலைகளை சொல்லிவிட்டுவந்து யானின்றால் பஞ்சமாபாதகத்துக்கும் மேலான பாதகனாகி விடுவேனல்லவா அரி அரி இதோவந்துவிடுகிறேன் அப்பாமல்லரே.

லீலாவதிசொல்-விருத்தம்

பதைத்துப்பற்கடித்துவெட்டிப்பழத்லைதப்போல்சிவந்துக்கண்கள்
கொதித்தகோபத்தோடிங்குகொக்கரித்தார்பரித்து
மதத்தயானைகள்போலெந்தென்மைந்தனையிழுக்கவந்த
விதத்தையெந்தனுக்கிப்போதுவிப்ரமோடுரைசெய்வீரே,

வசனம்.

அப்பா வீரசூரமல்லர்களே நீங்கள் அதிககோபத்துடனே கண்சிவக்கவுங்காந்தாளம்வீசவும் மதயானைகளைப்போல்கெற்சனைசெய்து யென்மகனை பிடிக்கவந்த காரணமென்ன அதையெனக்கு விபரமாக தெரியச் சொல்லுங்களப்பா வீரமல்லரே,

வீரமல்லர்-சொல்-விருத்தம்.

கடல்புடைசூழுலகினைமுழுதாளுங்
கர்த்தனுமிரணியதேவன்
திடமுடனெங்களைவரவழைத்திந்த
சிறுவனைபோர்களங்கொடுபோய்
ஐடம்தையுடைவாள்தனக்கிரையாக்கி
ஜல்திதியில்வருகுவீரென்று
விடையதுகொடுத்தனர்நாங்களென்செய்வோம்
விதமிதுகாணுமம்மணியே.

வசனம்.

கேளுமம்மணிதாயே நாங்களென்னசெய்வோம் யெங்கள்பேரில் நீங்கள்கோபித்துக்கொள்ளவேண்டாம் திரிலோகதேவனாகிய இரணியபூபாலரானவர் யெங்களைவரவழைத்து யென்குமாரனாகிய பிரகலாதனை பிடித்துக்கொண்டுபோய் போர்களத்தில்விடுத்து இரணியாயநமாவென்னும் ப்ரணவமந்திரத்தை போதியுங்கள் அதையவன்சொன்னால் விட்டுவிடுங்கள் அல்லாவிட்டால் அவனுடலைசின்னபின்னமாக சூலம்வேல் கெண்தவாள்களால் சதைசதையாக அருத்து காகம்பருந்துகளுக்கு இரைகொடுத்துவாருங்களென்று உத்திரவுசெய்திருக்கிறார் அம்மணி,

லீலாவதிசொல்-விருத்தம்,

கொள்ளையிதென்னசொல்வேன்குவலயந்தனிலேபெற்ற
பிள்ளையைகொல்வாருண்டோ பேராசானுவோர்கள்

யெள்ளளவிதக்கந்தன்னுள் இல்லாமல்கொல்லச்சொன்ன
வள்ளல்முன்சென்றுயிந்த வங்கதனையரிவோம்பாரீர்,

வசனம்,

ஆ இதென்னகொள்ளையென்று சொல்வேன் இவ்வுலகத்தில் எங்கையாவது பெற்றபிள்ளையை கொல்லென்றுசொல்வதற்கு யெப்பேர்க்கொற்றவர் வரக்கிலும்வரமாட்டாரே இவரென்ன லோகாராட்டியனென்கிறபெயன்ரதான் அனுசரித்தவராகயிருந்தும் யெள்ளளவிதக்கந்தன்னுள்ளத்தில்வையாமல் உங்களைவரவழைத்து யென்னருமைமகனை கொல்லச்சொன்ன விபரத்தை அரியவேண்டுமல்லவா ஆதலால் அப்பா மல்லரே நானும் என்மகனுமாக அவர்முன்பாகசென்று இந்த ஞாயங்களையரிந்து வருகிறோம் நீங்கள் அதுவரையிலும் அப்புரமிருங்களப்பா கோரவீரஇராக்ஷசமல்லர்களே,

வீரமல்லர்சொல்-விருத்தம்,

பரவியதிரைகடல்சூழ்புவிக்கெல்லாம் பராபரமாகியயெங்கள் (டி
இரணியதேவர்க்கிசைந்தநாயகமே இதற்கிசவல்லகேளிஜமானுரைப
சிருவனைப்போர்களத்திற்கு வொருநொடிதனில்கொண்டுபோவோம்
தரைமிதையதைதடுப்பதுநிதியல்லாதனயனேயின்றுமென்ஜாலம்,

வசனம்.

சகலங்களுக்குந் தேவனுகபராபரமாய்விளங்கிய யெங்கள் இரணியேஸ்வரருக்கு நடுநாயகம்போல் விளங்காநின்ற அம்மணி உமதுதிருவடிகளுக்கு அடியேன்கள் ரொம்பவும்வந்தனம் யெங்கள்பேரில் தயவுசெய்யவேண்டியது இப்போது தாங்கள்சொன்னமொழிக்கிணங்கள் உள்படுவது ஞாயமல்லவே அதுக்கொவா இதோயெஜமான் உத்திரவின்படி பிரகலாதனைகொண்டுபோகுறோம் அதைநீங்கள் தடுப்பது ஞாயமல்ல அப்பாபிரலாதனே என் ஜாலம்யெழுந்திரு நடந்து சீக்கிரமாக போர்களத்திற்குவருவாய்சிருவா.

லீலாவதிசொல்-தரு-இ-ம்-சரமா-ரூபகதாளம்.

பாவிகளாப்ரலன்மீது பதரிடவேண்டாம் வீணய்வதரிடவேண்டாம்
வீணுவதரிடவேண்டாம் வதரிடவேண்டாம்

மல்லர்சொல்-தரு.

வுதருகின்றோமென்றெங்களோடிந்தவாதம்ரதே கொரும்
புதரினில்புலிபோலவேசீரிபிடிப்போம்வாடாதே யதைநீ
தடுக்கக்கூடாதே-யதைநீ-தடுக்கக்கூடாதே-தடுக்கக்கூடாதே.

லீலாவதிசொல்-தரு.

தாவியேயெங்கள்தரைதனில்விழுதள்ளலாகுமோ நீங்கள்
கூவிகொக்கரித்துகோபங்கொள்ளலாகுமோ பேய்போல்
துள்ளலாகுமோ-பேய்போல்- துள்ளலாகுமோ-துள்ளலாகுமோ

மல்லர்சொல்-தரு.

துள்ளுவோமெங்கள்துரையிரணியன்சொற்படியடவா நெட்டி
தள்ளுவோம்தாக்ஷண்ணியமில்லாமல்தனயனேகூடவா போர்
முகமுனேநடவா-போர்-முகமுனேநடவா-முகமுனேநடவா

பிரகலாதனன்சொல்-தரு,

நடந்திடத்தடையாதொன்றுமில்லைநான்பால்மாறாதே உங்க
ளுடனிதோவருகின்றனப்பா உண்மைமாறாதே தாய்மனங்
குண்ணிசோராதே-தாய்மனங்-குண்ணிசோராதே-குண்ணிசோராதே

லீலாவதிசொல்-தரு.

சோர்ந்துநீயழுதேங்கிடவிதிசேர்ந்துதோபாலா சிந்தை
கூர்ந்துன்தந்தைமல்லர்கையில்யீந்தாரோசீலா வந்து
சூழ்ந்தாரோமேலா-வந்து-சூழ்ந்தாரோமேலா-சூழ்ந்தாரோ

பிரகலாதனன்சொல்-தரு.

அன்னையேயொருவரைநொந்திடலாகுமோதாயே அயன்
சென்னியிலெழுதியதற்குயென்செய்வாய்நீயே யிது
முன்வினைதீயே-யிதுமுன்வினைதீயே-முன்வினைதீயே

லீலாவதிசொல்-தரு.

தீதுசெய்திடும்மல்லர்களுன்னைதீண்டிடலாச்சே பொல்லா
வாதுசெய்கலவையில்வாழ்கரிவரதனுக்கேச்சே யினி
துரைதனம்போச்சே-யினிதுரைதனம்போச்சேதுரைதனம்போச்சே

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

பொருமையில்மிகுந்ததாயே புலம்பிடவேண்டாம்நீயே
இருநிலந்தனிலெண்ணுளு மிசைந்துவாழுயிர்கட்கெல்லாந்
திருவுளச்செயலல்லாமல் தீதொன்றுமணுகாதிந்த
விருதமல்லர்கள்பின்செல்வேன் மேனெக்கேகுமம்மா.

வசனம்.

அம்மணி நீயாதொன்றுக்கும் வியாகூலப்படவேண்டாம் இவ்வுலகத்தின்கண் வாழப்படாநின்ற சகலஜீவ ஆத்மங்களுக்கெல்லாம் திருவுளத்தின் செயலப்படியோ அப்படியேமுடியுமேயல்லதுவேறொ

ன்றுமனுகமாட்டாது ஆதலால் அடியேன்செய்த கர்மவினையெப்படியோ அப்படிதான்முடியும்அதற்கு ஏன்இப்படி நீவருந்துகுருயவேண்டாம்நான் அந்தமல்லருக்குசொல்லிவந்தபடியே போய்வருகிறேன் தாயே.

லீலாவதிசொல்-தரு-இ-ம்-காம்போதி-ஏகதாளம்.

பாலாயென்சொல்வே-னென்பாக்கியமே
மேலாயுலகத்தில் மிக்கதவஞ்செய்து
வாலாயமாகவே வரிந்திபெத்தயென் (பாலா)

இடர்செய்திட-இன்றுமல்லர்தன்
படையோடுனையே டற்றியேபிழுக்க
விடைதந்தனுப்பிவிட்டவிதத்திற்கு. (பாலா)

உனைவிட்டினி-போரியாகவே
இனிவுலகினில் எப்படிவாழ்வேண்டா
மனவந்துன்தந்தை வைத்திடும்நிந்தைக்கி (பாலா)

நெஞ்சங்கிழ-நிதமுனக்கே
பஞ்சணைமெத்தைமேல் பாலுஞ்சாதமூட்டி
காஞ்சியேவளர்த்த குடல்குழம்புதே (பாலா)

தேடியரிதியே-ஜீவரத்தினமே
வாடியபயிற்கு வந்தமழையென்றே
நாடிநானிருந்த நலங்கல்பாச்சே (பாலா

மலர்முகனே-பாராவமுதே
நலஞ்செய்கல்வை நாவரகன்மேல்
கலகஞ்செய்திடுங் கனகன்கொடுமை (பாலா)

லீலாவதிசொல்-விருத்தம்.

மைந்தனேயுனைப்பிரிந்து மகிதலந்தன்னிலேயான்
யெந்தட்வாகவாழ்வேன் யினியிந்தமல்லர்கையில்
யுந்தனைகொடுத்தனுப்ப வெவ்வுமோமனமெனக்கு
வெந்தணலந்தைபோல்பற்றி வேகுதேன்செய்வேன்பாலா.

வசனம்.

ஆ யென்செல்வ கண்மணியே உனைப்பிரிந்து எப்படியுலகத்தில் வாழ்வேண்டா இந்த மல்லர்கையில் எப்படிமனம்வந்து கொடுப்பேன் என்வயர் ஆலையடுப்பின் தீயைப்போல் குபுகுபென்றுயெரிகின்றதே

யிப்படியெந்த உலகத்திலுமநடவாதே இதற்கென்னசெய்வேன் ஐயையோ மகனே இனியிதற்கு வகையெப்படி ஒன்றுந்தோன்றவில்லையென் துரையை என்னைறக்கி காணப்போகிறேன் ஆ மல்லரே.

வீரமல்லர்சொல்-விருத்தம்.

துரையுரைப்படிக்கேசேயனைக்கொடுபோய்
செரிகளந்தனிலுடவாளுக்
கிரைகொடுத்ததின்பின்னொருவரோடொன்றை
யியம்பிடலாகுமேயல்லால்
விரைபெறுமிரணியேஸ்பரனிதையறிந்தால்
நிமைப்பொழுதினிலனைவரையுந்
தரைமிசைதனில்கொளித்திடுவர்காணம்மா
தனயனையினியனுப்பிடுவாய்.

வசனம்.

கேளும் எங்கள்தாயே உங்களைப்பற்றி இதுவரையிலும்நாங்கள் மனம்பொருத்தோம் இனிவேறொருவராயிருந்தால் இன்னும் தாமிஷமா இனிதங்கள் எஜமான் உத்திரவின்படி பிரகலாதனைப் பிடித்துக்கொண்டுபோய் எங்கள் கைவாள்களுக்கு யிரைகொடுத்துவிட்டு வேறொருவார்த்தை யாடுவமேயல்லாமல் அரைநிமிஷம் நிற்கபோகாது இதையவரறிந்தால் எங்களுக்கு அபாயமாகும் ஆக்கினைவந்துநேரிடும் சீக்கிரமாக சேயனையனுப்பும் அம்மா.

லீலாவதிசொல்-கொச்சகம்.

போர்படையின்வீரர்களே பொறுங்கள்மனம்புகழுந்திரு
பார்கடையினமுதமொழி பாலகனைஞாலமதில்
கூர்பண்டுவாளுக்கிரையாய் கொடுக்கும்விதமதையெதிர்போய்
தேர்கடைசெய்தேவருவேன் தெரிவீரசூரர்களே.

வசனம்.

போர்படைவீரரென்னும் அசுரமல்லர்களே நீங்கள் ஏன்கோபித்துக்கொள்ளுகிறீர் திருப்பார்கடலிலே பிறந்த அமுதத்தையொத்த மொழிகளையுடைய என் அருமைமகனை கொல்லச்சொன்னவிதத்தை அவர்நேரில் நான்சென்றறிந்து வருகிறபரியந்தம் இவ்விடத்தில்தானே யிருங்கள் மல்லரே.

மல்லர்சொல்-கவி.

சேயாமன்னன்செப்பியப்படியே
வாளாலுதிரம்வரும்படியரைவோம்

தாயார்க்கினியதயிரியஞ்சொல்லும்
பேயாமடியப்போர்களம்வாராய்.

வசனம்.

ஆ சிருவா நன்ருயிருக்கின்றது உன்னுடையஞாயம் உன்தாயாரும் நீயும் இப்படி காலங்கழிப்பீரென்று நாங்களிருந்தால்உன்னே அனுப்பினைப்பமா இந்தசூது எங்களுக்குதெரியாமல் போச்சுதல்லவாதல்லது உன்சமுத்தை இன்னம் அரை நாழிக்குள்ளாக காட்டுகின்ருேம் பார் வருகிறதற்கு தாமிஷமேன் உங்களம்மாளுடைய வார்த்தையை கேட்டுக் கெட்டுப்போகாதே வாவாதனேயா.

வீரமல்லர்சொல்-தரு-இ-ம்-நாட்டை-அட்டதாளம்.

வருவாய்திரமாமுன்னேவருவாய் சொன்ன
வாக்கின்படியேயிப்போ சிருவா
பெருவாரிதிசூழ்கின்ற புவியாளிரணியேசன்
திருவாயுரைப்படிக்கிச் செழிக்கும்போர்களத்திற்கு (வருவா)

இன்னம்மனம்பொருக்கமாட்டோம் இனி
யெதையுரைசெய்தாலுங்கூட்டோம் உன்னே
சின்னபின்னஞ்செய்துதிரியும்பேய்நரிகட்கு
முன்னும்பின்னும்பாராமல்முரித்திரைகொடுத்திட (வருவா)

கனேயும்நெருப்பையீகள்மூய்க்குமோ உன்தாய்
கரித்தின்படியுனக்குதக்குமோ வாடி
கனேயுமாட்டுக்குருள்ளநரியழுவதுமுண்டோ
தனேயாயிதையரிந்துதடுத்துப்பேசிடாமலே (வருவா)

விலேயில்லாமாணிக்கம்போலே னீ
வதரிவருந்திருமாலே முன்னால்
அலேகடலினில்போய்வீழ்ந்தலேயும்நிலேயில்லாத
கலைவநகரில்மேவுங்கரிவர்தனரிய (வருவா)

லீலாவதிசொல்-விருத்தம்.

யெள்ளளவிதக்கமில்லாதெழுந்துகொக்கரித்துசீரி
துள்ளியேகோபங்கொள்ளும் சூரரேபொருங்களப்பா
வள்ளல்முன்சென்றுயிந்த வார்த்தையைதெரிந்துவாரேன்
சள்ளேகள்செய்திடாமல் சற்றுநேரம்பொருங்கள்.

வசனம்.

ஆ வீரசூரமல்லரே யுங்கள்மனமென்னகல்லா யிப்படியுமுண்டா நான் இவ்வளவுசொல்லியும் கேளாமல் கோபித்துக்கொள்ளுகின்றீர்களே வேண்டாம்பொருங்கள் நான்போய் சோக்கவே யாதொருசங்கதிகளெல்லாம் அரிந்துவருகிறேன் நீங்கள் சள்ளைசெய்யாமல்யிருங்கள் மல்லரே.

வீரமல்லர்சொல்-விருத்தம்.

பொருப்பதுஞாயமல்ல பூங்குழலாசேயிங்கு
யிருப்பதுயரிந்தாரானல் யெங்கள்மேல்கோபங்கொண்டு
நெருப்புபோலேவிசிரி நெடியவாள்கெதைகையேந்தி
குரிப்பதுபார்த்துக்கொல்வார் கொடுமைக்கென்செய்வோமம்மா,

வசனம்.

ஆ யெங்கள் கற்புடையதாயே நாங்களென்ன செய்வோம் யெங்கள் பேரில் நீங்கள் கோபித்துக்கொண்டால் யெஜமான் உத்திரவை மீரி நடக்கக் கூடாதேயல்லது யிங்கு நாங்கள் யிருப்பது தெரிந்தால் யெங்கள் தலைபோய் விடுமேயிதுக்கு பயப்படலாமா அல்லது உனக்கு பயப்படலாமாஇந்தகொடுமைக்கிநாங்கள் யென்னசெய்யலாம்தாயே.

லீலாவதி-சொல்-கண்ணிகள்-இ-ம்-உசேனி-ரூபகம்.

மனவுசொல்லிவரமட்டுமேமனம்பொருப்பீரென்றைக்கும் நீங்கள்
வினவும்படியேயுலகினிலேவளர்ந்தேயிருப்பீர் மல்லரே

ஐரெண்டுதிங்களாககசுமந்தஅங்கம்வேகுதே வளத்தெடுத்த
கைரெண்டுஞ்சோர்ந்திடவுடலிதோகளைத்துபோகுதே மல்லரே

பெத்தமகனைகொல்லவென்றுங்களைபிரியமாய்படிக்குள் வரவழைத்த
சித்தமதைகண்டேவருகுறேன்சீக்கிரம்ஞெடிக்குள் மல்லரே

கதிர்மதியுள்ளகாலமட்டுங்கீர்த்தியாகுமே மன்னவருக்கு
சதிர்பெருகுஞ்செங்கோலும்பெரியதனமும்போகுமே மல்லரே

ஆபத்திலொருவன்ரகாற்பத்நேகபுண்ணியம் என்மகன்பரி
தாபத்தைபார்த்தினியருள்தயசெய்வதேகெண்ணியம் மல்லரே

செழித்திடுங்கலவையில்மேவுந்திருகரிவரதன் யென்றைக்கும்நம்மை
பழித்திடயிடமாகுமேயிதைபிரர்ப்பிரென்றுரைத்தன் மல்லரே

வசனம்.

அகோதெப்படி யென்றால் இரணிய சூரனானவன் தாம்தாமெ ன மேளதாள சங்கீதங்கள் முழங்கத்தக்கதாக அன்னூராயிரங்கோ டிமந்திரிமார்கள் புடை சூழதேவர் முனிவர்யாவரும்வணங்கிப்போற் றவும் கெந்தருவரத்தின சிம்மாதனத்தின்மேல் கொலுவலங்காரனாக வருகின்றவிதங்காண்க.

தரு-இ-ம்-காம்ரஸ்-ஆதி-சாபுதாளம்.

வீரனிரணியசூரதிதேர்வந்தான் கண
விண்ணவர்மண்ணவர்துதிப்பண்ணவர்க்கெண்ணும்நல்நிதி (வீர)
பார்மறைமுனைவோர்களனுதினந்திரமெர்டுபதஞ்சாருங்கொலுவினில்
மாணிக்கமகுடமரகதபுஜபதக்கமும்மதிக்திருணதயமென்றெதிர்பேச
காணிக்கைகொண்டிருபுறங்ககனர்முனிவர்சித்தர்
கர்த்தனெனசுத்தமொடுமெத்தலங்களும்புகழும் (வீரணிரணிய)
பேரிகைபூரிகைபெத்தேசுமத்தளதாளங்கள்
பாங்காய்நாகசுரம்டவுல்பெருவாத்தியம்
காரிகையெனுங்கணிகைகன்னியர்நட்டமிடவுங்
கரதலதாய்பூதலமேலாதரவதாகியசீர் (வீரணிரணிய)
அண்டர்கள்முனிவர்கள்கைகொண்டுமேபணிந்திடவும்
விண்டிடதபங்கள்செய்ப்ரசண்டயோகன்
கண்டகனெனுங்கலவைநரிவரதனென்போனை
செண்டுபோலகைகொண்டிடலேகூண்டுவிரலாலாட்டிடும் (வீர)

இரணியன்-போற்றி-விருத்தம்-இ-ம்-காம்ஸ்,

கதிர்மதிசூழுகின்றகாசினிமுழுதினிற்கும்
பதிகருந்தெய்வமென்றேபணிந்திடவலுவைபெற்றேன்
சதிர்பெருமென்றுசெங்கோல்தழைத்துமேசெழிக்குமேவாங்க
துதிபெருநிதியென்பாதம்துணைபாகவேண்டுந்தானே.

முதல்மந்திரி-போற்றி-விருத்தம்

வெற்றியில்மிகுந்தவீரம்விஜயசங்கராமசூரம்
பெற்றுமேமன்மையில்மிகுந்தப்ரபலனேபுவியீரேழும்
முற்றிலும்புகழும்வேதமுதல்வனாய்நின்றயெங்கள்
கற்றிபமாய்விளங்குங்கனகனேபோற்றிபோற்றி

30

இரண்டாம்-மந்திரிபோற்றி-விருத்தம்.

கருதுமிவ்வுலகேழுங்காதலோடரசளிக்கும்
நிருதர்களரசேயுன்னிணையடிபோற்றிபோற்றி.
சுருதியின்மறையின்றோன்றி துலங்கிடுமெங்கள்தேவ
யிரணியேஸ்வரனேயுன்றன்பிணையடிபோற்றி

சேர்வை-போற்றி-விருத்தம்.

விண்ணவர்முனிவர்சித்தர்வேதமாமறையோர்முத்தர்
மண்ணுள்ளவரூனவர்நித்தியம்வந்தடிதொழுதும்போற்ற
வண்ணமோடிலங்கையாளும்வஜ்ஜிரமணியேபோற்றி.
இன்னமாயுனதுபாதம் சேவடிபோற்றிபோற்றி.



தேசவிசாரணை.

இ-ன்-பரவுதிரைகடல்சூழுமுலகில்வாழனவரும்பரிந்திங்குவந்தார்களா
மு-ம்-படிமுழுதுங்கிடுகிடெனநடுங்கிடயிங்குப்ராத்தித்துநிற்குதையா
இ-ள-இரவுபகலெந்தனையேதெய்வமென்றெல்லாரும்யேற்றியேவருகுறார்
உ-ம-என்னோமுன்னுடையபொன்னடியைசிரமீதிலேற்றியேவருகின்றார்கள்
இ-ன்-கரவுடையமாயனைதுதிக்கின்றமைந்தனைக்கண்டித்துவந்தார்களா
மு-ம்-கனகனேயினமுமநின்விபரமதுதெரியவில்லைகாணுமெனச்சொல்லுவோம்
இ-ன்விரவில்சென்றேடியதின்விபரமத்தையினறுதன்றுவிண்டுவந்திடசெய்குவீர்
உ-ம்வேண்டுந்துயில்லையோயார்தாண்டில்வருவார்வீரர்வேந்தரேமன்மொருங்கள்

இரணியன்-சொல்விருத்தம்.

விந்தைசேர்மந்திரிமாரேவிளம்புவேனென்றுகேளீர்
நிந்தைசெய்மாயன்தன்னைநேர்படத்துதிக்குமெந்தன்
மைந்தனைமல்லர்கையில்மடித்திடவனுப்பினேனே
அந்தசேதியைநன்றாகஅறிந்துவந்தீர்களாசொல்.

வசனம்.

கேளுங்கள் மந்திரிமார்களே நம்துபகையரியாகிய மாயனைது திக்கின்ற துன்மார்க்கனென்னும் பிரகலாதனை மல்லர்கையில்கொல்ல அனுப்பினேனே அந்தசங்கதி இன்னம் ஒன்றுந்தெரியவில்லையே அதையறிந்தீர்களாசொல்லுங்கள் என் அருமைமந்திரிமார்களே.

முதல்-மந்திரிசொல்-விருத்தம்.

சொல்லுவோம்கேளுமையா சூரர்தன்பதியேயிப்போ
பல்லயஞ்சூலம்வேல்வாள் பலவிதவாயுதத்தால்
கொல்லுவோமென்றுமல்லர் கூறினதறிவோமல்லால்
வல்லவர்யாதுவல்லாமல் மற்றொன்றுமறியோமையா.

வசனம்.

கேளும் எங்கள் கனகதுரையே வீரசூரமல்லரானவர் எவ்விதத்திலாவது எங்கள் ஆயுதங்களால் அவனுடைய பிராணனைவாங்கிவிட்டு வருவமேயல்லாமல் உயிருடனே அவனைவிடுகிறதில்லையென்றுசொன்னவார்த்தையைமாத்திரம் கேழ்விபட்டமேயல்லது வேறொருசங்கதியும் அறியவில்லை எங்களாண்டவனே.

இரணியன்சொல்-விருத்தம்.

ஐயமில்லாமல்நீதி அறிந்துரைசெய்யுமந்திரி
மெய்யவேநீயோசித்துப்பார்பாலகன்பிழைத்திட்டானோ
மையவேநுருக்கும்போதென்நாமமந்திரத்தைச்சொல்லி
வையகம்புகழ்வதாக வசுரர்பின்வருகுவர்னோ.

வசனம்.

கேளும்மந்திரி உங்களுக்கு திரிகாலத்தின்செய்கைகள் தெரியுமல்லவா ஆகலால் நீங்கள் இதையோசித்துப்பாருங்கள் பிரகலாதன் இப்போது இறந்துயிருப்பானோ அல்லது மல்லர்கள் கோபத்துடனே கெற்ஜிக்கின்றபோது பயந்துயென்னுடைய நாமமந்திரத்தைதுதித்து பஜித்தானேயாமாகில் மல்லர்கள் சந்தோஷப்பட்டு இனிசேயனைகா

மல்லவரும் இரணியேஸ்வரர்முன் கொண்டாடிக்கொண்டு அழைத்து போகலாமென்று வருகிறார்களோ அதையறிந்து எனக்குத்தெரியசா ற்றுங்கள் ஓய்மந்திரிகளே.

2-வது-மந்திரிசொல்-விருத்தம்.

சாற்றுகின்றேன்கேளுங்கள் தயித்தியமணிவிளக்கே
கோத்திரம்விளங்கவந்த குழந்தையுந்தாயுமாக
பாத்திரச்சபைக்கிமுன்னே புரிவுடன்வருவதாகத்
தோத்திடப்படுதெனக்குத்துணிந்தொன்றெப்படிஞன்சொல்வேன்

வசனம்.

கேளும் சுவாமிதங்கள் குமாரன் பிரந்தானென்றும்அல்லதுபிரா ணனுடனேயிருக்குறுனென்றுஞ் சொல்வதற்கு யெனக்குமுன் பின் ஞென்றுந்தோன்றவில்லையே நானென்னசொல்வேன் இப்பதானதடா லென்று கண்மூடினது அதைதிறப்பதற்கு முன்னமே ஒன்றுதோன் றினது அதுயென்னவெனில் நமது குழந்தையுந்தாயுமாக நமதுசபா கொலுமுகப்பில் உலாவுகிறதுபோல் தோற்றப்பட்டது அதைநான் யோசித்து என்னவென்றுசொல்லுவேன் அய்யனே.

இரணியன்சொல்-விருத்தம்.

சொல்லுவதென்னுமந்திரிசுதனப்ரகலாதனைத்தான்
கொல்லுவோமென்றுமல்லர்கூறியேயழைக்கும்போதே
அல்லவிதென்னவென்று அகத்தியந்துதிப்பாரென்னை
மல்லரிங்கோடிவந்து வஜனிக்கபோறார்பாரீர்.

வசனம்.

ஓய்மந்திரிகளே பிரகலாதனை யெப்படியுங்கெற்சனைசெய்து தான் பிடிப்பார்கள் அப்போது அவனுக்குபுத்தி தனக்குத்தானேதெ ரிந்து என்னுமதிமோசம்போயினேமென்றுநினைந்து என்னுடையதிரு நாமத்தை தியானிக்கத்தான்போறுன் அதையறிந்த மல்லர்கள்யின்னம் அரைநொடியில்வந்து சொல்லப்போறுர்கள் பாருங்கள் இந்தயோச னை வோய்மந்திரிமார்களே.

முதல்-மந்திரிசொல்-விருத்தம்.

ஒருவரையிதற்குசாக்ஷி ஊணியேன்கேழ்க்கவேண்டும்
பெருவரைபுயம்படைத்த புகழிரணியதேவாவுன்

சிருவ்ளைக்குலைகள்செய்யத் திரண்டுருண்டோடுமல்லர்
வருவர்காமுைழடிக்குள்ளாக வெளிச்சமதாகத்தானே.

வசனம்.

பெருமலைபோன்ற புயங்களையுடைய பரபுவே இதற்கு வொருவ ரைசாகூழ்கேழ்க்கவேண்டுவதில்லையேன் தங்கள்குமாரனைமல்லர்கள் கொலைசெய்யவேண்டுமென்றுதிரண்டுருண்டுபோனவர்கள் மிரண்டு வோடி வரப்போருர்கன் அந்த வெளிச்சம்பளிச்சென்று அரைநொ டிக்குள் தெரியதானபோகுது பாருந்துரையே,

இரணியன்சொல்-விருத்தம்.

ஆமிதுமெய்தான்மெய்தான் அமைச்சரேசொல்லேன்கேளீர்
நேமமாய்நமதுமுன்னே நின்றிடும்பேரையெல்லாம்
நாமிஷுஞ்செய்திடாமல் சபாமண்டபத்தின்முன்னே
நாமமேதுதிக்கச்செய்வீர் நான்மனங்களிக்கத்தானே.

வசனம்.

ஆஆ வாருங்கள் மந்திரிமார்களே அப்படியேபார்ப்போம் நம்மு டைய சபாமண்டபத்தில் வந்திருக்கின்றபேரையெல்லாம் அந்தந்த அந்தஸ் பிரகாரம்நிருத்தி என்னுடைய பிரதாபங்களைக் கொண்டா ரச்சொல்லுங்கள் என்மனம்சந்தோஷிக்கும்படி மந்திரிகளே.

லீலாவதி-மனுவுக்குத்-தானும்-தன்மகனும்-வருகிற
பொதுவிருத்தம்-இ-ம்-முகாரி

கொல்லெனவேமல்லர்கையில் சேயன்தன்னைக்
கொடுத்திடும்வாரதையறிந்தக் கோதையாளும்
அல்லல்படும்புலியின்வாய்பட்டமான்போல்
அலரியழுதிடுங்கண்ணீர்ஆராய்பாய
யெல்லையீரேழாளு மிரணியனபாதத்தில்
யிளமயிலைப்போல் விழுந்துயெழுந்துவாடி
வல்லவரேயிதுஉமக்குவழகோவென்று
வசனிப்பாளிஜமான்முன் விசனிப்பாளே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக லீலாவதியம்மனவள் தன்குமாரனுன் பிர கலாதனனை மல்லர்கையில்கொல்லக்கூடுத்தக் காரணத்தைகண்டுவரு கிறேனென்று வீரசூரமல்லரிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தாயும்

மகனும் புலியின்வாயிலகப்பட்ட மான்போல் அழுதகண்ணீர் ஆறு போலே பெருக்கத்தக்கதாக கோவென்றலரி இரணியேஸ்வரருடைய பாதத்திலே யிளமயிலைப்போல் விழுந்தெழுந்து நாயகரைக் கண்டு சொல்லுகின்றவிதங்காண்க.

லீலாவதிசொல்-கொச்சகம்.

தவமிருந்துபெற்றெடுத்த தனயனைநீர்சினமுடனே
அவமதிசெய்மல்லரிட ஆக்கினைக்குள்விட்டீரே
பவமிதுவென்றறியீரோ பார்முழுதாள்பாக்கியனே
கவனமிகவைத்தெனது கண்மணியைக்காப்பீரே,

வசனம்,

ஆ எனது பிராணநாயகரே தவசிரேஷ்ட புத்திரனாகிய நமது குழந்தையை அவமதிப்பாய் நினைத்து கொடியபாவிகளாகிய மல்லர்கை யிலகொடுக்க உமக்கு எப்படிமனம் வந்ததோ ஐயையோ சிசுவதையா வமாச்சுதே இதைகவனமாகயோசித்து மகனை காப்பாற்றும் அரசே.

லீலாவதிசொல்-கண்ணிகள்-இ-ம்-மூகாரி-அடதாளம்,

மன்னவா இதுவென்ன வன்னீதமோபெத்த
மகனைகொல்வாருண்டோயென்சாமி — யவன்
யென்னகுறைசெய்தானென்றீனர்கையில்பாலனை
யீந்திர்பொருக்குமோசொல்பூமி — பொல்லா
குலைசெய்வதுதகாதேகொத்தவர்களுக்கொன்றும்
கொடுமைநேரிடும்பிராணநாதா — இன்னம்
முலைப்பால்வாசனைமாறாமுளைசெய்திடுங்குற்றத்தை
முனிந்துபொருக்கவும்போகாதா — இந்த
தரணியையொருகுடைதனிலாளுமரசேயென்
தனையன்மீதில்கோபமேன்தணியும் — யெங்கும்
நிரணியமுடநிந்தநிலத்தில்வாழுயிர்களும்
நிதமுந்தன்பதம்தைபணியும் — யென்றும்
பொல்லாதபழியிதுபுவியுள்ளவரையினும்
பொரிந்திடுமேயுமக்குமன்னா — இது
வல்லாண்மையோபெத்த மகனைகொல்வதினாலே
வரும்பலன்களதினாலென்னா — யீனம்
சொல்வாருலகமெல்லாம்சுதனைக்கொன்றவனென்றே
சுலபமாய்நினைப்பாரென்துரையே — பெத்த

செல்வனையழைத்திங்குசெப்புநல்மொழிகளை
திரமாயன்ராவானுந்தன்முறையே நல்ல
பலவகைகளும்பாரும்பதவிகளும்நமது
பாலகனுக்குத்தெரியாதே செழுங்
கலவைநகர்வாழ்கரிவரலன்செய்தோஅதை
கண்டறியநம்மாலாகாதே யெந்தன்
(மன்னவா இதுவென்று)

இரணியன்சொல்-விருத்தம்-இ-ம்-ராட்டை.

கடினமொடுநிருதர்கள் காவலர்கள்மற்றக்
கனவிபுதர்கள்முனிவர்களுங்கைகூப்பி
யடிபணியுமெனதுதிருகோலுமுகப்பு
லச்சமென்பதுன்மனதிலனுதவையாமல்
தொடியணியுங்கரங்களதை நீட்டிக்காட்டித்
துணிந்துவருந்தணிகையுர்மேல்துரிதமாக
விடிதிதனைவிட்டொருபெண்ணீதானிங்கு
வருவதுணக்கிதுதகுமோவண்மையாக.

வசனம்,

ஆஆ நன்றாயிருக்கின்றது பெண்ணேலீலாவதி கடினந்றபந்தங்களுடனே தேவர்களும் முனிவர்களும் இராக்ஷதர்களும் இன்னமநேகமான பேர்களும் நடுநடுவென நடுநடுங்கி என்பாதாரவிந்தமேகெதியென்று தொழுதுவணங்கும் திவ்வியமங்கள திருமுகசபாவல்கரதசெங்கோலுமுகப்பில நீயானவளென்று கொஞ்சமாகிலும் அச்சமென்பதைவிட்டு தேவதாசிகளைப்போலே துணிந்து அரமனையைவிட்டு வந்தாயல்லவா இது உனக்குத்தகுமோசொல்பெண்ணே லீலாவதி.

இரணியன்சொல்-தரு-இ-ம்-தற்பார்-அட்தாளசாபு,

தருமா தனித்தொருத்தினிசபைதனிலே நீ வர
தாட்டியுடனிந்நாட்டில்வளர்பெண்கள்
மேட்டியாயினுமாண்கூட்டமதில்வர (தருமா)

வெகுமோடிகள்செய்தாசி
வேசிகள்போலேகைவீசி
வின்வியுனதிடதுன்யன்தனக்குநல்
மனவுதருமெண்ஜெனமுன்னேனீவா (தருமா)

தவமதில்வந்ததனயனையிந்த
சதிசெய்துகொல்லவும்மதியினைந்ததுவேன்
கவனம்வைத்தினியாகிலுநகரிதனில்
காணுமதினவிபரந்தோணுமென்னுப்ராண (நாதா)

பால்முலைமறவாபாலனை இரவா
பதைப்போடுவதைப்பதும்பழிவிடாதுனையே
நால்மறைநூலும்மயாதனைதேயாதும்
நலமரியாயோகனதலம்புகழுமென்ப்ராண (நாதா)

அலைகடல்சூழும்அவனியில்வாழும்
அருமறைகளும்பணியிறைபுரவரசே
பலமிகுகலவைபதியில்வாழ்வரதன்
பரிந்திதைபரிந்தால்பயமொழிந்திடும்ப்ராண (நாதா)

இரணியன்சொல்-விருத்தம்,

காணவந்தேனென்றென்முன்கண்ணீர்விட்டழுதுநின்ற
வீணியுன்மகன்குற்றத்தைவிபரமாயறிந்திடாமல்
சேணிலவாழ்மன்னர்சூழும் திகழ்சபைதனில்நீவந்த
ஆணவமென்னசொல்வேணப்புரநடவாபெண்ணே,

வசனம்.

கேளும்பெண்ணே லீலாவதி தேவர் முனிவர்சூழுங் கொலுவின் முன்பாக நீவந்து பஜாரியைப்போல அழுதகண்ணீருஞ்சிந்தையுமாக நிற்பது யுனக்குயோக்கியதையாய் இருக்கின்றதல்லவா உன்மகன்செய்தகுற்றத்தை நீ நன்றாககண்டறிந்தவளானால் இவ்வளவுதூரத்திற்கு வரமாட்டாய் ஆயினும் நீசெய்தகுற்றத்தை மன்னித்துவிட்டேன் நீ அந்தபுரம்போய் சேரும்பெண்ணே லீலாவதி,

லீலாவதிசொல்-விருத்தம்.

பெருமைபெருமென்ப்ராணநாயகனே
யொருமனுவுபுகலுவேன்கேள்
அருமைமகன்தனக்கிதற்குள்நலமான
புத்தியெல்லாமறிந்திட்டானே

வருணமயில்லாமலேவளர்க்குங்கிளிதன்வார்த்தை
வஜனித்ததென்றதனைவதைக்கலாமோ
பெருமையுடனினிசொன்னப்படிபடிப்பான்
போக்குவீர்கோபமதைநீக்குவீரே,

வசனம்.

கேளும் என்அருமைபிராணநாதனே அடியாள்ஒருவிண்ணப்பஞ் சொல்லுகின்றேன் கேளுங்கள் அருமையாகபெற்றெடுத்தகுழந்தைக்கு பெரியவிசேஷம் இதற்குள்ளே வந்துவிடுமா மேலும்கிளிகளுடையவார்த்தையைக்கேட்டு கோபித்து அதைக்கொல்ல எத்தனிப்பதுவு உலகத்திலுண்டாஇல்லையே அதைப்போல் தாங்கள்யோசித்து நமதுமகன் பேரில் கோபத்தைநீக்கும் என்கனகதுரையே.

இரணியன்சொல்-விருத்தம்,

நீக்குமென்றெனையுரைத்தநேரிழைபாளேகேளாய்
தாக்கியேகோம்பாலெந்தன் தம்பிதன்னுடலைக்கீறி
தூக்கியேகொன்றஅந்த துஷ்டனைத்துதிக்கும்பொல்லாப்
போக்கிரிப்பயலைவக்கப் போகாதுபுவிமேல்பெண்ணே,

வசனம்.

கேளும்பெண்ணே லீலாவதி என்னுடைய கோபத்தைநீக்கிவிடுமென்று சொன்னாயல்லவா அதை எப்படி நீக்கிவிடலாம் உன்மைத்துனனாகிய என்தம்பியை பன்றியாகஅவதாரஞ்செய்து கொன்றவனைஎன்முன் துதிக்கின்றபோக்கிரியை நாம்வைப்பது ஞாயமல்லவேபெண்ணே.

லீலாவதிசொல்-விருத்தம்,

பெரிகியகடல்சூழ்கின்றப் புவிதனையொருகுடைக்கீழ்
மருவியயரசளிக்கும் மன்னவாமனம்பொருத்துச்
சிறுவனுக்கதிகமான தெளிவுளமதிகள்தன்னை
பரிவுடனுரைத்தீரானால் பணபுடன்படித்துக்கொள்வான்.

வசனம்.

சப்தசமுத்திரஞ்சூழ்ந்த சகல உலகத்தையும் ஒருதவளச்சக்கர குடைநிழலிலே அரசளிக்கும் என் பிராணநாயகரே தாங்கள் இதை மன்னித்து நமது குழந்தையாகிய பிரகலாதனை தங்கள்நேராகவே

ண்டிய புத்திமதிகளைச்சொல்லி வைத்தீரேயாமாகில் உமதுமனம்பிஷ்டப்படி படித்துக்கொள்ளுகிறான்பாரும் சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்;

பன்னிமேயென்முன்னுரைக்கும்பாலவயாளே
பகருகிறேன்கேள்நமதுபகைவனை
அன்னிதமாயவனைத்துதித்திடலாகாதென்
றருள்சண்டாமார்க்கனும்அனேகஞ்சொன்னான்
உன்னிதமாகியநமதுமந்திரிமார்கள்
உரைத்தார்கள்வேணமட்டுமுடனேயானும்
சொன்னேனென்மொழிபதனைதடுத்துவிட்டச்
சுதனைகுலைசெய்திடயான்துணிந்தேன்பெண்ணே;

வசனம்-

கேளும்பெண்ணே லீலாவதி என்முன்வந்து உன்குமாரனுக்காக வேண்டிய ஞாயங்களெல்லாம் சொல்லவந்தாயே நமக்குஜென்மபகையாளியை இல்லையென்றுசொல்லுகிறான் அதை நினைக்கவேண்டாமென்று சண்டமார்க்கர் அனேகமாகச்சொன்னார் அதையும்விட்டநமது மந்திரிமார்களும் சொன்னார்கள்நானும் அனேகமாகவுஞ்சொன்னேன்இதை எல்லாந்தடுத்துவிட்டானல்லவா அப்படிப்பட்டவர்க்கொத்தசிறுவனை நாம்வைத்ததேயாமானால் நம்முகுலத்துக்கு யீனம்நேரிடுமென்று குலைசெய்யத்துணிந்தேன் பெண்ணே.

லீலாவதிசொல்-விருத்தம்,

துங்கரத்தினம்போலெங்குந்துலங்குமென்மகனைவீரடா
பொங்கமாயானுரைக்கும்புத்தியைதடுத்திடாமல்
சங்கையில்லாமலுந்தன் தந்தைசொற்படியேநல்ல
இங்கிதவேதமெல்லாமினிபடித்திடுவாயப்பா,

வசனம்,

இரத்தினம்போல் என்வயத்தில் வந்துதித்தஎன் அருமைமகனே என்னரிகில்வாடா என் கண்மணியே இனியான்சொல்லுகின்றமொழியைத்தடுக்காமல் உன்தந்தையினுடைய சொற்படி படித்துக்கொள்ளடாமகனே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

பரிவுடனென்னையளித்த பன்மொழிதாயேகேளும்
திரைகடல்சூழ்மிந்த ஜெகமுழுதையுங்காக்கின்ற
நருமலரணியும்பத்ம நாபர்தன்னடியைவிட்டு
விருதனைத்துதிக்கச்சொன்னா லெந்தனால்முடியாதம்மா,

வசனம்,

கேளும் அம்மணி தாயே ஜெகத்ரக்ஷகனாகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய திருவடிகளைவிட்டு இந்தவிருகுல இராக்ஷதனைதெய்வமென்றுசொல்வதற்கு அடியேனால்முடியாது அம்மணி,

இரணியன்சொல்-விருத்தம்.

அருவலையேயிவனமக்கு ஆதாரப்பிள்ளையானால்
ஒருபொழுதிலேயேயிந்த சத்ராதித்தனஞ்செய்வானா
பெருகியநமதுவீராப்ர தாபத்தைப்பழிக்கப்போல்லா
துருபுத்திரினைப்போன்றன்னை சுதனென்றுயெண்ணலாமோ.

வசனம்.

கேளும்பெண்ணே லீலாவதி இந்தப்பயலானவன் சீர்பட்டுவாழ்பவனானால் என்னிடத்திலேயே இப்படிப்பட்ட துர்விஷயம்பேசுவானா பேசமாட்டான் அப்படிப்பட்ட பாதகனை சுதனென்றுயெண்ணவேண்டாம் பெண்ணே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

யெண்ணவும்வேண்டாமைய்யாவெவர்க்கெவர்சதமுமில்லை
புண்ணியபாவமென்னும்பொருளிரண்டையுமுணர்ந்து
கண்ணிமைபோல்காக்கின்றநாத்தனாருமொன்றைக்கும்
உண்மையாயிருக்கும்மாலிலெவருவர்தன்துணைநமக்கேன்.

வசனம்.

கேளுமென் தந்தையே யென்னை நம்பவேண்டாமென்று சொன்னீரே மெத்தவும் நல்லவார்த்தை தான் பூலோகத்திலே யாருக்குயார்சதம் வென்றுமில்லை கண்ணிமைபோல பாலையுங்காத்து ரக்ஷிக்கின்றவனானுடைய தம்வன்று பூரணமாக இருக்குமானால் ஒருவருடைய தயதாக்ஷண்ணியம் நமக்கேன் அம்மணி நீ வியாகூலப்படவேண்டாம்.

இரணியன்சொல்-விருத்தம்.

உன்னியேமாயன்தன்னையுள்மதிலுரிதியாகப்
பன்னியேபிணத்துகின்றபயலுக்குநீயநேகம்
சொன்னதினாலகேழ்ப்பானோதோகையேநட்வாயப்பால்
சின்னபின்னங்களாகசிருவனைவதைசெய்வேனே.

வசனம்.

கேளும் பெண்ணே லீலாவதி கொஞ்சமாகிலும் பயமில்லாமல் யென் யெதிரில் அவன் அந்தமாயனை துதி செய்கின்றதை உன்மனமா ரகேட்டாயல்லவா அப்பேர்கொற்ற துற்சனபயலுக்கு நீ அநேகமாக சொன்னபோதிலும் உன்புத்தியை அவன் கேழ்ப்பதில்லை நீ அரமனை க்கேகு அவனை சின்னபின்னமாகவதை செய்யும்படி மல்லர்வசம்படி த்திவிடுகுறேன் பெண்ணே.

லீலாவதிசொல்-விருத்தம்,

யேதடாமகனேயுன்னை யெவர்களிப்படிகெடுத்தார்
மேதினிகளிலெங்கள்பேர் மேன்மையாய்சொல்வாயென்று
காதலோடகமகிழ்ந்துக் களிவுடன்பூரித்தோமே
தீதுகாண்பதற்குதானோ ஜென்மித்தாயென்வயத்தில்

வசனம்.

ஆ யென் அருமைமகனே யெங்களுடைய பேரை விர்த்திசெய் வாயென்று நாங்கள் ரொம்பவும் பூரித்திருந்தோமே உன் புத்தியை யெவர்களிப்படி கெடுத்து விட்டார்களோ இப்படிப்பட்ட தீதுகளை, காண்பதற்கு தானோ யென் வயத்தில் வந்து பிறந்தாயடா மகனே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

தேங்கிடவேண்டாமெந்தன் தாயேகேளொருவிண்ணப்பம்
ஈங்குசெய்யரக்கன்றன்னை தெய்வமென்றுரைப்பாருண்டோ
சோங்கியேபுலிபசித்தால் சொற்பபுல்பெரசிக்குமோதான்
பாங்குடகரிபத்தந்த படிப்பவர்க்கொருதீங்கில்லை.

வசனம்.

கேளுந் தாயே நீயாதொன்றுக்கும் வியாகூலப்படவேண்டாம் லோகரக்ஷகனாகியஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய அருளிருக்கின் றபோது அரக்கனை தெய்வமென்பது சேருமோ பார்ப்போமச்சுதே புலி பசித்தபோதிலும் புல்லை புசிக்குமா அம்மணி.

லீலாவதிசொல்-தரு-காபி-ஏகதாளம்.

இன்னமென்னசொல்வனடா
யென்மகனேபொன்மணியே
உன்னியுந்தன்தந்தைபெயர்
யோதிவருவாயென்கண்ணே (இன்ன)

பிரக்லாதனன்சொல்-தரு,

அன்னையேகேளெங்குமுதல்
ஆகியதாயாகுமென்னும்
பன்னகசயனநிரு
பாதமேயாதரவம்மா (அன்னை)

லீலாவதிசொல்-தரு.

ஆதரவென்றேயிரேழு
அகிலமுழுதுந்தொழுது
கோதரஉன்தந்தைபதங்
கோரிவருதேஎன்பாலா (இன்ன)

பிரகலாதனன்சொல்-தரு.

சாதனமென்றேயதனை
சற்றும்நினையாதேதாயே
ஆதவனெதிர்பனிபோல்
ஆகியவர்ழ்விதவம்மா (அன்னை)

லீலாவதிசொல்-தரு.

அருமைமகனேயென்கண்ணே
அவனிமீதினிலுமெண்ணே
பெருமையுடன்வாழ்வாயென்றே
பூரித்திருந்தேனேபாலா (இன்ன)

பிரகலாதனன்சொல்-தரு.

தருமந்தலைகாற்குமென்று
சாற்றும்யோர்மொழிதன்
திறமட்டியேகட்டப்போர்க்
கேதுகுறைவும்வாராதே (அன்னை)



லீலாவதிசொல்-தரு.

வல்லவனென்றேகலவை
வரதனென்பாலுந்தந்தை
கொல்லதுணிவாரேஇந்த
கொடுமைக்கினுனென்செய்வேண்டா (இன்ன)

பிரகலாதனன்சொல்-தரு.

யெல்லையெங்கும்புகழ்கலவை
யெழில்கரிவரதரிட
கல்வியைபடிப்பவர்க்கு
கனசுகவாழ்வும்பெருகும் (அன்னே)

இரணியன்சொல்-விருத்தம்

பேதையேயென்னடியின்னமு
நவநோடேபிரியமாகியம்தியதனை
யோதினிவருகுரமொழிதனைகேட்டவ
னுகந்துவாழ்வதுனிஜமானுல்
திதுசெய்மாயனைதெய்வமென்றெனமுன்
செப்பிடுவானேசொல்துணிந்து
சோதிவாளுக்கிரையாக்குவேன்
நொடிக்குள்தோகையேபாரிதோதுரையாய்.

வசனம்.

ஆ-ஆ யிதுயென்ன வாச்சரியம் பெண்ணே லீலாவதி இந்தப்பய லுக்கு நீயித்தனை ஆவலாக புத்திமதிகளை சொல்லியும் கேழ்க்கவி ல்லை பார்த்தியா அவனுடைய கெர்வம்யென்னவென்று சொலவேன் அவனுக்கு நல்ல புத்தியுமுள்ளவனுனல் நமது சொல் அவன் செவிக் கேறும் போங்காலம் கேரிட்டபடியால் நமது சொல்லை மீரிநடக்கு ரான் இதோ இந்த வாளுக்கு யிரையாக்குரேன் பெண்ணே.

லீலாவதிசொல்-விருத்தம்.

பொருத்திடுங்கோபமெந்தன்புத்திரன்மீதிலிப்போ
வருத்தமீபட்டிடாமல்வண்மையாயினியோர்புத்தி
திருத்தமாயுரைப்போனுல்செல்வனப்படியேகேழ்ப்பான்
சரத்துசெய்திடவேவேண்டாம்தயவுசெய்திடுமென்சுவாமி

வசனம்.

கேளும் யென்பிராண நாயகரே அடியாள்பேரில் மன்னித்து கோபத்தை தணியச்செய்து நமது குமாரனுக்கு நல்ல புத்தி வரும்படி நீர் சந்தோஷமாக சொல்லீரேயாமாகில் உம்முடைய கிருபைபடி சொல்லுவானென்று யென் புத்திக்கு தோற்றப்படுகிறது ஆகலால் தாங்கள்தயவு செய்து நமது அருமை மகனை அரிகில் வரவழைத்து சொல்லும சுவாமி.

இரணியன்-சொல்-கந்தார்த்தம்-இ-ம்-மோகனம்.

அலைகடல்சூழுமீரேழ்புவியாவையுமடங்கிடச்செய்தொருகுடைக்கீழ்
நிலைபெறயானரசளிப்பதுங்காற்பதுமநின்மனதினிலறியாமல்
மலைநிகர்புயத்தோனுன்சிறுதந்தைதன்மார்கிளைபிளந்துமேகொம்பால்
குலைசெயுமாயனைதெய்வமென்றென்முன்கூறுவதிதுதக்காதெந்தன்
குமாரனேவாடா-மாயநமக்கு
சமரசயோடா
அமரரும்முனிவரும் ஆதித்தர்களும்தினம்
நமைதொழுதேத்தநீயேகலிந்திருப்பதையினி
நாடிபதமதைபாடியெனதடி
சூடிபுகழைகொண்டாடிவருமுத்து (குமா)

லீலாவதி-சொல்-கந்தார்த்தம்

பாலனையுன்னிடதந்தைதாநிப்போபகர்ந்திடுமொழிபிசகாமல்
ஜாலஞ்செய்யாமலேயோதிவாயுன்செங்கனிவாயமுதொழுக
வேலைசூழுலகினில்யாவருங்களிக்கவிரும்புசெய்நீதனரிலெபரல்லா
மாலினும்பேர்தனையேயினிமாந்திடுமனங்களிப்புரவருமெந்தன்
மைந்தனேவாரா-யுனதுதந்தை
சிந்தைநீதீரா
அந்தரிந்திரர்கந்தருவர்களும்
வந்துபணியுமுன்தந்தைப்பதாபத்தை
வருத்தமில்லாமலேகரித்திலனுதினம்
திருத்தமுடன்துதிபெருத்தபுவிமிசை (மைந்த)

பிரகலாதனன்சொல்-கந்தார்த்தம்.

தந்தையேதாயேகேள்யான்சாற்றுகின்றேனன்றாக
விந்தையதாய்கேகம்வியுரிந்துவுரைசெய்தாலும்

செந்திருமாலதன்பாதம்சிறப்புடனடியேனென்றுஞ்
சிந்தையில்தொழுவேனல்லால்ஜெகமதிலொருவர்பேரை

செப்பிடேனையா-யெவர்சொன்னாலும்

வொப்பிடேன்மெய்யா

யெப்புவியுங்காக்ககற்பகம்போலவளா
சற்பசயசயனனிருபொற்பதத்தைவிட்டு
தரையின்மிசையினியொருவரையுங்குறித்
துரையேன்மனம்துகரையேன்ஹரிஹரி (செப்பிடேனையா)





மூவர்தர்க்கம்-தரு-இ-ம்-காமபோதி.

இரணியன்சொல்-தரு.

இனியென்வார்த்தையை கெல்லிகனிவாயவன்பேர்சொல்லி
யெதிர்த்துப்பேசுவதென்னவென்குமரா

பிரகலாதனன்சொல்-தரு.

தனியாயுலகமெங்குமினியாட்கொள்ளும்வைகுந்த
சாக்ஷாத்பகவானென்றேதையித்யேஸ்வரா

லீலாவதிசொல்-தரு.

பெத்ததாய்தந்தையொடுகற்றவித்தைகளோநீ
பேசுவதழகோசொல்லென்மைந்தா

பிரகலாதனன்சொல்-தரு.

உற்றமொழியைபுலகத்தில்சொல்வதுமெத்த
கற்றவித்தைபிதாமோதரயாரே

இரணியன்சொல்-தரு.

அரிவில்லாமலேபின்றியுருவங்கொண்டவனென்று
அகிலபுவன்மெங்கும்படிபடுதே

பிரகலாதனன்சொல்-தரு.

தெரிவிப்பேன்கேள்பொல்லாதுற்சனர்தனைக்கொல்ல
செய்தவதாரமென்றறியீரோ

லீலாவதிசொல்-தரு,

மதியாமலிப்படியெதிர்வாதஞ்செய்வது
மைந்தனென்றுலகினிலெண்ணுவரோ

பிரகலாதனன்சொல்-தரு.

சதிசெய்யுமரக்கனைதெய்வமென்றுரைப்பது
தகுமோசொல்லெனைபெற்றதாயாரே

இரணியன்சொல்-தரு,

கரித்தில்லாமலிப்படிவெறித்தனமாய்பேசாதே
கண்டிப்பேனுனையெந்தன்கைவாளால்

பிரகலாதனன்சொல்-தரு.

பொருத்திதைபாராமல்வருத்தம்யேன்படுகுரீர்
புலைகுலைக்கஞ்சாவசுரேஸ்வரா

லீலாவதிசொல்-தரு.

எத்தனைசொன்னாலுமுன்சித்தமிதங்காமல்
யெதிரியைகெதியென்பதிதும்தியா

பிரகலாதனன்சொல்-தரு.

உத்தமியேயென்தாயேசத்தியமாய்சொல்வேன்கேள்
உலகிலரிவோமென்னும்மோர்பொருளே

இரணியன்சொல்-தரு.

தரைதனில்புகழ்கலவையின்கரிவாதனை
சதமெனும்பதம்தைசாதிப்பாயோ

பிரகலாதனன்சொல்-தரு.

வரம்ருள்கலவையில்கிரைபொருளொனுங்கரி
வரதர்செயலெப்படியோவரியேன்

லீலாவதிசொல்-தரு.

சரியல்லடா கலவைகரிவரதனென்பது
தனையாயுன்தந்தைதன் தாள்பணிவாய்

பிரகலாதனன்சொல்-தரு.

ஹரிஹரிகலவையின்கரிவரதர்பாதமே
யனுதினமரவேன்யான்தாயரே

இரணியன்சொல்-விருத்தம்.

மரவேனென்றெனவுரைத்த மதிப்பிலாசிறுவன்றன்னை
யுரமாகப்பிடித்துக்கட்டி யுடைவாள்தெண்டாயுதத்தால்
கரமாகமல்லரெல்லாங் கடுங்குலைகளத்திற்சென்று
சிரச்சேதஞ்செய்துவாரீர் சீக்கிரமாகயிப்போ.

வசனம்.

ஆ-ஆ வாருங்களடா குலவீரமல்லரே நீங்கள்யாவரும் இடைவிடாமல் உங்கள் ஆயுதங்களையெடுத்துக்கொண்டு இந்ததுன்மார்க்கனைப்பிடித்துக்கட்டிக்கொண்டு கொலைகளத்தில் இவன்கெர்வங்களையடக்கியொடுக்கி முடிக்கி சிரச்சேதஞ்செய்துவாருங்கள் வீரமல்லரே.

வீரமல்லர்சொல்-விருத்தம்,

தடையிலையினிமேலிந்த க்ஷணத்தினிற்சென்றுயெங்கள்
ளுடைவாள்தெண்டட்டிவேலா லுடல்தனைபத்திக்குத்தி
படையொடுபோர்களத்தில் பாலனைகொன்றுரத்த
அடையாளங்காட்டுகின்றோம் மன்ரநேரடிதனில்பாரையா.

வசனம்,

கேளும் எங்கள் குலதெய்வமாய் விளங்கிய கர்த்தீபமே இதோ பாருங்கள் இந்தசிறுவனை எங்கள் ஆயுதவகைகளினாலே சின்னபின்னஞ்செய்து சித்திரவதைபடுத்தி குலைகளத்தில் அவன்தங்களுடைய நாமதேயத்தை அபயம்அபயம்யென்றுசொன்னாலாச்சுது இல்லாவிடில் ஓர்வெட்டினால் இருதுண்டமாக்கி அடையாளம் உடிக்குகொண்டுவந்துகாட்டுகிறோம் பாரும்சுவாமி.

வீரமல்லர்சொல்-விருத்தம்.

மதங்கொண்டுயெதிர்த்துப்பேசும் மடப்பயலேகேளுன்னை
அதஞ்செய்துவரும்படிக்கி ட்டாண்டவரருள்கொடுத்தார்
கதையொன்றும்பேசிடாமல் கடிகினிலெழுந்திருந்து
வதைசெய்யுங்களத்திற்கிப்போ வருகுவாய்பிரியமாக,

வசனம்.

கேளும்ப்பா பிரகலாதனே கொஞ்சமாகிலும் பயமில்லாமல் தகப்பனுடனே எதிர்த்துப்பேசின உன்னைக்கொல்லும்படி கண்டிதமாய் உத்திரவுகொடுத்துவிட்டார் இனிமுன்போல் ஒருகதையும் சொல்லாமல் வதைசெய்யும்போர்களத்திற்கு வாரும்சிறுவா.

லீலாவதிசொல்-விருத்தம்.

செல்வமேயுந்தன்தந்தை செப்பிப்படியேமல்லர்
அல்லல்செய்கொலைகளத்துக்கழைத்துபோயுனைவாளாலே
கொல்லுவோமென்றுவந்து கொக்கரித்தெதிர்நிற்கின்றார்
தொல்வினையிதுவோயெந்தன் சுதனேயெப்படிவாழ்வேன்யான்,

வசனம்.

ஐயையோ என்செல்வமே உன்தந்தையானவர்கோபித்துகொலை வீரமல்லரிடத்தில் உன்னைகொல்லச்சொல்லி உத்திரவுகொடுத்துவிட்டார் இதோ அவர்கள் உனைக்கொலைபுரிய அழைக்கின்றார்களே உன்னைஅவர்கள்கையில் ஒப்பிவித்து எப்படிவாழ்வேனடா என்கண்ணே,

லீலாவதிசொல்-கண்ணிகள்-இ-ம்-வராளி-அடதாளம்.

மைந்தனேயுந்தனையிந்தமல்லர்கைதனில்கொடுத்து
வாழ்வனோதாழ்விலாமலிப்போது யினி
எந்தடவாகிலுமணிம்நொந்துடல்மடித்திடுவேன்
யேனிந்தஜென்மமிப்புவிமீது
வாதனைசெய்திடுவோமென்றுபாதகமல்லர்களுன்னை
வந்துபிடித்திழுக்கலாச்சே இந்த
தோதகம்விடுமோயிந்தபூதலமுள்ளமட்டுக்கும்
சொல்லுக்கிடமானகேலியாச்சே
வெத்தியில்மிகுந்தயெந்தன்புத்திராயுனைப்போலும்
கத்தினிக்காண்பேனோ கண்மணியே மல்லர்

பத்தியேயுந்தனைபோர்களத்திலேயென்னசெய்வாரோ
பாதகிமனமெப்படி துணிவேன்
பெத்தமகன்செய்தகுற்றமித்தரைமீதினிலே
பொருத்திடலாகாதோமன்னனிப்போ யிதோ
சத்தியமாகசொல்வேன்தயித்தியகுலமித்தோடு
நாசமுறுமென்பதென்னதப்போ
நயபயமெனுமிரண்டின்சுயமனதினாலறிந்து
நாட்டையாள்வதல்லவோகெம்பீரம் பொல்லா
துயரமும்வயரெரிவும்யருரச்செய்வதுவினை
சொந்தமாகுமேபார்பெரும்பாரம்
கன்னல்சூழ்கலவைகர்தன்னில்மேவியபுன்னித
கரிவரதனைதெய்வமென்றெண்ணி உன்
சென்னியிலவரடியைபன்னியேசூடிதினமும்
செய்திடுபஜனைமனம்கண்ணி (பைந்த)

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

இன்னமும்மனங்கலங்கி யழுதிடவேண்டாமம்மா
பன்னகசயனனென்னும் பங்கஜநயனன்பாதம்
சென்னியிலிருக்கும்போது தீதொன்றுங்கட்டாதெந்தன்
அன்னையேயரமனைக்கி யன்புடனேகுவாயே.

வசனம்.

கேளும் என்னைப்பெற்றதாயே நீயேன் வியாகூலப்படுகிறாய் வேண்டாம் சேஷசயனராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய பொற்பாதமிரண்டும் அடியேன்சிரசில் சூடிக்கொண்டிருக்கிற படியால் அடியேனுக்கு யாதொருகுற்றமும் நேரிடமாட்டாது நீ அழவேண்டாம் சந்தோஷமாக தங்கள் அரமனைசேரும் என்தாயே.

பிரகலாதனன்சொல்-கண்ணிகள்-இ-ம்-வராளி-அடதாளம்.

அன்னையேயுனதுமனமின்னமுங்கலங்கியே
யழுவதுதகாதுயெந்தன்தாயே இதை
முன்னமேசெய்தவினையென்றுன்னியேமனதில்நன்றாய்
முத்திலுமிதையறிவாயே
காயமென்பதுசதமென்றுப்புதைக்கும்பணத்தை
கண்டறிவரோபின்னுவனம்மா பொல்லா

மாயவலையில்சிக்கியஞாயமிதுலகவாழ்வில்
மயங்கிடலர்குமோவீணாகம்மா
பந்தபாசங்களால்கட்டுண்டிந்தவுலகத்திலேவனும்
நொக்துமடிவோமென்றிருந்தாலும் ௯௨
குந்தகடிமைபமனதில்லெந்தவேளையும்துதித்தால்
சந்ததம்தருமதுமென்மேலும்
வானவர்புகழ்கலவமானகர்மேவியகரி
வரதர்தன்செயலில்லாமலொன்றும்
தானடங்கிடாதுதாயேகியானமோடுனைக்கிப்போது
சாற்றினேனிதுவேநிஜமென்றும் (அன்னை)

பொது-விருத்தம்.

இந்தவிதமைந்தனுந்தன்தாயைத்தேற்றி
இருக்கும்போதரக்கனிடயேவலாலே
கொந்தங்கொடிவாள்கதைகைசூலங்கொண்டு
கொக்கரித்துபார்ப்பரித்துக்கூரிசீறி
தந்தமதைநடநடவென்றேகடித்து
தனையனைவந்தேபிடித்துத்தள்ளிக்கொண்டு
நிந்தைசெய்யும்போர்களத்தைநாடிமல்லர்
நீட்டுவார்கோபமதைநாட்டுவாரே.

வசனம்.

இவ்விதமாக தன்தாயாராகிய லீலாவதியம்மனுக்கு பிரகலாதனு னவர் மனந்தேரும்படிசொல்லிக்கொண்டு யிருக்கின்றபோது இரணி யனுடைய ஏவலினாலேவந்தவீரமல்லர்கள் பிரகலாதனைகொலைபுரி யும்போர்களம்பிடித்துக்கொண்டுபோகும் விதங்காண்க.

கொலைவீரர்சொல்-தரு-இ-ம்-பூரிகல்யாலஸி-ஆதி-சாபு;

நடநடதடையினியேன் எங்கள்
நர்தனிரணியநிருபாதந்தொழாதபாவினீ (நட)

அடஞ்செய்தெங்களிரணியாசூதனைகுசூமதாய்
திடமொடுகொன்றமாயனுக்கிடங்கொடுக்குந்துரோகினீ (நட)

வல்லமைகளெல்லாமினிசெல்லாதுஉன்தெண்ணுந்து
பல்லையுதிரகொட்டுவோம்யெல்லைவிட்டெங்கள்முன்னேநீ (நட)

கெட்டியென்றவனைதொழும்மட்டியேயுனைவாளாலே
வெட்டியேபலியிடுவோம்சட்டமாய்போர்களத்திற்கு (நட)

வெற்றியில்மிகுந்தவெங்கள்கர்த்தனுமிரணியர்தன்
சித்தமரியாதபொல்லாபுத்திராகத்தாமலினி (௩௨)

விரதங்கொண்டுகலவைவரதனென்றேதுதிக்கும்
தாதலேதனமதைவிரவினிலறிகுவோம் (௩௨)

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

அடியவர்க்கிரங்கியவாதியேசோதியேயப்பனேவொப்பிலாமணியே
படிமுழுதயுமொருவடியினுலளந்தபாதனேவேதநாயகனே
கொடுவினைக்கஞ்சிடாவீரமல்லர்களெனைக்கொலைபுரிவோமெனக்கூறி
சடிதஞ்செய்திழுக்குருருனையலால்வேரூர்தாரகமிலேஹரிஹரியே,

வசனம்,

ஹரிஹரி இதோ கொடியமல்லர்கள் யெனைக்கொலேகளம் யிழு க்குருர் இந்தவேளேயில் ஆதரிஹரியே,

பிரக்லாதனன்சொல்- கண்ணிகள்-இ-ம்-ஆயிரிட-ஆதி-ரூபதாளம்.

ஹரியே யாதரியே யசுரர்
ஆக்ரமத்துடனே பராக்கிரமங்களும்பேசி
வியாக்ரமதைப்போலென்னைசீக்ரமாய்பிடித்தார்

சிறியேசிதற்கென்செய்வேன் செந்
திருவணிமார்பனென்றருமறையோர்களும்
பெருமையுடன்புகழும்கருமுகில்வண்ணு

யெல்லாமுன்செயலே இந்த
யேழையுன்னடியிணைத்தாழவுமறிகிலேன்
வேழமதைகாற்றிடும்மாழியின்கையா

கல்லோயுன்மனது சற்றுங்
கரையாதென்னவெந்தன்முறைகேழ்க்கவிலேயோ
துரையேயான்செய்தகுரையோவறியேன்

முன்னாளிற்செய்தவினேயோ துஷ்டர்
முகத்தினில்முழிக்கவும்ஜெகத்தினில்வந்தேன்
மகத்துவமறியாதகதியகுலத்தில்

இன்னாளிலுடலெடுத்து மல்லர்
பிடிக்கவும்பற்களேகடிக்கவும்முதுகினில்
லடிக்கவும்மெனும்பையுமொடிக்குராரரியே

நிலையென்றுனைநம்பினேன் யன்பர்
நிதியேயருள்தரும்பதியேமலரடி
கெதியேயென்தலைவிதியோமதிகுழ்
கலவைநகரில்மேவும் மெழில்
கரிவரதனேயுந்தன்னிருபதந்தனையெந்தன்
சிரம்தனிற்சூடினேன்பிரியமுடனே ஸ்ரீ
ஹரியேயாதரியே

கொலைவீரர்-சொல்-விருத்தம்

ஆதரிக்குந்தெய்வத்தின்திறமையெல்லா
மடப்பயலேயரைநொடியில்றிகுரோம்பார்
கோதருக்குமிரணியனுர்பாதந்தன்னைக்
கூராம்பிருக்குமுந்தன்கொலைகுண்டிக்காய்
யேதரித்துப்ருந்துகளுக்கிரையதாக
யீந்திடுவோமிதனிஜமென்றெண்ணிப்பார்த்து
வேதருக்குங்காதருக்குமேலாய்நின்ற
வேந்தனிரணியன்பதமேவிளம்புவாயே,

வசனம்.

அடா துற்சனு யினியுனைவிடோம் இரணியநமாவென்றுசொன்னையேயாமாகில் விட்டுவிடுவோம் யில்லாவிட்டால் யெங்களாயுதங்களாலே சின்னபின்னமாக்கிவிடுவோம் யிரணியநமாவென்று சொல்லடாசிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

மதியதுவில்லாமூட மல்லரேசொல்வேன்கேளீர்
சதிசெயுமரக்கன்றன்னைத் தெய்வமென்பதுதகாதே
பெதிமுனிவர்கள்வேதத்தோ ரிமையவர்தமக்குநல்ல
கதிதருமால்பாதத்தைக் கனவிலுமறந்திடேனே,

வசனம்,

கேளுங்கள் விவேகமில்லாதமூடமல்லரே சதிசெய்கின்ற இராக்ஷதனை துதியென்று யேன்வீண்வார்த்தை பேசுகின்றீர் யொருபோதும் யென்னுவில் வரமாட்டாது யெம்பெருமானுடைய திருவடிகளை அடியேன் கினவிலும்நினவிலுமறவேனப்பா மல்லரே;

கொலைவீரர்சொல்-விருத்தம்,

மறந்திடேனென்றுசொன்ன மதியில்லாச்சிறுவாயுந்தன்
கரந்தனையிருகக்கட்டிக் கண்டதுண்டங்களாக

வசனம்,

அடா பிரகலாதனே இன்னமுமுன்னுடைய கெர்வத்தையே பரட்டிக்கொண்டு அந்தமாயன்திருவடியே துணையென்றுயெங்கள்முன் உளருகுராயல்லவா உன்னுடையதெய்வ இதோபார் அரைநொடிக்குள்ளே காட்டிவிடுகுரோம் அடாயாரடா ரணமுகவீரரே இங்கே வாருங்கள் இந்த பயலைக்கொலைசெய்குவோம் வீரசூரரே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

கொலையதுசெய்வோமென்றுக் கொக்கரித்தெழும்பிச்சிறி
சிலைகெதைவாளுமேந்தி சிதைக்குரோமென்றாரின்று
நிலையுனையல்லாலவேறுநீ ணிலந்தன்னிலில்லை
அலைகடற்றுயிலுமெங்கள் ளாதிநாரணனேகாரும்.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-குரிஞ்சி-அடதாளம்.

நாராயணனேயுன்னளினபொற்பாதமே
நம்பினேனென்னையாளும்நாயகனே யென்றும்
பாராயணங்கள்செய்பக்தர்களைகாத்திடும்
பதனேசங்குசக்கராயுதனேயச்சுதனேஓம் (நாரா)

திருவளர்மணிமார்பாசெழிக்குமெழில்ப்ரதாபா
சிறியேன்மேல்கருணைசெய்திடுவாயே இதோ
அறிவில்லாமல்பொல்லாதவரக்கமல்லரெங்கனை
அதட்டிகெற்ஜனையுடனுதட்டிபோர்புரியுரார் (நாரா)

பாற்கடலில்பன்னகபட்ணிலிழலிற்றுயிலும்
பக்தவர்ச்சலனென்னும்பரந்தாமா எனை
காக்ககடனுனதேகற்பகமேகமலக்
கண்ணாசாமளமுகில்வண்ணாவிண்ணவர்பணி (நாரா)

சிலைவாள்கெதைகைகொண்டுகொலைசெய்குவோம்பாரென்று
சீறுகுரார்புலிபோல்சிறியேன்மேல் திரு
கலவங்கரமேவும்ஸ்ரீகரிவரதாயிதென்ன
கியாதிதியாளிதுநீதியோமுன்னாதி (நாரா)

கொலைவீரர்சொல்-தரு-இ-ம்-நாட்டை-அடதாளம்.

ஆதிநாராயணனென்றிடும்நாவதை
அறியுங்கள்தாக்கியெரியுங்கள் சற்றும

அச்சமில்லாமலேஆயுதவகைகளால்
அடியுங்கள்பல்லால்கடியுங்கள் பெருஞ்
சோதிவேல்தெண்டிருளாஸ்திரமுங்கொண்டு
தூக்குங்கள்நெட்டிதாக்குங்கள் அவன்
தோத்திரஞ்செய்துமேபோற்றிடுங்கைகளை
துளையுங்கள்சுத்திவளையுங்கள் நல்ல
யாதிபின்ரைபோலிருக்கும்நுதலின்கீழ்
படையுங்கள்முகத்தையுடையுங்கள் காலை
பற்றிக்கிருகிறென்றுச்சுற்றிபூமியதிரப்
படியுங்கள்மோதிபடியுங்கள் ப்ரக்
காதியிரணியன்பகைவன்கலவைகரி
வரதனையிவன்பெருதென தினங்
காதல்கொண்டோதுங்கருத்துமழிந்திட
கசக்குங்கள்யீபோல்நசுக்குங்கள் (ஆதிதாரா)

பிரகலாதனன்சொல்-தேவாரம்

மாதவனைமலரிலயன்றனையீன்றோனை
மங்களஞ்சேர்மலர்மகளைமருவுந்தேனை
மானிலத்தில்யான்பணிவாய்மண்டூகம்போல்
மடையமல்லர்கையிலகிச்கியங்கினேன்
சீதாநேயிதுதிலந்தெனையாட்கொள்ளும்
தேவனைமேதவர்தொழுஞ்செங்கணமாலே
தெளிவில்லாவரக்கர்கள்செய்வாதையெல்லாம்
தீர்த்துரக்ஷிப்பதுந்தன்செயலாமைய்யா

கொலைவிரர்சொல்-கவி.

ஐயாவென்றிங்கடிக்கடியுளரும்
பையாயுந்தன்பற்களைப்பிடுங்கிக்
கையாலுன்னைக்கசக்கியேவிடுவோம்
மெய்யாயிரணியன்மேன்மையைத்துதியா

பிரகலாதனன்சொல்-நொச்சகம்,

செந்திருவாழுமணிமார்பாதேவாவுந்திருவடியே
அந்திப்பகலுந்துதிக்குமடியார்க்கருள்நிதியே
இந்திரர்வானவர்பணியும்யிலகுமெழில்மணிவிளக்கே
வந்தெனையாள்கொள்ளுமெங்கள்மாதவனேயெந்தன.

பொது-விருத்தம்.

கடினமுடன்மல்லர்விடுங்கெதைவேல்சூலங்
கத்திமுதலாகியவாயுதங்களெல்லாம்
வொடிந்தொன்றாயிரம்பொடிகளாகத்தூறி
வோலமிட்டோடிடும்படிமல்லர்கள்மேல்பாய
படியிலவிழுந்தலரிமடிந்தார்கள்கோடி
பல்முகங்கைதுடைபொடிந்தோர்பத்துக்கோடி
அடிவேரற்றிடுமரம்போல்தப்பிநின்ற
வரக்கரிடவகமடங்கியாதுசொல்வார்.

வசனம்.

இந்தப்ரகாரமாக கடினசித்த முடையகொலைவிரமல்லரானவர் பரகலாதன்மீதினில்முப்பத்திரண்டு ஆயுதங்களையும்விடுகிறபோதுப்ரகலாதரானவர் ஸ்ரீமந் நாராயண மந்திரத்தை ஸ்மரணைசெய்தார் அந்த ஆயுதங்களானதெல்லாம் பிரகலாதன் மீதிற்படாமல்வொவ்வொருவாயுதமானது ஆயிரந்துண்டுகளாக வொடிந்து மல்லர்கள் மீதினிலேதிரும்பி பாயுங்கபோதுசிலமல்லர்கள் மிறந்தார்கள்சிலமல்லர்கள் கைபொடிந்தவர்களும் காலொடிந்தவர்களும் சிலர் துடைபொடிந்தவர்களும் சிலர் முகமுடைந்தவர்கள் பல்லுடைந்தவர்களுஞ் சிலர் பயந்தோடினவர்களும் அடியற்ற மரம்போல தியங்கி மயங்கி தப்பினின்ற அரக்கருடைய அகமடங்கி சொல்லுகிற விதங்காண்க.

சங்குமுகசூரன்சொல்-விருத்தம்.

சிறுபிள்ளைபிவனென்றெண்ணித்திடமுடன்வந்தநம்பள்
கெருவங்களடங்கியேபோர்களத்தில்மாண்டாரநேகர்
பெருவயராதொட்டிக்கால்பெலிமூஞ்சிவொட்டைவாயா
இருகவில்லாமல்நாமும்சென்னிறிட்டால்பிழைப்போமப்பா

வசனம்,

கேளும் பெருவயரையுடைய பெலிமுக வொட்டைவாயா இந்த குழந்தையைநாம் யெவ்வளவென்று யெண்ணி வந்த யெண்ணமெல்லாம் குண்ணி மண்ணில் விழுந்து மடிந்த மல்லர் போக நாம்யேதோ சிலர் தப்பி பிழைத்திருக்கிறோம் இனிபவன்பேரில் துஜந்தொடுத்த

மேயாகில் நாமும் அவர்களுடனே யெம்புரம் சேரவேண்டியது தான் ஆகலால் நாம் வந்தவழி தெரியாமல்வோடி போவதே நல்ல காரியம் அசுரரே.

போரமுககுரன்-சொல்-விருத்தம்.

பிழைந்திடுவோமென்றோடிபோயிவிட்டால்
பிரகலாதனிடபெருமையலந்தாமே
தழைத்திடுமேயிரணியமந்திரத்தினாலே
தளபதியாகியமல்லரெல்லாங்கூடி
உழைத்தினமாகியசிறுவன்றனையிப்போது
வுபர்மரத்திலேத்தியவனுயிரைவாங்கி
யிழைத்திடுகேயூரமணிமகுடந்தாங்கும்
மிரணியர்க்குயிம்மொழிபோயியம்பலாமே.

வசனம்,

கெளுங்கள் கொலைவீரர்களே நாமனைவரும் கூடி வந்து இந்த மைந்தனுக்கு பின்னிடைந்தால் யெவ்வளவு கேலியாய்ப் போய்விடும் பிரகலாதனன் நம்மை யெவ்வளவாக யோஜிப்பான் அப்புரம் நமது பிழப்புவொரு பிழப்பா அது ஞாயமல்ல போனவர்கள் போக பலமுடைய வீரசூரமல்லர் ளுமிருக்கிறபடியால் நமது இரண்ணிய நாமமந்திரத்தையுச் சரித்து அந்த சிறுவனை தூக்குமரத்திலேத்திசின்னபின்னமாக அவனுயிரைமாத்திநமது கர்த்தாவாகிய கன்கன்முன் சென்று நல்ல வெகுமதிகளையடையலாம் கொலைவீரரே.

ரணமுககுரன்-சொல்-விருத்தம்.

உந்தனிஷ்டப்படிக்கியாவரும்மொன்றாய்க்கூடி
மைந்தனைக்கட்டி தூக்குமரத்தின்மேலேத்திப்பொல்லா
நிந்தைசெய்மாயன்றன்னைநினைக்கும் வஞ்சகநெஞ்சத்தை
கொந்தியேகிழித்துக்கொல்வோம்கொடுஞ்சினத்தோடிபபோதே

வசனம்.

கேளும் போரமுகுரனே உன் யிஷ்டப்படிக்கே நாமல்லவருங் கூடி கொண்டு அந்தச்சிறுவனை தூக்கு மரத்தி லேத்தி கொல்லுவோம்வாரும் வீரரே.

வேதானமுககுரான்சொல்-கவி.

அப்படித்தானேயனைவருங்கூடி
செப்பமாயந்தச்சிறுவனைக்கொல்வோம்

கொலைவீரர்சொல்--கவி.

பட்சமாயிரணியன்பதம்மதைகதொழுதிடா
துஷ்டனேயுந்தனை தூக்கினிலேத்தியே
கஷ்டமேபடுத்துவோம்கனகன்பொற்பதத்தை
யிஷ்டமாய் துதித்திடாயின்பமுற்றிடவே.

வசனம்.

அடா அறிவில்லா சிறுவா யெங்கள் வார்த்தையைக்கொஞ்சமா கிலும் வுன்னெஞ்சில் நினையாமல் போனாயல்லவா இதோ இந்த தூக்கு மரத்திலேத்தி விடுவோம்யினியாவது கனகதுரை யென்னும் இரணிய நாமத்தை சொல்லடா சிறுவா.

பிரகலாதனன்-விருத்தம்.

கியானமில்லாமல்வீணாய்கத்தூரீர்சுத்தமில்லா
யீனரேநீங்கள்செய்யும் யிடர்க்கொன்றும்பயப்படேனான்
தேன்சொரிகமலமாதுதிருபொருந்தியமார்பன்தன்
ஞானமந்திரத்தாலெல்லாம்அடங்கியேயொடுங்கிடாதோ

வசனம்.

கேளுங்கள் கொலைவீர மல்லரே இன்ன மென்னுடன் யேன் வீண்வாதமாடுகுறீர் உங்களிஷ்டப்படியே செய்யுங்கள் அதற்கொன் றும் நான் பயந்தவனல்ல திருமார்பனுடைய திவ்விய மந்திரத்தின் முன் நீங்கள் செய்கின்ற யிடர்களெல்லாம் அடங்கி யொடுங்கிபோய் விடும் அசுரரே.

கொலைவீரர்சொல்-விருத்தம்

ஒடுங்கிடுந்திரமைதன்னையொருநொடிதன்னிலேபார்
மடங்கல்போல்சிறியுன்னைமணிக்கயத்தாலேகட்டி
அடங்கொணாதுக்கிலேத்தியாயுதவேல்சூலத்தால்
தடங்கலில்லாமலிப்போதட்டுவோம்குட்டுவோமே.

வசனம்.

அடா பிரகலா தனு யென்னசொன்னாய் இன்னமொருதரஞ்சொல்உன் அரிநாமமந்திரத்தால்யெல்லாம் யொடுங்கியடங்கிபோய்விடுமா நல்லதாகட்டும் அடாயாரடா யென் சொல் தவறா மல்லரே யிவனை சிங்கம்போல் சிறிமணிக்கயத்தினால் கட்டி தூக்குமரத்திலேத்தி யிவன் உயிரை மாத்துங்கள் கொலையசூரரே,

கொலைவீரர்சொல்-தரு-இ-ப்-காபி-அடதாளம்.

தூக்குதனிலுனை தாக்குவோமிதோபாலா — சொல்லா
துடுக்குதனமொடுயிடக்குகளோபேசும்
முடுக்குமுன் திடயடக்கு ழிந்திட — (தூக்கு)

காக்குமிரணியன்கமலபதமதைபோற்று — யுந்தன்
கரித்தும் ழிந்திடதிருத்தமொடுலகில்காக்குமிரணியன்
நோக்கமுடனரி நாலைபெருதெனும்
நாக்கையருத்துனைநமனுலகஞ்சேர. — (தூக்கு)

சட்டமுடனுனைவெட்டிடெலியிடுவோமே — கடல்
சாருமுலகிலுன்பெருமரைந்திட — சட்டமுட
இட்டமுடனெங்களிரணியன்பதந்தொழா
துட்டாயுனையினிசுருக்கினிலிருக்கி — (தூக்கு)

தலைவனாகியமதையித்தியகுலமணி தீபம் — யெங்கும்
தங்குந்தவபலம்பொங்குமிங்கித — தலைவ
கலைவநகர்கரிவரதநென்றனி
யுலவும்வலுமையையொருநொடி தனில்பார் — (தூக்கு)

பொதுவிருத்தம்.

படைத்தலைவன்சொற்படியேமல்லரெல்லாம்
பாலகனைப்பிடித்திருகைபலமாய்க்கட்டி
நடுக்கமுறவே தூக்குமரத்திலேத்தி
நால்புரமும்வீரர்நலியாமல்ஜாட.
திடத்துடையஹரிநாமமந்திரத்தை
செபித்திடவேசிறுவனிட்டிருத்தோள்மார்பில்
இடைக்கின்டபொன்போல் துளபமாலைமின்ன
யிலகுனுதலினில்திருமண்ணணிக்துநின்றான்.

வசனம்.

இவ்விதமாக மல்லரானவர் தமதுபடைத்தலைவன் சொற்படி பிரகலாதனைப்பிடித்து இரண்டுகரங்களையுங்கட்டி தூக்குமரத்திலேத்தி நாலுதிசையும் யிடைவிடாமல் ஆயுதவகைகளால்சாட அப்போதுபிரகலாதரானவர் அஷ்டாக்ஷரமந்திரத்தைமௌனயோகசித்தனாய்துதிக்கின்றபோதுயெம்பெருமானுடைய கடாக்ஷத்தினாலே நெற்றியிலேதிருமண்ணும் தோளிலேதிருத்துளபமாலையுந் தரித்துக்கொண்டு இருக்கின்றவிதந்தாண்க.

பொது-விருத்தம்.

கடிகமிழ்துளபமாலைக் கன்திருமணியணிந்து
திடமுடனிருக்கும்பாலன் திருமலர்முகத்தைமல்லர்
அடைவுடன்பார்த்துயேங்கி யகந்தளந்தசுரர்நிற்க
விடைவிடாதரிபாதத்தை யேற்றுவான்போற்றுவானே,

வசனம்.

இவ்விதமாக பிரகலாதருடைய திருநெற்றியில் திருமண்ணும் தோளிலே துளபமாலையும் அணிந்திருக்கின்ற ரூபரேகலாவண்ணியங்களைக்கண்டமல்லரானவர் ஆச்சரியமடைந்து யேங்கிமனந்தளர்ந்து இருக்கிறபோது பிரகலாதனன் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை பின்னும் தோத்திரம்செய்கின்றவிதங்காண்க.

பிரகலாதனன்-தேவாரம்.

ஐயனேயகிலலோக மளித்திடுமய்யனேயீன்ற
மெய்யனேயெனையாள்கொள்ளும் மேதினியளந்தபாதா
துய்யனேபுவணமேரும் துலங்குநீர்முகில்தன்வண்ணா
செய்யனேயுனதுசெம்பொன் திருவடிபோற்றிபோற்றி,

தேவாரம்.

பாற்கடல்துயிலுமாலே படிமீதிலடியென்றன்னை
காக்கவுன்கடனேயல்லால் கார்வண்ணமேனியோனே
சேர்க்கையாமசுரர்செய்யும் தீவினைக்கிடங்கொடாமல்
தீர்க்கமாயெனையாள்கொள்ளும் ஜெயமிகுசெங்கண்மாலே,

### தேவாரம்.

அண்டர்கள்புகழும்பர மாதிவேதாந்தவேதா
தொண்டர்கள்துதிவிநோதா சோதியேயென்னையாள்தாதா
கண்டகப்புலிமுன்பட்டகலைமான்போல்வாடிநின்றேன்
கொண்டல்வண்ணனேவந்திவண்ணநீக்குழந்தையைகாருமையா.

### கண்ணிகள்-தரு-மத்தியமாவதி-ஆதிதாளம்.

கமலமலர்வதனாகருணைபுரியெனக்குன்
கழல்தன்னைநம்பினேன்வோம்ஹரியே
விமலசச்சிதானந்தாவேதாந்தவேதா
வேண்டினேனென்னையாளும்வோம்ஹரியே
அபயமெனும்பமுன்னுபவனுடன்வந்தருள்
அளித்திடுமாதிமூலமேவோம்ஹரியே
சுபவலங்காரஜெகஜோதிப்ரணவமய
சின்மயானந்தவடிவேவோம்ஹரியே
படிமிசையிலுன்பாதம்பணிந்துதொழுமன்பரை
பாதுகாத்திடும்பாக்கியனேவோம்ஹரியே
கொடியர்கையினிற்காட்டிகொடுத்திடவாமலெந்தன்
கோதரவேவந்தாதரிவோம்ஹரியே
அண்டஜவாகனுயண்டினேனுந்தனை
ஆதரியிதுததியேவோம்ஹரியே
தொண்டர்புகழ்கலைத்துரைகரிவரதனே
தொல்வினைதனைதீர்ப்பாய்வோம்ஹரியே

### பொது-விருத்தம்.

சேயனுமிவ்வாறுதுதித்தேத்திப்போற்றிச்
செந்திருமால்திருவருளால்மைந்தன்மீதில்
தீயமல்லர்விடும்வாள்வேல்சூலமெல்லாம்
தினகரன்முன்பனியதைபோல்தியங்கிப்போகே
மாயமிதுவென்றுசொல்லிமல்லரெல்லாம்
மனங்கலங்கிநடுநடுங்கிமயங்கிச்சோர்ந்து
நேயமிகுயிரணியருக்கிந்தசேதி
நிகழ்த்திடுவோமென்றுசொல்லிநடக்கலுற்றார்.

வசனம்.

இவ்விதமாக சேயனுகிய பிரகலாதனுனவர் ஸ்ரீ அகிலாண்டகோடி பிரம்மாண்டனுபகாரிய நாராயணமூர்த்தியினுடைய திருநாமமந்திரத்தை தியானஞ்செய்தபோது கொடியமல்லர்விடுகிற ஆயுதங்களெல்லாம் மூரிந்து சூரியனைக்கண்டபனிபோல் நீங்கியதைக்கண்டமல்லரானவர்நடுங்கி திகிலடைந்து இனியிவனைகொல்ல நம்மால்முடியாதென்று இரணியனுக்குபோய் சொல்லுகின்றவிதங்காண்க.

கொலைவீரர்சொல்-கண்ணி-இ-ம்-கௌளம்-ரூபகதாளம்.

பாலனைகொல்லுவோமென்றுபடையனவரும்வந்து
பவுஷகுலைந்திட்டோமேவீரர்களே
ஞாலமுள்ளவரைக்கும்நகைப்புக்கிடமாச்சுதே
நம்மையினியார்மதிப்பார்வீரர்களே
சீலமிகுயிரண்ணியதேவன்முன்னேயிதைநாம்
செப்பினுலெரப்பிடுவாரோவீரர்களே
ஓலமிட்டேயொழிகியொடிங்கியடங்கின்ற
உம்பர்கேலிசெய்குவரேவீரர்களே
ஏலங்கூரிடுவாரேயிரேழுபுவியெங்கும்
மிதற்கோயிங்குநாம்வந்தோம்வீரர்களே
சூலம்வேல்கெதைவாள்கள்சுதன்மீதினில்படாமல்
துண்டுதுண்டாய்போச்சுதேவீரர்களே
நீலமுகில்மலைபோலநெரிங்கியவீரரெல்லாம்
நிரங்குலைந்தலைந்தாரேவீரர்களே
காலமேதோகலவைக்கரிவரதன்செய்திட்ட
காரணத்தைக்கண்டீர்களோவீரர்களே

கொலைவீரர்சொல்-துண்டு-கவி,

இரணியதேவாயிணையடிதனைஞுஞ்
சரணமென்றடைந்தோம்தயைசெய்தெங்களை
கருணைவைத்தாள்கொளும்கதிர்மணிவிளக்கே.
திரணமுமெங்கள்மேல்சீறிடாமலே.

இரணியன்சொல்-விருத்தம்.

சரணமென்றெனையடைந்ததைத்தியமல்லர்நீங்கள்
கருணையோடெனதுபாதங்கடாக்ஷத்தினுலேவாழி

திரணமென்றெண்ணிப்பேசும் துற்சனப்பயலேநீங்கள்
மரணஞ்செய்திட்டுவந்தவகைதனையுரைசெய்வீரே.

வசனம்.

சுகிபவர்தீர்காயுசாக நீங்கள்வாழக்கடவீர்யெழுந்திருங்கள் நம்மை திரணமாகநினைத்து யெதிர்த்துப்பேசிய துற்சனனை யெவ்விதமாகமடியச்செய்தீர் அதினைவிபரம்யெனக்குச்சொல்லுங்கள்வீரரே,

கொலைவீரர்சொல்-விருத்தம்.

விரைவினிற்சேயனைக்கட்டியேயிழுத்து
வெண்சமர்களத்திற்கொடுபோய்
இரணியநாமமந்திரமதைக்கூறென்
றியல்பொடுயாங்கள்சொல்மொழியை
தரைமிசையதைசதமென்றறியாமல்
தாழ்வுசெய்மாயன்தாள்துதித்தான்
உரமொடுயாங்கள்கெற்ஜனைசெய்து
யெழுப்பிஉயிர்கொலைசெய்திடத்துணிந்தோம்.

வசனம்.

கேளும்யெங்கள் கர்த்தியமே தங்கள் உத்திரவின்படி பிரகலாதனை போர்களத்திற்கொண்டுபோய் தங்கள் நாமதேயத்தை சொல்லச் சொன்னோம் அதைதடுத்து மாயனை துதிசெய்தான் அதைகேட்டமாத்திரத்திலே நாங்கள்கோபித்துக் கொலைசெய்யத்துணிந்தோம்ஆய்யனே.

ரணமுகவீரன்சொல்-விருத்தம்.

துணிவொடுபாலன்மீது தொடுத்திடுமாயுதங்கள்
அணியணியாகச்சென்று யவன்மீதில்பீட்டிடாமல்
பணிமுகவீரர்மீதில் பாய்ந்திடப்பத்துகோடி
ரணிகரன்படையிலக்ஷம் ராக்ஷதரிறந்தாரையா.

வசனம்.

சுவாமி நாங்கள்கோபத்துடனே ஆயுதங்களையெடுத்து சிறுவன் பேரில் பிரயோகஞ்செய்கிறபோது அந்த ஆயுதங்களெல்லாம் தங்கள் குமாரர்மீதில்படாமல் அவன்பாதத்திலே வலசாரியிடசாரியாகவந்து விழுந்து முதல்வகுப்பில் நின்றசற்பமுகவீரர்கள்மேல்திரும்பிமார்பில்

பட்டுஉருகிதுடையொடிந்தவர்களும் இடையொடிந்தவர்களும் கை யொடிந்தவர்களும் மெய்முறிந்தவர்களும் தலையுடைந்தவர்களும் வில விலத்து நிலத்தோடு நிலங்கவவிக்கொண்டவர்களும் யிப்படிபத்து கோடிரணிகரன்வகுப்பில் லக்ஷம்ராக்ஷதவீரர்கள் இறந்தார்கள் இன் னம்சொல்லுகிறேன்சுவாமி.

கோரசிங்கன்சொல்-விருத்தம்.

அரைகுவேள்கேளு முன்னமந்தரமாக
யறிவிலாச்சிறுவனையேற்றி
திரமொடுவாள்கெதையாலடித்திடவே
சென்றிடும்ராயுதமுறிந்து
தரைமிசைதனில்விழுந்ததிரப்
பொடிபோல்சிதறியேவிட்டது
மன்றியினரனுதலினில்திருமண் துழாம்மாலை
யிதுகளைப்பூண்டபுதுமையென்சொல்வோம்.

வசனம்.

கேளும் சுவாமிம்றுபடியும் யிவனைவிடப்போகாதென்று அந்திர மார்க்கமாயேற்றி ஆயுதங்களைவிட்டால் அந்த ஆயுதங்கள்அவன்மீதில் லொருவழியும்படாமல் முறிந்துஅதிரசபொடிபோல் தரையில்விழுந் து சிதறியோடிவிட்டது இதுவென்னவாச்சரியமென்று அவனைநோக் கிப்பார்க்கையில் நெற்றியிலேதிருநாமமும்தோளிலேதுளசிமாலைபூண் டுக்கொண்டுயிருக்கும் வேடிக்கையைப்பார்த்தால் யெங்களுக்கு பய ம்தோன்றிவிட்டுது யிந்தபுதுமைகளைநாங்கள் யெங்கும்கண்டதில்லை ஆதலால் தங்களுக்கு அறிக்கையிடவந்தோம் சுவாமி,

இரணியன்சொல்-விருத்தம்.

பரிவுடனேயென்னுடையவீரியத்தின்
பலமிகுத்தபடியாலேபாலன்மீது
செறியுடையவாயுதங்களானதெல்லாம்
நெருங்காமல்பொடிப்பொடியாய்போகும்மெய்தான்
வரிவுடையநுதலினிலேதிருமண்மார்பில்
வனதுளபமணிமாலைவந்ததேது
கரியமுகில்மேனியனுகியமாயன்செய்
கபடகமோயிதையுரைப்பீர்களித்துள்ளோரே.

வசனம்.

ஆ-ஆ வோய்மந்திரிமார்களே கேட்டீர்களா யான்சாகாதவரம் பெற்றபடியால் யென்வீரியத்தின்வழியாகவந்த பாலகன்மீதில்விடுத்த ஆயுதங்களெல்லாம் அதிர்சப்பொடிபோல்போனதென்பது ஞாயந்தான் நெற்றியிலே திருமண்ணும் கழுத்திலே துளபமாலையும் வந்தகாரணம்யாது அந்தமாயன்செய்த கபடமோ இதையறிந்துசொல்லுங்கள் மந்திரிகளே.

முதல்மந்திரிசொல்-விருத்தம்.

கருத்துடன்வரங்கள்பெற்றுக் கெற்ஜித்துவருகும்போது
திருத்தமாய்கடலில்மாயன் செத்தானென்றுரைக்கின்றீரே
பொருத்தமாய்மைந்தனுக்கு புகழ்பெறதிருமண்மாலே
அருத்தமாய்சாற்றிப்போன வசடனைவிடப்போகாதே.

வசனம்.

கேளும்சுவாமி தாங்கள்வரம்பெற்றுக்கொண்டு ஆக்ரமித்தனுக வருகின்றபோது அந்தமாயனானவன் கருங்கடலிலே விழுந்துவிட்டான் அதுமுதல் இதுவரையிலும் அவன்சங்கதியெங்குமில்லாமல் போனபடியால் அவன் இறந்தானென்றே யெங்கும்சொல்லி தீர்மானமாயிற்று இப்போதமது குழந்தைக்குநெற்றியிலே திருமண்ணும் கழுத்திலேதிருத்துழாய்மாலையும்சாற்றினவன்யாரென்றால்நாங்களென்னத்தை சொல்லுகிறது இனிஅப்பேர்கொற்ற அசடனையும்விடப்போகாததன் செயலாகத்தானேயெல்லாம் தாங்களேகாணப்போரீர்சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்.

பொரிக்திவந்தென் மகன்நெற்றியில்திருமண்
போட்டிடுங்குணமிலாத்திருடன்
செரிந்துவந்தெங்கோடேப்போர்மிகச்செய்துமே
ஜெயித்திடதிறமையுமுண்டோ
வருந்தியேதோத்திரஞ்செய்திடும்பயல்தனை
வைப்பதும்தப்பிதமினிமேல்
உரம்பெருமுயர்மலைமீதினிலேத்தியே
உருட்டிடச்செய்குவீர்மந்திரி.

வசனம்.

கேளுங்கள் மந்திரிகளே கள்ளனைப்போல்வந்து யென்குமாரனுடைய நெற்றியிலே திருமண்சாற்றிய திருடன்யென்னெதிரில்வந்துஜெயிக்க திறமையுண்டா யில்லை அந்தமாயனை துதிக்கின்ற சிறுவனையினிவிடுவது ஞாயமல்ல ஆகாயத்தை அளாவிஉயரம்பொரிந்தியமலைமீதிலேத்தி மணிக்கயத்தினால கட்டியுருட்டி விடச்சொல்லுங்கள்மந்திரிகளே,

மந்திரிகள்-மல்லருக்குச்சொல்-விருத்தம்,

கொலைதனக்கஞ்சிடாத கொடியவீரர்களேகேளிர்
நிலையொடுமணிகயத்தால் நெரிக்கியேயிருக்கிக்கட்டி
சிலைகெதைவேல்சூலத்தால் சின்னபின்னமதாய்க்குத்தி
மலைதனிலேத்தியந்த மந்தனையுருட்டுவீரே.

வசனம்.

ஆ-ஆ வாருங்கள் கொலைவீரர்களே பிரகலாதனை மணிகயத்தினாலேகட்டி வேல்சூலத்தினாலேகுத்தி மலைமீதிலேத்தி உருட்டிவிடுங்கள் மல்லரே,

மல்லர்சொல்-கவி.

அண்ணலப்படியே யறிவிலாச்சிறுவனை
மண்புவியதிர்ந்திட மலைதனிலேத்தி
திண்புயமிரண்டையும் சேரவேகட்டி
பண்பொடுஉருட்டி யிப்பதிவருவோமே.

மல்லர்-பிரகலாதனனுக்குச்சொல்-விருத்தம்.

தடுத்தெதிர்பேசும்பொல்லாத் தருதலைபயலேவாடா
கடித்திடயுனைபிடித்துக் கனயுயர்மலையேலேத்திப்
பிடித்திருகையுங்காலும் பெருமணிக்கயத்தால்கட்டி
யிடித்துனையுருட்டிமண்டை யிடறிடசெய்வோம்பாராய்.

வசனம்.

அடா வாடா பிரகலாதனா உன்னுடைய தகப்பன் சொல்லியவார்த்தையைக்கேளாமல் தடுத்துப்பேசும் துற்மார்க்கபயலே இப்போது உன்னைபின்கட்டு மடலாகக்கட்டி இந்தமலைமேலேத்தி உருட்டிவிடும்படி உத்திரவுகொடுத்திருக்கின்றார்யெதிர்பேசாமல்வருவாய்சிறுவா,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

வருவதற்கோவொரு தடையுமில்லைவீரவசுரர்களே
யேன்வீணாய்கெட்டுப்போரீர்
மருவுதிருமணிமார்பனருள்பெராதமடையர்களே
வுங்களுக்கேன்மதிதானீனம்



கருவுருவினமைப்பவிடவேரோர்நாயங்
கனவிலுமேநடவாதுகண்டிப்பாக
திருகுரைசொல்லாமலிதோவருகின்றேனய்யான்
செய்திடுமாக்கினைகளெல்லாம்செய்திடீரே.

வசனம்.

கேளுங்கள் மல்லர்களே இதோவருகிறேன் நீங்கள்செய்கின்ற ஆக்கினைகளைச்செய்யுங்கள் மல்லரே.

பொது-விருத்தம்.

கையொடுகாலுஞ்சேர்த்து கயத்தினாலிருக்கிக்கட்டி
வெய்யதோர்மலைமேலேத்தி விருப்பமோடுருட்டும்போது
வையமீரேழுமுண்ட மணிநிறவண்ணா கண்ணா
ஐயனேயென்றுதுன்ப மாற்றுவான்போற்றுவானே.

வசனம்;

**இத்தபிரகாரமாக மல்லரானவர் பிரகலாதனைப்பிடித்து மணி கயத்தினால் கையுங்காலையுஞ்சேர்த்து இருக்கிக்கட்டி ஆயிரம்யோசனை அகலமுள்ள மலையின்மேலேத்தி உருட்டுகிறபோது பிரகலாத சுவாமியானவர் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியினுடைய மந்திரத்தைதோ த்திரஞ்செய்கின்ற விதங்காண்க.**

**பிரகலாதனன்சொல்-கொச்சகம்.**

பரவுந்திரைபாற்கடலில் பன்னகமேல்விழிவளரும்
முராஹரியேமாதவத்தோர் மூலமணிவிளக்கே
உரமுடையமல்லரென்னை யுயர்மலைமேலேத்தியிதோ
கரகரவென்றுருட்டுகிறார் காருங்கருணாகரனே.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-சாமா-அடதாளம்;

ஆதிவேதமுதலில் ஜோதியாய்நின்றிடும்
ஹரிஓம்நாராயணனே — இந்த
அரக்கமல்லரென்னை இறுக்கிகட்டிமலைமேல்
தட்டுரார்நாயகனே — இதென்ன
ஆச்சரியமறியேனே — தந்தை
மாச்சல்வியங்குறியேனே — உந்தன்
அருளோஅஷ்டாக்ஷரப்பொருளோயிந்த — வேளைவந்
தாள்கொள்ளும்மாயவனே — (ஆதிவேத)

நீதியில்லாதமூடமல்லரெந்தனைக்கொல்ல
நெருங்குவதுஞாயமோ  பொல்லா
நிந்தைபேசியெந்தனைப்பந்துபோலுருட்டிட
நீர்செய்திடும்வுபாயமோ  இந்த
நிலமெங்கும்பழியாதோ  இராக்கத
குலமெங்கும்பழியாதோ  திவ்விய
நீலமுகில்மேனியாஜாலமின்னமே  னெங்கும்
நிறைந்தபரஞ்சுடரே  (ஆதிவேத)

காலனைப்போல்கடித்துவாள்பிடித்தென்மேல்
கெற்ஜிக்கின்றனையீன்  இந்த
கசடர்கையினிலென்னைகாட்டிகொடாமலேநீர்
காருங்கமலக்கையனே  உம்மை
கதியென்றுமடைந்தேனே  யென்னை
காப்பதுன்கடன்தானே  உந்தன்
கஞ்சமலர்ப்பதத்தைதஞ்சமென்றேயடைந்தேன்
கருணைசெய்கற்பகமே  (ஆதிவேத)

விண்ணவர்கட்கமுதம்வுண்ணும்படியளித்த
விமலசாஸ்விதாநந்தனே  மல்லர்
விரலினிலெனைகொலைபுரிவோமென்றலையுரார்
விஜயஞ்செய்தாளெந்தனை  இந்த
விதம்விட்டப்புரம்போமோ  பாவிகள்
மதங்கெட்டப்படியாமோ  இதெல்லாம்
விருதாகலவைக்கரிவராகாவுன்செயலல்லால்
வேறில்லைபார்புவிமேல்  (ஆதிவேத)

பொது-விருத்தம்,

மல்லரிந்தவிதமாகமைந்தன்தன்னை
மலைமீதிலேத்திமணிக்கயத்தால்கட்டி
கல்லுசெடிமுள்ளுகளுக்கிறைனீயென்றுக்
கடகடவென்றுருட்டினர்காணந்தவேளை
குல்லைமணியணிமார்பனருளினாலே
குழந்தைதனக்கோர்வடிவும்பட்டிடாமல்
மல்லிகையில்மலர்மெத்தையதைப்போல்பாலன்.
மகிழுவான்ஹரிபதத்தைப்புகழுவானே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக மல்லரானவர்பிரகலாதனைகட்டியுயர்ந்தமலை மேலேத்தி உருட்டினூர்கள் அந்தவேளையில் துளபமணிமார்பனுடை யருளினாலே குழந்தைக்கிவ்வோர்வடிவும்படாமல் அடிவாரத்தில் மல் லிகைமலர்மெத்தையின் னிகர்பூமிமேல் சயனித்துக்கொண்டு ஸ்ரீமந் நாரயணனைப்பூஜை செய்கின்றவிதங்காண்க,

தரு-இ-ம- துஜாவந்தி- அடதாளம்.

நாதனேயுன்துபாதம்கிணம்மைநானறியவசமோஅய்யா (நாத)
வேதனைப்ளித்திடும்போதனேநீலவிநோத்கமல்பொற்பாதனேலக்ஷ்மி

அண்டர்பணியுமெழில்கொண்டல்வண்ணனே இந்த
துண்டர்செய்யுங்கொடுமைக்கண்டையினில்வந்தாளும் (நாத)

யென்னுளுமுனதுசெம்பொன்னடியைமறவா
தின்னமுதவுபிரசன்னகோவிந்தாஹரி (நாத)

கரிதரன்முறையிடவந்துரிதமுடன்காத்திடும்
விரதாகலவைகரிவரதாவரமருளும் (நாத)

மல்லர்சொல்-விருத்தம்,

பலத்தில்மிகுந்தவீரப்படைத்தலைவர்களேகேளீர்
மலைபதிலேத்தியிந்தமைந்தனையுருட்டினேமே
நிலைபெரயடிவாரத்தில்நித்திரைசெய்தெழுந்தவன்போல்
யிலகியமுகங்களித்துயிருக்கும்வாறென்னசொல்வேன்.

வசனம்,

ஆ-ஆ இதென்னவாச்சரியம் இந்தமைந்தனை உச்சிமலையில்கட்டி யுருட்டிவிட்டோமல்லவா கல்லுக்கும் முள்ளுக்கும் தப்பித்துக்கொ ண்டு தேகத்திலவொருவடிவும்பட்டாமல் அடிவாரத்தில்வந்துபஞ்சணை மெத்தையின்பேரில் நித்திரைசெய்துயெழுந்தவன்போல் முகங்களித் து யிவன்இருக்கின்றவேடிக்கையை நாமென்னென்றுசொல்லுவோம் மல்லரே:

யானைமுகருரான்சொல்-கவி.

வீரரேனும்விரைவினில்சென்று
தீரராமிரணியதேவனூர்முன்னே
கோரதாய்கண்டநிலமைகளெல்லாம்
சீரதாய்யுரவும்செப்பிடுவோமே,

மல்லர்கள்-இரணியனுக்குச்சொல்-விருத்தம்.

ஐயனேபோற்றிபோற்றி அறியாதசிறுவன்றன்னை
மையவேமலைமேலேத்தி யுடபடென்றுருட்டிவிட்டோம்
செய்யநல்லடிவாரத்தில் செங்கதிருதயம்போலே
மெய்யனேவீற்றிருக்கும்வேடிக்கையென்னசொல்வோம்.

வசனம்.

சரணம்சரணம்சுவாமி தங்களுத்தாரப்படிக்கி பிரகலாதனை கொண்டுபோய் மணிகயத்தினால் குண்டுகட்டாகக்கட்டி உச்சிமலை மேலிருந்து உருட்டிவிட்டோம்பெரண்டுருண்டு வந்தவன்மேல்வொருவடிவும் படாமல்மலையடிவாரத்தில்வந்து யிளஞ்சூரியனைப்போல் பஞ்சணைமெத்தை தயின்மேல் சயனித்துக்கொண்டிருப்பதைப் போல் படுத்திருக்கின்ற வேடிக்கையை நாங்களென்னசொல்வோம் அந்தவதிசயத்தை தங்களுக்கு சொல்லவந்தோம் சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்.

மலைதனிலேத்தியென்மைந்தனையுருட்டியும்
மாளவுமில்லையெனச்சொல்லும்
நிலையிலாமல்லரேநிகழ்த்துகின்றேன்கேள்
நிலமதில்வாழுமொட்டர்களை
பலமதாயழைத்துப்பரித்திடுங்குழியில்
பலவிதகட்டைநெய்களையும்
சலசலனக்கொட்டிநெருப்பனதமூட்டிக்
தனையனையதிலெடுத்தெரிவீர்.

வசனம்.

கேளுங்கள் மல்லர்களே யென்குமாரனை நீங்கள் மலைமேலேத்தி யுருட்டியும் இறக்கவில்லையா நல்லதாகட்டும் இதோ வொருயோசனை சொல்லுகிறேன் கேளுங்கள் வொட்டர்களை வரவழைத்து ஆயிரம் யோசனை அகலமுள்ள ஆழமுள்ளதாக குழிகளைவெட்டி அதில்பலவித கட்டைகளையடுக்கி நூறாயிரங்குடம் நெய்களை சலசலவென்றுகொட்டி அனலைமூட்டி அதிலிந்தவனையெடுத்தெரியுங்கள்மல்லரே.

மல்லர்சொல்-தண்டு-கவி.

உலகினில்வாழும் வொட்டரேநீங்கள்
இலகியகொலுமுன் இக்கணம்வருவீர்

தன்பொடுபெண்டுபிள்ளைகளனுதினம்
சிறக்கவேகாலகடனைக்கழித்து
இன்றுடன்கவிவாணர்தன்பதத்தை
யேத்துவோமன்பரைபபோற்றுவோமித்தரை (ஒட்)

காவிமலர்வாவிசோலைகளுஞ்சூழும்
கலங்வைமாநகரினிலென்றும்வாழும்
பூவின்மங்கையைபுறமதில்வைத்திடும்
போற்றிக்கரிவரதனைபஜித்திடும் (ஒட்)

ஒட்டர்சொல்-தண்டு-கவி.

கும்பிடுகின்றோங்கோகிலரதேவே
அன்பொடுயெங்களையுமாதரித்திடுஞ்சதி
யின்பமுற்றிடவேயினியுனதுயுரைத்தால்
தென்புடனேசெய்வோம்சித்தமரம்படியே.

மந்திரிசொல்-விருத்தம்.

ஒட்டரேசொல்வேன்கேளீர்ரொருநொடிதனிலேநீங்கள்
மட்டிலாக்குழிவெட்டியுருவுங்கட்டைகளடுக்கி
திட்டமாய்நெய்களுந்திச்சொரியழலனலமூட்டி
துட்டனேயனலெருப்பில்தூக்கியேயெரிகுவீரே

வசனம்.

கேளுங்களய்யா வொட்டரே நீங்கள் அரைநொடிக்குள்ளாகவாயிரம்யோசனை அகலமுள்ள-ஆழமுள்ள குழிகளை வெட்டி சந்தனம்தேக்குகுங்குமம் பலாமுதலியனவும் மரங்களை வெட்டி அதிலடுக்கித்தூக்குந்த நெய்களைக் கொட்டி வடவாமுகாக்கினியை போலேதீகளை மூட்டி துஷ்டப்புலசி பிரகலாதனை தள்ளிவிடுங்கள் வொட்டர்களே.

ஒட்டர்-குழிவெட்டுகிற-தரு-இ-ம்-மத்தியாவதி-ஆதிதாளம்.

வெட்டினாரொட்டர்குழியிதோ வெட்டினாரொட்டர்
வெட்டினார்திட்டமாய் கட்டளையின்படி
சட்டுயென்வெட்டியால் சட்டமதாகவே (வெட்)

ஆயிரம் யோசனையகலங்களமாழம்
அளவுங்கெஜகோல்கொண்டுதளபதிகளால்விண்டு (வெட்

பூமியெங்கும்திரபொருப்புகளுஞ்சிதர
புரைப்பரரைகளைதட்டிகிரைப்பரைகளையொட்டி (வெட்

வட்டிபார்த்தவர்களிரல்குலைவரண்டு
யேங்கிசித்திரைகளில்சேர்ங்கிசெரக்கியேவிழ (வெட்

கலவயில்கிலேதரும்கரிவர்தருடிணைய
கருதுமைந்தனுக்காகிருதர்சொற்படிக்குழி (வெட்)

ஒட்டர்சொல்-கவி.

கிருதமல்லர்களேநீங்கள்மகிழ்த்திப்படியேநாங்கள்
துரிதம்தாகவேதான்தோண்டியக்குழியைப்பாரீர்
பிரியமாய்க்கட்டைமுட்டைபெருங்குடநெய்கள்விட்டு
எறிதணல்மூட்டியக்தயினனைவெரிப்போம்வாரீர்

வசனம்.

கேளுங்கள் வீரமல்லர்களே தங்கள்மெஜமான் உத்திரவின்படி ஆயிரம்யோசனை யகலம் கிளம் ஆழமுமுள்ள குழிவெட்டியாச்சுது இதோபாருங்கள் இனியேன் தாமிஷம் அதற்குத்தகுதியாகியகட்டைகளும் நெய்களும்கொட்டி யீனதுற்குணமுடையபிரகலாதனை அதில்யெடுத்துயெரிப்போம் வாருங்குரமல்லரே.

படைவீரமல்லன்சொல்-விருத்தம்

இப்பெருங்குழியைப்போலே யெங்குநாம்கண்டதில்லை
செப்பமாய்வீரரேனும் சேர்த்திடுங்கட்டையெல்லாம்
கொப்பெனயெடுத்துப்போட்டுக் குடங்கள்நெய்களையேயூத்தி
தெப்பனவோடிநீங்கள் தீதனைமூட்டுவீரே.

வசனம்.

ஆ ஆ இவ்வளவு ஆழமாகிரமுமுள்ள குழியை நானெங்கும் கண்டதில்லை அந்த பிரகலாதனுக்கு இதிலேதான் முடிவோகரிகாம்சேர்த்துவைத்திருக்கின்ற கட்டைகளை அதில் நிறப்பி சாடிசாடியாயிருக்கின்றது குடநெய்களையூத்தி ஆகாசம் தீகொழுந்துமுட்டும்படி தீயைமூட்டுங்கள் மல்லரே.

வீரமல்லர்சொல்-தண்டு-கவி.

ஐயனேயுந்த னுக்கிளைப்படியே
மெய்யனே தியை மூட்டினோமையா.

மல்லர்சொல்-விருத்தம்.

தாட்டியாயுனையிப்போது தணல்குழிதனிலேதள்ளி
வாட்டியேவிடுவோம் வல்லவுன்தந்தைபோரை
போட்டிசெய்யாமலிப்போ புகழ்ந்துநீமகிழ்ந்துபோற்றி
மேட்டியென்றுரைப்பையானால் மென்மேலும்வாழ்வாயப்பா.

வசனம்.

அப்பா பிரகலாதனு யேன்வீணு யிந்தநெருப்பில் மடிந்துபோய் விடுகிறாய் வேண்டாம் இனிபோனதுபோகட்டும்இனிஉன்தந்தையினு டையநாமத்தை சொன்னதேயாமாகில் இன்னம்சிலகாலம் சிலகாலம் வாழ்வாயப்பா பிரகலாதனு.

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

அப்பனென்றிடுமாதிநாராயண
    னடிகளைன்முடிதனிற்சூடி
துப்புரக்கபடவஞ்சனைகளைச்செய்திடுந்
    துரோகியைத்துதிக்கவாய்வருமோ
யெப்படியாகிலும்யெம்பெருமான்செயல்
    யேனெனைமிரட்டுநீர்வீணாய்
ஒப்புரநீங்கள்சொல்வார்த்தைகள்தனக்கு
    வுள்படேனெள்ப்ரமாணமுமே.

வசனம்.

கேளுங்கள் மல்லர்களே சகல உலகத்தாருக்கும் அப்பனாகியநா ராயணனுடைய திருவடியடியேன் முடியிற்சூடிக்கொண்டு கபட்டயி ருதயமுடைய இராக்ஷதனைசொல்வதற்கு என்னுவிசையுமா ஹரிஹரி யெப்போர்கொற்ற துள்பங்கள் வந்தபோதிலும் யெம்பெருமான்செய லேயன்றிவேறொன்றில்லை நீங்கள் யென்னசொன்னபோதிலும் யென் உள்ளத்தில் யெள்ப்ரமாணமுங்கொள்ளாது மல்லரே,

மல்லர்சொல்-விருத்தம்.

வடவனல்போலேதீயை வளர்த்தியகுழியிலுன்னை
    திட்டமுடனிருக்கிக்கட்டிச் செண்டுபோலெடுத்தெறிந்து
உடல்தனைப்போகநீராய் வொருநொடிதனிலேசெய்து
    தடமுகுமன்னன்முன்போய் சாற்றுவோம்ஜவிதியாக,

வசனம்,

அடாயாரடா வீரமல்லரே யிவன்மகா துன்மார்க்கமான வார்த்தைகளையெல்லாம் பேசுகுறான் வடவாமுகாக்கினிபோல வெரிகின்ற அக்கினி குழியில் யிவனை தூக்கியெரியுங்கள் அவனுடலை நீராகசெய்து நமதுதேவனுக்கு போய்சொல்லி விடுவோமல்லவோ.

தரு-இ-ய-நீலாம்புரி-அடதாளம்.

பாலனைநெருப்பினில்பாதகமல்லர்கள்தள்ளிறோரே
பாரிலகழ்ம்பாகுநெருப்பசர்க்குமனநடுங்கித்துள்ளிறோரே
சிலமாமியபதேவர்க்கம்கலங்கிமனம்வாடினுரே சிலர்
தீயனலிதாளாமல்வாய்விட்டலறிகொண்டுவோடிறோரே
சேமகம்பாகிவவாயிரங்குடநெய்யையூத்திட்டாரே (டாரே
நெருப்பெங்குமுயர்வாளம்பரப்பெங்கும்மெழும்பவேயேத்திட்
வடவனல்போல்வேதுடிகொண்டநெருப்பினைநோக்கிறோரே அழுது
-மாமுனிவோர்களும்சாமரைகண்கள்நீர்வாங்கிறோரே
அடிமுடியளவிடாயானந்தபூரணஅமலனே நினைந்
தன்புடையானந்தவாரியில்முழுகியவிமலனே
வாள்தண்டுசங்குவில்சக்கரமேந்தியகைபனே இந்த
மண்ணினில்வாழும்வுயிர்க்குயிராகியமெய்பனே
அன்பரிடத்தினிலின்பமாய்பொருந்தியசோதியே இந்த
அனல்வந்துயென்மீதில் கனல்கின்றதென்னுவுபத்தியே
இன்பமுந்துன்பமுமின்பாதகமல்லாமல்வேருண்டோ இந்த
தொல்லைநெருப்பினில்செல்லுகள்போல்வேகுவாருண்டோ
பொல்லாதபாதகமல்லர்கள்கையில்சிக்கினேனே சிக்கி
புழுகவுமழுகவுமநானென்னகுறைகள்செய்தேனே
கல்லாதமீருள்ளம்சொல்லாதமோகதண்டபாணியே சங்கு
சக்கரமேபரிபூரணனேவந்துகாருமே
அண்டமுமவானமுமவுண்டுமிழ்ந்தருளியவாபனே நின்
அகிலமுமபுவனமுமயணுவுமாய்காத்தருள்மாயனே
தொண்டர்புகழ்ந்திடமண்டலநீர்போல்குளிர்ந்ததே சல
தோய்ந்துமுழுகிகரைபாய்ந்தவர்போலின்பம்வளர்ந்ததே.

பிரகலாதனன்சொல்-கொச்சகம்.

மாமலரின்மகள்மருவும் மாதவனேயுந்தனிரு
தாமரைபொற்பாதமதைசேர்ந்தேதன்தனையென்மேல்
சேமமொடுமெல்லரிடும் நெருப்பதனைக்குளிர்ந்த
சோமனைப்போலாக்கிவிடும் சேர்திமணிவிளக்கே.

தேவாரம்.

வேதனையளித்ததாதா விமலசாரங்கபாணி
நாதனேயெனையாள்கொள்ளும் லக்ஷிமிமகிழ்சமேதா
தீதுசெய்யரக்கர்கையில்சிக்கினனலேகின்றேனே
மாதவாஹரிகோவிந்தா வந்தெனைரக்ஷிப்பாயே.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-சஹாணு-ரூபகதாளம்.

ஆதிமூலமேயுந்தன்னடைக்கலமென்றடைந்தேன்
அடியேன்குறைதீரவருவாயேஹரிநீயே-முராஹரி (ஆதி)

சோதிமணிவிளக்கேசெழும்சுயமேயெங்கும்மயமே
துரையேயருள்புரிவாய்வரந்தருவாய்-முராஹரி (ஆதி)

என்னுளமுன்பாதமதையேற்றிதொழுஞ்சிறியேன்
யின்பமுடனன்பர்பணியீசரவெங்கடேசா-முராஹரி (ஆதி)

வல்லோர்புகழ்கலைகரிவரதாவரமருள்வாய்
வாசஜெகதீசாபிரகாசசர்வேசா-முராஹரி (ஆதி)

பொது-விருத்தம்.

அண்டமுளாவியக்கனலும்மவிழுந்துநீராய்
யலர்தடம்போலாயினதும்பாய்பாலன்
விண்டுகுளித்தெழுந்துகரைமீதிலேறி
விஷ்ணுதனைபஜனைசெய்துவிருக்கும்போது
துண்டாமல்லர்கண்டுபயங்கொண்டுவோடி
துரையிரணியர்க்கிதைநாம்சொல்வோமென்று
தெண்டனிட்டுயடிபணிந்துநகரைநோக்கி
செல்லுவார்மன்னனுக்குச்சொல்லுவாரே.

வசனம்

இந்தப்பிரகாரமாக ஆர்சத்தை யளாவிய அக்கினியானது பிரகலாதனனைத் தள்ளினமாத்திரத்திலே தாமரைதடாகம்போலாயினது அத்தடாகத்தில் பிரகலாதனவர்குளித்து கரையேறிவந்து திருநாமங்களை தரித்துக்கொண்டு துளசிமாலையை மார்பிலேயணிந்து ஸ்ரீமந்நாராயணமந்திரத்தை பஜனைசெய்துகொண்டிருக்கின்றதைக்கண்ட மல்லரானவர்பயந்து யெழுந்தோடி இரணியனுக்குசொல்லுகின்ற விதங்காண்க.

மல்லர்சொல்-விருத்தம்,

அக்கினியாலும்பிள்ளைக்கவதிகளொன்றுமில்லை
இக்கணம்வோடிவந்தோம்யென்னதான்செய்வோமின்னம்
திக்கெலாம்புகழுமுந்தன்சிறுவனுக்குடலிலொன்றும்
தைக்கவேயில்லையயாசாற்றினோமறிந்திடீரே,

வசனம்.

கேளுமையா சுவாமி தேவரீர்சொன்னபிரகாரம் உமதுபுத்திரனு கிய பிரகலாதனை கொண்டுபோய் அக்கினிகுழியிலே தள்ளினோம் அப்போது அவன் தாமரைகுளத்தில் முழுகியெழுந்து கரையேரின வனைப்போல யிருக்கின்றான்அதைகண்டுநாங்கள் பயந்துவோடிவந்து உமக்குசொல்லவந்தோமையாசுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்.

தீநெருப்பினிலேபோட்டு மிறக்கவுமிலையாபாலன்
பரிவொடுகனலிதன்னைப் படுசிறைதனிலடைத்துப்
பெரிகியபுவியைத்தாங்கும் பாம்புகள்தனையழைத்து
திருகவில்லாமலெந்தன் சேயன்மேல்விடுகுவீரே.

வசனம்.

அடாமல்லரே நீங்கள் அக்கினிகுழியில் தள்ளியும் அந்த அக்கினியானவன் வஞ்சனைசெய்து விட்டானல்லவா நல்லதாகட்டும் பின் புவிசாரித்துக்கொள்ளுகுறேன் அதுவரையிலும் அந்தகனலி யென்பவனை சிறையிலடைத்துவிட்டு நீங்கள் யிந்தபூமியை சுமக்கானின்ற அனந்தன் சங்குபாலன்குளிகன் சாற்கோட்கன்வாசுகிபதுமன்முதலா கி அட்டநாகங்களை வரவழைத்து பிரகலாதனன்பேரில் விட்டுக்கடிக்கவிடுங்கள் அந்தவிஷங்களேறி நிமிஷத்தில் யிறந்துவிடுவான்மல்லர்களே.

மந்திரிசொல்-விருத்தம்.

நடாமணிகளைக்கொண்டு சற்பங்கள்தனைபிடித்து
முடாக்களிலடைத்துக்கேர்மி முட்டையைகொடுத்துக்காக்கும்
பிடாரனேநீதான்பாம்பு பெட்டிகளெடுத்துக்கொண்டு
நடாலெனகொலுவுக்கிப்போ சலிதியில்வருகுவாயே,

வசனம்.

அடா யாரடா பிடாரனே அகிலத்திலுள்ள சகலசர்ப்பங்களைபி டித்து முடாவிலடைத்து கோழிமுட்டைகொடுத்துவளர்த்துவைத்து க்கொண்டிருக்கின்ற பாம்பு பெட்டிகளையெடுத்துக்கொண்டு சீக்கிரம் வோடிவாடா.

பிடாரன்வரும்-பொது-கவி.

ஜெகஜாலமோகனம் திங்காரணமாரணம்
வகையுள்ளமூலிகை மைசிமிழ்யெடுத்து
நிகரான அஷ்டகர கங்களைக்கொண்டு
தக்வரகயிரணியன் சபையில்வந்தனனே;

வசனம்.

இவ்விதமாக பிடாரனானவன் அஷ்டகர்கங்களை யெடுத்துக்கொ ண்டு ஸ்தம்பனம் மோகனம் மாரணம் சல்லியம்தொட்டியம்மென்னும் மந்திரவாதியாயிருக்கின்றவர்களை ஜெயித்து பிருந்துகளைப்பெற்றுக் கொண்டு பிடாரன்யிரணியன் சபைக்கிவருகின்ற விதங்காண்க.

தரு-இ-ம்-தன்னியாசி-யேகதாளம்.

பாம்புபிடாரன்வந்தானே-யிதோ-பாம்புபிடாரன்
வேம்புசென்னலஞ்சிவேர்கள்தனைக்கொண்டு
தீம்புசெய்மந்திர தீர்தனைவிண்டு (பாம்பு)

கொச்சிமலையாளங்கோகரணம்டில்லி
கொங்கணர்வங்கணர்நாடும் செழும்
மச்சமராட்டம்விராடம்மரிகா
மாற்கமைரோபாசெப்பேடு பாரும்
கட்செவியைகையிலெடுத்தாட்டுவேன்
கனமான்குளிகைகளைகூட்டுவேன்
இச்சையுள்ளோரின்பமைதீட்டுவேன்
யென்றுகனமென்றுபெருங்குன்றதைவென்றுயிதோ (பாம்பு)

எதித்தமந்திரவாதிகளைக்கண்டால்
யேங்கிதவித்திடசெய்வேன் மோடி
யெவர்வைத்தாலும்பின்வாங்கிடாமல்கையால
பெட்டிப்பிடித்தடைவேன் வெகு

கரித்தஜாலகண்ணாடியைவெல்லுவேன்
கனமானவேருவுடைகல்லயச்சொல்லுவேன்
துதித்திடுங்குட்டிச்சாத்தியைமெல்லுவேன்
கொப்பனயிப்பெருஞ்சற்பமோடியிதோ (பாம்பு)

பஞ்சலக்ஷணவிதரணகாவிய
பாகவதராடிகாடி புகழ்
பலவிலக்கண நூல்கவிவாணர்தன்
பண்பைமிகவுங்கொண்டாடி
வஞ்சகம்பேசியேவாணரை தூஷிக்கும்
வாய்மதத்தால்தன்னைத்தானேபூஷிக்கும்
பஞ்சைகளஞ்சிபரக்கவேரோஷிக்கும்
பாகன்கலவயின்தியாகருளினால் (பாம்பு)

பிடாரன்சொல்கவி.

உலகினில்நிலைபெற்றோங்கியும்பர்கள்நடுங்கதாங்கி
நிலைபெரயாசளிக்குமிணையடிபோற்றிபோற்றி
இலகியகொலுவின் முன்னேபெங்கனையழைத்தசேதி
தலைவரேநினைமுகிழ்ந்துதனயனுக்குரைசெய்வீரே.

வசனம்

சரணமசரணம்சுவாமிஅடியேனைஅழைத்தவிபரம்தெரியசொல்லும்சுவாமிகனே

மல்லர்சொல்-விருத்தம்

அடித்தெதிர்பேசும்பொல்லாதுன்மார்க்கப்பயலைமன்னன்
மடித்திடவேண்டுமென்று மதித்துனைவரவழைத்தார்
படித்தனிலிருக்கும்அஷ்ட புலவிதநாகத்தாலே
கடித்திடச்செய்துமந்த காளையைக்கொன்றிடாயே.

வசனம்.

அடா பிடாரா யெங்கள்தேவனுருடைய குமாரனுன் பிரகலாதனென் துன்மார்க்கபுத்தியால்யெதிர்த்துபேசுகிறபடியால் உன்னைவரவழைத்து அஷ்டநாகங்களையும்விட்டு கடிக்கச்செய்து கொல்லும்படி உத்திரவு கொடுத்து இருக்கிறார் நீசீக்கிரமாக நாகங்களை அவன்மீதில் விடுவீடு பிடாரனே.

பிடாரன்சொல்-கவி,

பாலகாயுந்தன்தந்தைப் பதமதைத்துதிசெய்யல்லால்
ஆலகாலத்தைப்போலே யனேகநாகங்களெல்லாம்
சாலவேயுன்மேல்விட்டு ஐாடியேக்கடிக்கச்செய்வேன்
கோலங்காட்டாமல்நீதான் கொப்பெனவுரைசெய்வாயே.

வசனம்.

அடாசிறுபயலே யென்னுடைய சுரூபம் உனக்குத்தெரியமாட்டாதோ இப்பவும் உன்தந்தையினுடைய நாமத்தை தியானஞ்செய்தாலாச்சுது யில்லாவிட்டால் ஆலகால விஷங்களையுடைய நாகங்களையுன் பேரில்விட்டுக் கடிக்கச்செய்து கொன்றுவிடுவேன்சொல்லடாசொல்

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

கொப்பெனவெழுந்துவந்து கோபித்திடும்பிடாரா
அப்பன்தன்செயலில்லாமல் யணுவசையாதும்மேல்
குப்பென்றுசீறிமீருங் கொடியநாகத்தையென்மேல்
தொப்பென்றுபோட்டிட்டாலும் சோதிமாலடிவிடேனே.

வசனம்.

கேளும் பிடாரனே நீயென்னிடத்தில்வந்து யென்கோபித்துக் கொள்ளுகிறாய் யெல்லாம் அப்பனுடைய செயலேயன்றி வேறொரு அணுவுமசையாது யென்பேரில் குப்பென்றுநாகங்களைப்போட்டபோதிலும் திருமாலைமறவேன்.

பிடாரன்சொல்-விருத்தம்.

பேழையிலிருந்திடும்பெரியநாகங்களையும்
பெருத்தபடமெடுத்துவெகுண்டுச்சீறி
தாழ்வதிலாமலேதனையனைக்கடித்துச்
சவிதியில்விஷத்தலைக்கேறி
கோழைதன்வாய்தனில்கொப்பளித்தெகரிடக்
குரிதிகள்சிதரிடமண்மேல்
வாழைபோல்பூமியில்வீழ்ந்திரங்கிடவுமே
வல்லுயர்நீக்குவீரிப்போதே,

வசனம்.

கேளுங்கள் நாக கூட்டங்களேநீங்கள் பேழையைவிட்டு சீறி யோங்கி படமெடுத்து இந்தச்சிறுவனைக்கடித்து விஷந்தலைக்கேறிவாழைத்தண்டைப்போல் பூமியில்விழுந்து யிறக்கும்படி அவன் உயிரை வாங்கிவிடுங்கள் நாகங்களே.

நாகங்கள்படமெடுக்கும்-தரு-இ-ம-மாஞ்சை-ஏகதாளம்.

சீறிமீறிப்படமெடுத்ததேசிறுவனைக்கோரி அஷ்ட
சித்துகளாடம்பரசித்தனிவனென்றுதெரியாமல் பெரும்
வாரியிற்றுயிலும்வண்ணனடிதனை
வந்தனம்செய்திடும்மைந்தனென்றெண்ணாமல் (சீறிமீறி)

ஓங்கியெழும்பிஉயர்ந்துநின்றதுஉள்ளமுங்களித்து யிப்போ
தோடிக்கடிக்கவும்கூடுமோவென்றுதன்னுடல்தனைநெளித்துபொல்லா
தீங்குசெய்பற்களைத்திட்டியேகூட்டியே
சேயரெழில்நெஞ்சமாயமறியாமல் (சீறிமீறி)

வடகனல்போல்கண்களிற்பொறிவந்துமேபரக்க வால்
வளைத்துநீட்டிதளத்திக்காட்டிவாய்தனைதிறக்கி கொடும்
விடமுடையவரவங்கள்யாவுமே
வீசியேநின்றுபேர்சுவாசமொடுயிதோ (சீறிமீறி)

அக்கினிபோல்விஷங்களைபாம்பாடிக்கடிக்க மல்லர்
ருகிலிருந்தவர்களோடியதிர்ந்துமேவெக்க கேரில்
கைக்கனிபோலகலைவநகர்மேவிய
கரிவரதர்தன்திறமறியாமல் (சீறிமீறி)

பொது-விருத்தம்.

சீறியகண்சிவந்துதிசைஅஷ்டநாகமுஞ்
சிறுவனிடைகைமேலுங்கரின்மேலும்
யேறியதோள்மார்மேலுங்கழுத்தின்மேலும்
யெழில்வதனஞ்சிரமேலும்யிடுப்பின்மேலும்
நாரியதுகடித்துவிஷங்கக்கும்போது
துய்யபரந்தாமனெனுந்திருமால்பாதங்
கோரியனுதினமன்தில்சிந்தித்தேற்றும்
கோவிந்தஅடியிணையைகூறுவானே.

வசனம்.

இந்தபிரகாரமாக பிடாரனானவன் அஷ்டநாகங்களைஉச்சரித்து பிரகலாதனன்பேரில்விட அந்த நாகங்களானது சிறி கண்சிவந்து சிறுவனுடைய மார்பிலும் முகத்திலும்தோளிலும் தாளிலும்கடித்துவிஷங்களைகக்கும்போது பிரகலாதனானவர் ஸ்ரீமந்நாராயணமந்திரத்தை தியானிக்கின்றவிதங்காண்க,

பிரகலாதன்சொல்-கொச்சகம்.

துங்கமிகுதிருமலைமேல் துலங்குமெழில்வாசவனே
அங்கமதுபதரிடவே அரவமென்மேற்சிறிவர்
சங்குசக்கரகட்க கோதண்டமொடுதெண்டுடனண்டையினில்
திங்களொளிபோல்வருவாய் தேவாதிருமாலே.

பிரகலாதனன்சொல்-தேவாரம்.

அய்யனேயமரர்க்கன்று வமுதமுங்கடைந்தளித்த
மெய்யனேகடலிற்பாந்தள் மேல்துயில்பவனேசக்கர
கையனேயலரந்திடுஞ்செங் கண்ணனேவிண்ணோர்போற்றுஞ்
செய்யனேயரவமென்மேற் சீறியேவருகுதையா.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-பூரி-கல்யாணி-ஆதி-சாபுதாளம்.

ஹரியேகண்பாராய்யம்புஜதளநயனஸ்ரீ
துரையேயினிநேராய் ஹரியே

கரிமுறையிடவந்திடுங்கருணாகரா
திருவடிதந்தெனையாளிதுததிமுர ஹரியே

வேதனையளித்திடுநாதநேகமலபொற்
பாதனேசிறியேன்வாதனைதீர ஹரியே

இந்திரைமனமகிழ்சந்திரவதனா
மைந்தனென்மீதினில்சிந்தைகூர்ந்து ஹரியே

பொரியருள்பெருகுநல்திருகலவயில்வாழ்
கரிவாதரேயெந்தநிருவினைதீர ஹரியே

பொது-விருத்தம்.

படமெடுத்துமாடியநாகங்களெல்லாம்
பல்லொடிந்துதலைவணங்கிப்பதிங்கிவீழ்ந்து
கடகடென்றுப்புரண்டுருண்டுமூர்ச்சையாகி
கதிர்தனைக்கண்டிடும்பனிபோல்கலங்கிபோகத்

திடமுடனங்கிருந்தபிடாரனுமெழுந்து
திகைத்துபயந்துதிகைத்தோடிவிட்டான்
மடமடவென்றெழுந்திருந்துவோடிமல்ல
ரறிவிப்பார்யிரணியன்முன்தெரிவிப்பாரே.

வசனம்.

இவ்விதமாக சற்பகூட்டங்களானது பிரகலாதனன்செய்தோத்திரத்தை கேட்டமாத்திரத்திலே பல்முறிந்து மயக்கங்கொண்டுபூமியிலேவிழுந்து கடகடவென்றுபுரண்டு சூரியனைக்கண்ட பனிபோல் வோடிவிட்டது அங்கிருந்தபிடாரனும் பயந்துவோடிவிட்டான் அதைக்கண்டமல்லரானவர் இரணியனுக்குசொல்லுகிறவிதங்தாணக,

இரணியனுக்கு-மல்லர்சொல்-விருத்தம்;

கடவுளேபாம்பைக்கொண்டு கடிக்கவேவிட்டோமையா
படமெடுத்தெதிர்ச்சிறி பாலகனேதோசொன்னான்
தடதடவென்றுருண்டுவீழ்ந்து சதிசெய்துவோடிப்போச்சு
திடமுடனிதையும்க்குச் செப்பவேவந்தோமையா,

வசனம்.

சுவாமி நாங்ளென்னத்தை சொல்லுகிறது நாகங்களைப் பிரகலாதனன்மேல் விட்டமாத்திரத்திலேசீறின பாம்புகள் யேதோவொருவார்த்தைசொன்னான் வுடனே தடாலென்று பூமியிலே சுருண்டுவிழுந்து பாம்புகள் வோடிப்போச்சுது சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்.

நாட்டிசையரவமெல்லாம் நடுங்கியோதரிவோர்களே
தேடியாயுதமெடுத்து தீவிரமாய்ச்சென்று
கீழ்திசைதனைக்காக்கும் கெஜமுதைவரவழைத்துக்
கூட்டியேகுமாரனைக்கொல்லுவீர்வெல்லுவீரே,

வசனம்,

வாருங்கள் மந்திரிமார்களே அந்த அஷ்டநாகங்களும் அந்தசிறுபயலைதக கடுங்கியோடிப்போய்விட்டுதென்று சொன்னீர்களல்லவா நல்லதாகட்டும் யிப்பவும் கீழ்திசையில் வாசம்செய்யும்படியான கெஜமென்னும்யானையை அழைப்பித்து அதின்கையில்இருப்புலக்கையைக்கொடுத்து முழும்தங்களையேற்றி அதின்காலால்மெரித்துத்துவைத்துவிடும்படிசெய்யுங்கள் மந்திரிகளே,

மந்திரிகள்சொல்-விருத்தம்.

தங்களிஷ்டப்படிக்கித் தனையன்மேல்கெஜத்தைவிட்டு
கண்களும்பிதுங்கவேதான் காலினால்மெரிக்கச்செய்து
இங்கிதமாகயின்று யாவரும்றிவதாகப்
பொங்கமாய்வருகின்றோம்பார் பூபனேயரைநொடிக்குள்.

வசனம்.

கேளுஞ்சுவாமி தங்களிஷ்டப்படி மதயானையை சிறுவன்மீதில் விட்டு மிதிக்கச்செய்து அரைநொடியில் வருகிறோம் சுவாமி.

மந்திரிகள்சொல்-கவி.

ஆமடாவீரரே யரைநொடிதனிற்போய்
சீறியேயந்த தேவயிந்திரன்தன்
வீரியகெஜத்தை வேகமாயிங்கு
நேரினில்வரவே நிமிஷத்திற்செய்வீர்.

மல்லர்சொல்-கவி.

திடமொடியிரணிய தேவனுருன்னை
யடைவொடுகெஜமதை யனுப்பிடச்சொன்னார்
தடையதிலாமலே சலுதியிலிந்திரா
வடிவுளகெஜமதை வனுப்பிடுவாயே,

பொது-விருத்தம்.

பலவீரர்சொல்கேட்டிந்திரன் பயந்தெழுந்தோடியேதன்
நிலைபானகெஜத்தையோட்டி நிருதமல்லர்கள்பின்கூட்ட
மலைபோல்தன்துதிக்கைநீட்டி மாருதிபோல்காதாட்டி
உலகோர்கண்டமளிநிற்க வுதட்டியாய்வருவதைப்பார்

வசனம்.

இவ்விதமாக வீரர்சொல்லக்கேட்ட இந்திரனானவன் பயந்துதன் கெஜத்தையனுப்ப அந்த கெஜமானது வீறிட்டுவருகிற விதங்காண்க

மதகெஜ யானைவருகிற-தரு-இ-ம்-நாட்டை-அடதாளம்.

மதகெஜமிதோவந்துதே - சினங்கொண்டு.
மதகெஜமிதோவந்துதே

துதிபெருமுலகையாள் பதியெனுமிரணியன்
சதிர்பெருஞ்சபைதனில் குதிகுதித்தெழும்பியே (மதகெஜ)

கனகவெண்டயம்பூட்டி யக்காலேகலீலென்றுட்டி
தினகரனெளிபோல்சூட்டி தும்பிதனைமுன்னீட்டி (மதகெஜ)

கண்டோர்மனங்கலங்க கண்டாமணிதுலங்க
மண்டுபோரிலிலங்க மண்புவியுங்குலுங்க (மதகெஜ)

மரமட்டுகளைசாய்த்து மடக்கியொடித்துதேய்த்து
திறமிட்டடியைப்பேர்த்துச் செழிக்குஞ்சபையைப்பார்த்து ()

இலகியகலவயின் நிலேகரிவரதன்தன்
மலர்ப்பதந்தொழுமைந்தன் பலமறியவேயிதோ (மதகெஜ)

மல்லர்-பிரகலாதனனுக்குச்சொல்-விருத்தம்.

மன்னவன்சொற்படிக்கு மதகெஜமதைவிட்டுந்தன்
சென்னியைமிதிக்கச்செய்து சின்னபின்னங்கள்செய்வோம்
பொன்னவன்பேரைநீதான் போற்றிடுவாயேயானல்
தெண்ணியமாகயென்றுங் கெடியுலகினில்வாழ்வாயே.

வசனம்,

கேளும் பிரகலாதனு உன்தந்தை உத்திரவின்படி இதோமும்மதங்களையேற்றி மதயானையைக் கொண்டுவந்திருக்கின்றோம் உன்தலையைமிதித்து சின்னபின்னமாக்கிவிடும் ஏன்கெட்டுப்போகிறுய் இரணியநமாவென்று சொல்லுஞ்சிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

ஈனரேயுங்கள்வார்த்தை யேற்குமோவெனக்கெப்போதும்
கியானமில்லாமலேன்வீண் காக்கைபோல்கத்துகின்றீர்
வானளாவியகெஜத்தை வருத்தியென்மேல்விட்டாலும்
ஞானமாதவனுமெங்கள் நாரணன்றனைவிடேனே.

வசனம்.

கொஞ்சமாகிலுங் கியானமில்லாத மூடமல்லரே உங்கள் வார்த்தை யென்செவிக்கேற்குமோ யேன்காக்கைபோல் கத்துகின்றீர் இதைப்பார்க்கிலும் ஆகாயமளாவிய யானையாயிருந்த போதிலும் யெம்பெருமானைவிடேன் மல்லரே.

மல்லர்சொல்-துண்டுகவி.

மதகெஜமேனி விதவிதமாக
சுதனுவன்றன்னை வதையதுசெய்வாய்

பொது-விருத்தம்,

கதித்தெழும்பெகிரிச்சீறி கண்களுஞ்சிவந்துயானை
துதிக்கையைநீட்டியாட்டி துரிதமாய்பாலன்மீதில்
யெதிர்த்துக்கொன்றிடுவோமென்று யெதிர்வந்துநிற்கும்போது
நிதித்தவரதசேயன் நெடியமாலடிபூசிப்பான்.

வசனம்,

இவ்விதமாக மதயானையானது சீறிமீறி யெகிரி சிறுவன்மீதில் தூரி கொல்லுவோமென்று யெதிரில்வந்து நின்றதைப்பிரகலாதனனு னவர்பார்த்து அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராகிய ஸ்ரீமந்நா ராயணமூர்த்தியை தோத்திரஞ்செய்கின்ற விதங்காண்க.

பிரகலாதனன்சொல்-கொச்சகம்.

வேதமுதலாதியெனு வித்தேவிளங்குமெழில்
மாதவமே மெய்ஞ்ஞானவாழ்வே மணிவிளக்கே
காதகமல்லர்கள் மதகஜமதையென்மேல்விடுத்தார்
நீதரவந்தெனையாளுந் தேவாதிருமாலே.

தேவாரம்.

வேதமேவேதவித்தே விளங்கும்வாரிதியேமுத்தே
நாதமேநாதசித்தே நான்மறையறியாசத்தே
போதமேபோதகத்தின் பொருந்தியும்பொருந்திலாத
நீதமேநீதத்துள்வாழ் கெருடவாகனனேபோற்றி.

தேவாரம்.

மதகெஜயானைதன்னை மைந்தன்மேல்விடுக்கச்செய்து
சதிருடன்பார்க்கின்றாயோ சக்கராயுதனேயையா
ததியிதுவெனையாட்கொள்ளும் சாரங்கமேந்துங்கையா
கதியெனவுனையடைந்தேன் கெருடவாகனனேபோற்றி

பிரகலாதனன்-தரு-இ-ம்-பந்துவராளி-அடதாளம்.

கெஜமதே வாராய் - யுன்னாலான
துஜமதே பாராய்

திசையாளுமிரணிய னிசையும்படியேயென்னை
விசையொடுகொல்லவேவந்த மசைவில்லாமலேமந்த (கெஜம)

முன்னாளிலுன்தந்தை முதலைவாய்தனிற்சிக்கி
மூறிபட்டுடம்பெல்லாம் முறையிட்டுமெலிந்தாதி
மூலமென்றோத தந்திதுக் காலமென்றோத-அப்போ
பொன்னால்கெருடனேறிவந்துகாற்குமெங்கள்
பொருளைமிகம்றந்தும்அருள்கொண்டகலவந்த (கெஜமதே)

ஆதியந்தமாகியகிலபுவனமாகி
ஆகமும்ரூபாகிஅஷ்டாக்ஷரங்களாகி
அமைந்தசர்வேசன்யென்னுளந்தனில்நிரந்தரவாசன்
உகமையில்லர்சோதியிருபதத்தை துதிக்குமடியார்களைத்
தொடர்ந்துமடிப்பேனென்றுமடர்ந்துதுடித்துவந்த (கெஜமதே)

செய்தநன்றியெண்ணுதீய துற்சனர்போலே
சீறிமதத்தைக்காட்டிமீறிதுதிக்கைநீட்டி
சிக்கவந்தாய்யுன்சிந்தையைமிக்கமெலிந்தாய் இந்த
வையம்புகழசந்தனமானகரமேவிய
வ்ரதகடிம்றந்துநிருதன்சொற்படிவந்த (கெஜமதே)

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

மாயவனேமுன்மடுவில்கராவைக்கொன்று
மதயானைதனைக்கார்த்தமலர்ச்செங்கண்ணு
நாயகனேயின்றுனதடியேன்தன்னை
சதிசெய்துகொல்வனெனத்தவிக்குதையா
தீயவஞ்சகங்கள்செய்யும்பாதகற்குச்
செய்தநன்றிசித்தமதில்தெரிந்திடாதோ
சேயன்மிசைகிருபைகூர்ந்துஇந்தவேளைத்
திருமாலேவந்தருள்வாய்தேவதேவா,

வசனம்,

ஹரிஹரி யென்னுடையகர்த்தனே அகிலலோகங்களை யுன்குக்ஷியில்வைத்துகாப்பாத்திய அய்யனேமுன்னால்திரிகூடபர்வதமடிவாரத்தினருகில் பெரியமடுவிலேமுதலையின்வாயிலகப்பட்ட யானையை யரதரித்து ரக்ஷித்தீரே அதைதன்மனதிலெண்ணாமல் இப்போதுன்னடியனுகிய சிறுவனைக்கொல்லவேண்டுமென்னவு வந்திருக்கின்றதே இந்த வேளையில்யென்பேரில்கிருபைகூர்ந்துரக்ஷிக்கவேண்டும் ஓம்ஹரிஹரி,

பொது-விருத்தம்,

மைந்தன்முன்னின்றயானை மடிந்ததுபோல்விழுந்து
சிந்தையுங்கலங்கிவிம்மி திகிலடைந்தெழுந்துபோற்றி
வந்திடும்வழியைப்பார்த்து வாளமிட்டோடிப்போக
நிந்தைசெய்மல்லரோடிநிருதனுக்குரைசெய்வாரே,

வசனம்,

இவ்விதமாகமதயானையானது தடாலென்று பிரகலாதன்னுடையபாதத்திலேவிழுந்து பயந்து வந்தவழியைப்பார்த்துக்கொண்டு வோடிப்போக அதைக்கண்ட மல்லரானவர் இரணியனுக்குச்சொல்லுகின்ற விதங்காண்க.

இரணியனுக்கு-மல்லர்சொல்-விருத்தம்,

ஆனையைமதங்களேத்தி யவன்மீதில்விட்டபோது
கியானம்தாகயேதோ கரிதியேயுரைத்தானையா
தியானமாயவன்பாதத்தில்தான்விழுந்தெழுந்துபேர்ச்சு
ஈனனையினிமெந்தவிதத்தினல்கொல்வோம்சுவாமி.

வசனம்,

கேளும் எங்கள் தேவேதங்கள்வுத்திரவின்படியே மதயானையைக்கொண்டுவந்து மும்மதங்களையேத்தி அவன்மீதில்விட்டோம்யேதோவொருசங்கதிசொன்னான் தடாலென்று அவன்பாதத்திலேவிழுந்து யெழுந்து வீரிட்டுக்கொண்டு வோடிப்போய்விட்டது இந்த அதிசயத்தை தங்களுக்கு சொல்லவந்தோ சுவாமி.

இரணியன்சொல்-விருத்தம்,

துப்பிலாமந்திரிமாரே சொல்லுகின்றேன்கேளுங்கள்
தப்பிலிமுதுகில்கல்லை தனிமலைபோலேகட்டி
கப்பலிலேத்திக்கொண்டு கடலினில்தள்ளிவிட்டு
செப்பவேவருவீரிப்போ சீக்கிரமாகத்தானே,

வசனம்,

கேளுங்கள் துப்பில்லாமந்திரிமார்களே சிறுகுழந்தையைக்கொல்ல வுங்களுக்குவல்லமையில்லையல்லவா நான்சொல்லுகிறதைக்கேளுங்கள் அந்ததப்பிலிபயலை பிடித்து அவன்முதுகிலே பெரியமலையை



போலே பாராங்கல்லைக்கட்டி கப்பலிலேயேத்தி கொண்டுபோய் நடு சமுத்திரத்தில் தள்ளிவிட்டீர்களேயாமாகில் ஆமைபோல் அமிழ்ந்தி றந்துவிடுவான் அந்தசேதி சீக்கிரம்யெனக்கு தெரிவியுங்கள்மந்திரிக ளே,

மந்திரிகள்-மல்லருக்குச்சொல்-விருத்தம்.

மல்லரேசொல்வேன்கேளீர் மலைபோலேவட்டப்பாராங்
கல்தனை முதுகிலேத்திக் கப்பலில்கொடுபோயந்த
செல்வனைகடலில்தள்ளி சீக்கிரமாகநீங்கள்
எல்லையாளிரணியர்க்கு யியம்பிடவருகுவீரே.

வசனம்,

கேளுங்கள்மல்லர்களே நீங்கள் சீக்கிரமாகச்சென்று பிரகலாத னுடைய முதுகிலே வட்டப்பாராங்கல்லைகட்டி கப்பலிலேயேத்தி நடுக்கடலிலே கொண்டுபோய் தள்ளிவிட்டுவாருங்கள் வீரமல்லர்க ளே,

மல்லர்சொல்-துண்டு-கவி.

அப்பனேஉங்கள்தன்னுக்கினைபபடியே
கப்பலில்கொண்டுபோய் கடலினில்கவிழ்ப்போம்

மல்லர்கள்-மரைக்காயரையழைக்கும்-விருத்தம்.

நிறைபெரயுலகையாளும் நிருதனுமிரண்ணியபூபன்
திரைகடல்நடுவில்பெற்றச் சேயனையழுத்தச்சொன்னு?
உரைதவராமல்நீங்கள் வுயர்பெருங்கப்பல்கொண்டு
மரைக்கயரியாவருந்தான் வருகுவீர்மகிழ்வதாக

வசனம்.

கேளுங்கள் மரைக்காயரே யெங்கள் யிரணியபூபாலசக்ரவர்த தன் குமாரனான பிரகலாதனனைக் கப்பலிலேயேற்றி நடுமுதுகிலேபெ ரியவட்டப்பாராங்கல்லைக்கட்டி நடுச்சமுத்திரத்திலே கொண்டுபோ ய் யழுத்திவிடச்சொன்னார் ஆதலால்நீங்கள் தடைசொல்லாமல் உயர் ந்தகப்பலாகப்பார்த்துக்கொண்டு வாருங்கள் மரைக்காயரே,

கப்பக்காரர்சொல்-விருத்தம்.

அப்படிதானேசெய்வோ மதற்கொருயட்டியில்லை
செப்பியமொழிகேளாத சிறுவனைசீக்கிரத்தில்

யிப்படிகொண்டுவாங்கள் யேற்றியேகப்பல்தன்னில்
கைப்பிடியாய்க்கொண்டுப் போய்கடலிலேயழுத்துவோமே.

ஆ? வீரமல்லர்களே அந்தமகானுபாவராகிய இரணியபூபாலகருடைய வார்த்தைக்குத்தடையுண்டா இதோகாத்துக் கொண்டிருக்கின்ருேம் நீங்களந்த நிருதன்செப்பிய வார்த்தையைக்கேளாத துற்சனப்பயலே சீக்கிரமாகசொண்டுவாருங்கள் அரைநொடிக்குள்ளேகப்பலிலேற்றி நடுக்கடலிலே கொண்டுபோய் நடுமுதுகிலே வட்டப்பாராங்கல்லைக்கட்டி அழுத்திவிடுவோமையா.

மல்லர்கள்சொல்-விருத்தம்.

செப்பியமொழிகேளாத துற்சனப்பயலேகேளாய்
கப்பலிலேத்திப்பாராங் கல்லதைமுதுகிற்கட்டி
தொப்பெனகடலிலுன்னை தூக்கியேபோடச்சொன்னர்
கைப்பிடியாகநீயுங் கடல்கரைவருகுவாயே.

வசனம்.

கேளடா யேடாகூடமாக யெதிர்த்துப்பேசும் மூடசிகாமணியே உன்னைக்கப்பலிலேயேத்தி நடுக்கடலிலே முதுகில் பாராங்கல்லைக்கட்டி தூக்கிப்போடும்படி உத்தரவாகியது ஆதலால்நீ யெழுந்து கடல்கரை யோரத்திற்கு வாடாசிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

எப்போநீரழைப்பீரென்றே யெதிர்பார்த்துக்கொண்டிருந்தேன்
கொப்பெனநீங்களென்மேல் கோபிக்கவேண்டாமப்பா
செப்பமாயுங்கள்பின்னே சீக்கிரம்வருகிறேன்யான்
கப்பலிலேற்றியுங்கள் கடனதைக்கழித்திடுரே.

வசனம்.

அப்பாமல்லர்களே ஏனவ்வளவுகோபம் நீங்களெப்போதுவருவீர்களென்று காத்துக்கொண்டிருக்கின்றேன் யான் இதோ வருகிறேன் என்னைக்கப்பலிலேயேத்திக் கடலிலேயழுத்திவிட்டு உங்கள்கடனைக் கழித்துவிடுங்கள் மல்லர்களே.

பொது-விருத்தம்;

தனயனைக்கொண்டுவந்து சமுத்திரக்கரையோரத்தில்
கனமிகுவட்டப்பாராங் கல்லதைமுதுகில்கட்டி

சினமொடுகப்பலேற்றி தீவிரமாகவேதான்
அனைவருங்கூடிக்கொண்டு யடல்நடுக்கடல்செல்வாரே.

வசனம்.

இவ்விதமாகப் பிரகலாதனைச் சமுத்திரக்கரை யோரத்தில் கொண்டுவந்து கனம்பொருந்திய வட்டப்பாறைக்கல்லை முதுகில்கட்டி கப்பலிலேயேற்றி நடுக்கடலுக்கு மல்லர்யாவர்களும் கப்பக்காரர்களும் போகிறவிதங்காண்க.

காயலார்சொல்-ஏலதரு-இ-ம்-புன்னாகவராளி-ஏகதாளம்.

ஏலேலேலோஏலவிலேலோ-தத்தைபா-யேலேலோயேலவிலேலோ

சிலம்பிருபாலடியை தினம் சித்தமதில்வைத்துதொழும சிறு பாலனெனும் பிரகலாதன் தன்னை பத்திமிகுத்தித்திசையில் (முடுகு) கோலமொடேயிரணியன்கூறியபடிக்கு குன்றதைப்போல் கல்லையுங்கொண்டுமேவிரக்கி பாலன்முதுகினிலதை படிந்திடவிறுக்கி பருமணிகயர் கொண்டுபாதகர்நெருக்கி சாலவிருகைகளையுங் காணுமேமுறிக்கி தாட்டியொடுகட்டினர்கள் தான்மனஞ்செறிக்கி சிலம்பிருநடுவணையில்சிறுவனையொடுக்கி திரைகடலில்கப்பலைத் துரத்துவர்முடிக்கி (ஏலேலோ)

திரமுடையகப்பலதை யொரு திசைமுகமடுத்தான்திருபதிபச்சைநிறமுடைய கொடிபறக்கசெழும் நெடுமணிகள் கலகலென்ன (முடுகு) உறமாகபலகைதனையொருபுறஞ்சேர்த்து வோங்கியேபாய்மரம் தாங்கியேவிரித்து தரமாகசுக்கானைதாவியேமெரித்து தக்கவேசுக்கானில் மிக்கவேயடித்து விரைவாககயர்கொண்டுவெகுவாயிறுக்கி வெளிகளுள்ளாராய்ந்து விதமுழுதறிந்து புரமாகசூரரும் பொரிந்திடவுமங்கே போகுதுபார்கப்பலிதோ வேகமதாயிப்போ (ஏலேலோ)

கொடியபடைவீரமல்லர் மீறி கொக்கரித்துவார்ப்பரித்து அவர் இடைகள்விடாமலேயெழுந்துசீறி யிருபுறமுந்தான்சூழ்ந்து (முடுகு) திடமுடனேசுக்கானைசேரவேயிறுக்கி சேயனைக்கொண்டுவர் நதிநடுவில்வைத்து கடலாழத்தில்தள்ள அலைவந்துமோதகாரனகப்பலதை மாராயல்பாரும்மடமானைப்போல்போரமாவேகமதைக்கூறும் அஞ்சாமல்வாருங்களினங்கொஞ்சதூரம் இடமிதுவேயென்றுசிறுபாலனையெடுத்துயெறிந்தனர்கள் தேவருமிரங்கிடவுமிப்போ (ஏலேலோ)

ஹரியைத்தொழுஞ்சிறியவனை வாரி லழுத்திவிட்டோடிருந்த மதாய் பிரியமொடுயிரணியனை போற்றி பிறப்படுவோமிருப்புங்கால் (முடுகு) வெறிகொண்டுபிசலெடுத்தமோ வருகுதப்பா வீரானகப்பல் தடுமாராமல்பாரும் பெரியதோர்திமிங்கலம் பிசகாமல்கூடி பெற்றசுவைசெயுமந்தவேடிக்கைநாடி சரியானசங்குகளும் மலர்வாய்திறந்து சந்தோஷமாகவொரு சிந்தையுங்களிக்க வரிவாககலவை கரிவரதனை னுஞ்சேயன் வாரியிலமிழ்ந்தனென வல்லமைகள்கூற . (ஏலேலோ)

பொது-விருத்தம்.

அலைகடலில்மைந்தனைக் கப்பலின்மேலேத்தி
யறுபதுயோசனை தூரம்பால்தாண்டி
சிலையொடுசேயனையெடுத் தெறிந்துபின்பு
திரும்பிமல்லர்கரையேறித் தெளிந்துபார்க்கில்
மிலையொடுகல்லோடமதாய் மிதக்கப்பாலன்
நெஞ்சமிகவேகளித்து நெடுங்கைகூப்பி
பலமொடிருகண்களிலானந்தநீரைப்
பெருகுவான்கரையருகில் வருகுவானே

வசனம்.

இவ்விதமாகப் பிரகலாதனனை மல்லரானவர்கப்பலிலேயேத்திப் பாராங்கல்லைமுதுகிலேகட்டி நடுக்கடலிலேதள்ளிவிட்டுக் கரையோரத்திலயிரங்கி வந்ததிசையைத்திரும்பிப் பார்க்கின்றபோது வட்டப் பாராங்கல்லே வோடம்போலமிதக்க அதின்மீதில்பிரகலாதனானவன் ஆனந்தசந்தோஷ புளகாங்கிதனாய் இரண்டுகரங்களையுங்குவித்து ஸ்ரீமந்நாராயணமந்திரத்தை பஜனைசெய்துக்கொண்டு கரையோரம்வருகிறவிதங்காண்க,

பிரகலாதனன்சொல்-கொச்சகம்

பரவுந்திரைகடலில்துயில் பங்கயமாதுரம்வளரும்
முரஹரியேமெய்ஞ்ஞான மூலமணிவிளக்கே
கரவுடையமல்லரெனைக் கருங்கடலில்தள்ளுவது
திறமதையென்னலறியேன் தேவாதிருமாலே

தேவாரம்:

ஆரணுவமரர்போற்று மாதிரோயன்புளோர்தன்
பாரணுபரனேசோதி பாந்தள்மேல்சயனஞ்செய்யும்

காரணாகதியென்றோரைக் காத்திடுங்கபலாதா
தாரணாததியாள்கொள்ளும் தனயன்மேல்தயைசெய்திப்போ

இதுவும் தேவாரம்.

பெரிகியபுவியையுண்ட புயல்நிறமேனியானே
சிறியனேவந்தாட்கொள்ளும் திவ்யமலர்ப்பொற்பாதர்
பரிவுடனடியார்போற்றும் பரந்தாமபத்மநாபா
ஹரிஹரியானுழனேகம்பினேன் யச்சுதாமுகுந்தாநந்தா

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம்-பைரவி-அடதாளம்

ஜானகிநாதா ததிபிதுயெனையாள் மலர்ப்பாதா (ஜானகி)
கியான்மொடுன்னை தியானஞ்செய்து
கருத்தில்வந்தருள் பரந்தாமனே
சிரத்தில் மணிமுடியணிநேமனே (ஜானகி)

மங்கைமணாளா மாகவர்ணுகினந்தொழுங்குணாளா மங்கை
பொங்குமுடிவில் விளங்கும்புக
போகாபொன்மணி மார்பனே ஜெகன்
மோகாதிருவடி தாபத்மநாபா (ஜானகி)

அண்டினேனுன்னை ஹரிதிருமருவியகருணாகரா-அண்டி
தொண்டர்புகழ்ந்தோதண்டபாணியே
சுடரொளிபாகியமுகில்வண்ணா
யடர்வினையணுகாமல்செய்கண்ணா (ஜானகி)

மூலமென்றிடமுதலைவாய்தனில்சிக்கியகரியாதி-மூல
சால்வந்தனுகூலமாகிய
தாமரைமலர்பாதாவெழில்மிகு
மாமலர்மகள்நாதாகனமிகு (ஜானகி)

அமரர்துதிபரனேயத்விதபஞ்சாயுதகரனே-அமரர்
சமயமிதுகதியும்துதிதிருவடி
தாரும்தஞ்சமென்றவர்க்கருள்
கூருங்கிருபாகரனேதிரு (ஜானகி)

கலவைநகர்மேவுங்கரிவரதனேகாத்தருளெந்தனை-கலவை
புலவருனதுசெம்மலரடியைதினம்
புகழுந்தமிழுக்கினியேமனம்
மகிழுஞ்செயமங்களசுபகர (ஜானகி)

பிரகலாதனன்சொல்-தேவாரம்.

பாம்பணைமிசைதுயின்ற பக்தரக்ஷகனேதேனுண்
டீம்புவண்டிசைகள்பாடும் மெழிலுருதுளபமார்பா
விம்புசெய்மல்லரென்னை விரிகடலழித்திவிட்டார்
ஆம்பலர்கண்ணிபங்கா ஹரிஹரிரக்ஷிப்பாயே,

பொது-விருத்தம்.

ஆலிலைமேற்பள்ளிகொள்ளும்மால்போல்சேயன்
அருஞ்சிலைமேல்மிதந்துவந்துக்கரையோரத்தில்
பாலியசூரியனுதித்தவாறுதோன்றிப்
பரந்தாமனடியிணையைபஜிக்கும்போது
காலிமல்லரதைக்கண்டுகலங்கிவாடி
கைநடுங்கிக்கால்சோர்ந்துசிரித்தழிந்து
கேலியிதைபென்னவெனச்சொல்வோமென்று
கிளம்புவார்யிரணியன்முன்விளம்புவாரே,

வசனம்,

இவ்விதமாக பிரகலாதனை நடுக்கடலில் தள்ளினபோது யெம்பெருமானை தோத்திரஞ்செய்தான் அப்போது ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் ஆதிகாலத்தில் ஆலிலைமேல் பள்ளிகொண்டபாவனைபோல் கல்லானதுவோடம்போலவுமிதக்க அதின்பேரில் பாலசூரியனைப்போல் பிரகலாதனன்யிருந்து கரையோரத்தில்வந்து ஹரிநாமசங்கீர்த்தனைகளை பஜனைசெய்துக்கொண்டிருக்கின்ற வேடிக்கையைக்கண்டமல்லரானவர்பயந்து நடுங்கி அந்தவதிசயத்தைஇரணியனுக்குசொல்லுகின்றவிதங்காண்க,

மல்லர்-இரணியனுக்குச்சொல்-விருத்தம்,

ஒன்னலர்வணங்கிப்போற்ற யுலகமீரேழுமாண்ட
மன்னவாசிறுவன்றன்னை மலைபோல்கல்லதின்மேல்கட்டி
பன்னுமாழ்கடலில்போட்டோம் பாலன்மெய்ஹரிநாமத்தால்
கன்னற்கல்மிதந்து கரைமேறிசேர்ந்தானையா,

வசனம்,

கேளுமையாசுவாமி தங்கள்குமாரனை நடுக்கடலிலே கொண்டுபோய் யழித்திமேனும் கல்மிதந்து வந்துகரையேறினானையாநாங்கள்பார்த்து உமக்குச்சொல்லவந்தோமையா சுவாமி,

இரணியன்சொல்-விருத்தம்,

கல்லதுமிதந்துவந்து கரைகண்டானென்றுசொல்லும்
மல்லரேசொல்வேன்கேளும் மைந்தனைபிடித்துக்கட்டி
எல்லையோர்புகழுகற்காணத்தினிலவனைப்போட்டு
வல்லயானைகளைக்கட்டி வாட்டியேயாட்டிடுரே,

வசனம்,

ஆ ஆ வாருங்கள் மல்லரே கடலிலே தள்ளியுங்கல்லானதுமிதந்து கரையேறிவந்து விட்டதுன்மார்கப்பயலைப்பிடித்துக்கட்டி கற்காணத்திலேபோட்டு மதயானைகளை கட்டியோட்டிக்கொன்றுவிடுங்கள் மல்லரே,

படைமல்லர்சொல்-விருத்தம்,

ஆவலாயென்துபக்கலன்பொடுவந்துவந்துநின்று
ஏவல்செய்வீரரெல்லாமிக்ஷணம்வோடிவாரீர்
கேவலமானவந்தசெர்விக்கும்பயலைக்கட்டி
தேவனூர்சொற்படிக்கிசெக்கினிலரைபபோர்வாரீர்,

வசனம்.

கேளுங்கள் வீரரே நமது தேவனாகிய இரணிய பூபாலகர்சொற்படி இந்தபயலைசெக்கில்போட்டரைப்போம் வாருங்கள்வீரரே,

பொது-விருத்தம்.

வியல்பெருங்கற்காணத்தில விருப்புலக்கதனைமாட்டி
தயப்பெருமிரட்டையானை சங்கிலிவலம்மைபூட்டி
இயப்பெருமைந்தன்தனனை யெடுத்ததில்போட்டுமாட்ட
நயப்பொஹரிபாதத்தை நாடுவான்தேடுவானே,

வசனம்,

இவ்விதமாக மல்லரானவர் கற்காணத்தில் இருப்புலக்கையைப் போட்டு இரட்டையானைகளைகட்டி பிரகலாதனை அதில்யெடுத்துப் போட்டு அண்டரண்ட சராசரங்களும் செவிடுபடும்படிமடமடவென்றுவோட்டுகிறபோது பிரகலாதனானவன்ஸ்ரீமந்நாராயணனைதோத்திரஞ்செய்கின்றவிதங்காண்க,

பிரகலாதனன்சொல்-கொச்சகம்,

நான்முகனும்வானவரும்நாடிதொழுமுந்திரு
தேன்மலர்பொற்பாதமதைதெரிசிக்குந்தொண்டருக்கு
பான்முன்பனிபோல்வினையைபரிகரிக்கும்முராஹரியே
வான்படுகந்காணமதில்வதைப்படயான்காரணமோ.

தரு-இ-ம்-புன்னாகவராளி-ஆதி-சாபுதாளம்.

ஆதரிஹரியே யறியாச்சிறியேனெனையே (ஆதரிஹரியே)

மாதவர்தொழுந்தாமோதரனேயுந்தன்
பாதரமேகெதி யாதாரய்வேறில்லை (ஆதரி)

அருணனுதயகோட்டிவசீதாரவம்புஜதளநயநேத்ரா
அத்விதசனகசநந்தபூஜிதாநந்தசயனகாத்ரா
கருணாகரசரணாகிருபைகூர்ந்து
தரணாதனயனென்மேல்மனஞ்சார்ந்து (ஆதரி)

சகலாகம்மறைசாஸ்திரவேதசுபசெயமங்களகரனே
செந்தாமரைசுதைதிருமருவும்பிங்கிதசையோகமனோஹரனே
புகலுமென்பர்வினையகற்றியதாதா
வகிலமோரடியிலளந்தபொற்பாதா (ஆதரி)

அபயமென்றிடும்பமதைகாத்தருளியவாதிமூலமாலேநின்
னடைக்கலமென்றடைந்தேனெனையாள்கொள்ளு
கொள்ளுமன்னைதந்தைபோலேசுபகாநிறைகலவாபுரிவாசா
பவவினாசகரிவரதப்ரகாசா (ஆதரி)

பொது-விருத்தம்,

காட்டியசெக்குலக்கைபொடிந்தெகிரிகொக்கி
நடுபடையின்மிசைவிழுந்துசிலபேர்மாண்டார்
நீட்டம்தாகியவலம்பைமுரிந்துயானை
நிகத்தடியோடலரிமண்மேல்விழுந்தேயோட
கோட்டமதாயங்கிருந்தவல்லரெல்லாம்
கொந்துமனம்வெந்துருகியிரணியன்முன்
ஓடமதாயோடிவந்துயிரஞ்சிப்போற்றி
யுரைக்கின்றார்சொல்லி மனங்கரைக்கின்றாரே.

வசனம்.

இந்தப்பிரகாரமாக செக்குலக்கையானதொடிந்து கொக்கிமரமானதுயெகிரிவிழுந்த உதட்டியினால்சிலமல்லர்கள் இறந்துவிட்டார்கள் வலம்பைமுறிந்துயானைகள்கிகத்தடியுடனேவீறிட்டலறிவிழுந்துவோடினதைக் கண்டமல்லரானவர்பயந்து வோடிவந்து இரணியனுக்கு சொல்லுகின்றவிதங்காண்க,

மல்லர்சொல்-விருத்தம்,

தரணியிரேழுமாளுந்தை யித்தியவாசேபோற்றி
கிரணியமுடனீர்சொன்ன நிலேப்படிசெக்கைப்பூட்டி
விரவிய்சிறுவன்தன்னை வெடுத்ததில்போட்டுமாட்ட
உறமிகுமுலக்கைக்கொக்கி யொடிந்துவீழ்ந்தனேகர்மாண்டார்,

வசனம்.

கேளுமையா சுவாமி தங்கள்உத்திரவின்படி செக்கில்போட்டு ஆட்டும்போது அந்தமாயனைதியானித்தான் வுடனேவுலக்கையொடிந்து கொக்கியெகிரி விழுந்து சிலமல்லர்கள் மாண்டார் நாங்கள்பயந்துவந்துவிட்டோம்,

பொது-விருத்தம்.

இந்தவகைமல்லர்சொல்லயிரணியன்தன்
னிருகண்களிலுநெருப்புயெழும்பிப்பொங்க
தொந்தமிகுசெவியில்புகைக்குபுகுபென்று
தோற்றயெங்குங்கொண்டலைப்போல்சூழ்வதாக
சிந்தைமிகத்துடிதுடித்துகெதிம்கிச்சீறிக்
தெருளுடையமந்திரிகளைத்திறமாய்நோக்கி
மைந்தனிந்தவாக்கினைக்கெல்லாமிறக்கா
வதிசயமிதென்னவென்றுவருந்துவானே.

வசனம்.

இந்தபிரகாரமாக மல்லர்சொன்ன வசனங்களைக்கேட்டயிரணியசூரனானவன் இரண்டுகண்களிலும் அக்கினிசுவாலையானது பொங்க செவிமூக்கின்வழியாக புகையானது குபுகுபென்றுமேகம்போலபுகைங்கும் கப்பிமூடிக்கொள்ளவும் சிந்தையானது துடித்துமந்திரிகளைநோக்கி இத்தனைஆக்கினைகள்செய்தும் மடியாமல்போனவிதத்தை நினைந்துவியாகுலமுற்றுச்சொல்லுகின்றவிதங்காண்க,

இரணியன்சொல்-விருத்தம்.

மந்திரிமாரேகேளீர் மைந்தனாலெந்தன்கீர்த்தி
அந்திரம்புவனமெங்கும் மவமதிக்கிடமதாச்சே
தந்திரமாகவேதான் தனயனைகொல்வதற்கு
விந்தையதாகவோர்வா லோசனைசொல்லுவீரே,

வசனம்.

கேளுங்கள் மந்திரிமார்களேபொல்லாத துற்குணப்பிள்ளையாலே யென்னுடைய கீர்த்தியானது சொற்கமத்தியபாதாளபரியந்தம் அவம திப்புக்கிடமாகுமே இனியவனை கொல்லும்படிதந்திரமாகவொருயோ சனை சொல்லுங்கள் மந்திரியாரே.

இரணியன்சொல்-தரு-இ-ம்-தற்பார்-சாபுதாளம்.

மந்திரிமாரே-மைந்தனைகொல்லும் வகையுரைப்பீரே
அந்திரர்முனிவர்வந்தெந்தனடிபணிய
அகிலமுழுதுமாண்டேன்மகிமைபுகழும்பூண்டேன் (மந்திரி)

மல்லராக்கினையாலும்மலைநெருப்பகியாலும்
வல்லயானையினாலும்வாரிசெகத்தினாலும்
செல்வன்மடியாமலேசெருக்குடனிருக்கின்ற
திரமதையறிகுறேன்விறைவினில்சரிசரி (மந்திரி)

மாயனெனுந்திருடன்மைந்தனுக்கித்தவு
பாயஞ்செய்துவந்தத்தால்பாரினில்விடலாமோ
ஞாயமானவனாலுமதெதிர்வரவேண்டும்
கடிநகிபயந்தோளித்துநடத்துவதோகெம்பீரம் (மந்திரி)

திடமோடொருயோசனைசெப்பிடுங்கள்சீக்கிரம்
தடையில்லாமல்மைந்தனைசாதிக்கும்படியதாம்
கடல்சூழலில்புகழ்கலவைநகரில்வள்ளர்
கரிவரதனடுங்கிகலங்கியோடிங்கிவாட, (மந்திரி)

மந்திரிசொல்-விருத்தம்.

இரக்கமேள்ளளவில்லாமல்யீரேழுலோகமெல்லாம்
தருக்கமிட்டரசளிக்குந்தையசித்தியவரசேகேளும்
பெருக்கமாய்மன்றன்கையில்பிள்ளையைத்தந்தீரானால்
உருக்கமாய்நரகில்தள்ளிவுபத்திரஞ்செய்வானையா,

வசனம்.

கேளும் புவனகர்த்தீபமே இத்தனை ஆக்கினைசெய்தும் தப்பித்துக்கொண்ட உம்முடைய குமாரனை நம்முடைய ஏமனைவரவழைத்து அவன்கையில்வொப்பிவைத்தீரானல் ரவுரவாதிநரகத்திலேதள்ளிஉபத்திரஞ்செய்வான் இந்தயோசனைபாரும் சுவாமி,

இரணியன்சொல்-விருத்தம்.

வல்லமைமிகுந்தவீர வசுரரேநொடியிற்சென்று
எல்லையீரேழுபாரும் இரணியரழைத்தாரென்று
சொல்லியேயமன்தன்னை சுருக்கினிலழைத்தாரென்று
மல்லல்சேர்கொலுவிற்கிப்போ வாகுடனழைத்துவாரீர்;

வசனம்,

கேளுங்கள் காவலராகிய வீரசூரரே நீங்கள்சீக்கிரமாகபோய் ஏமனைநானழைத்ததாகசொல்லிஅழைத்துக்கொண்டுவாருங்கள்சூரரே

வீரர்சொல்-துண்டு-கவி;

தென்றிசைக்குரிய னென்றசேமா
இன்றுவருவாய்நன்றிரணியன்முன்

பொது-விருத்தம்,

கொண்டல்போல்குமிறிச்சீறி கொத்தவரழைத்தாரென்று
கண்டகவீரர்சொன்னகன்மொழிதன்னைக்கேட்டு
சண்டனும்நடுநடுங்கிசமஸ்ததூதரையழைத்து
தெண்டனிட்டிரணியன்முன்சிக்கிரமாய்வருகின்றானே,

வசனம்,

இக்தபிரகாரமாக வீரசூரரானவர் சொன்னமொழி கேழ்வியுற்ற எமதருமராஜனனவன்பயந்து சகலதூதர்கள்சமேதனக தெண்டமிட்டுக்கொண்டு இரணியன்சபைக்கி வருகின்றவிதங்காண்க,

எமன்வருகிற-தரு-இ-ம்-சுருட்டி-அடதாளம்,

ராஜன்வந்தானே-யெம்தர்ம-ராஜன்வந்தானே
விசும்புகழ்படைத்த-வாசன்தையித்தியனிரணியேசன்
கொலுவைநாடி நெடியதூதர்கள்கூடி

இளம்பிறைபோலே பல்லொளிக்க கோரை
இருபுரமுமீசைதத்தளிக்க பெரும்
வனமிகுமார்பதுவழுங்கும்மகமேரு போல்
வரும்பெருமைக்கிடாவாகன மீதேறி (ராஜன்)

சிரசினில்மகுடமுமின்னவே திவ்ய
திருவாபரணமார்பில்துன்னவே யெங்கள்
துரையிரணியபூபவதுரையர்யெனையழைத்த
சேதியறிவோமென்று சீதியுடனேயின்று (ராஜன்)

சூலம்போல்வாள்கெதையெடுத்து கையில்
துவங்குமாயுதந்தனைப்பிடித்து - பக்கம்
காலதூதர்களானோர் கனமாய்ச்சூழ்ந்துவர
கருதுங்கலவையணிந்திருதன் கொலுவிடமுன்னே (ராஜன்)

எமன்சொல்-விருத்தம்

பாரவிவ்வுலகேழும் பகையறவரசளித்து
இரணியதேவாயுக்தன் யிணையடிபோற்றிபோற்றி
திரமொடுவுனதுபாதம் சென்னியிற்சூடிக்கொண்டு
இரவிலும்பகலும்போற்றி யிருக்கின்றேனெனையழைத்தீர்

வசனம்.

சரணம் சரணமையாசுவாமி தங்கள்பாதத்தை அடியேனிரவிலும் பகலிலுமிடைவிடாமல் துதித்து சிரஞ்சூடிக்கொண்டிருக்கின்றயென்னை அழைப்பித்தவிவரஞ்சொல்லுமையாசுவாமி

இரணியன்-சொல்-விருத்தம்

வல்லதோர்யெமாயுக்தன் வார்த்தைக்குமெச்சினேன்யான்
செல்வனைப்பிடித்துக்கட்டி சித்திரவதைகள்செய்து
கொல்லுலேம்பூருகுபோல் கெஞசைக்குழம்பிடவேகமாக
அல்லல்சேர்நரகில்தள்ளி யிறுஞ்சிறுபோடுவாயே.

வசனம்.

எழுந்திரும்பிள்ளாய்யெமா உன்வார்த்தைக்குமெச்சினேன் இப்பவும் நான்சொல்லுகிறவார்த்தையைக்கேள் என்குமாரனைப்பிடித்துக்கொண்டுபோய் நரகத்தில்தள்ளி சித்திரவதைசெய்து சிலதுகாலம் சிறையில்போடுப்பிள்ளாய்.

ஏமன்சொல்-விருத்தம்

கர்த்தனே தங்களீன்ற கண்மணிசேயனுந்தான்
மெத்தவுமுங்களைப்போல் மேன்மையாயிருந்திடாத
சுற்றமயான் தான்சென்று சுதமெனவெப்படிபிடிப்பேன்
அப்பனேமனம்பொறுத்து யடியேனையனுப்பிடீரே.

வசனம்,

கேளுமையாசுவாமி தேவரீரைப்போலே தங்கள்குமாரருமிருப்பாரல்லவோ நானெப்படி அணிந்துபிடிப்பேன் தாங்கள்தயைசெய்து யிதைமன்னிக்கவேண்டுஞ்சுவாமி,

இரணியன்சொல்-விருத்தம்,

ஏமா நீபயப்படாமல் யென்மகன்றனைப்பிடித்து
தாமானகயத்திற்கட்டி தாழ்நரகினிலேதள்ளி
சாமார்த்தியமெல்லாங்காட்டி தத்தளித்திடவேசெய்து
நேமமாயுரைப்பாய்வந்து நிலமதுபுகழத்தானே.

வசனம்,

கேளும்யேமா நீபயப்படாமல் யென்குமாரனைப்பிடித்துக்கட்டிக்கொண்டுபோய் ரவுரவாதிநரகிலேதள்ளி உன்சாமார்த்திய மெல்லாங்காண்பித்து பயப்படும்படிசெய்து யென்னிடத்தில் வந்து சொல்லும் பிள்ளாய் யேமா,

ஏமன்புலம்பல்-கண்ணிகள்-தரு-இ-ம்-முகாரி-அடதாளம்.

ஐயையோயிதுவென்ன வனியாயகுறையிந்தை
யாருடன்சொல்வேனென் விதியே - இப்போ
வையமாளுமிரணியன் வரவழைத்தெந்தனை
வலுமைசொல்லிவிட்டானே விதியே
தந்திரமாய்ப்பிடித்துவுந்த னுயிரைக்கொண்டுபோம்
தான்வதைசெய்யென்றானே விதியே
அந்தமுனிமார்க்கண்டனால் சந்திரசேகாருதைத்த
யருப்புண்ணுமாறவில்லையே விதியே
பிந்தியொருதன்மதனால் நந்திகேசுரன்தன்னாலே
பெற்றிடும்பேர்மெத்தவுண்டே விதியே
சக்கிலிப்பெண்ணைபுணர்ந்தமுக்கியவரசர்மன்னன்
தன்னால்முன்னாலேஜயோ விதியே.

உக்கிரசிங்கரர்பட்டு யிக்குவலயங்களிலே
யோடுமிடந்தேடிக்காணேன் விதியே
பண்டுமுனிதுருவாசன்தொண்டனம்பரீஷனுலே
பட்டதுயரமட்டுமுண்டோ. விதியே
அண்டருலகம்விசும்பும் யெண்டிசையுமோடியிட்
ருனதுணையறிவேனேவோ விதியே
முப்புரப்புணர்ந்தபர தற்பரர்க்கிடையுன்னும்
மூடனுனவேட்டுனையும்ஓ விதியே
தற்பராரணிகொண்ட நற்பநுவல்பாதகஞ்
சாற்றுங்கதைகேட்டிலேயோ விதியே
அண்டர்பெருமான்சரணந் தொண்டர்கள்பெருமகிமை
யாராலுந்தேரவசமோ விதியே
கண்டயிரணியனென்னைக் கொண்டுபோகச்சொல்லிவிட்ட
காரியம்வீரியமாமோ ஓ விதியே
ஆண்டவனடிமைதினம் பூண்டவர்மனங்கோணிஞ
லண்டபிண்டமெண்டிசையுல்லவிதியே
யீண்டமனங்கலங்கிடுமேயென்று மறைசொல்லுமொழி
யீராகிவேருருமோ ஓ விதியே
மெய்யனிரணியர்க்கஞ்சி பொய்மனதுமொண்டுவாரேன்
வெங்கோபஙீதாங்கரமல்செய்யும்விதியே
பையரவமேல்துயின்ற வையனேயெனையிப்போது
பட்சமுடன்ரட்சித்திடும் ஓ விதியே

பொது-விருத்தம்;

மர்லியிந்தவிதம்புலம்பிப் பின்னுமந்த
மைந்தனிருப்பிடங்கண் டாய்ந்துசூழ்ந்து
விரலுடனராய்ணமந்திர கோட்டைகண்டாள்
விளங்கியசக்கரங்கண்டான் கமலவேவுங்
இறைவுதிருதோத்திரமதைக் கண்ணில்கண்டான்
இயங்குமதிசயம் வேண்டெல்லாங்கண்டான்
திறமுள்ளசிங்கர் வதனந்தன்னைப்பார்த்து
சிந்தைமகிழ்ந்தே யுகந்துசெப்புவானே.

வசனம்,

இந்தப்பிரகாரமாக எமதர்மராஜனுனவன் புலம்பிக்கொண்டு பிர கலாதன்சுவாமி இருக்குமிடத்திலேவந்து பார்க்கும்போது அங்கங்

வசனம்,

அடாவாரும்பிள்ளாய் ரவுரவா கும்பிபாகா ரத்தபாணு வைதரணிவிந்துபாணுசூகரமுகாகிருமி சுசிவதனு இங்கப் பிரகலாதசுவாமியை சூழ்ந்துக்கொண்டு யிருக்கின்றகோட்டையைப் பார்த்தீர்களா சங்குசக்கரங்காவலாக யிருக்கின்றதையும் ஸ்ரீமந்நாராயணரைப்போல் திவ்வியரூபமும் யின்னுமனேக வதிசயங்களையும் பாருங்களெம தூதரே.

ஏமன்சொல்-தரு-இ-ம்-தோடி-அடதாளம்,

அதிசயமதைப்பாருங்கள் தூதர்களே-அதி
பதிபெருங்கோட்டையும் பளிங்குமண்டபங்களும்
நிதிமதில்வாசலும் நெருங்குங்கோபுரங்களின் (அதிசய

கீழ்த்திசைவாசலில் கிளரும்பிரணவங்களும்
தாட்டிதென்கிழக்கினில் சகலவாகமங்களும்
மேட்டித்தென்திசையினில் விளங்குஞ்சாஸ்திரங்களும்
கூட்டும்நிருதிமூலைகோஷ்டிகளுமனந்த (அதிசய)

மேற்குத்திசையில்நல்ல வேதாந்தவேதமும்
மேன்மைவாய்வுதிசை நாதாந்தகீதமும்
தீர்க்கமொடுகுபேரதிசையில் சொர்ணமயமாய்
துலங்குமீசானியத்தில் களங்கமில்லாவலின் (அதிசய)

சங்குசக்கரங்களும் தனயனிருபுரத்தில்
பொங்கமுடன்காத்துக்கொண்டே பூரித்திருப்பதும்
செங்கணமாலடிதனை தோத்திரஞ்செய்திடும்
சுந்திரங்களைப்பாரும் சந்திரனுதையம்போலே (அதிசய)

மாதவனருள்பெரும் மைந்தன்பிரகலாதனன்தன்
மதிமுகமுந்திருமன் மார்பில் துளபமாலே
ஆதவனொளியைப்போ லலங்காரமும்ழகும்
மலருக்கவ்ரோயிடு யவனியில்லைசோடு (அதிசய)

வளமிகுகவையின் வரதாடிமயவா
னமந்தனைபிடிப்பது நிந்தனையெனவெண்ணி
தளபதிதூதரும் தானுந்தொழுதுநின்று
தனயுன்முகத்தைநாடி சதுர்விதமாய்கொண்டாடி (அதிசய)

தூதர்சொல்-விருத்தம்.

புவிதனிலுள்ளோர்செய்யும் புண்ணியபாவங்களெல்லாம்
அவமிலாமலேகட்டாத்து மண்ணாலேசொல்வேன்கேளீர்
மவுனமாய்த்தவஞ்செய்வோரும் மைந்தனைப்போலேயிந்த
குவலயந்தன்னிற்காணோம் கொற்றவாயெங்கள்கோவே.

வசனம்,

சரணஞ்சரணஞ்சுவாமி எமதர்மராஜனேஇந்தலோகாலோகங்களிலே இப்பேர்ப்பட்டதவங்கள் செய்தபேர்களையும் நாங்கள்கண்ணாலேகண்டதில்லை இனிஅவர்பாதத்திலே விழுந்துதெண்டனிட்டுப்போய்விடுவதே நல்லயோசனைசுவாமி.

ஏமன்-மல்லருச்சொல்-விருத்தம்.

மண்டலம்நடுங்கவாழும் மல்லரேசொல்வேன்கேளீர்
பண்டுமோம்மறையேயோதும் பாலகன்முகத்தைப்பார்த்து
தெண்டனிட்டிரஞ்சியேமன் திருவடிதலைமேல்சூட்டி
இன்றவன்போனானென்று யிரணியற்குரைசெய்வீரே.

வசனம்,

வாருங்கள்மல்லர்களே பிரகலாதன்சுவாமிசெய்கின்ற தியானத்தினாலே யேமன்கண்டுநடுக்கமுற்று வோடிபோனானென்று வுங்கள்யிரணியபூபாலருக்கு தெரியப்படுத்திவிடுங்களப்பா மல்லரே

இரணியன்முன் மல்லர்சொல்-விருத்தம்

அரனரிவானோரஞ்ச வமர்செய்துவென்றதோளா
குறையில்மறையையோதுங் குமரன்செய்யரிநாமத்தால்
மறலியும்நடுநடுங்கி வணங்கியேயோடிப்போனான்
இறைவனேயிந்தசேதி யியம்பினோம்தேவரீர்க்கே

வசனம்.

சரணம்சரணஞ்சுவாமி இரணியபூபாலகரே தங்கள்குமாரனானபிரகலாதனிடத்திலே யேமனைக்கொண்டுபோய்விட்டோம் அந்தயேமனானவன் சேயன்செய்கிற அரிபஜனையைப்பார்த்து பயங்கொண்டு நடுநடுங்கி அவன்பாதத்திலேதொழுதுவணங்கி வோடிவிட்டானிதுச்சங்கதியைத் தாங்கள் தெரிந்துகொள்ளுமையா சுவாமி,

இரணியன் சொல்-விருத்தம்.

குன்றுமுருநெருப்பாலும் மலையினாலுங்
கொடியயானையதினாலும் விஷத்தினாலும்
இன்றுமுருகற்காணத்தாலுஞ் சாகாதிருக்கும்
பயல்தனையெம்மைக் கொடுபோவென்றால்.
தன்றிமுறுமாலியும் வஞ்சனையேசெய்தான்
தக்கவனையேபிடித்து சிறைபோடுங்கள்
கொண்டுவந்துயெந்தன்முன்னே நஞ்சையூட்டி
கொடுஞ்சமட்டிக்கொண்டடித்துக்கொல்லுவீரே.

வசனம்.

ஆ ஆ ஆ ஆ வாருங்கள் மல்லரே இப்போதுயெம்மும் வஞ்சனை செய்துவோடிப்போய்விட்டானல்லவா நல்லதாகட்டும் அவனையெவ் விதத்திலும் விசாரித்துக்கொள்ளுகிறேன் இபபவுமீங்களந்தப் பய லை யென்முன்னேகொண்டுவந்து நஞ்சிகளையூட்டி ஆயிரம்பேர்மல்ல கள்கையில் சம்மட்டிகளைக்கொடுத்து அடிமேலடியடித்துக் கொல் லுங்கள் மல்லர்களே.

மல்லர்கள்சொல்-விருத்தம்.

தேவர்கள்முனிவரஞ்ச திகழிரணியனுஞ்சீறிக்
கூவியேயுரைத்தசொல்லால் குலையெலாம்நடுங்குதிப்போ
தாவியேசம்மட்டிவாளும் தகைமையாயெடுத்துக்கொண்டு
பாவியாயிரம்பேர்மல்லர் படபடென்றோடிவாரீர்

வசனம்.

வாருங்கள்வீரமல்லரே நமதுகர்த்தாவின்உத்தாரப்படிசிறுவனை யவர்முன்கொண்டுவந்து நஞ்சிகளையூட்டி சம்மட்டிகளைஆயிரமல்லர் களைகொண்டுஅடிப்போம் வாருங்கள்மல்லரே

மல்லர்சொல்-துண்டு-கவி.

கலமிலாமைந்தனுக்கு நஞ்சதையூட்டியிப்போ
சலசலவெனவேநாமுஞ் சம்மட்டியாலடிப்போம்வாரீர்

பொது-விருத்தம்,

தனயனைமன்னன்முன்னே கொண்டுவந்து
தாட்டியுடநஞ்சுகளை ஞ்சமாக

வினவியவன்தனக்கூட்டிச்சமட்டிக்கொண்டு
வீரமல்லராயிரம்பேர்வெகுண்டுமோத
தினகரனைப்போல்விளங்குஞ்சேயன்தானும்
சிந்தைதடுமாராமல்திருவாழ்மார்பன்
கனகபதமதைபோற்றியுலகோர்க்கெல்லாம்
காட்டுவான்கீர்த்திநிலைகாட்டுவானே.

வசனம்.

இந்தபிரமாக பிரகலாதனைமல்லரானவர் இரணியன்முன்கொண்டுவந்து நஞ்சிகளையூட்டி சமட்டிகளை ஆயிரம்மல்லர்கள் யெடுத்துக்கொண்டு மோதுகுரபேர்து பிரகலாதசுவாமியானவர் சிந்தைவாடாமல் யெம்பெருமானுடைய திருநாமங்களை பஜனைசெய்கின்றவிதங்காண்க.

பிரகலாதனன்சொல்-கொச்சகம்.

கொண்டல்தவிழ்மந்தரத்தைக்கோலமுரும்த்தாக்கி
வெண்டிரல்சேர்வாசுகியைவோங்குங்கயராக்கி
தெண்டிரேர்தாழிபினிலசேர்ந்துவந்துமோகினியாய்
அண்டருக்கமுதளித்தவ்ச்சுதனென்பெண்கோனே.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம-நாதனுமக்கிரியை-ஆதிதாளம்

அண்டருக்கமுதளித்தயச்சுதனே நஞ்சை
கண்டகருண்ணச்சென்றோரெயச்சுதனே
யெம்மட்டுந்தயவில்லையோயச்சுதனே தலைமேல்
சம்மட்டியால்மோதுராரெயச்சுதனே
இந்தவிதிக்கென்னசெய்வேன்யச்சுதனே மனம்
நொந்துருகிவாடுரேனேயச்சுதனே
பாதகரைதன்னிற்பிக்கியச்சுதனே பொல்லா
வாதனைக்கிடமானேனேயச்சுதனே.
மல்லர்விடும்படைகளெல்லாம்யச்சுதனே அன்பு
புல்லெனவேசெய்துவைத்தாயச்சுதனே.
மூந்துமலைமேலுருட்டும்போதயச்சுதனே உடலை
பஞ்சுபோலேசெய்துவைத்தாயச்சுதனே
செந்தணலில்தள்ளும்போதுயச்சுதனே அதை
சந்தணம்போலாக்கிவைத்தாயச்சுதனே
நஞ்சளிக்கும்பாம்புதன்னையச்சுதனே யெனக்கு
தஞ்சமுதளிக்கவைத்தாயச்சுதனே

கொல்லவந்தயானைதன்னையச்சுதனே யெனக்கு
நல்வணக்கஞ்செய்துவைத்தாயச்சுதனே
அலைகட்டில்தள்ளும்போதுயச்சுதனே யெனக்கு
மலையைகப்பலாகச்செய்தாயச்சுதனே
செக்கினிலரைக்கும்போதுயச்சுதனே உடலை
தக்கைபோலேசெய்துவைத்தாயச்சுதனே
சண்டன்வந்தபோதேஹரியச்சுதனே யெனக்கு
தெண்டநிடச்செய்துவைத்தாயச்சுதனே
தீதொரன்றில்லரமலேகாத்தயச்சுதனே யுமக்கு
ஏதுபகாரஞ்செய்தேன்யச்சுதனே

பொது-விருத்தம்.

மைந்தனிவ்வாரரிபதத்தைப்போற்றியேற்ற
மல்லர்விடும்சமட்டிகளும்மயங்கித்துண்டாய்
நிந்தைசெய்யுமரக்கர்தலைமார்மேல்தோள்மேல்
நெடுங்கைகால்மேல்விழுந்துநிலத்திற்சாய்ந்தார்
தொந்தமொடுயிதைக்கண்டயிரணியசூரன்
துள்ளிவிருகண்சிவந்துத்தடிவாளேந்தி
சிந்தைதுணிந்திவனையினிகொல்வேனென்றுச்
சீறுவான்காளையின்மேல்தூருவானே.

வசனம்.

இவ்விதமாக பிரகலாதனை இரணியபூபாலகன் முன்பாகக்கொண்டுவந்து மல்லரானவர் நஞ்சுகளையூட்டிசமட்டிகளைக்கொண்டு அடிக்கின்றபோது அகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராகிய ஸ்ரீமந்நாராயணமந்திரத்தை தோத்திரஞ்செய்கின்றபோது நஞ்சுகள்முரிந்து சம்மட்டிகள்மயங்கி யொடிந்துயரிகிவிருக்கின்ற அரக்கர்கள்மீதில்வெகிரிவிழுந்து தலைமார் தோள்கை கால்முறிந்துஅநேகவீரர்கள்பூமியில் விழுந்து மூர்ச்சையடைந்தார்கள் இதையெல்லாங்கண்ட இரண்ணியசூரனானவன் அதிககோபங்கொண்டு வீரவாளேந்தி தன்குமாரன்மீதினில் தூருகின்றவிதங்காண்க.



யேன்வீணுபினத்தூராய்மைந்தாவே

இரணியன்சொல்-விருத்தம்,

கடுத்திடுங்கோபத்தோடொக்காளையின்மீதிலுறும்
விடுத்திடுமாக்கினையெல்லாம்விழுந்திறாதீராய்போச்சே
படைத்தலைவீரர்நீங்கள்பதிவையவிட்டோடிப்போங்கள்
இடத்தொடெயினிருந்துச்சிறுவனைக்கொல்லுவென்பாரீர்.

வசனம்.

ஆ-ஆவாருங்கள் மல்லரே நாமிவ்வளவு ஆக்கினைகள் செய்ததெல்லாம் விழலுக்கிறைத்த நீராயினதல்லவா நல்லதாகட்டும் நீங்களெல்லாம் அப்பால்போய்விடுங்கள் யென்மகனை நானேகொல்லுகிறேன் பாருங்கள் மல்லரே.

இரணியனுக்குப்-பிரகலாதனனுக்கும்-தர்க்கம்.

தரு-இ-ம்-கலியாணி-தாளம்-ரூபகம்.

ஆரடாவுலகங்களளித்துரக்ஷிப்பவன்
யானல்லால்வேருண்டோமைந்தாவே
பாரடாமூலரும்பரவருமெனக்கிப்போ
பணிகுவதரியாயோமைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

எவ்வுலகங்களுமெவ்வுயிர்களுந்தானாய்
யெங்கெங்குமேயிருப்பான்யென்கோவே
செவ்வையாகவேயெள்ளினுள்ளெண்ணைபோல்
திகழ்பவநரஹரியென்கோவே

இரணியன்சொல்-தரு.

எங்கெங்குமேயுறைக்குந்தங்கியயரியானால்
யென்முன்னேகாட்டுவாய்மைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

என்கண்ணில்காண்பதர்க்குமெங்குமிருக்குமன்னல்
வுன்கண்ணில்காண்பாரோவென்கோவே

இரணியன்சொல்-தரு.

என்கண்ணிற்கண்டாலல்லோவுன்சொல்லுமெய்யாகும்
யேன்வீணுயினைத்துராய்மைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

பினத்தூரர்யென்றுந்தன்பெருமதத்தினூற்சொன்ன
பேச்சுக்குள்ளிருக்குறான்யென்கோவே

இரணியன்சொல்-தரு.

பேச்சிலிருப்பானானால்வாய்த்தயித்ததூணிலே
பிரியமாயிருப்பானோமைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

தூணிலுந்துரும்பிலுஞ்சொல்லிலும்பின்யெங்கும்
சாணவுங்காண்பான்காண்யென்கோவே

இரணியன்சொல்-தரு,

காணவுந்தூணிலேகாணுமல்போனாலெந்தன்
வாளாலேயான்கொல்வேன்மைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

கொல்லவுன்னாலாகுமோநல்லவன்காணுவிட்டால்
வல்லுயிர்யான்மாய்ப்பேன்யென்கோவே

இரணியன்சொல்-தரு,

மாய்ப்பேனென்றுரைத்தாயேமனதில்பயமில்லாமல்
மாயன்காணமாட்டாரோமைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு.

காணுமல்போனக்கால்வாழ்வினுக்கிச்சைவைத்து
வீணனதொண்டனானோயென்கோவே

இரணியன்சொல்-தரு.

தொண்டனானின்னையும்அறிலைப்புந்தூணிலே
கண்டால்நான்விடுவேனோமைந்தாவே

பிரகலாதனன்சொல்-தரு,

விட்டிடுவேனோயென்றால்சுட்டிடும்நெருப்பினை
துரும்பாலென்னசெய்யலாம்யென்கோவே.



இரணியன்சொல்-விருத்தம்.

துரும்பெனவெனையுரைத்த துர்மார்க்கப்பயலேயுந்தன்
கரம்புகளெல்லாமிப்போ காட்டுகின்றேனொடிக்குள்
சிறம்புயங்களையருத்து சித்திரவதைகள்செய்து
எரும்புயீகளுந்துளைக்க வெடுத்தெரிகின்றேன்பாராய்.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

எறிந்திடும்நெருப்பின்முன்னே யீய்கள்வந்தெதிர்ப்பதுண்டோ
வருத்தியேனிப்படிக்கி வாயினால்கெட்டுப்போராய்
மரிந்ததையமுதமென்று மானிலத்தாருண்பாரோ
அறிந்திதைதெரிந்துக்கொள்வா யச்சுதானொருவனென்றே.

இரணியன்சொல்-விருத்தம்.

அச்சுதனென்றுமென்முன்னகமீறிப்பேசுகின்றத்
துற்சனப்பயலேயுன்னை துண்டிரண்டாகவெட்டி
மெச்சிடகழுகர்க்கைக்கும் மிகவிருந்துண்பதாக
அச்சமில்லாமலீவேனரைநொடிதனிலேபாராய்.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

பரவியகடல்சூழ்கின்றபார்முழுமையுங்காக்கின்ற
இறைவனாய்விளங்குமெங்களெம்பெருமானல்லாமல்
குறைபடவெனையிப்போதுகொல்லவுன்னாலாகாது
தரைமிசையிதைநன்றாயென்தந்தையேயறிந்துபாராய்.

இரணியன்சொல்-விருத்தம்.

அறிந்துப்பாரெனவுரைத்தயருவிலாச்சிறுவாகேதான்
பரிந்துமாயவனையென்முன்பலுக்குராய்பயமில்லாமல்
கிரந்தாமுலகில்யாவும்நிதந்தொழுதேற்றிப்போற்றப்
பரம்பரைதெய்வமானபதம்மதையறிந்திடாயோ,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

பதமொடுபோர்த்திருந்தே பலவஞ்சின்தம்பிதன்னை
வதையதுசெய்துகொன்ற வகைதனையறிந்திருந்துங்
கதைவிபரீதமாகக்காட்டுகின்றீரேயன்வீணாய்
சதமெனவுலகில்தெய்வக் கைதத்திபன்னீபாவரேயா.

இரணியன்சொல்-விருத்தம்.

தெய்வமென்றெனையீரேழு ஜெகமுழுதுங்கைகூப்பி
மெய்ப்பதந்தொழுதுபோற்றும் விதமதையறிந்துமாயன்
கைய்யவேயொடிங்கிப்பஞ்சகரதமுமடங்கியோடி
செய்கையாய்கடலினுள்ளே திருடனைப்போலொளித்தான்,

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

ஒளித்தனரென்றுகேலியுரைத்திடுமரசேகேளும்
தளித்திடுமுலகில்மாயன்தானிலாதிடமொன்றில்லை
இளைத்திடுந்தொண்டர்தம்மையேந்தியேதாய்போல்காற்கும்
வளத்தைநீயறிந்திடாமல் வசனிப்பதிதுதகாதே

இரணியன்சொல்-விருத்தம்.

தகையொடுயவனையென்முன்தெய்வமென்றுயேநீதான்
வகையுடனுலகையெல்லாம்வந்தவனுளொண்ணுதே
திகிலடைந்தென்முன்னில்லாதோடுவதோகெம்பீரம்
புகலவும்வேண்டாமுந்தன்புத்தியிவ்வளவுதானோ.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

தானென்றதீரங்கொண்டசண்டாளர்தமக்குநல்ல
தீனரக்ஷகனுய்நின்றதிவ்வியதேஜோன்மயத்தில்
தேனின்றமலர்ப்பதத்தின்திறந்தெளிந்தறிவதுண்டோ
கியானமில்லாப்புல்லர்க்குக்கரித்தினிலமைந்திடாதே.

இரணியன்சொல்-விருத்தம்.

இசையுறயுலகினில்மெய்யாயிருப்பதனாயமானல்
வசைபெறயென்முன்வந்துவாதித்துப்போர்கொடாதித்
திசையினில்தலைகாட்டாமல்தீவினிலொளிப்பதேனோ
அசைவிலாதென்செங்கோலுக்கடங்கினதறிந்திடாயோ.

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

அவனல்லாலுயிருமில்லை யவனல்லாலூட்டுமில்லை
அவனல்லால்நீயுமில்லை யவனல்லால்நானுமில்லை
அவனல்லாலண்டமில்லை யவனல்லால்பிண்டமில்லை
அவனசையாமலெங்கு மணுவசையாதுகாணே.

இரணியன்சொல்-விருத்தம்.

காணவும்சரிதேயென்றுக் கருதவேறில்லையென்றாய்
ஆணுவம்டங்கியென்கை யடிகள்பட்டோடிப்போனன்
ஊனனீகண்டிருந்தா லுனக்கிந்தமயக்கமேது
வீணில்யேன்மடிந்துப்போராய் விகடங்களிரணமோதான்

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

ஒண்ணுமெய்ப்பொருளாமெந்தனுடையவனிருப்பைக்காண
கண்ணுண்டாமொழியைகேழ்க்ககாதுண்டாஉங்களுக்கு
கண்ணுமெய்யுணர்விஞலேஞானக்கண்படைத்தோனன்றி
திண்ணமாமுலகில்மற்றதேவருங்காண்கிலாரே.

இரணியன்சொல்-விருத்தம்.

தேவருங்காணுரென்றாய்தேவரென்னிலுமேமெத்தத்
தாவும்வல்லமையுள்ளோர்யார்சமத்தறியாமலசொன்ஞய்
பூவுலகத்திற்கள்ளர்பொருள்பரித்தோடிபோயோர்
தீவினிலொளித்துக்கொண்டால்சிக்குவதரிதுமேல்தான்

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

மெத்தவும்சமர்த்தைப்பேசும் மெய்யுணர்வில்லாமூடர்
அத்தியின்பழத்தினுள்ளே யமைந்திடுஞ்சிறுபுழுக்கள்
மைத்துமம்மரமுண்டான் வகைதனையறிவதுண்டோ
பித்தரேநீங்களெங்கள் பெருமானைக்காணமாட்டீர்.

இரணியன்சொல்-விருத்தம்.

அறிவதேயில்லையானுனு மண்டரண்டங்களெல்லாம்
நிறைபுரவளித்துக்காக்கும் நீக்கவோர்வலுவையுள்ளான்
உறைதரும்நிருதர்க்கஞ்சி யோடிப்போயொளிப்பதேனே
தரைதனிலெதிரேநின்று தன்வலிசெலுத்தொண்ணுதோ.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

ஆதியாயந்தமாய்மேலண்டமாயண்டத்துள்ளே
பூதமாய்குணங்கடந்தபொருளுமாய்பொருளேபூத்த
வேதமாய்விரிவாயொன்றாய் விளைந்தசின்மயனையிந்த
காதகர்காண்பேரமென்னுங்கதையதிசியமேகண்டாய்,

இரணியன்சொல்-கவி.

கண்டுகொண்டாயாயவனையுமுன்னிருகண்களால்
கொண்டுநின்றயாமுழுகுலதுரோகி
யெண்டிசைசக்குமேயியல்பெறவென்றே
பண்டென்சொல்வது பண்பிலாப்பயலே,

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

பண்ணெலாஞ்செவிடன்காதிலேபடித்தால்பயனதுதெரிந்துகொள்வானோ; கண்ணிலாதவனுக்கதோர வழியென்று காட்டினால்கண்டுகொள்வானோ, ஒண்ணுமெய்பொருளாமா யவனிருப்பையுணர்ந் திடயுந்தனாலாமோ அண்ணலேகேளாயண்டபிண்டத்திலுமவனிலா திடமுஞ்சிறிதுமில்லை,

இரணியன்சொல்விருத்தம்,

இல்லையென்றுரைத்தாயடாப் பெரும்பாவியென்னிலுமவனுபெரியவனு,எல்லியுஞ்செய்யுமுன்தெய்வமாமந்த சத்துருமாயனைப்பிடித்துக், கொல்லுவோமென்றேபலதரந்தேடியுங்காமல்பதுங்கியிருடன்,எல்லையெங்கணுமெள்ளுக்குளெண்ணெபோல்நிறைந்துநின்றானு,

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

நின்றமூவுலகமுங்கிழுமுக்குணமுநிரைந்தமுச்சுடருமுற்றொழிலும், துன்றியவுருவமும் மூன்றுமுந்தானாய் துலங்கியயேகப்பரம்பொருளை, இன்றுலகெங்குநிறைந்துநின்றானு யென்றுனீயெளிதஞ்செய்தாய், அன்றியெம்பெருமானிருப்பதோரிடமோ யகிலசராசரங்களுமவனே,

இரணியன்சொல்-விருத்தம்,

அசரசூரங்களிலும் நிறைந்தவனிருப்பதுமெய்யேயானால்
பசையொருத்தருக்கொருத்தர்பகையென்னபசுமென்ன
தசதிசையுலகமூன்றுஞ் சமரசமாயிருக்கவேண்டும்
பிசகிதுவெங்கேகற்றாய் பேயநூன்பேராலுமுண்டோ

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

உனைப்போலும்பகைவனுக்குப்பகைவனுவான்
வுரவெனவேகம்பினவர்க்குரவேயான்
வினைபோலேயென்பவர்க்குவினையேயாவான்
வேறொன்றும்யெண்ணுமல்விகிதத்தோடு
தனைப்போலேயென்பவர்க்குத்தாயேயாவான்
சர்வக்கியானிகளுக்குசர்வசமமேயாவான்
யெனைப்போலுமெளியருக்குயெளியனுவான்
யெம்பெருமான்திருவிளையாட்டெவர்கண்டாரே,

இரணியன்சொல்விருத்தம்

அசைவின்னதென்றுசொல்லியரியாதபுத்தியாலே
வசந்தெரியாமற்சொல்லி வந்தகப்பட்டுக்கொண்டாய்
திசதரும்வுலகிலேதான்நீக்கவோர்பலுமையுள்ளான்
விசைதரவவ்னைக்காட்டவேணுமேயெந்தன்முன்னே.

பிரகலாதனன்சொல்-விருத்தம்.

முன்னிலுமிருப்பான்பின்னிலுமிருப்பான்
முதலெழுத்திடையினுமிருப்பான்
பொன்னிலுமிருப்பான்பொருளிலுமிருப்பான்
பொருந்துமுச்சுடரினுமிருப்பான்
தன்னிலுமிருப்பான்தவத்தினுமிருப்பான்
தானவர்குலத்தில்வந்துதித்த
என்னிலுமிருப்பானுன்னிலுமிருப்பான்
யெவ்வுயிர்களிலும்வாழ்பவனே,

இரணியன்சொல்-விருத்தம்,

எவ்வுயிரினும்மென்னிடத்திலும் யிங்கிதந்தெரியாமல்
அவ்வியம்பேசுமமைச்சர்களிடத்திலும்
ஒவ்வியவசுரர்தம்மிடத்திலும்மேலொடும்கீழும்நிரைந்து ல்)
இவ்விதமிருப்போன்யிதிலிருப் பானுயிப்பெருஞ்சூனுயர்தூணி

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

சேணிலுமிருப்பான்திசையிலுமிருப்பான்
திரிந்துமூச்சுடரிலுமிருப்பான்
ஆணிலுமிருப்பான்பெண்ணிலுமிருப்பான்
னவனியிலணுவிலுமிருப்பான்
ஊணிலுமிருப்பானுரையிலுமிருப்பான்
உன்னிடவுரைப்படியிந்தத்
தூணிலுமிருப்பான்துரும்பிலுமிருப்பான்
தொல்லைமூலப்பரஞ்சோதி,

இரணியன்சொல்-விருத்தம்.

தீட்டிய தூணிலுந்தன் தெய்வமாம்மாயன்தன்னை
காட்டினலாச்சுதிப்போ காட்டாமற்போவாயானல்
தாட்டிகபுலிபோல்சீறி ஜெகமதிர்ந்திட்வேயுந்தன்
ஊட்டியைக்கடித்துப்பச்சை யுதிரத்தைக்குடிப்பேன்பாராய்

பிரகலாதனன்சொல்-விருத்தம்,

பார்ப்பதேனெந்தன்வார்த்தைப் பழிப்பாகப்போச்சுதானல்
ஏர்ப்பநீகொல்வதேனோ யென்னுயிர்நானேமாய்ப்பேன்
தோர்ப்பதோர்மாயனிந்தத் தூணிலேயில்லாவிட்டால்
ஆர்ப்பதோர்சொல்லேன்கேளா யடிமைநானல்லோகண்டாய்

பொதுவிருத்தம்.

காளையிதைசொன்னவுடனவில் கோபங்கொண்டு
கண்களனல்பொறிபறக்கத்தும்பிச்சீறி
வாளையதையெடுத்துரிவிக் கொக்கரித்து
வாரிபுவியுங்கலங்க மண்மேல்துள்ளி
தூளெழும்பச்சொர்க்கமதில்வானோரஞ்சச்
சூரியனுஞ்சந்திரனுஞ் சோர்ந்துவாட
தோள்தனையண்டமெட்டும் படியதாக
தூக்கினன்மணித்தூணைத்தாக்கினனே.

இதுவும்பொதுவிருத்தம்.

தட்வரைபுயத்தைநோக்கித் தாக்கிடுந்தனிலப்போது
அட்டபடவுலகமண்டமதிர்ந்திடத்தூண்வெடித்து

திடமுடனுருண்டக்கண்ணுஞ் சிவந்தவாயலேபோல்நாக்கும்
வடகிரியதைபபோல்சிங்கம் வருகும்வாரரிகுவீரே.

வசனம்.

இரணியாசுரனென்பவன் தட்டிவீசச் சிலம்பொருந்தியபுஜத்தைத் தூக்கித் தூணைத்தாக்கினபோது அண்டரண்டசராசரங்களெல்லாம் கிடுகிடுவென்று நடுநடுங்கும்படி வெடித்துத்திரண்டுருண்டகண்களும் சிவந்தவாயுமாக-நரசிங்கமானது வடக்கனகிரியைப்போலேஉதித்துவரும் விதங்காண்க.

நரசிங்கமூர்த்திவருகிற-தரு-இ-ம்-கலியாணி-அட்டதாளம்.

நரசிங்கமிதோவந்ததே - தொண்டன்களிக்க
நளினபதமுந்தந்ததே
விரைசெறியிறைமுதல் விளங்குமாதியாகிய
வேதன்முதல்வரோதிவருங்கன
யோதனெனுஞ்சேயநாதமொடுமய (நரசிங்க)
அண்டமுமளாவியசிரகமுமுடையதோளும்
ஆதித்தனொளிபோல சங்குசக்கரவில்கெதைவாளும்
மண்டலம்புகழும்வீர மரமணிவெண்டயத்தாளும்
மாசிலாமார்பினில் துழாய்மாலையுமணிந்தென்னாளும்
மருவுந்திருவுதன் மனமுமகிழ்ந்திட
யறிவுடையவன்பரவனிபுகழ்ந்திட (நரசிங்க)
அட்டகாசமிட்டுமண்டி யாக்கிரமித்தெழும்பிச்சிறி
அல்லல்செய்யரக்கரிட வல்லமைதனத்தைவாரி
யெட்டுதிக்குக்கும்பா லெரிகுவேனென்றுமேகூறி
யிணையிலாயெழுந்துதூணை யிருபிளவாக்கியேமீறி
யெறிபொறிகளிருகண்களிலுதிர
பெருகிவளர்கெற்பபெண்களுமதிர (நரசிங்க)
வானமட்டுமெட்டிடவும் வாள்கெதைகைநீட்டியே
வாதமிடும்பாதகரை வாரியொன்றாய்க்கூட்டியே
தானவரொடுதானவரைத் தான்டித்தாட்டியே
தக்கபடிசெய்துமே தன்துவீரங்காட்டியே
தங்குங்கலவையில் பொங்கமுடன்வளர்
துங்கவரதருங்கதுல்நிலவைப்போல் (நரசிங்க)

பொர்து-விருத்தம்

தூண்துவெடித்துத்துரைநரசிங்கந்
தோன்றின பெருமையைக்கண்ட

சேணவிருக்கைகூப்பியேபணிந்து
திருவுளம்தில்புகழ்ந்தேத்த
பூணுமன்பில்சிறந்திடும்பிரகலாதனனும்
புகழ்ந்துமேமகிழ்ந்தாக்கொண்டாடி
வாரணனுக்கருள்தரும்வாசனேகலவைவாழ்
வரதர்தன்னடியிற் பணிவான்.

வசனம்.

இவ்விதமாகத்தூணுன்று அண்டகடாகங்களும்செவிடுபடும்படி வெடித்து அதினடுவில் ஸ்ரீமந்நாராயணமூர்த்திசிங்கரூபமெடுத்துயிரு ப்பதைக்கண்டதேவரெல்லாம் ஆத்துமகியானத்திலேதோத்திரஞ்செ ய்துவணங்கினார் அன்பில்சிறந்த பிரகலாதனானவர் தோத்திரஞ்செ கின்ற விதங்காண்க.

பிரகலாதனன்சொல்-தரு-இ-ம-ரேகுப்தி-அட்தாளம்.

ஐயனேயுனதுபொன் னடியிணைக்கண்டியான்
ஆனந்தங்கொண்டேனே
பையரவணைமீதிற் பள்ளிகொள்ளுஞ்செங்கண்ணா
பார்க்குள்ளன்பர்கள் குறைதீர்க்கும்நீர்முகில்வண்ணா (ஐயனே)

நான்முகனையளித்த நளினமலர்பொற்பாதா
நாதகீதமாய்நின்ற நான்மறையின்விநோதா (ஐயனே)
அண்டர்க்கமுதளித்த வாதிபரஞ்சோதியே
அடியேன்மனங்களிக்க அன்புவைத்தநீதியே (ஐயனே)

வளமிகுகலவயில் வளர்கரிவரதரே
வந்தெனக்குன்தன் அரவிந்தபதந்தந்த (ஐயனே)

பிரகலாதனன்-தேவாரம்.

நாரணாபோற்றிபோற்றி நரசிங்கரூபாபோற்றி
காரணக்குருவாய்வந்தென் கவலையைதீர்ப்பாய்போற்றி
வாரணந்தன்னைக்காத்த மாதவாபோற்றிபோற்றி
சீரணிந்திலகிவாழுந் திருவடிசரணம்போற்றி.

பிரகலாதனன்-சொல்-சூர்ணிகை.

நாராயணாசரணம்மாதவாசரணம் மிகுளினதளமேத்திராசரணம் நர்க்கயணுசரணம் மேகவர்ணாசரணம் நாகரீகுவாசரணம் சிரான்சங் குசக்கராயுதாசரணம் சனார்த்தனாசரணம் பொழில்சேர்திருமார்பசர

ணம் திவ்வியயருளாளாசரணம் தேவாதிதேவாசரணம் பார்த்தனையுண்டபாக்கியனேசரணம் பரப்பிரம்மரூபாசரணம் பரமசுந்திராசரணம் அமலவிமலபக்தபரிபாலாசரணம் இராகூதகோலாகலாசரணங் விஜயவேதாந்தவேத்தியாசரணம் வெங்கிடாஜலரட்சகழுங்களா சரணம்மிருப்தகரசிங்காசரணம் சரணம் மென்னப்பனே,

பொது-விருத்தம்.

பிளத்துதூணுமங்கே பிறந்ததுசீயம்பின்னிர்
வளர்ந்ததுதிசைகளெட்டும் பகிரண்டமுகிலனைத்தும்
அளந்ததப்புரத்துச்செய்கை யாரறிந்துரையவல்லார்
கிளர்ந்ததுகனகமுட்டக் கிழிந்ததுகீழுமேலும்

வசனம்.

வளர்ந்தபெருமை யெப்படியென்றால் உக்கிரநரசிங்கமூர்த்தியாய்த்தூணைப்பிளந்துக்கொண்டு பிரம்மாண்டகோளகைமுகடுருவிவளர்ந்துயெட்டுதிக்குகளையும் அடக்கிகொண்டுநின்ற பெருமையைப்பிரமதேவனாலும் ஆதிசேடனாலும் சொல்லமுடியாதையாசுவாமி,

இதுவும் பொது-விருத்தம்.

வகிறபடுத்துரிக்கும்பத்தி வாய்களைபிளக்கும்வன்றோ
ளுகிறபடுத்துரிக்குஞ்செங்தீக்கண்களைத்தோன்றுஞ்சுத்தி
பகிறபடக்குடரிக்கும்பசையரப்பிசையும்பல்லா
லுகிற்புரைக்கோரைதம்மை வுயிர்களைவுரக்குமன்றே,

வசனம்.

பின்னையும்நரசிங்கமூர்த்தி யெழுந்தருளியவித மெப்படியென்றால் ஒவ்வொருராட்சதனுக்கு வொவ்வொருமுகமும் இரண்டுகைகளாக இந்தப்படி ஆயிரங்கோடி இராட்சதவெள்ளங்களைசம்மாரஞ்செய்து முப்பத்து முக்கோடிதேவர்களும்நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகளும் சப்தசமுத்திரங்களும் அண்டாண்டபகிரண்டங்களும்நடுநடுங்கி நர்த்தரிக்கும்படியாய் கோபங்கொண்டு இரணியன்மேல் சன்னுத்தராய் இருந்தபோது பிரகலாதன்சுவாமியானவர் தன்தந்தையாகிய இரணியனைப்பார்த்து சொல்லுகிறவிதங்காண்க,

பிரகலாதன்சொல்-விருத்தம்.

அந்திரமளாவிய தூணெடித்துமாய
னவதரித்தராகித்தனுந்தயத்தையும்போல்

தந்தையேகேளினியுனதுகோபந்தன்னைத்
தணிந்தவர்தன்பாதம்தில்தாழ்வாயாகில்
சிந்தைமகிழ்ந்தினியுனதுபிழைகளெல்லாம்
சித்தமொடுமனம்பொருத்தே செய்தளிப்பார்
வந்தனமோடவர்செழும்பொன்மலர்ப்பாதத்தை
வணங்குவாய்வணங்கிடுதமிணங்குவாயே.

வசனம்.

கேளுமென்தந்தையே ஸ்ரீஅகிலாண்டகோடி பிரம்மாண்டநாயகராகிய ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் உமக்காகவே யிருக்குஸ்தம்பத்தில் நரசிங்கரூபங்கொண்டு சூரியனுதையம்போலே அவதரித்திருக்கிறபடியால் தாங்களினிமேல் சினமென்கிற கோபத்தையொழித்து அவருடைய திவ்வியபொற்பாதகமலங்களைத்தாழ்ந்து போற்றியேற்றிப் புகழ்வையானால் நீசெய்தகுற்றங்களை யெள்பிரமாணமும்நினையாமல் ஆனந்தசந்தோஷமடைந்து ரட்சித்தருள்கொடுப்பார் என்தந்தையே நாமிருவரும் அவருடைய பாதபத்மங்களை வணங்கிஇணங்கித்தொழுவோம் வாருந்தந்தையே.

இரணியன்சொல்-விருத்தம்.

எதிரில்லாதோடிப்போன யீனனைப்பணியென்றென்முன்
சதிருடன்சொல்லவந்த தனயனேபார்நொடிக்குள்
அதிரிடபூமியெங்கும் ஹரியையுமுனையும்வாளால்
பதரிடவெட்டியெந்தன் பகைதனைமுடித்துக்கொள்வேன்.

வசனம்.

அடா துன்மார்க்கமுடையதனயா நீகொஞ்சமாகிலும்பயமில்லாமல் யென்னைக்கண்டு பயந்தோடிப்போன திருடனாகியமாயனைப்பணிந்துபோற்றென்று சொன்னாயல்லவா நல்லதாகட்டும் இதோபார் இந்தபூமியாதியந்தமும்கிடுகிடென்றதிரும்படிஉங்களிருவருடையஉடலை இந்தவீரவாளுக் கிரைகொடுத்து யென்பகையை முடித்துக்கொள்ளுகிறேன்பாரடா சிறுவா.

பிரகலாதனன்சொல்-விருத்தம்

கொள்ளுவேனென்றுயின்னங் குரோதத்தைப்பாராட்டாதே
வள்ளலேதெரிந்துக்கொள்ளும் வரும்நரசிங்கமூர்த்தி
துள்ளுமுன்னுதிரமுண்டுதும்சஞ்செய்துக்கொல்லாமுன்னம்
கள்ளயோசனைவிடுத்துக் கருத்தினில்கருதிப்பாராய்

வசனம்,

கேளுமென்தந்தையே இன்னமுனக்கேன் இந்ததீரம்யென்பகை யைமுடித்துக்கொள்வேனென்று குரோதமானவார்த்தையைப் பாராட்டவேண்டாம் நரசிங்கமூர்த்தியானவர் நீரமாகவுனைக் கொல்லவந்தவரென்று இன்னம் தெரிந்துக் கொள்ளவில்லையோ வேண்டாம் யென்தந்தையே.

இரணியன்சொல்-விருத்தம்,

பரிவுடன்வரங்கள்பெற்று பாரில்யான்வருகுப்போது
தரைமிசையெனைகண்டு சமுத்திரந்திலொளித்தாய்
திறமிகுயெனது தூணில் சிங்கரூபத்தைக்கொண்டு
விரைவிலென்கையில்மாள வந்தகப்பட்டுக்கொண்டாய்

வசனம்

அடா ஹரியே முன்னுவேனான் வரம்பெற்றுக்கொண்டு வருகிற போது யெனைக்கண்டு பயங்கொண்டு சமுத்திரத்திலொளித்துக்கொண்டவன் இப்போபயமில்லாமல் யென்தூணிலே சிங்கரூபங்கொண்டு வந்து அகப்பட்டுக்கொண்டாயல்லவா நல்லதாகட்டும் உனையென்வாளுக்கு பலிகொடுக்கிறேன் பாரடா ஹரியே.

நரசிங்கசுவாமிசொல்-விருத்தம்,

கொடுமைசெய்யிரணியாவுன்னைக் கொன்றிடவேணுமென்று
கெடுந்தின்மவார்த்திருந்தேன்சிமிஷத்தில்வளைத்துக்கொண்டேன்
விடுவனோயினிமேலுன்னை வெறியன்போல்பினத்திடாமல்
புடுகளமதிலுன்வீர பலந்தைக்காட்டுவாயே

வசனம்

அடா வாடாயிரணியசூரா யேன் வீணுகவெறியனைப்போல்வாயில்வந்தமட்டும் நாயைப்போல்குலைக்கிறாய் இதோ ஒருவார்த்தைசொல்லுகிறேன்கேள் உன்னைக் கொல்லவேண்டுமென்று லக்குபார்த்துக் கொண்டிருந்தேன் இதுதான் தருணமென்று வந்துவளைத்துக்கொண்டேன் முகத்திலேமீசை கையிலேஆயுதம் மெய்யிலேபலம்படைத்த வீரசூரனானால் புடுகளத்தின்முன்பாகநின்று உன்னுடைய வீரசூரபராக்கிரமத்தைக் காண்பியடா சூரா.

இரணியன்சொல்விருத்தம்,

காட்டுரேன்பாரிப்போதென் கைகண்டமட்டுந்தூக்கி
வாட்டுரேனுனதுமண்டை வாய்முளைச்சிதறியோட

மீட்டுனேனினிமேலெங்கும் மேலானகீர்த்திதன்னை
நாட்டுரோபாரென்றிரணி நரசிங்காயெழுந்துவாவா

வசனம்.

அடாவாடாநரசிங்கா கொஞ்சமாகிலும் அச்சமில்லாமல் உன் பலத்தைக்காண்பியென்று சொன்னயல்லவா இதோபார் கைக்கொண் டமட்டும் தூக்கிஉடலைத்தாக்கி மண்டைமூளைச்சிதறும்படி யடித்து உன்னைமடித்து யென்பகையை முடித்துக்கொள்ளுகிறேன் பாரடா நரசிங்கா.



நரசிங்கமூர்த்தி.



பிரகலாதன்.

பொது-விருத்தம்.

இம்மொழியுரைக்கக்கேட்டு யெழில்நரசிங்கமூர்த்தி
விம்மியேயெழுந்துசூர விரணியன்றனைப்பிடித்து
கொம்மெனமடிமேல்வைத்துக் கோரினல்குடலைக்கீறி
ஒம்மியேமார்பில்பூண்டார் வும்பர்கள்நடுக்கந்தீர.

வசனம்,

இவ்விதமாகஇரணியன்சொன்ன வசனத்தைக்கேட்ட நரசிங்க மூர்த்தியானவர் தடாலென்றுஇரணியனைப்பிடித்து மடிமேல்வைத்து

தன்னுடையலங்காரத்திலேல் குடலைப்பிடுங்கி மாலையாகத் தரித்துக் கொண்டார் அந்தக்கண்டதேவர்களெல்லாம் நம்முடையதிகில்நீங்கி னதென்று சொல்லுகின்ற விதங்காண்க.

பொது-விருத்தம்,

இந்தவிதமிரணியனைசிங்கம்கொன்று
 யிருக்கும்போதிமையவரும்முனிவர்சித்தர்
கந்தருவர்கருடகமலாசனீசன்
 கனகமலர்மழைபொழியகனவாத்தியங்கள்
அந்திரதுந்திமிமுழங்கயரம்பைமாத
 ராடல்கள்பாடல்களுடனேயன்பர்சூழ
சிந்தைமகிழ்ந்தனவருவேயொன்றாய்க்கூடி
 திருமால்தன்பக்கலிலேவருகின்றாரே,

வசனம்,

இவ்விதமாக இரணியசூரனானவனை ஸ்ரீமந்நாராயணமூர்த்தியானவர் நரசிங்கரூபங்கொண்டு அவனைக்கொன்றுஅவனுயிரைவின்னுலகத்துக்கேத்திஉக்கிரசுரூபமாயிருக்கின்ற தருணத்தில் முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் கெருடகந்தருவர்களும் கின்னரர்கிம்புருடர்களும் பிரம்மனும் யீசனுங்கூடிக்கொண்டு அந்திரதுந்திமிதிமிதிமியென முழங்க கனகபுஷ்பமாரி பொழியவும் ஆனந்தங்கொண்டு அரம்பைமாதர்கள் ஆடல்பாடல்சங்கீதத்துடனே நாராயணருடைய பக்கல்வருகின்ற விதங்காண்க,

சகலதேவர்-வருகிற-தரு-இ-ம்-கலியாணி-அடதாளம்.

தேவர்கள்வந்தாரே-திருமால்பக்கல்-தேவர்கள்வந்தாரே
ஆவடனுடனேஐபனடியிணைநாடி
சேவைசெய்திடத்திசைமுகன்முதல்கூடி (தேவர்)

இந்திரனிமையவர்யெக்ஷகின்னரர்களும்
கந்தருவர்கெருடமந்திரமுனிவருஞ்
சந்திரருஞ்சூரியர்சமஸ்தகோடிபுராண
தந்திரருமிகுந்தவிந்தைமால்பதங்காண் (தேவர்)

பூரிதாரைசின்னம்புகழும்துந்துமிபேரி
வாரிமுழக்கம்போல்பாரில்திம்திம்மென்ன
சீரிலும்சகலலத்திருகரிவரதன்
திருவடிநாடியேபெருமையாய்கூடியே (தேவர்)

பிரகலாதனுன்சொல்-கவி,

மைப்புயல்வண்ணாபோற்றி மரகதமணியேபோற்றி
செப்புதற்கரிதாய்நின்ற ஸ்ரீநரசிம்மாபோற்றி
இப்புவிதனிலென்றந்தை யெண்ணமல்செய்ததெல்லாம்
தப்பிதம்பொருத்துமுந்தன் தனிப்பதந்தருகுவாயே,

நரசிங்கமூர்த்திசொல்-கவி,

தப்பிதப்பொருப்பாயென்றதனயனேசொல்வேன்கேளாய்
செப்பமாய்கொடியன்செய்தசெய்கையாலவனுக்கிப்போ
அப்பனேநீபிறந்தாகையாலிருபத்தொன்று
ஒப்பிலாகுலத்துள்ளோருமுயர்ந்தவீடெய்துவாரே;

நரசிங்கஞ்சொ-கவி,

இன்னமுங்கேளாய்மைந்தா யிருநூத்தொன்பத்துநான்கு
துன்னியயுகங்களிந்த தொல்லுலகெல்லாங்கீர்த்தி
பன்னவநாகினியே வாழ்ந்துபின்னென்துபாதம்
தன்னையேயுமக்குநாமுந் தருவதுமுண்மைதானே.

பொது-விருத்தம்,

இப்படிமாயவன்கூறிவரங்களீந்து
யிருக்கும்போதண்ணல்சினந்தீர்ந்தாரென்று
மைப்படியுங்கருங்குழலாளென்னையாண்ட
வனசமலர்திருமாதும்மரிகில்வந்தாள்
செப்பரியதிசைமுகனுந்தேவர்கோனுஞ்
சித்தர்களும்பத்தர்களுஞ்சேர்ந்துவந்தே
அப்பனேயென்றவர்களடிவணங்கி
மகிழ்ந்துகடைக்கண்ணோக்கருளினாரே.

பொது-கவி,

ஐயனேபிரகலாதாயருளோடுன்றந்தைக்கேற்க
செய்கடமையர்ந்துச்செய்யுஞ்சிறப்புநீசெய்யென்றேவ
பொய்யிலாமைந்தன்தானும்புராதனரருளும்வண்ணம்
செய்கடன்முடித்தான்மாயன்திசைமுகர்க்கருளினாரே:

பொது-விருத்தம்,

நம்முடையதொண்டன்பிரகலாதனுக்கு
நலமுடையமணிமகுடஞ்சூட்டுமென்று
செம்மைமலராளுடனேதேவதேவன் :
திரித்தியதன்னுலகத்திற்சென்றாரப்பால்
இம்மையிலும்மருமையிலும்பிரகலாதர்க்கு
யிமையவர்கள்மலர்மாரிபொழிந்துபோற்ற
நம்மையெல்லாம்புரந்தருளும்நம்பிச்செங்கோல்
நாட்டினான்வேதமுடிசூட்டினானே,



ஸ்ரீ

ராமஜெயம்,

# பிரகலாதனனுக்கு மகுடாபிஷேகம்.

பொது - விருத்தம்.

துங்கமாலுரைப்படிக்கிசுரர்சதுர்முகனுஞ்சூழ
பொங்கமாய்மறையோர்வேதபூசுராசிகூர
யிங்கிதமுடன்களித்துயெழில்பிரஹலாதனுக்கு
மங்களமாகாரத்தினமணிமுடிசூட்டினாரே,

தரு-இ-ம்-தோடி-ஆதி-சாபுதாளம்.

திருமுடிதனையணிந்தான் பிர லாதனன்
ஸ்ரீஹரிபதம்பணிந்தான்

நருமலர்வாடைவீச ஞன்மறைகளும்பேச
அருமைமந்திரிகள்நேசரனைவர்சூழ ப்ரகாச

அந்திரதுந்திமியிந்திரனரைந்திட
மந்திரமறையவர்சிந்தைதனிரைந் (திருமுடி)

அமரர்முனிவரடிக்கடி பரிசளாதுக்கர் யாகயெக்கியஞ்
சமரசம்பரமெந்திரச்சாலைகளெழில்தேர் செந்தருவர்கள்
திமிதிமிவெனப்பலர்மனமுழயானது மெய்குந்தூர்
சகமுழுதும் கமகமன்றிடும்வாசனைபரிமளங்களும்நேர் புகழுதார்

காவலர்யாவருமேவியேசூழ்ந்திட
யாவலதாய்புவியாவுமேவாழ்ந்திட (திருமுடி)

ரம்பையூர்வசிகள்நடித்துயபதங்கள்பாட தும்புருவர்கள்
சம்மைபருப்பகமாதிசப்தராளமுஞ்சுதிகூட யின்பமுடனே
தும்பைமல்லிகைமுல்லைதுளபமாலைகழுத்தில்போட அன்புமிகுந்
தும்புடனேயித்தமிழ்ச்செப்புங்கவிஞனுங்கொண்டாட அன்பர்கள்நாட

திரமிகுதலைவையின்கரிவரதருளால்
உரமொடுதிருமணிகிரைபெருஞ்சிரமதில் (திருமுடி)

வாழி-விருத்தம்,

சீர்பெரும்மறையோர்வாழி சிறந்தமன்னவரும்வாழி
நேர்பெருங்குடிகள்வாழி நிதிகவிவாணர்வாழி
பார்தனிலச்சிலிட்டுப் படிப்பவர்நடிப்போர்கேழ்ப்போர்
தார்துளபமணியுமால்தன் தய ஞலனவர்வாழி,

இரணியவிலாசம்




